OSHO

# அஷ்டாவக்ர மகாகீதை

## முக்திப் பேரவா

Ashtavakra Mahagita - Vol.1



ஓஷோ

கவிதா வெளியீடு

1

# அஷ்டாவக்ர மகாகீதை

## முதல் பாகம்

## முக்திப் பேரவா

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து
1 முதல் 34 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன்
வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

**ஓஷோ**

தமிழாக்கம்:
**ர. சௌரிராஜன்**




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அஷ்டாவக்ர மகாகீதை (முதல் பாகம்) - முக்திப் பேரவா

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஆகஸ்ட், 2014 |
| இரண்டாம் பதிப்பு | : | ஏப்ரல், 2019 |
| **விலை** | : | ₹ 400/- |

**Ashtaavakara Mahageethai - Part-1**

Originally published in Hindi as
**ASHTAVAKRA MAHAGITA, VOL.1**



Reprint: (Actual year of reprint)



| | | |
|---|---|---|
| Translated by | : | **R. Sourirajan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | August, 2014 |
| Second Edition | : | April, 2019 |
| Pages | : | 464 |
| **Price** | : | **₹ 400/-** |
| ISBN | : | 978-81-8345-424-7 |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

Published by :
**KAVITHA PUBLICATION**
# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 4216 1657
Whatsapp : 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com

Website : www.kavithapublication.com

# பொருளடக்கம்


சொற்பொழிவு — 1
சத்தியத்தின் பரிசுத்த விளக்கவுரை ........................................ 5

சொற்பொழிவு — 2
சமாதியின் சூட்சுமம் : ஓய்வு ........................................ 49

சொற்பொழிவு — 3
மதிக்கு ஏற்ற கதி (அறிவைச் சார்ந்த செயல்) ........................ 100

சொற்பொழிவு — 4
செயல், கருத்து, சிந்தனை, சாட்சி ........................................ 151

சொற்பொழிவு — 5
சாதனை இல்லை - ஈடுபாடு, பெருமதிப்பு ........................ 197

சொற்பொழிவு — 6
எழுமின்! உய்மின்! ........................................ 238

சொற்பொழிவு — 7
விழிப்பு மகாமந்திரம் ........................................ 290

சொற்பொழிவு — 8
சர்வாதிகாரி அல்ல - சாட்சியாகு ........................................ 335

சொற்பொழிவு — 9
எனக்கே எனது வணக்கம் ........................................ 378

சொற்பொழிவு — 10
ஹரி ஓம் தத்ஸத் ........................................ 418

ஜனக உவாச -

கதம் ஞானமவாப்னோதி கதம் முக்திர் பவிஷ்யதி |
வைராக்யம் ச கதம் ப்ராப்தம் எதத் ப்ரூஹி மம ப்ரபோ || (1)

அஷ்டாவக்ர உவாச -

முக்திம் இச்சஸி சேத் தாத! விஷயான் விஷவத் த்யஜ |
க்ஷமார்ஜவ- தயா- தோஷ- சத்யம் பீயுஷவத் பஜ || (2)

ந ப்ருத்வீ ந ஜலம் ந அக்னி: ந வாயு: த்யௌர் நவா பவான் |
ஏஷாம் ஸாக்ஷிணமாத்மானம் சித்ரூபம் வித்தி முக்தயே || (3)

யதி தேஹம் ப்ருதக் க்ருத்ய சிதி விச்ராம்ய திஷ்டஸி |
அதுனைவ சுகீ சாந்த: பந்தமுக்தோ பவிஷ்யஸி || (4)

ந த்வம் விப்ராதிகோ வர்ணோ ந ஆச்ரமீ ந அக்ஷகோசரம் |
அஸங்கோ அஸி நிராகாரோ விச்வஸாக்ஷீ சுகீ பவ || (5)

தர்மா அதர்மௌ சுகம் துக்கம் மானஸாநி ந தோ விபோ |
ந கர்தா அஸி, ந போக்தா அஸி, முக்த ஏவ அஸி ஸர்வதா || (6)

மிக மேலான, அற்புதமான யாத்திரையை நாம் துவங்குகிறோம்.

ராஜரிஷி ஜனகர் சத்திய ஞானகுரு அஷ்டாவக்ரரிடம் வினவினார் -

"எப்படி மெய்ஞானம் பெறப்படுகிறது?
எவ்வாறு முக்தி (நிலையான விடுதலை) ஏற்படுகிறது?
பற்று அற்ற நிலை- வைராக்கியம் எப்போது கிட்டும்?
குருதேவா! எனக்குப் போதித்து அருளுங்கள்!"

## சத்திய ஞானி அஷ்டாவக்ரர் எடுத்துரைத்தார் -

"ராஜரிஷி! முக்தி பெற நீர் விரும்பினால், பௌதிக விஷயங்களை- புலன் உணர்வுகளை நஞ்சு என எண்ணி ஒதுக்கி விடும்! பொறுமை, நேர்மை, தயை, மகிழ்ச்சி, சத்தியம்- இவைகளை அமுதம் எனத் தெளிந்து ஏற்றுக் கொள்ளும்!

"நிலம், நீர், தீ, காற்று, வானம், 'நான்-எனது' எனும் உணர்வு- இவைகளில் எதுவும் உமக்குச் சாட்சியம் இல்லை. சின்மய மெய் ஞானத்தையே உமது முக்திக்கு உறுதுணையாக- சாட்சியமாக ஏற்றுக் கொள்வீர்!

"உமது தேகத்தைத் தனிமைப்படுத்தி நற்புத்தியில் இலயித்து இருப்பீரானால், அப்போதே பரம சுகமும் சாந்தியும் பெற்று, பௌதிக பந்தபாசங்களிலிருந்து விடுதலை பெற்று நலமிக வாழ்வீர்!

"மூதறிஞரே! உமக்கு பிராம்மணர், க்ஷத்திரியர் முதலான வருண(இன)ச் சேர்க்கை இல்லை. பிரும்மசரியம், இல்லறம் முதலான வாழ்வுநிலையும் உமக்குக் கிடையாது. எவ்வித சொந்தம்-பந்தம் உமக்கு இல்லை. எந்த ஏற்றத் தாழ்வும் கிடையாது. இம்மெய்ஞான உணர்வுடன் இவ்வுலகத்தையே சாட்சியமாகக் கொண்டு சுகமாக வாழ்வீராக!

"பெருந்தகையே! உமக்குத் தர்மம்-அதர்மம், சுகம்-துக்கம், மதிப்பு-அவமதிப்பு, பெருமை-சிறுமை என எதுவும் கிடையாது. எதற்கும், எந்நிலையிலும் நீவிர் கர்த்தா (செய்பவர்) இல்லை, 'போக்தா' (அநுபவிப்பவர்) இல்லை. எப்போதுமே நீர் 'முக்தர்' (முக்தி பெற்றவர்) தான்!

ஓர் அற்புதமான ஞான யாத்திரையை மேற்கொண்டிருக்கிறோம்.

மனித சமுதாயத்திடம் பற்பல சாத்திரங்கள் உள்ளன. ஆனால் 'அஷ்டாவக்ர கீதை'க்கு ஒப்பான தத்துவ சாத்திரம் எதுவும் இல்லை. வேதங்கள் கடினமானவை. உபநிடதங்கள் தணிந்த குரலில் பூடகமாகப் போதிப்பவை. பகவத் கீதையில் அஷ்டாவக்ர கீதைக்குச் சமமான சிறப்பு இல்லை. இதன் தனிச்சிறப்பு அற்புதமானது.

இதன் தனிச்சிறப்பு, அஷ்டாவக்கிரரின் தத்துவ ஞான போதனையில் எதன் ஆதிக்கமும்- சமூகம், அரசியல், மானுடம், சமுதாய அமைப்பு இவற்றின் பாதிப்பு புகவில்லை. நேரம், காலம் கடந்த இதற்கு மேலான தத்துவபோதனை வேறு எதுவும் இல்லை. இதனால்தானோ, அஷ்டாவக்ர கீதை, ஸம்ஹிதை (போதனைத் தொகுப்பு) இரண்டும் பரந்த அளவில் பிரபலமாகவில்லை, பாதிப்பை ஏற்படுத்தவில்லை.

கிருஷ்ண பகவானின் பகவத் கீதை மிகப் பிரபலம். காரணம், சமாதான ஒருங்கிணைப்பைப் போதிப்பது. அந்த அளவிற்கு சத்தியத்தைப் போதிப்பதில்லை. பகவத்கீதை பல்வேறு மனிதர்களுக்கும் பிடித்தமான தத்துவங்களைத் தெளிவாக சுவைபடப் போதிக்கிறது. இதனால் பலரும் அதை விரும்புகிறார்கள், போற்றுகிறார்கள். பல்வகைச் சமய- சம்பிரதாயங்களுக்கும் ஏற்புடைய கருத்துரைகள் அதில் உள்ளன. இந்த சமரசம் அஷ்டாவக்ர கீதையில் இல்லை. மேலும் ஆழ்ந்து சிந்தித்து அறிந்து கொள்ள வேண்டிய அறநெறி நூல் அது. அஷ்டாவக்ரர் ஒருங்கிணைக்கும் சமரசவாதி இல்லை, தீவிர சத்தியவாதி. சத்தியத்தை உள்ளபடி உரைப்பவர். அலங்காரமாய் சுவைபடக் கூறவில்லை. கேட்பவரின் புரிந்துணர்வைப் பொருட்படுத்தாதவர். கேட்பவருக்குப் புரிந்ததா, இல்லையா என்கிற கவலை அவருக்கு இல்லை. சத்தியத்தின் பரிசுத்த விளக்கம் தந்தவர் அவரைப் போல் எவரும் எக்காலத்திலும் இல்லை.

கிருஷ்ணகீதை எல்லாருக்கும் பிரியமானது. அவரவர் தமது திறன், விருப்பத்திற்கு ஏற்ப பொருள் கொள்ள முடியும். அது காவியம் போல் சுவையானது. அதில் வித்தார சாலக்கு சுலபம். இரண்டும் இரண்டும் ஐந்து அல்லது மூணு என்று காட்ட முடியும். இதெல்லாம் அஷ்டாவக்கிர கீதையில் நடவாது. இதில் கணக்கு சரியாக இருக்கும்; இரண்டும் இரண்டும் நாலுதான். அதில் அணி அலங்கார வித்தாரம் கிடையாது. உள்ளது உள்ளபடி உரைக்கப்படும். சமரசம் இல்லை. நெளிவு சுளிவுக்கு இடமில்லை. கவிதை நயம் இல்லை.

கிருஷ்ண கீதையில் பக்தர்கள் அவரவர் விருப்பம்போல் பொருள் கொள்ள முடியும். கிருஷ்ணன் பக்தி, கருமம் (கடமை), ஞானம் (மெய்யறிவு) பற்றி சமத்காரமாக விவரித்திருக்கிறார். தீவிர

பக்தர்கள், தர்மயோகிகள், ஞானயோகிகள் மனநிறைவு பெறும்படி கிருஷ்ண கீதை விவரித்துள்ளது. கிருஷ்ணன் ஓரிடத்தில் பக்திதான் தலை சிறந்தது என்கிறார்; மற்றோர் இடத்தில் ஞானம்தான் சிரேஷ்டமானது என்பார். வேறொரு இடத்தில் கருமம் (கடமை, செயல்பாடு) தான் மிக உத்தமம் எனச் சாதிப்பார்! அவரது கருத்துரைகளில் ராஜதந்திரம் மேம்பட்டிருக்கும். அவர் அரசியல் வித்தகர், ஆட்சித்திறன் மிக்கவர். பல்வேறு கருத்துக்களை அரசியல் சாலக்குடன் வெளியிட்டிருப்பதால்தான் பலதரப்பட்ட அறிஞர்களும் சிந்தனையாளர்களும் பகவத்கீதையை விரும்புகிறார்கள், போற்று கிறார்கள். ஆகையால் நூற்றுக்கணக்கான விளக்க உரைகள் அதற்கு இயற்றப்பட்டுள்ளன.

அஷ்டாவக்கிரரைப் பற்றி எவரும் ஆராய்வதில்லை. விளக்க உரை அளிக்க முன் வருவதில்லை. அஷ்டாவக்கிரரை ஏற்க ஆய்வாளர் முதலில் தம்மை இழக்க வேண்டும். ஒன்றிப் போக இயலாது. கிருஷ்ணனோடு ஒத்துப் போகலாம். சுய ஆளுமையுடன் அவரோடு பயணிக்கலாம். சுயத்தன்மையை மாற்றிக் கொள்ள வேண்டாம்; கலந்து இணைந்து பரிமாறிக் கொள்ளலாம். எல்லா சம்பிரதாய ஆசாரியர்களும் கிருஷ்ணகீதைக்கு ‘பாஷ்யம்’ (விளக்கவுரை) எழுதியிருக்கிறார்கள். சங்கரர், ராமானுஜர், மத்வர், நிம்பார்கர், வல்லபர் என எல்லா ஆசாரியர்களும் தம் மத சித்தாந்தங்களுக்கு ஏற்ப வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். கண்ணபிரான் பல பொருள்களையும் ஒரு சேர, காவியச் சுவையுடன் உரைத்திருக்கிறார். அவரவர் மதங்களுக்கு ஏற்ப பொருள் கொள்ள முடியும். சங்கரர் ஞான யோகத்தைக் கீதையில் காண்கிறார், ராமானுஜர் பக்தியோகத்தைத் தரிசிக்கிறார். லோகமான்ய திலகர் கர்ம யோகத்தைப் பயில்கிறார். எல்லாவருக்கும் கீதை பயின்ற மகிழ்ச்சி, மன நிறைவு, ஒட்டுறவு.

கண்ணபிரானுடைய வாக்குகள் மாரிக்காலத்தில் மேக மூட்டம் கவிவது போன்றவை. எவரும் ஏறிட்டுப் பார்க்கலாம். அதில் ஒருவர் யானையின் தும்பிக்கையைக் காண்பார். மற்றவர் பிள்ளையாரைத் தரிசிப்பார். வேறொருவருக்கு வேறொரு உருவம் தோன்றும். சிலருக்கு எதுவுமே தோன்றாது. அல்லது புகை மூட்டம் போன்ற மேகமண்டலம் மட்டுமே தெரியும்.

மேற்கத்திய விஞ்ஞானி உளவியல் சோதனைக்காக பிளாட்டிங் பேப்பரில் மையைத் தெளிப்பார். பரீட்சிக்கப்படும் நபரிடம், "இதில் என்ன தெரிகிறது?" என்று கேட்டபார். நபர் உற்று நோக்கி, "எதுவும் தெரியவில்லை. வெறும் மை ஒட்டிய கறைகள்" என்பான். குப்பியைக் கவிழ்த்துக் கொட்டினாலும், வெறும் மைப்பரப்பு என்பான். மனப்போக்குப்படி பார்க்கும்போது அதற்கு ஏற்ப உருவகம் தோன்றும். ஏறிட்ட உருவம் அது.

நீங்கள் பார்த்திருக்கலாம், சுவரில் மழைநீர் வடிகிறது. கோடுகள் உருவாகின்றன. அதில் சிலசமயம் மனித உருவம் தெரியும், குதிரை வடிவம் தென்படும். நீங்கள் பார்க்க விரும்புவதை அதில் ஏறிட்டுக் காண்கிறீர்கள்.

இரவில் கொடியில் தொங்கும் துணி பேய்- பிசாசு எனத் தோற்றும். கிருஷ்ணனின் கீதை இதைப் போலத்தான் உங்கள் மனத்தில் உருவெளித் தோற்றங்களைக் காட்டும். இதனால்தான் அதில் சங்கரர் ஞானத்தைக் காண்கிறார்; ராமானுஜர் பக்தியைத் தரிசிக்கிறார். திலகர் 'கர்மா' (கடமை)யைப் பார்க்கிறார். எல்லாருமே தாம் கண்டதுதான் நிஜம், சரி என எண்ணித் திருப்திப்படுகிறார்கள். நமது நம்பிக் கைகளை, கருத்துக்களைக் கண்ணன் திறம்படக் கூறிவிடுகிறார்!

எமர்சன் எழுதியிருக்கிறார்- "பக்கத்து வீட்டுக்காரர் என்னிட மிருந்து பேரறிஞர் பிளாட்டோவின் நூல்களைப் படிப்பதற்காக வாங்கிச் சென்றார். பிளாட்டோ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தவர். அரிய பெரிய சிந்தனையாளர். சில நாட்களுக்குப் பிறகு பக்கத்து வீட்டுக்காரர் புத்தகங்களைத் திருப்பிக் கொடுத்தார். புத்தகங்களைப் பற்றிக் கேட்டேன். அவர் சொன்னார், இந்த ஆசாமி (பிளாட்டோ) என்னைப் போலவே சிந்தித்திருக்கிறார். 'என் கருத்துகளை அவர் எப்படி அறிந்தார்?...!' இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பு தோன்றிய பிளாட்டோ பக்கத்து வீட்டுக்காரரின் கருத்துக்களைக் களவாடியிருப்பார் என்று கருதுகிறார்!

கிருஷ்ண கீதையிலும் இதே மதிப்பீடு. பலரும் தத்தம் கருத்துகளை அதில் காண்பதால், பல நூற்றாண்டுகள் கழிந்து போனாலும் புதிது புதிதாக விளக்கவுரை வெளிவந்து கொண்டிருக்கிறது. அஷ்டாவக்கிரர் கீதையில் நீங்கள் உங்கள் சொந்தக்

கருத்தைக் காண முடியாது. அதை அறிந்து கொள்ள உங்கள் சித்தம்-சிந்தனையை அதற்கு அர்ப்பணிக்க வேண்டும். தெளிவான போதனை தேவை. உங்கள் சுயக்கருத்துக்கேற்ற விளக்கம் தேவை இல்லை.

அஷ்டாவக்கிரரின் போதனைச் செய்தி மிகத் தெளிவானது. அதில் பிறர் தம் விளக்கம்- விரிவுரை எதையும் புகுத்த இயலாது. இதனால் தான் அதற்கு எவரும் பாஷ்யம், வியாக்யானம் (விளக்கவுரை) எழுத முடியவில்லை. அதற்கு அவசியம் இல்லை. தெளிவும் தீர்மானமும் வெளிப்படையாக இருக்கும்போது விளக்கவுரைக்குத் தேவை இல்லை. பல நூற்றாண்டுகள் கடந்த பின்னும் அவரது போதனையில் சேர்ப்பதோ, தவிர்ப்பதோ ஏற்படவில்லை. இப்படியொரு திட்பமான, தெளிவான போதனை, மொழித்திறன், சொல் நயம், போதனைச் சிறப்பு கைவரப் பெற்றவருக்குத்தான் சாத்தியமாகும். இது மிகக் கடினம்.

இதனால்தான் சொல்லுகிறேன், நீங்கள் அற்புதமான தத்துவப் பயணத்தை மேற்கொண்டிருக்கிறீர்கள்.

அஷ்டாவக்கிரருக்கு அரசியலில் ஆர்வம் இல்லை. பாலகங்காதர திலகர், அரவிந்தர், காந்திஜி, ஆசார்ய வினோபா என எவருக்கும் இவர் கீதையில் ஆர்வம் ஏற்படவில்லை. எவரும் தம் கருத்தை அவரிடம் காணவோ, ஏறிடவோ இயலாது. திலகரை ஊக்குவிக்க தேசபக்தி, தேசசேவை பொங்கி எழவேண்டும். கிருஷ்ண கீதை இதற்கு உதவும்.

கிருஷ்ணன் எவருக்கும் தோள் கொடுக்கத் தயார். அவர் தோளில் துப்பாக்கியை வைத்து எவரையும் சுடலாம். அவருக்குச் சம்மதம். அவர் தோளுக்குப் பின்னால் ஒளிந்து கொள்ளலாம். அந்நிலையில் துப்பாக்கி சுட்டால் அது சிலாகிக்கப்படும். அஷ்டாவக்கிரர் எவரையும் தம் தோளில் கை வைக்க விடுவதில்லை. இதனால்தான் காந்திஜிக்கு அஷ்டாவக்ர கீதையில் ஆர்வம் இல்லை. திலகர், அரவிந்தர், வினோபா ஆகியோருக்கும் அப்படியே. காரணம், அதில் உங்கள் கோட்பாட்டைச் சுமத்த முடியாது. அரசியல், ராஜரீக-ராஜதந்திரங்களுக்கு அங்கு வாய்ப்பு- வசதி இல்லை. அஷ்டாவக்கிரர் அரசியல் ராஜதந்திரி இல்லை.

நீங்கள் கவனத்தில் கொள்ள வேண்டிய முதல் முக்கிய விஷயம்- தெளிவான, பரந்த வானம் போன்ற கருத்துரை அஷ்டாவக்கிர கீதை. அதில் உங்கள் கருத்தைக் காண முடியாது. சுய உருவகத்தைத் துறந்து அத்துடன் ஒன்றவேண்டும். பிறகு புரிதல் துவங்கும். ஆழ்ந்த சிந்தனையுடன் ஒன்றிப் பயிலவேண்டும். எந்த விளக்க உரையும் உதவாது. ஆழ்நிலை தியானம், ராமநாமஜெபம் எதுவும் தேவை இல்லை. அஷ்டாவக்கிரர் கூறுகிறார், “நீ தியானம் செய்ய வேண்டாம். செயல்படுபவனுக்கு தியானம் எதற்கு? செயல்படும் வரை பிரமை, ஐயம் இருக்கும், ‘நான்-எனது’ எனும் செருக்கு இருக்கும். செயல்பாடு இயங்காதபோது தியானம் (சிந்தனை) சாட்சியாகும். நீங்களே பார்வையாளராகி விடுவீர்கள். அப்போது புதிய தரிசனம் கிட்டும். தியானமும் அதுதான். ஞானமும் அஃதே!

அஷ்டாவக்கிரரின் சூத்திரங்களைப் (நுட்பமான கருத்துரை) பயிலுவதற்கு முன்பாக, அவரைப் பற்றி அறிந்து கொள்ளுவது அவசியம். அவர் பிரபலமானவர் இல்லை. அவர் சமுதாய பிரமுகரோ, அரசியல் தலைவரோ, சரித்திரப் புகழ் பெற்றவரோ இல்லை. சில நிகழ்ச்சிகள் தெரிய வருகின்றன, விசித்திரமான, நம்ப முடியாத நிகழ்ச்சிகள். ஆனால் அவைகளை அறிந்தால் ஆழ்ந்த கருத்துக்கள் புலப்படும்.

முதல் நிகழ்ச்சி- அஷ்டாவக்கிரர் தோன்றுவதற்கு முந்தையது. பிறகு எதுவும் தெரிய வரவில்லை. தாயின் கருவில் இருந்த காலம். தந்தை மகாபண்டிதர். வேதவிற்பன்னர். தினமும் வேதமோதுவார். மகன் கருவில் இருந்தவாறே அதைக் கேட்பான். ஒருநாள் மனைவியின் கருப்பையிலிருந்து ஒரு குரல் கேட்டது. “தந்தையாரே! வேத கோஷத்தை நிறுத்துங்கள். இது வெறும் பிதற்றல் இதில் ஞானம் கொஞ்சமும் இல்லை. வெறும் சொல்லாடல், வேதசாத்திரத்தில் ஞானம் ஏது? ஞானம் தனக்குள் உள்ளது. சொல்லில் சத்தியம் இல்லை; சத்தியம் தனக்குள் உள்ளது.”

தந்தை இயல்பாகவே கோபக்காரர். பண்டிதச் செருக்கு வேறு. கருப்பையில் கிடக்கும் மகவு இப்படிப் பேசுவதா? பூவுலகில் வந்து பிறக்கவும் இல்லை. சினந்தெழுந்தார். செருக்கு மேலோங்கியது. மகா பண்டிதரின் செருக்கு! வாதவிவாதம், சாஸ்திரார்த்தம் (பகுத்தாய்வு)

புரிபவர். கோப்பாவேசம் எழவே, கருச்சிசுவைச் சபித்து விட்டார், "நீ பிறக்கும் போது எட்டு அங்கங்களும் வக்கிரமாகி ஊனமாகி பிறப்பாயாக!".. அப்படியே பிறந்தார். 'அஷ்டாவக்கிரர்' எனக் காரணப் பெயர் பெற்றார். தந்தையே தனயனின் சரீரத்தைச் சிதைத்து விட்டார்.

இப்படிப் பல கதைகள்.

புத்தர் பிறந்தபோது நின்ற நிலையில் பிறந்தாராம். தாய் மரத்தடியில் நின்ற நிலையிலேயே ஈன்றெடுத்தாள். தாயும் மகனும் நின்ற நிலையில் இருந்தார்கள். புத்தர் தரையில் சரியவில்லை ஏழடிதூரம் நடந்தார். எட்டாவதடியில் நின்றார் (எட்டாவது வயதில் சிந்தித்தார்) உடனே நாலு ஆரிய (மேலான) சத்தியங்களை அறிவித்தார், வாழ்க்கை "துக்கமயம், துக்கத்திலிருந்து விடுதலை பெறலாம், துக்கம் முக்திக்கு உபாயம், துக்க நீக்கம்தான் நிர்வாண நிலை - முக்தி தசை."

லாவோத்சு பற்றியும் ஒரு கதை உண்டு. அவர் கிழவராகவே பிறந்தார்- எண்பதாவது வயதில். எண்பதாண்டுக் காலம் கர்ப்பத்திலேயே இருந்தாராம். எதுவும் செய்ய, துய்க்க, சாதிக்க விரும்பாததால் கருப்பையிலேயே முடங்கிக் கிடந்தார். ஆசாபாசம் இல்லை. இதனால் பௌதிக உலகில் பிறக்க விரும்பவில்லை. இறுதியில் பிறக்கும்போது அவர் முடி நரைத்திருந்தது. எண்பது வயதுக் கிழவர்!

பாரசீக தர்மகுரு ஜரதுஷ்டிரர் பற்றியும் ஒரு கதை நிலவுகிறது. அவர் பிறந்தவுடனேயே வாய்விட்டுச் சிரித்தாராம்.

இவர்களையெல்லாம் தோற்கடித்து விட்டார் அஷ்டா வக்கிரர். முந்தியவர்கள் பிறந்த பிறகுதான் பேசினார்கள். அஷ்டாவக்கிரர் பிறப்பதற்கு முன்பே கருப்பையுள் இருந்தவாறே தம் கருத்தைக் கூறி விட்டார்!

இந்தக் கதைகளெல்லாம் மகத்தானவை. இவைகளில் அம்மாந்தர்களின் வாழ்க்கைத் தத்துவங்கள், இலட்சியங்கள் உள்ளன. புத்தர் தம் வாழ்நாள் முழுவதும் உபதேசித்து வந்த தர்ம தத்துவங்களின் சாரம், எட்டுவகை மார்க்கங்களின் சாரம் எட்டாவது வயதுப் பேச்சில் உள்ளது. எட்டும் இறுதி இலக்கு 'சம்யக் சமாதி'

எனும் ஆழ்நிலை இலயிப்பு. இந்நிலையில் வாழ்வின் முழு சத்தியமும் புலப்படுகிறது. புத்தர் இந்நிலையில் தான் நான்கு ஆரிய சத்தியங்களை (மேலான உண்மைகள்) அறிவித்தார்.

லாவோத்சு பிறக்கும் போதே முதியவர். பொது சனங்கள் முதுமை பெற எண்பது வயது ஆகும். அப்போதும் கிழவர்களுக்கு ஞானம் (பகுத்தறிவு) ஏற்படுவதில்லை. கிழவர்களெல்லாரும் புத்திமான்கள் என்று கூறிவிட முடியுமா? முதுமை ஞானத்தின் மறுபெயர் இல்லை. வெயிலில் தொடர்ந்து நின்றால் தலைமுடி நரைத்துப் போகும்.

லாவோத்சுவின் கதை போதிப்பது- மானுட வாழ்வில் உத்துவேகம், தீவிரம் இருந்தால் எண்பது வயதில் நிகழ்வது, இளம் பிராயத்திலேயே ஒருகண நேரத்தில் நிகழும்- குறிப்பாக பிரக்ஞை (விழிப்புணர்வு) தீவிரமாக இயங்கவேண்டும். அறிவில் கலக்கம், மாசு படிந்திருந்தால் எண்பது வயதிலும் மெய்ஞானம் எற்படாது; அஞ்ஞானம் தொடரும்.

ஜரதுஷ்டிரர் சிரித்துக் கொண்டே பிறந்தார். அவருடைய சமய தர்மத்திற்குச் 'சிரித்து மகிழும் மதம்' எனப்பெயர். உலகில் இதுபோன்ற மதம் வேறு இல்லை. அது பூவுலகின் மதம், மேலான பௌதிக- லௌகிக மதம். பாரசீக மக்களின் பிரியமான மதம். பார்சிகள் பிற மதத்தவர்களை மதாபிமானிகளாகக் கருதுவதில்லை. பார்சிகள் ஆடிப்பாடி மகிழ்ந்து வாழ்வர். ஜரதுஷ்டிரரின் மதம் சிரித்து மகிழ்ந்து வாழும் மதம். வாழ்க்கையை மதித்து ஏற்கும் மதம். தடை, மறுப்பு கிடையாது. தியாகம் கிடையாது. நீங்கள் பார்சி மெய்யடியாரைப் பார்த்திருக்கிறீர்களா? அம்மணமாக நிற்பாரா? விட்டு விலகுவாரா? வெயிலில் காய்ந்திருப்பாரா? கஞ்சாப் புகை பிடித்திருப்பாரா? இல்லை, இல்லை! பார்சி மதத்தில் வாழ்க்கையை வருத்திக் கொள்ள, துன்பம் தர அநுமதிப்பதில்லை. ஜரதுஷ்டிரரின் அருள்வாக்கு, "சிரித்து மகிழ்வுடன் பரமாத்மாவை அடையலாம் எனும்போது, அழுது புலம்பிப் பெற முயல்வானேன்? ஆடிப்பாடி ஆனந்தமாக பரம்பொருளின் ஆலயத்துள் புகலடைய முடியும்போது, வழியெங்கும் முட்புதர்களை வளர்த்து வைப்பானேன்? மலர்களுடன் அர்ச்சிக்கப் போகும் போது துக்கம்- துன்பம்- துயரம் சுமந்து செல்வானேன்?

ஆகையால், சிரித்துக் கொண்டே பிறந்தார் ஜரதுஷ்டிரர் எனும் குறியீடு சரிதான்.

மேற்கூறிய கதைகளில் வரலாற்றைத் தேட வேண்டாம். 'இப்படி நிகழ்ந்தது- நிகழவில்லை' என விவாதம் தேவையில்லை. இக்கதைகளினூடே மிகச்சிறந்த ஆழமான கருத்து உள்ளது.

உங்களிடம் ஒரு தாவர விதை இருக்கிறது. அதைப் பார்க்கும் போது அது முளையிட்டு வளர்ந்து செடியாகிப் பூப்பதை உங்களால் அறிய முடியாது. விதை என்ன ஆகும் என்பதையும் ஊகிக்க முடியாது. இந்த விதை தாமரைத் தண்டை உருவாக்கும்; அது உயர்ந்து, தண்ணீரில் அமிழாத மலரைத் தரும்; அம்மலர் பகலவனின் கதிர்களில் மலர்ந்து நளிநடனம் புரியும். அதன் அழகை, பொலிவை, பெருமையை, தூய்மையைக் கண்டு கதிரவனே பொறாமைப்படுவான். தாமரை மலரின் மகரந்தத் துகள்கள் வானிலும் நறுமணம் பரப்பும்!- இதையெல்லாம் விதையைக் கண்டு அறிந்து கொள்ள முடியுமா? ஊகிக்க முடியுமா? ஆனால் இதெல்லாம் நிகழ்கின்றன.

ஆகவே, நாம் இருவிதமாகச் சிந்திக்கலாம். தாமரை விதையைக் கையிலேந்தியவாறு, 'இதில் தென்படாதது மலரிலும் ஏற்படாது. வளர்ச்சி, மாறுதல் எல்லாம் பிரமை, பொய், சூது' எனக் கூவலாம். தர்க்கம் - குதர்க்கம் செய்பவர், சந்தேகப்படுபவர்அப்படித்தான் சிந்திப்பர். சந்தேகப் பிராணிகள் புத்தரை மதிக்க மாட்டார்கள், சமண மகாவீரரை ஏற்க மாட்டார்கள். ஏசுபிரானை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஆனால் 'இவர்களை நாங்கள் அறிவோம்' என்பார்கள்!

ஏசு தம் கிராமத்திற்கு வந்தார், வியந்தார், சங்கடப்பட்டார். கிராமத்தார் அவரைப் பொருட்படுத்தவில்லை. தேவதூதரான அவருக்கு, சொந்த ஊரில் புகழ்ப் போற்றல் இல்லை, பூசனை இல்லை. காரணம்? கிராமத்தார் அவரைச் சிறு பிராயத்திலிருந்து பார்த்து வந்தவர்கள். தச்சன் ஜோசபின் மகன் இவன். விறகுக் கட்டைத் தூக்கி வரும்போது, மரத்தை ரம்பத்தால் அறுக்கும்போது, விறகு பிளக்கும்போது, வியர்வை வழியப் பாடுபடும்போது, தெருவில் சிறாருடன் விளையாடும் போது, சண்டை போடும் போது பார்த்திருக்கிறார்கள். பாலகனாய் இருந்த பிராயத்திலிருந்து பார்த்து

வருகிறார்கள்- விதையைப் பார்ப்பதைப் போல. இப்போது திடீரென மாறியிருக்கிறானாம்- பரமபிதாவின் புத்திரனாக! விதையைப் பார்த்தவன் அதன் வளர்விளைவான மலரை அறிவதில்லை, மதிப்பதில்லை. அவன் கூறுவான், "இது ஏமாற்றுச் சதி, இவன் கபடவேடதாரி."

**பு**த்தர் தம் மாளிகைக்குத் திரும்பி வந்தார். தந்தை எதிர்ப்பட்டார். ஆனால் உலகம் அறிந்ததை, ஏற்றுக் கொண்டதை அவர் அறியவில்லை, ஏற்கவில்லை. உலகம் புத்தரின் புத்தொளியைக் கண்டது; உலகமெங்கும் புத்தரின் போதனைகள் பரவின; அவரைச் சந்திக்க வெளிநாடுகளிலிருந்தெல்லாம் அன்பர்கள், பக்தர்கள் வந்தார்கள். அந்த மேன்மையுடன் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின் திரும்பிவந்த புத்தரை மகனைப் பார்த்து தந்தை சொன்னார், "உன்னை நான் இப்போதும் மன்னிக்கிறேன். நீ பெரும் தவறு செய்திருக்கிறாய். எங்களை வேதனைப்பட வைத்தாய். குற்றம் செய்தவன் நீ. ஆனாலும் தந்தையின் பாச உள்ளம் உன்னை மன்னிக்கிறது. இந்த மாளிகைக் கதவுகள் உனக்கு எப்போதும் திறந்திருக்கும். ஆனால் இந்தப் பிச்சைக் கப்பரையை எறிந்துவிட்டு வரவேண்டும். பிக்குச்சீவிர (காவி) ஆடையைக் கழற்றி எறியவேண்டும். இதெல்லாம் முடியாதென்றால் நீ வந்த வழியே திரும்பிப் போ!... இந்த ராச்சியம் உனக்கு உரியது . நான் முதுகிழவனாகி விட்டேன். இதை யார் பரிபாலிப்பது? இந்தப் பிச்சைக்கார ஆட்டமெல்லாம் இனி வேண்டாம்."

புத்தர் கூறினார், "தயவு செய்து என்னைப் புரிந்து கொள்ளுங்கள். போனது திரும்பி வராது. இப்போது இங்கு வந்திருப்பது வேறொரு நபர். உங்கள் இல்லத்தில் பிறந்து வளர்ந்தவன் திரும்பி வரவில்லை. விதை மலராக வந்திருக்கிறது. கூர்ந்து பாருங்கள்!"

தந்தை சினந்து சாடினார், "எனக்குப் போதிக்கிறாயா? நீ பிறந்த தினத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தவன் நான். நீ பிறரை ஏமாற்றலாம், போதிக்கலாம், பிரமிக்க, மயங்க வைக்கலாம். மறுபடியும் கூறுகிறேன். உன்னை நன்கு அறிவேன். எனக்குப் போதனை புகட்ட முற்பட வேண்டாம். உன்னை மன்னித்து ஏற்க விரும்புகிறேன்."

புத்தர் சொன்னார், "நீங்கள் என்னை அறிவீர்களா?...! என்னை நானே அறியவில்லையே. இப்போதுதான் அறிவொளிக் கதிர்கள் இறங்கின, என்னைப் புரிந்து கொண்டேன். மன்னிக்கவும். நான் அறிவுறுத்த வேண்டியுள்ளது- நீங்கள் பார்த்த - அறிந்த மனிதன் நான் இல்லை. புறத்தோற்றம் கண்ட நீங்கள் என் அகத்தோற்றத்தைக் காணவில்லை. உங்கள் மூலமாகப் பிறவி பெற்றேன். ஆனால் என்னை நீங்கள் உருவாக்கவில்லை. ஒரு பாதையில் பயணி வருவதைப் போல, உங்கள் வழியாக வந்தேன். பாதைக்கும் பயணிக்கும் சொந்தபந்தம் ஏது? 'என் வழியாக நீ நேற்று வந்தாய்; உன்னை நான் அறிவேன்,' எனப் பாதை கூறுவதைப் போல நீங்க்ள் பேசுகிறீர்கள். உங்களுக்கு முன்பும் நான் இருந்திருக்கிறேன். பல பிறவிகளாக என் பயணம் தொடர்கிறது. உங்கள் வழியில் வந்திருக்கிறேன், இதேபோல் பலரின் பாதைகளிலும் பயணித்திருக்கிறேன். மேலும் பல தாய்-தந்தையர் எனக்கு. ஆனால் என் வாழ்க்கைப் பயணம், ஆளுமைத் தொடர் அலாதியானது."

மிகக்கடினம், விதையை மட்டும் பார்த்தவருக்கு அதன் வளர்ச்சி- மலர்ச்சி (மலர்) மீது நம்பிக்கை வருவதில்லை. மதிப்பவன், விவாதிப்பவன், ஐயப்படுபவன்- யாவருமே, "நான் விதையை அறிவேன், அது பூவாக முடியாது. சேறு சகதியைத் தெரியும், அதிலிருந்து தாமரை எப்படி மலரும்? பொய், பிரமை, களவு, மதிமயக்கம், எவரோ ஏமாற்றியிருக்கிறார். மாயா ஜாலக் கண்கட்டுவித்தை;...' - இது ஒரு வழி.

மற்றொரு வழி, ஈடுபாடு கொண்டவன், மதிப்பளிப்பவன், பக்தர், அன்பன், அநுதாபி மலரைப் பார்க்கும்போது, விதையின் நுட்பத்தை உணர்கிறான். இம்மலரின் பொலிவு, சுகந்தம், அழகு, மலர்ச்சி எல்லாமே விதைக்குள் இருந்திருக்கும் விதைக்குள் இல்லாதது மலரில் வெளிப்படாது.

இந்தக் கதைகளெல்லாம் நிகழாதவை. அஷ்டாவக்கிரரை அறிந்தவர்களுக்குத் தெரியும், மலரைப் பார்த்தவர்கள் விதையிலும் அதைக் கண்டிருப்பார்கள். இன்று உள்ளது, நேற்றும் இருந்திருக்கும், மறைந்திருக்கும், மறைக்கப்பட்டிருக்கும். இன்று உள்ளது இறுதி வரை இருக்கும், முன்பும் இருந்திருக்கும். இறப்பின் போது உள்ளது

பிறப்பின் போதும் இருந்திருக்கும். இல்லை என்றால் எப்படிப் பிறக்கும்?

இதொரு அணுகுமுறை: மலருக்குப் பின்னும் பார்ப்பது. மற்றொன்று விதைக்குப் பிறகு பார்ப்பது. கவனித்தால் புரியும். இரண்டுக்கும் பொதுவான தொடர்பு, ஆதாரம் ஒன்றுதான். ஆனால் பிறகு பெரிய வித்தியாசம் வானத்திற்கும் பூமிக்கும் போல ஏற்பட்டு விடுகிறது. விதை சார்ந்து வாதிப்பவன் பூவின் மேன்மையை மறுக்கிறான். மலரைச் சார்ந்திருப்பவனும் வாதம் புரிகிறான். 'மலரின் மகத்துவம் விதையிலும் இருந்திருக்கிறது' இரு சாராரின் தருக்கம் (நியாயவாதம்) ஒன்றுதான். இருவரின் பார்வை மாறுபட்டது; சிக்கலானது.

என்னிடம் சிலர் கேட்பதுண்டு. "பள்ளிப்பருவத்தில் உங்களுக்கு சகபாடிகள் பலர் இருந்திருப்பார்களே, பள்ளிக்கூடத்தில், கல்லூரியில்? அவர்கள் தென்படுகிறார்களா? இல்லை. அவர்களுக்கு என்ன சிக்கலோ? நம்பமாட்டார்கள். அவர்களுக்கு சங்கடம் அதிகம்.

நேற்று ராயப்புரிலிருந்து ஓர் அன்பர் ஒரு தினசரி இதழை அனுப்பினார். அதில் பிரபல இந்தி எழுத்தாளர் ஸ்ரீஹரிசங்கர் பர்சாயி எனக்கு எதிராகக் கடுமையாக விமரிசித்து கட்டுரை எழுதியிருக்கிறார். என்னை அவருக்குத் தெரியும்; கல்லூரி நாட்களிலிருந்து அறிமுகமானவர். இந்தியில் தலைசிறந்த அங்கத- நகைச்சுவை எழுத்தாளர். அவர் படைப்புகள்மீது எனக்கு மரியாதை உண்டு. அவர் அக்கட்டுரையில் எழுதியிருந்தார், "ஜபல்புரின் தட்பவெப்பம், சுற்றுச்சூழலில் கோளாறு. இங்கு எத்தர்களும், கயவர்களும் தோன்றுகிறார்கள்- ரஜனீஷ், மகேஷ்யோகி, மூந்தடா இம்மூன்று மோசடிப் பேர்வழிகளையும் குறிப்பிடலாம்?" அவருக்கு மிக்க நன்றி. என்னை முதலாவதாகக் குறிப்பிட்டிருக்கிறாரே. என்னை நினைவு வைத்திருக்கிறாரே, மறக்கவில்லையே!

இடையூறு இயல்பானது, வெளிப்படையானது. என்னால் அவர் விமரிசனத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. விதையைப் பார்த்து மலர்மீது நம்பிக்கை கொள்வது நடவாது. மலரைப் பார்ப்பவர் அதன் விதையை நம்புவதும் கடினம்தான். எல்லா மேன்மக்களின் (மகா

புருஷர்கள்) வாழ்க்கைச் சரிதங்கள் இருவகையால் எழுதப்படுகின்றன. மாமனிதரை எதிர்ப்பவர் அவரது பாலியப் பருவத்திலிருந்து எழுதுகிறார். ஆதரிப்பவர் அவரது மரணத்திலிருந்து எழுத்துப் பயணத்தைத் துவங்கி பாலியப் பருவம் வரைப் போவார். இரண்டும் ஒரு வகையில் சரி. ஆனால் பாலியத்திலிருந்து தொடங்கி மரணம் வரைப் பயணிப்பவர் ஏமாந்து போகிறார். தன்னையே இழந்து விடுகிறார். மரண தசையிலிருந்து ஜனனத் தொடக்கம் நோக்கிப் பயணிப்பவர் பாக்கியசாலிகள். அவர்களுக்கு எல்லாமே எளிதாக கிடைக்கின்றன. தர்க்கவாதிகளுக்கு அவை கிட்டுவதில்லை.

நான் மட்டும் அப்பிரபல எழுத்தாளருக்கு மோசமாகத் தெரியவில்லை, என்னால் நான் வசித்த ஜபல்பூர் நகர் மோசமாகத் தோற்றுகிறது. சுற்றுச்சூழலில் ஏதோ கோளாறு இருக்குமாம். என் தொடர்பாக ஜபல்புரின் சுற்றுச்சூழலை நல்லது- கெட்டது எனத் தீர்மானிக்கும் உரிமை எவருக்கும் இல்லை. அங்கு சிலகாலம் வசித்தேன். நீண்ட தொடர்பு இல்லை. மகேஷ் யோகியும் அப்படித்தான். நாங்கள் இருவரும் வேறொரு இடத்துடன் தொடர்பு கொண்டவர்கள். அங்குள்ளவர்களுக்கும் எங்களைப் பற்றி எதுவும் தெரியாது. நாங்கள் இருவரும் அக்கம்பக்கத்து ஊர்களில் காடர் வாடாவிற்கு சமீபம் பிறந்தவர்கள். அவர் சீசவி கிராமத்தில் பிறந்தார்; நான் குச்சுவாடாவில் பிறந்தேன். அங்குள்ள காற்றும் நீரும் கெட்டதாக இருக்கலாம். என் பிறப்பால் வருத்தமோ, மகிழ்ச்சியோ சுகமோ, துக்கமோ காடர்வாடா வட்டாரத்திற்கு இருந்திருக்க வேண்டும். ஜபல்புரை இதில் இழுக்கக் கூடாது.

ஆனால் மனம் போன போக்கு, தர்க்கம் குதர்க்கம் அதன் பணி.

அஷ்டாவக்கிரரின் கதையைக் கேட்பவர், "இது தவறு, அசாத்தியம்" என்பார். இக்கதையை வெளிப்படுத்தியவர் அறிவார். ஒரு மகவு கருப்பைக்குள்ளிருந்து பேசுகிறது என்பதை. வெளிப்படையாகத் தெரிவது கருப்பத்துள் இருந்திருக்கும். கருத்துரையும் இப்படித்தான். ஆழ்மனமெனும் கருவில் இராது போனால் அக்கருத்து எப்படி வெளிப்படும்? சூனியத்திலிருந்து எதுவும் வெளிப்படாது. ஒவ்வொரு பொருளுக்கும் பின்புலக் காரணம் உண்டு. நாம் காண(அறிய) இயலவில்லை; ஆனால் உள்ளது உண்மை.

இக்கதைகள் இந்த உண்மையைத்தான் அறிவிக்கின்றன.

அஷ்டாவக்கிரர் கருப்பையில் இருந்தபோது பேசினார். பன்னிரண்டாவது வயதில் பிரபலமானார். 'அஷ்டாவக்ர கீதை அல்லது சம்ஹிதை' அவர் புகழ் பரவக் காரணம். மிதிலை மாமன்னர் ஜனகர் நடத்திய பண்டிதோத்தமர்கள் பங்குபெறும் சாஸ்திரார்த்த ஸதஸ் (நீதிநெறி ஆய்வு மன்றம்). ஜனகர் எல்லா மாநிலங்களிலிருந்தும் பிரபல பண்டிதர்களை அதற்கு அழைத்திருந்தார். ஓராயிரம் கறவைப் பசுக்கள் அரண்மனைத் தலைவாசலில் குவிக்கப்பட்டிருந்தன. கொம்புகளுக்குத் தங்கப் பூண்கள். கழுத்தில் நவரத்தின ஆரங்கள் அணிவிக்கப்பட்டிருந்தன. ஜனகர் பறையறிவித்தார், "மன்றத்தில் சாஸ்திரார்த்தம் (நீதிநெறி ஆய்வு) செய்து வெற்றி பெற்ற மகாபண்டிதருக்கு இப்பசுக்கள் பரிசாக அளிக்கப்படும்!"

பல பண்டிதர்கள். போட்டி தொடர்ந்தது. வெற்றி பெற்றவர் முன்னேறவும் தோற்றவர் விலகிப் போகவும் வழிவகை தீர்மானிக்கப்பட்டிருந்தது. அஷ்டாவக்கிரரின் தந்தையும் இதில் கலந்து கொண்டார். பலரையும் வென்று முன்னேறியவர் மாலைப்பொழுதில் வந்தினர் எனும் மகா பண்டிதரிடம் தோற்றும் கொண்டிருந்தார். இச்செய்தி அறிந்ததும் (பன்னிரண்டு வயதுச் சிறுவன்) அஷ்டாவக்கிரர் ஜனகரின் மகாசபைக்கு வந்தார். மன்றம் பண்டிதர்களால் நிரம்பியிருந்தது. தருக்க வாதத்தின் கடைசி கட்டம். வாதிக்க முன் வந்தவர்கள் தோற்று அவைக் காட்சியாளர்களாக அமர்ந்திருந்தார்கள். தந்தையின் தோல்வி முடிவை நெருங்கிக் கொண்டிருந்தது.

அஷ்டாவக்கிரர் பேரரசு ஓலக்க மண்டபத்துள் நுழைந்தார். பகட்டான அத்தாணிக் காட்சி. எட்டு உறுப்புகளின் ஊனம் பாதிக்கத் தள்ளாடித் தடுமாறி நடந்து வந்தார். பண்டிதர்கள் நையாண்டியாகச் சிரித்தார்கள். கோணல் மாணலான நொண்டி நடை. அஷ்டாவக்கிரர் பதிலுக்கு உரக்கச் சிரித்தார். ஜனகர் வினவினார், "சபையோர் சிரித்தார்கள், காரணம் இருந்தது. பிள்ளாய்! நீ ஏன் சிரித்தாய்?"

அஷ்டாவக்கிரர், "இந்தச் சக்கிலியர்களால் நிரம்பிய சபையில் சத்திய நிர்ணயம் செய்யும் சாஸ்திரார்த்தம் நிகழ்கிறதே. இதைக் கண்டு சிரித்தேன்! இவர்களுக்கு இங்கு என்ன வேலை?" எனக் கேட்டார்.

கனத்த மௌனம் நிலவியது. ... 'சக்கிலியர்கள்!... ' பேரரசர் ஜனகர் கேட்டார். "பிள்ளாய்! உன் கூற்றின் நோக்கம்?" சிறுவன் பதில். "இவர்களுக்கு என் உடம்புத் தோல் மட்டும்தான் தெரிகிறது. நான் தென்படவில்லை. என்னை சாதாரண மனிதனாகக் கண்டு அறிவது சுலபம். என் உள்ளகத்து ஆளுமையை உணர்வது கடினம். அது இவர்களுக்குப் புலப்படவில்லை. எனது அஷ்டவக்கிர (எட்டு ஊனக்கோணல்கள்) சரீரம்தான் புலப்படுகிறது. தோல் பதம் பார்க்கும் சக்கிலிகள் இவர்கள். அரசே! கோயில் கோணலாக இருந்தால் அதைச் சூழ்ந்திருக்கும் ஆகாயமும் கோணலாகுமா? நீர்க்குடம் உடைந்தால் அதன் ஆகாயமும் உடைந்து போகுமா? ஆகாயம் மாறாதது. குறையற்றது. என் உடல்தான் கோணல்மாணல். நான் (என் ஆன்மா) கோணல் இல்லை. இதைப் பாருங்கள்!"

இது ஆச்சரியமான அற்புத போதனை அறிவிப்பு! ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. ஜனகர் பிரமித்தார். அதிர்ச்சி. 'சக்கிலியர்களைக் கூட்டி சத்திய சோதனை மன்றம் நிகழ்த்தி விட்டேனே;...' குற்றவுணர்வுடன் கழிவிரக்கப்பட்டார். 'நானும் சிரித்தேனே...' அன்று ஏதும் பேசமுடியவில்லை. மறுநாள் காலையில் உலாவச் சென்றார். வழியில் அஷ்டாவக்கிரர் எதிர்ப்பட்டார். ஜனகர் அவர் பாதங்களில் சென்னி சாய்த்து வணங்கினார். இதை முந்திய தினமே பண்டிதர் மன்றத்தில் செய்திருக்க வேண்டும். "பிள்ளாய்!..." என அழைக்க அவர் வயதைக் கருதினார். இன்று இல்லை.

"சுவாமி! என்னுடன் அரண்மனைக்கு எழுந்தருளுங்கள்! என் அறியாமையை ஐயங்களைப் போக்குங்கள்! இப்போது எனக்கு நல்ல புத்தி உதித்துள்ளது. இரவு முழுவதும் உறங்கவில்லை. சரியாகச் சொன்னீர்கள். 'புறத்தை- உடல்- தோலைப் பார்ப்பவர்கள், அகத்தை ஆன்மாவைப் பார்ப்பதில்லை. இவர்கள் ஆத்ம தத்துவத்தை ஆராய்கிறார்களே. எப்படி சாத்தியம்? 'உடலில் ரசம்- விரசம், வெறுப்பு, கவர்ச்சி ஏற்படுகின்றன. மாற்றம், மரணம் உள்ள சரீரத்தைக் காண்கிறார்கள். அழிவற்ற அமிர்த தத்துவத்தை அறிவதில்லை. எனது பரம பாக்கியம், நீங்கள் வந்து அதிர்ச்சி அளித்தீர்கள். என் மதிமயக்கத்தைப் போக்கினீர்கள். கிருபை செய்து, என் இல்லத்திற்கு வாருங்கள், சுவாமி!"

ஜனகர் ராஜமகாலை அலங்கரித்து, மரியாதை மேலுற பன்னிரண்டு வயதான சிறுவன் அஷ்டாவக்கிரரை வரவேற்றார். பொன்வேய்ந்த அரியணையில் அமர்த்தினார். தன் ஐயத்தை விண்ணப்பித்தார்- முதல் சூத்திரம் அதுதான். அஷ்டாவக்கிரர் ஜனகருக்குப் போதித்தார், ஐயம் நீங்க உபதேசித்தார்.

இதற்கு மேல் அஷ்டாவக்கிரரைப் பற்றி ஏதும் தெரிய வரவில்லை. இதற்கு அவசியமில்லை. இவ்வளவு போதும். வைரம் குவியலாக இராது. ஒரு வைரக்கல் போதும். இரு சிறு நிகழ்வுகள் மட்டுமே அவரது கதை! ஒன்று, பிறப்பெடுப்பதற்கு முந்தையது. கருவறைக்குள்ளிருந்து குரல் கொடுத்து அறிவித்தது. "ஏன் பைத்தியமாய் இருக்கிறீர்? சாஸ்திரம், விதி என அவதிப்படுகிறீர்? சப்தஜாலத்தில் ஏன் சிக்கியிருக்கிறீர்? விழித்தெழுங்கள்! நீர் தேடுவது மெய்ஞானம் இல்லை. எல்லாமே கடனாக வாங்கியவை. புத்தியே தவிப்பு. சுய அநுபவம் இல்லை. இதில் துளியும் சாரம் (பயன்) இல்லை. எத்தனை காலம் உம்மையே குழப்பிக் கொண்டிருப்பீர்?..."

இரண்டாவது நிகழ்ச்சி பண்டிதர்கள் அரசவை மன்றத்தில் ஏளனமாய்ச் சிரித்தது. பண்டிதர்களைப் பார்த்து அஷ்டாவக்கிரர் அவமதிப்புடன் சிரித்துவிட்டுக் கூறியது. "பார்வை இருவகை. ஒன்று ஆன்மாவைப் பார்ப்பது. மற்றது தேகத்தின் வெளியே- தோலைப் பார்ப்பது. சக்கிலி தோலை மட்டும் பார்க்கிறான்; ஞானி ஆத்மாவைப் பார்க்கிறான்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? சக்கிலியர் உங்கள் முகத்தைப் பார்க்க மாட்டார், உங்கள் கால் செருப்பைப் பார்ப்பார். சக்கிலி செருப்பைப் பார்த்ததும் எல்லாம் தெரிந்து கொள்கிறார் - உங்கள் மனப்போக்கு, குணாதிசயம், பணவசதி எல்லாம். இங்கிருந்து ஆதாயம் கிட்டுமா, கிட்டாதா? இல்லை, உதவாக்கரையா? எல்லாவற்றையும் செருப்புகள் சொல்லிவிடும். உங்கள் செருப்பில் உங்கள் சுயசரிதம் எழுதப்பட்டிருக்கும். சக்கிலி படித்துவிடுகிறார். உங்கள் ஆத்மாவிற்குச் சாட்சியம் உங்கள் காலணிதான்.

தையல்காரர் துணிகளைப் பார்க்கிறார். உங்கள் ஆடை உடுப்பைக் கண்டு நிலைமையைப் புரிந்து கொள்ளுகிறார்.

எல்லாருக்கும் அவரவர் பந்தப்பட்ட கண்ணோட்டங்கள். ஆத்மஞானி தான் ஆத்மாவைப் பார்க்கிறான். அவருக்கு வேறு கண்ணோட்டம் இல்லை. அவரிடம் தரிசனம் (பட்டறிவு) உள்ளது.

ஒரு சிறு நிகழ்வு. அஷ்டாவக்கிரர் சம்பந்தப்பட்டதல்ல. ராமகிருஷ்ணர்- விவேகானந்தர் சம்பந்தப்பட்டது. ஆனாலும் அஷ்டாவக்கிரரோடு தொடர்பு உள்ளது. பிறகு அவரது சூத்திரங்களைப் பார்ப்போம்.

**வி**வேகானந்தர் ராமகிருஷ்ணரிடம் வந்தார். அப்போது அவர் பெயர் நரேந்திரநாத். பிறகுதான் ராமகிருஷ்ணர் அவரை 'விவேகானந்தா!' என அழைத்தார். முதலில் சந்திக்க வந்தபோது நரேந்திரநாத் விவாதம் செய்பவர், நாத்திகர், தருக்கவாதி. எதற்கும் அத்தாட்சி தேவை. சில விஷயங்களுக்கு அத்தாட்சி (பிரமாணம்) இராது. ஏற்க வேண்டியது கட்டாயம்.

நான் "இந்தப் பேரீச்சை மரம் அழகாக இருக்கிறது" என்று சொன்னால், நீங்கள் சொல்லுவீர்கள், "எனக்கு இதில் எந்த அழகும் தென்படவில்லை. மரம் மரமாகத்தான் இருக்கும். என்ன அழகு இதில் இருக்கிறது? நிரூபியுங்கள்!" கஷ்டம்தான். அழகை எப்படி நிரூபிப்பது? அழகுணர்ச்சி வேண்டும். அழகை உணர்த்தும் கண்ணோட்டம் வேண்டும். வேறு வழி இல்லை.

சில விஷயங்களுக்கு அத்தாட்சி காட்டமுடியாது. பரமாத்மாவிற்கு அத்தாட்சி இல்லை. பரமாத்மா உண்மை, உள்ளது. ஆனால் பிரமாணம் இல்லை. அன்பு, பிரேமை- எடுத்துக் காட்ட அத்தாட்சி இல்லை. அது நிசமாய் நிலவுகிறது. அழகிற்கு ஏது அத்தாட்சி? அது உள்ளது. ஆனால் அத்தாட்சி இல்லை.

மஜ்னு சொன்னான், "லைலாவை அறிந்து கொள்ள மஜ்னுவின் பார்வை தேவை." சரியாகத்தான் சொன்னான். லைலாவை அறிய வேறு வழி கிடையாது. மஜ்னுவின் தந்தை சிற்றரசன். மகனை அழைத்து, "நீ பைத்தியமா? லைலாவை எனக்குத் தெரியும். சாதாரணப் பெண் அவள். கருப்பு நிறம். கவர்ச்சி இல்லை. உன் மாதிரி அப்பாவி யார் இருப்பார்? நம் மாளிகையில் பன்னிரண்டு பேரழகிகளை

வரவழைத்திருக்கிறேன். இந்த நாட்டிலேயே தலைசிறந்த பேரழகிகள். இவர்களில் ஒருத்தியை நீ தேர்ந்தெடு. லைலாவை நினைத்து நீ அழுவதைப் பார்த்து என் உள்ளம் அழுகிறது."

மஜ்னு அந்த அழகிகளைப் பார்த்தான். "இவர்களில் எவளுமே என் லைலா இல்லை. என் லைலாவின் கால்தூசி பெற மாட்டார்கள்."

தந்தை சொன்னான், "மஜ்னு! உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது."

"இருக்கலாம். உங்களுக்கு ஒன்றைக் கூற விரும்புகிறேன். லைலாவை அறிந்து கொள்ள மஜ்னுவின் கண்ணோட்டம் வேண்டும்."

மஜ்னு சரியாகத்தான் சொன்னான்.

மரங்களின் அழகை ரசிக்க கலையுணர்வுள்ள கண்ணோட்டம் தேவை. இதற்கு உதாரணம், பிரமாணம் காட்ட முடியாது. உங்களை நேசிப்பவரின், காதலிப்பவரின் உள்ளத்தை உணர உங்களுக்கு நேசம், பாசம், பிரேமை கொண்ட உள்ளம் இருக்கவேண்டும். பரமாத்மா, பரம்பொருள் என்பதன் பொருள். பூவுலகிலுள்ள சகல சௌந்தரியமும், எல்லா அன்பும், பூரண சத்தியமும் சேர்ந்தது என்பதுதான். அதை அறிய, உணர தெளிவான சித்தம் வேண்டும். அது பிரத்தியட்ச சாட்சியாக வேண்டும். அதற்கு எந்தச் சொல்லும், கருத்தும் அவசியமில்லை. அது சிந்தனை அலைகளை எழுப்பாது. மனத்தில் அழுக்காறு இராது. புத்தி - பகுத்தறிவு தூய கண்ணாடி போல் முழுமையுடன் இருக்க வேண்டும்.

ராமகிருஷ்ணரிடம் விவேகானந்தர் கூறினார், "அத்தாட்சி வேண்டும். பரமாத்மா உள்ளதா,. இல்லையா? பிரமாணம் தேவை."

பரமஹம்ச குருதேவர் விவேகானந்தரை உற்று நோக்கினார். "இந்த இளைஞனின் எதிர்பார்ப்புகள் பெரியவை. இவனது வருங்காலப் பயணம் மிக நீண்டது. இவன் உள்ளத்துள் எழ, நிகழ ஏராளமாய் உள்ளன. பெரும் கருவூலம் தம்முள் நிறைந்துள்ளதை இவன் அறியவில்லை!..." ராமகிருஷ்ணர் இளைஞனின் முந்தைய பிறவிகளை ஆராய்ந்தார். பெரும்பேறு, நல்லூழ் நிரம்பிய அருட் செல்வத்துடன் பிறந்தவன் இவன். தம் பெருமை தெரியாதிருப்பவன்.

இவன் இப்படியே இருக்கலாகாது. தருக்கவாதத்தில் மூழ்கியிருக்க லாகாது. ரா்மகிருஷ்ணருடைய நல்லிதயம் கருணையும் வேதனையுமாக முனகிக் கொண்டிருந்தது. அவர் சொன்னார், "பிரமாணம், அத்தாட்சி, சாட்சி எல்லாவற்றையும் பிறகு பார்த்துக் கொள்ளலாம். நான் கிழவனாகி விட்டேன். என்னால் படிக்க இயலவில்லை. நீ வாலிபன். உன் கண் தீட்சண்யம் உள்ளது. இந்தப் புத்தகம் இங்கு படிக்கப்படாமல் கிடக்கிறது. நீ எடுத்துப்படி! எனக்குப் படித்துக் காட்டு!"

அந்தப் புத்தகம் அஷ்டாவக்கிர கீதை!

விவேகானந்தருக்கு இதில் சிரமம் ஏதும் இல்லை. பெரியவர் பெரிதாக ஒன்றும் கேட்டு விடவில்லை. படிக்கத் தொடங்கினார். முதல் மூன்று- நான்கு சூத்திரங்களைப் படித்ததுமே ஒரு பதைபதைப்பு, விதிர்ப்பு, மயிர்க்கூச்சல், நடுக்கம் ஏற்படலாயிற்று! உடனே விவேகானந்தர் சொன்னார், "சுவாமி! என்னால் படிக்க இயலாது."

ராமகிருஷ்ணர் சொன்னார், "படித்துப்பார்! இதில் என்ன சிரமம்? இப்புத்தகம் உன்னைக் கெடுத்தா விடும்? நீ பகுத்தறிவுள்ள வாலிபன். கண்பார்வையும் தீட்சண்யம். நான் கிழவனாகிவிட்டேன், கண்மங்கி விட்டது. நான் இதைப் படிக்க வேண்டும்; நீதான் படித்துச் சொல்ல வேண்டும்?"

புத்தகத்தைப் படிக்கப் படிக்க அதில் மூழ்கிவிட்டாராம் விவேகானந்தர். இந்த வாலிபனிடம் நிறைய- பெரிய வாய்ப்புகள் புதைந்திருக்கின்றன. போதிசத்துவரிடம் இருந்ததைப் போல இன்று இல்லாவிட்டால் நாளை சித்தார்த்தர் போதிஞானம் பெறத்தான் போகிறார் என்று தீர்மானிக்கப்பட்டதே. அதே போல இந்த இளைஞனிடமிருந்து மகத்துவம் மிக்க ஞானபோதம் வெளிப்படத்தான் போகிறது!... என்று ராமகிருஷ்ணர் உணர்ந்து சிந்திக்கலானார்.

ராமகிருஷ்ணர் விவேகானந்தரிடம் 'அந்தப் புத்தகத்தை- அஷ்டாவக்கிர கீதையை எனக்குப் படித்துச் சொல்!' என்று ஏன் சொன்னார்? அதன் தெளிவான- தூயதான கருத்துரை வேறு எதிலும் இல்லை என்பதால்தான். அதன் சொற்கள் உங்கள் உள்ளத்துள்ளும் புகுந்தால், உள்ளே உறங்கியிருக்கும் ஆத்மாவை எழுப்பி விடும்.

அச்சொற்கள் அதிர்வலைகளைச் சித்தத்தில் கிளர்த்தும்; உங்களை ஆத்மானந்தத்தில் மகிழ்விக்கும், உலுக்கி எடுக்கும், புயல்' வீசும்.

அஷ்டாவக்கிர கீதையை நான் அவசரமாக எதேச்சையாகத் தேர்ந்தெடுக்கவில்லை. சிந்தித்து, ஆய்ந்து, காலம் கடத்திய பிறகுதான் எடுத்தேன். கண்ணபிரானைப் பற்றி நான் பிரசங்கம் செய்யும்போது கேட்பவர் கூட்டம் இருந்தது. கூட்டம் சேர - சேர்க்க முனைவது அஷ்டாவக்கிர கீதையின் நோக்கம் இல்லை. கூட்டத்தைத் தவிர்க்க பிரயாசைப்பட வேண்டியதாயிற்று. இப்போது சில விவேகானந்தர்கள் தான் என் எதிரில் இருக்கிறார்கள். அதிக வாய்ப்புகள் உள்ள இவர்களோடு உரையாட வேண்டும். இவர்களுடன் உழைப்பின் பயனைப் பகிர்ந்து கொள்ள முடியும். வைரக் கற்களுக்குப் பட்டை தீட்ட வேண்டும். வெற்றுக் கற்களில் சிற்றுளியை வீணாக்கலாகாது. இதனால்தான் அஷ்டாவக்கிர கீதையைத் தேர்ந்தெடுத்தேன். நீங்கள் கேட்க, அறிய ஆயத்தமாகி விட்டீர்கள்.

**மு**தல் சூத்திரம் -

ஜனகர் வினவினார், "சுவாமி! மனிதன் ஞானத்தை எப்படிப் பெறுகிறான்? அவனுக்கு முக்தி எப்படிக் கிட்டுகிறது? வைராக்கியம் (உலாகயதப் பற்றின்மை) எப்படிக் கிட்டும்? எனக்குக் கூறுங்கள்! போதியுங்கள்!"

பன்னிரண்டு வயதுப் பையனிடம் ஜனக மகாராஜா கேட்ட கேள்வி. "என் அறியாமையைப் போக்குங்கள்!"- கோரிக்கை. மூன்று கேள்விகள் கேட்டார். "கதம் ஞானம்? ஞானம் (மெய்யறிவு) எப்படி ஏற்படும்?"

பொதுவாக நாம் நினைக்கலாம், 'இது ஒரு கேள்வியா? சமய நூல்களில் நிறைய போதனை உள்ளதே'. ஜனகருக்கும் இது தெரியும். புத்தகங்களில் விவரிக்கப்பட்டுள்ளவை சத்திய ஞானத்தைப் போதிக்க முடியாதவை. அவை ஞானபோதம் இல்லை. ஞானத்தின் தூசி, சாம்பல். ஞானசோதி எரியும்போது சாம்பல் உதிரும். அதைச் சேகரிக்கிறார்கள், சாத்திரமாக்குகிறார்கள். வேதம் ஒரு சாம்பல். எப்போதோ எரிந்து கனன்று நீறுபூத்தது. மகரிஷிகள் அதைத் தம் ஆத்மாவில்

எரித்திருக்கிறார்கள். எரிந்து அணைந்ததும் பஸ்மம் எஞ்சியது. அது சேகரிக்கப்படுகிறது. சேமிக்கப்படுகிறது. செம்மைப்படுத்தப்படுகிறது.

உதாரணமாக, ஒரு மனிதன் மரிக்கிறான். சடலத்தைச் சிதையிலிட்டு எரியூட்டியபின் சாம்பல் எஞ்சுகிறது. அதைச் சேகரிக்கிறார்கள். கலயத்தில் இட்டு வைக்கிறார்கள். அதை 'மலர் சேகரிப்பு' என்கிறார்கள். விசித்திர மனிதர்கள்! வாழும்போது மரித்தவரை 'மலர்' என்று கூறவில்லை, மதிக்கவில்லை. அவரது எலும்புத் துண்டுகளைச் சாம்பலுடன் சேகரித்து, "மலர் எடுத்து வந்தோம்" என்கிறார்கள். பத்திரப்படுத்தி வைக்கிறார்கள். வாழும்போது மலருக்கு அளிக்கும் கௌரவத்தை அவருக்குக் கொடுத்ததில்லை. ஆனால் அவர் மரித்ததும், பைத்தியக்கார உறவினர்கள் எரித்தபின் எஞ்சும்(அஸ்தி) எலும்பு- சாம்பல்களை 'மலர் இதழ்கள்' என்கிறார்கள்!

அதைப் போலவே, புத்தர் போன்ற ஞானி ஜீவித்திருக்கும் போது, அவரைப் பொருட்படுத்துவதில்லை, அவர் வாக்கைக் கேட்பதில்லை. மகாவீரர் எதிரே வருவதைப் பார்த்தால் உனக்குக் கோபம் வருகிறது; உன் கனவுகளைச் சிதைக்கிறார், உன் தூக்கத்தைக் குலைத்து விடுகிறார் என்று கோபம். 'இது விழித்தெழ வைக்கும் நேரமா? இப்போதுதான் இனிய கனவு தொடங்கியது. வாழ்க்கையில் வெற்றி பெறத் தொடங்கியிருக்கிறேன். இப்போதுதான் பகடைக்காய் சரியாய் விழத் துவங்கியிருக்கிறது. குறிதவறாமல் அம்பு எய்ய ஆரம்பித்திருக்கிறேன்- இதற்குள் இந்தப் 'பெரிய சுவாமி' எதிரே வந்து விட்டார். இவர் சொல்லுவதென்ன? எல்லாம் வீண், சாரமில்லாதவை. இப்போதுதான் தேர்தலில் நின்று வெற்றி பெற்றிருக்கிறேன். ஆட்சிப் பதவி ஏற்க வாய்ப்பு உள்ளது. இந்த 'மகாபுருஷர்' வந்துவிட்டார். சொல்லுகிறார், 'இதெல்லாம் வெறும் கனவு. இதில் சாரம் ஏதும் இல்லை. மரணம் வரும், எல்லாவற்றையும் பறித்துக் கொண்டு போய்விடும்'. சரி, ஆளைவிடும்! மரணம் சம்பவிக்கும்போது பார்த்துக் கொள்ளுகிறோம். இப்போது குறுக்கே புகுந்து வீண் போச்சு பேசாதிரும்!"

ஆனால் மகாவீரர், புத்தர் மரித்தபின், அவர்களுடைய அஸ்தி பஸ்மங்களைச் சேகரித்து வைக்கிறார்கள். பிறகு ஜைன சாத்திரம், பௌத்த தம்மபதம் எனப்பல நீதிநெறிக் கிரந்தங்களை

உருவாக்குகிறார்கள். அவைகளுக்குப் பூசனை செய்து, மலர் தூவுகிறார்கள். நாமும் அதைத் தொடர்ந்து பின்பற்றுகிறோம்.

ஜனகருக்கும் தெரியும், சாத்திர நூல்களில் அறிவுரைகள் நிரம்ப உள்ளன என்பது. ஆனாலும் அவர் வினவினார், "எப்படி மெய்ஞானத்தைப் பெறுவது?" எவ்வளவு படித்தாலும் ஞானத்தைப் பெற முடியாதென்பது அவருக்குத் தெரியும். சாத்திரங்களை, வேதங்களை, பிரும்ம சூத்திரம் முதலான கிரந்தங்களை நெட்டுரு செய்து, ஒப்பித்தாலும் மெய்ஞானம் ஏற்படாது.

"கதம் ஞானம்? கதம் முக்தி:? - ஞானம், முக்தி எப்படிக் கிட்டும்?..." வினா தொடரும்.

நீங்கள் எதை ஞானம் என்கிறீர்களோ, அது உங்களைக் கட்டி வைக்கிறது. எப்போது விடிவிப்பு (முக்தி)? சகல பந்தங்களிலிருந்தும் விடுவிப்பது தான் ஞானம். ஏசுநாதர் சொன்னார், "விடுதலை அளிப்பதுதான் சத்தியம்." இதேபோல் முக்தி அளிப்பது தான் ஞானத்தின் உரைகல். பண்டிதர் முக்தி பெற்றவராகத் தெரியவில்லை, பந்தப்பட்டவராக இருக்கிறார். முக்தி பற்றிப் பேசுகிறார், போதிக்கிறார்; ஆனால் அவர் முக்தர் இல்லை. பலவித பந்தங்களால் கட்டுப்பட்டுக் கிடக்கிறார்.

உங்கள் குருவான ஞான பண்டிதர் உங்களைவிடப் பந்த பாசங்களில் சிக்குண்டிருக்கிறார் என்பதைக் கவனித்திருக்கிறீர்களா? நீங்களாவது கொஞ்சம் விடுதலை பெற்றிருக்கலாம். ஆனால் உங்கள் குரு அதிகம் பந்தப்பட்டவர். பழகிப் போனதால் அவரால் சுதந்திரமாக எதுவும் செய்ய முடியாது, வாழ முடியாது.

சில நாட்களுக்கு முன்பு, சில சமண சன்னியாசினிகள் (ஸாத்வியர்) என்னை நேரில் சந்திக்க விரும்பினார்கள். ஆனால் சிராவகர்கள் (சமணகுரு) அனுமதிக்கவில்லை. இது வேடிக்கையாக இல்லை? 'ஸாது' (சமணத்துறவி) என்பதன் பொருள் சமுதாயக் கவலையைத் துறந்தவர் என்பது. வனவாசம் செய்யப் பயணிப்பவர் எதிர்ப்பட்டவனிடம் கூறுவது வழக்கம், "உன் மதிப்பு மரியாதை, ஆதரவு ஏதும் எனக்குத் தேவை இல்லை." ஆனால் இங்கு சாதுக்களும் சாத்விகளும் கூறுகிறார்கள், "சிராவகர்கள்

அனுமதிக்கவில்லை: ரஜனீஷிடம் மறந்தும் போய் விடாதீர்கள்! அங்கே போனால் இங்கே திரும்பி வராதீர்கள்- நிரந்தரமாக இங்கு கதவுகள் உங்களுக்கு அடைக்கப்பட்டு விடும்!'' இப்படியொரு சாது சுபாவமா? இது அடிமைத்தனம், சமணநெறிக்கு நேர்மாறான போக்கு. பொதுவாக சாதுக்கள் சிராவகர்களைச் சீர்திருத்துவது வழக்கம். இங்கு சிராவகர்கள் சாதுக்களை- சாத்விகளைக் கட்டுப்படுத்துகிறார்கள்.

ஒரு நண்பர் வந்து சொன்னார், ''ஜைன சாத்விகள் உங்கள் நூல்களை ரகசியமாகப் படிக்கிறார்கள். உங்கள் சொற்பொழிவுகளின் ஒலிநாடாக்களையும் விரும்பிக் கேட்கிறார்கள். ஆனால் பிறர் எதிரில் உங்கள் பெயரைக் கேட்டால் தெரிந்ததாகவே காட்டிக் கொள்ளுவதில்லை.''

இது முக்தியா?

ஜனகர் கேட்டார், ''முக்தி எப்படிக் கிட்டும்? முக்தி என்பது என்ன? முக்தி பெற உதவும் மெய்ஞானத்தை எனக்கு உபதேசித் தருளுங்கள்!''

சுதந்திரம்- முழு விடுதலை மனிதன் மிகவும் விரும்புவது. எல்லா வளமும் பெற்றிருந்தும் அடிமைத்தனம் இருந்தால் மிக்க வேதனை. பெற்றதெல்லாம் வீண். மனிதன் பரந்த வான்வெளியை விரும்புகிறான். அதற்கு எல்லை இல்லை, தடை இல்லை, இதைத்தான் பரமாத்மாவாக விரும்பும் பேரவா என்பர், மோக்ஷ ஆசையும் இதுவே.

நாம் சரியான சொல்லை 'மோக்ஷம்' என்பதைத் தேர்ந்தெடுக்கிறோம். உலகமொழிகளுள் எதிலும் இத்தகு இனிய, பிரியமான சொல் (மோக்ஷம்) கிடையாது. 'சுவர்கம், பிர்தௌஸ், வானுலகு, தேவருலகம்' எனப்பல சொற்கள் வழங்குகின்றன. ஆனால் அவற்றில் 'மோக்ஷ'த்தின் இசை, ஓசை இல்லை. மோக்ஷ சங்கீதம் அதிஅற்புதமானது. அதன் ஆழ்ந்த பொருள்- எவ்விதத் தடை-தடங்கலற்ற, எல்லையற்ற பரம சுதந்திரம், பரிசுத்த சுதந்திரம்.

ஜனகர் வினவினார், ''முக்தி எப்படிக் கிட்டும்? வைராக்கியம் (பற்றற்ற தன்மை) எவ்வாறு கிட்டும்? சுவாமி! எனக்கு உபதேசித் தருளுங்கள்!''

அஷ்டாவக்கிரர் ஜனகரை உற்றுப் பார்த்திருப்பார். குருவின் முதல்வேலை, கேள்வி கேட்பவரைக் கவனிப்பது. உற்றுப் பார்ப்பது 'கேள்வி எந்த நிலையில் எழுகிறது? எதற்காகக் கேட்கிறான்?' இதைத் தெரிந்து கொண்டால்தான் பதில் பயனுள்ளதாக, சரியாக இருக்கும்.

கவனிக்கவும்! நல்லறிவு (ஸத்ஞானம்) பெற்றுள்ளவர் சத்குரு; அவர் உன் கேள்விக்குப் பதிலளிப்பதில்லை. உனக்குத் தான் பதில் அளிக்கிறார். நீ என்ன கேட்கிறாய் என்பது முக்கியமில்லை. நீ ஏன் கேட்கிறாய்? உன் அறிவார்வத்திற்குப் பின்னால், உன் கேள்விக்கு அடிப்படையான சூழ்மனச் சிந்தனைச் சிக்கல் எது, உன் கேள்விக்குப் பின்னால் மறைந்திருக்கும் உண்மையான நோக்கம், விருப்பம் என்ன?...

உலகில் நான்கு வகை மனிதர்கள் உள்ளனர்- ஞானி, முமுக்ஷு (முக்தி பெற விரும்புபவர்), அஞானி, மூடன். நான்கு வகை ஆர்வங்கள்; 'தெரிந்து கொண்டேன், தெரிந்து கொள்ள ஏதும் இல்லை, இலக்கை அடைந்தாயிற்று. சித்த சுத்தி ஏற்பட்டது, சாந்தி கிட்டியது.' பிறகு வீட்டுக்குத் திரும்பி வந்தேன், ஓய்வெடுக்கிறேன். அறிய விரும்பும் ஆர்வம் நேர்மையாக இருக்க வேண்டும். ஞானிக்கு இப்படித்தான் இருக்கும். ஞானி கற்றுக் கொள்ளத் தயாராக இல்லை என்று அர்த்தம் இல்லை. ஞானி எளிமையாக, குழந்தையைப் போன்று இருப்பவர். எப்போதும் எதையாவது கற்றுத் தெரிந்து கொள்ள வேண்டும் எனும் ஆர்வம் கொண்டவர்.

நீங்கள் எவ்வளவுதான் கற்றுத் தேர்ந்தாலும் மேலும் மேலும் கற்க வேண்டும் எனும் ஆர்வம் வளரும். எளிதாக, கவடு சூது இல்லாமல் இருப்பதுதான் கற்கும் ஆர்வத்திற்கு ஏற்ற நிலை. வெளிக்காற்று உட்புக உங்கள் கதவுகள் திறந்திருக்கும். சூரியன் உதித்ததும் உன் கதவைத் தட்டுவதில்லை, சிறு இடைவெளியிலும் உட்புகுந்து விடுகிறது. பரமாத்மா உன் அறியும் ஆர்வத்தை அறிந்து உன்னிடம் வருகிறார்.

ஞானி ஞானத்தைச் சேகரிப்பதில்லை. ஞானி ஞானத்தின் திறன், தகுதியால் பயனடைகிறான். இந்த தத்துவத்தைச் சரியாகப் புரிந்து கொள்! பிறகு இது பயன்படும். ஞானி என்றும் அறிவார்வத்தை

வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறான். ஞானியின் இலக்கணமும் இதுவே. ஞானிக்கு எதிலும் விருப்பு- வெறுப்பு கிடையாது. நடுநிலை தவறாதவன் ஞானி. திரைமறைவு இல்லை. அறிவார்வம் திட்டமிட்டு ஏற்படுத்துவது இல்லை; வரைவு நகல் இல்லை; வார்ப்பட அச்சும் இல்லை. ஞானி என்பதன் பொருள் தியானி- தியானம் நிரம்பியவன்.

இப்படியாக, அஷ்டாவக்கிரர் ஜனகரை உற்று நோக்கியிருப்பார். இந்த மனிதர் ஞானி இல்லை; இவருக்கு தியானசித்தி ஏற்படவில்லை. ஏற்பட்டிருந்தால் இவரது அறிவார்வம் அடங்கியிருக்கும். சொற்கள் மூலம் வெளிப்பட்டிருக்காது.

**பு**த்தருடைய வாழ்க்கையில் நிகழ்ந்தது. ஒரு பக்கிரி (துறவி) சந்திக்க வந்தார். ஒரு சாதுவும் வந்தார். தொடர்ந்து பரிவிராஜகர் (சன்னியாசி) தேசாந்திரியாக வந்து சேர்ந்தார். கூறினார், "கேள்வி கேட்கத் தகுந்த சொற்கள் என்னிடம் இல்லை. நான் வினாவ விரும்புவதைச் சொற்களில் வெளிப்படுத்த இயலாதவன். உங்களுக்கு ஊடுருவி அறியும் திறன் உள்ளது. புரிந்து கொண்டு, எனக்குத் தேவையான ஞானத்தை அருளுங்கள்!"

இது ஒரு ஞானியின் அறிவார்வம் (ஜிக்ஞாஸா).

புத்தர் மௌனமாக அமர்ந்திருந்தார். சிறு நாழிகைப் போது கடந்ததும் அதிசயம் நிகழ்ந்தது. எதிரே அமர்ந்து புத்தரையே பார்த்துக் கொண்டிருந்த பரிவிராஜகரின் (துறவி) முகம் பொலிவுற்றது. கண்களில் நீர்மல்க புத்தரின் பாதங்களில் சென்னி சாய்த்து வணங்கினார். எழுந்து நின்று விண்ணப்பித்தார். "பெரும் பாக்கியம் பெற்றேன். தன்யனானேன். நான் பெற விரும்பியதை, உங்களிடம் நாடியதைப் பெற்று விட்டேன்! நீங்கள் அருளியதற்கு மிக்க நன்றி!" என்று கூறிவிட்டு விடை பெற்றார். அவர் முகத்தில் ஞானஒளி பிரகாசித்தது. ஆனந்தக் குதூகலத்துடன் துள்ளிக் குதித்தவாறு அவர் சென்றார்.

புத்தரைச் சூழ்ந்திருந்த சீடர்கள் கலக்கமும் திகைப்புமாக இருந்தார்கள். பிரதம சீடன் ஆனந்தன் கேட்டான், "பந்தே! பகவன்! பெரும் புதிராக இருக்கிறதே! அந்த பரிவிராஜகர் முதலில் 'என்ன கேட்பது என்பதே தெரியவில்லை, எத்தகைய சொற்களாய் கேட்பேன்?

என்ன கேட்க வந்திருக்கிறேன் என்பதும் தெரியவில்லை. புத்தர் பிரானே! நீங்கள் எல்லாம் அறிந்தவர். என்னைப் பாருங்கள். எனக்கு வேண்டியதைக் கூறுங்கள்!' என்றார். அவரே புதிராகத்தான் இருந்தார். இப்படியா கேட்பது? எதற்காக அவர் கேட்க வந்தார்? விசித்திரமாக இருக்கிறது. இத்துடன் முடியவில்லை. நீங்கள் ஏதும் கூறாமல் மௌனமாகவே அமர்ந்திருந்தீர்கள். இப்படி நீங்கள் மௌனமாக இருந்து நான் பார்த்ததில்லை. எவர் கேள்வி கேட்டாலும் பதில் சொல்லுவீர்கள். சில சமயம் கேள்வி கேட்காதவருக்கும் நீங்கள் பதில் சொல்லியதுண்டு. உங்கள் கருணை எப்போதும் பொழியும். ஏன் அப்போது கண் மூடி மௌனமாக அமர்ந்திருந்தீர்கள்? பிறகு என்ன அதிசயம் நிகழ்ந்தது? அந்த மனிதர் புத்தொளி பெற்றார். அவரது சொரூப மாற்றத்தைக் கண்டோம்! ஆழ்ந்த சிந்தனை வெள்ளத்தில் மூழ்கிய நிலையைக் கண்டோம். அவர் குதூகலித்து ஆடிப்பாடிக் கொண்டு சென்றதையும் பார்த்தோம்! கண்ணீர் வழிய, நெகிழ்ச்சி மேலுற, பரமானந்த நிலையில் திளைத்திருந்ததையும் கண்டோம். உங்கள் திருப்பாதங்களில் பணிந்து வணங்கினார். அவரிடமிருந்து பரவிய நறுமணம் எங்களைப் பரவசப்படுத்தியது. இதென்ன பேரதிசயம்?...! நீங்கள் பேசவில்லை, அவர் எதை எப்படிச் செவிமடுத்திருக்க முடியும்? நாங்கள் பல ஆண்டுகளாக உங்களிடம் அண்டியிருக்கிறோம். எங்களுக்கு அருள்பாலித்தும் வருகிறீர்கள். அந்தப் பரிவிராஜகருக்கு அருளிய அநுக்கிரகத்தை எங்களுக்கும் அளிக்காதது ஏன்?"

கவனமிருக்கட்டும், நீங்கள் எவ்வளவு பெற இயலுமோ அவ்வளவுதான் உங்களுக்குக் கிடைக்கும்.

புத்தர் சொன்னார், "குதிரைக்காரா! கவனமாய் கேள்!..." சீடன் ஆனந்திடம் குதிரையைக் குறிப்பிட்டார். ஆனந்த் சத்திரியன், புத்தரின் சித்தப்பா பிள்ளை, தம்பி போன்றவன். சிறு வயது முதல் குதிரையோடு ஆவலுடன் பழகுபவன். குதிரை சவாரியில் தேர்ந்தவன். குதிரை ஓட்டப் போட்டியில் பந்தயக்காரன். புத்தர் தொடர்ந்து சொன்னார், "ஆனந்த்! குதிரைகள் நாலு வகை. ஒன்று எவ்வளவு சாட்டையடி கொடுத்தாலும் நகராது. இது மகா மட்டக்குதிரை. இரண்டாவது ரகக்குதிரை அடித்தால் ஓடும், அடிக்காவிட்டால் நின்றுவிடும்.

முந்தையதை விட இதுமேல், மூன்றாம் ரகக்குதிரை, சாட்டையைச் சொடுக்கினால் போதும். அடிக்க வேண்டாம். சொடுக்குச் சத்தம் கேட்டதும் ஓடும். நல்ல சாதிக் குதிரை இது. நாலாவது ரகம் மிகச் சிறந்தது. சாட்டையின் நிழல், சாயல் போதும். கண்டதும் பாய்ந்தோடும். சொடுக்க வேண்டாம், குரலெழுப்பவும் வேண்டாம். நிழலைக் கண்டு ஊக்கம் பெறும். இது உத்தம சாதி.''

அஷ்டாவக்கிரர் ஜனகரை உற்று நோக்கியிருப்பார்.

நீ என்னிடம் வந்து ஏதோ கேட்கிறாய் என்றால், உன் கேள்வியைவிட முக்கியமானது, சிறப்பானது உன் ஆளுமைதான். கேள்வியே நீதான். உனக்குத் தெரிந்திருக்கும், நீ என்னிடம் கேட்காத போதும் நான் உனக்குப் பதில் சொல்லியிருப்பேன். உன் கேள்வியை, ஐயத்தை நான் தட்டிக் கழித்ததாகவும் உனக்குத் தோன்றியிருக்கும், அல்லது வேறு பதிலை அளித்திருப்பேன். ஆனால் எப்போதுமே உன் உள்ளுறைத் தேவைதான் மகத்துவம் கொண்டது. நீ என்ன கேட்கிறாய் என்பது முக்கியமில்லை. உனக்கே தெரியாது, 'என்ன கேட்கிறேன், என்ன கேட்க வேண்டும்?' என்பது. உனக்குத் தேவையானதுதான் கிடைக்கும், அளிக்கப்படும். நீ கேள்வி கேட்பதால் எதுவும் தீர்மானிக்கப்படாது.

அஷ்டாவக்கிரர் அறிந்திருப்பார்- இந்த மனிதர்- (ஜனகர்) ஞானி இல்லை, அஞ்ஞானியுமில்லை. அஞ்ஞானி திமிர் பிடித்தவன், பணிந்து போகாதவன். இவரோ பன்னிரண்டு வயதுச் சிறுவன் பாதங்களில் விழுந்து வணங்கியிருக்கிறார். அஞ்ஞானி இதைச் செய்யவே மாட்டான். 'எனக்கு எல்லாம் தெரியும். இவர் என்ன போதிக்க முடியும்?' என்று நினைப்பான். அவன் கேள்வி கேட்பதும் விதண்டாவாதம் புரியத்தான், மட்டம் தட்டத்தான். அஞ்ஞானி பரீட்சிக்கவும் எடை போடவும்தான் கேட்கிறான். ஜனகருடைய பார்வை பரிசுத்தமானது. சிறுவனிடம், ''சுவாமி எனக்கு உபதேசிக்க வேண்டுகிறேன்'' என்று கேட்டிருக்கிறாரே! பணிவும் பண்பும் நிரம்பியவர். இவர் அஞ்ஞானியாக இருக்க முடியாது. முட்டாளோ? இல்லை, மூடன் கேட்கவே மாட்டான். வாழ்க்கைச் சிக்கல், ஜீவித தத்துவம் பற்றி அவனுக்கு எதுவும் தெரியாது.

மூடருக்கும் பேரறிஞருக்கும் ஓர் ஒற்றுமை. பேரறிஞருக்கு எந்தப் பிரச்சினையும் சிக்கலும் இல்லை; மூடருக்கு பிரச்சினை எழவே இல்லை. அறிஞர் பிரச்சினையைக் கடந்தவர்; மூடர் பிரச்சினையை அண்டவே இல்லை, விலகி இருப்பர். மூடன் மதி மயக்கத்தில் இருப்பதால் கேள்வி எழாது. "எப்படி ஞானம் ஏற்படும்?" எனக் கேட்க மாட்டான். "முக்தி எப்படிக் கிட்டும்?... பற்றின்மை (வைராக்கியம்) எப்படி ஏற்படும்?" எனக் கேட்பானா? இல்லை!

மூடன் ஏதாவது கேட்டால், "என் ஆசை எப்படி நிறைவேறும்?... இந்த உலகில் இன்னும் அதிக நாட்கள் வாழ்வது எப்படி?" என்றுதான் கேட்பான். முக்தி பற்றிக் கேட்க மாட்டான். தங்கக் காப்பு பற்றிக் கேட்பான். "அதில் வைரக்கற்களை எப்படிப் பதிப்பது?" என்பான். ஞானம் பற்றி ஆர்வமே இராது. அதன் தேவையை, வாய்ப்பை அறியமாட்டான். மிருகப் பிராயமாக வாழ்பவன் மூடன்.

இந்த ஜனகர் மூடன் இல்லை. முமுக்ஷு - மோக்ஷத்தைப் பெற விரும்புகிறவர்.

'முமுக்ஷு'- இச்சொல்லை அறிவது அவசியம். மோட்சம் பெறப் பேரவா- முமுக்ஷா. இதைக் கொண்டவன்தான் முமுக்ஷு. ஜனகர் மோக்ஷத்தை நெருங்கவில்லை. ஆகையால் ஞானி இல்லை. மோட்சத்தைப் புறக்கணித்து, திரும்பிச் செல்லாததால் மூடரும் இல்லை. மோக்ஷம் குறித்துத் தவறான கருத்துக் கொண்டவரில்லாததால் அஞ்ஞானி இல்லை. நேரிய முமுக்ஷு இவர். பரிசுத்த சித்தத்துடன் எளிய சிந்தனையுடன் மோக்ஷம் பற்றி அறிய ஆவல் மீதுற ஏங்கி நிற்கும் ஆர்வலர்.

அஷ்டாவக்கிரர் கூறினார், "அன்பரே! நீங்கள் முக்தி பெற விரும்பினால் விஷயங்களை (உலகியல் நுகர்பொருள்களை) விஷமாகக் கருதி ஒதுக்கிவிட வேண்டும். பொறுமை, நேர்மை, தயை, மகிழ்ச்சி, சத்தியம் முதலிய நற்பண்புகளை அமுதமாகக் கருதிக் கடைப்பிடித்திரும்!... - முக்திம் இச்சஸி சேத் தாத! விஷயான் விஷவத் தியஜ!"

விஷயம் எனும் சொல் பெருமதிப்புள்ளது. 'விஷம்' (நஞ்சு) எனும் சொல்லிலிருந்து வந்தது. விஷயத்தைச் சுவைப்பவன்

அவ்வப்போது சாகிறான். அடிக்கடி சுகபோகம், புசிப்பது, பேராசை, பொறாமை, குரோதம், எரிச்சல்- இவைகளை மாறி மாறித் துய்த்துத் தானே நாம் தொடர்ந்து சாகிறோம். இதுவரையில் நாம் வாழ்வை அறியவில்லை, சாவைத்தான் சந்தித்து வருகிறோம். பிறந்தது முதல் இறப்பு வரையில் மெல்ல மெல்ல மரித்துக் கொண்டிருக்கிறோம். வாழவில்லை. மரித்துக் கொண்டிருப்பதே வாழ்வாகி விட்டது. வாழ்வு பற்றி அறியாமல் எப்படி வாழ முடியும்? இந்த சரீரம் நாளுக்கு நாள் நலிந்து வருகிறது. வலிமையை இழந்து வருகிறது. விஷய போகங்கள் நம்மை உருக்குலைத்து வருகின்றன, மூப்பும் பிணியும் தாக்குகின்றன. விஷய போகங்கள் சல்லடைத் துவாரங்கள்; நம் உயிர்ச்சக்தியை, ஆத்மாவை வழிந்தோட வைக்கின்றன. எல்லாம் தீர்ந்து போன நிலையை நாம் மரணம் என்கிறோம்!

நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? ஓட்டைக் குடத்தைக் கிணற்றில் விட்டால், நீரில் மூழ்கியிருக்கும் வரை அதில் தண்ணீர் நிரம்பியிருக்கும். அதை மேலே இழுக்கத் துவங்கியதும் குடத்து நீர் ஒழுகி, சிறிது நேரத்தில் வெறும் குடமாக இருக்கும். நீர் கொட்டும் ஓசை ஒலிக்கும். இதைத்தான் வாழ்க்கை என்கிறீர்களா? குடத்து நீர் ஒழுகி வடிந்து போவதை வாழ்க்கை என்கிறீர்களா? மேலே இழுக்கப்பட்ட குடம் கைக்கு எட்டியதும் வெறும் கயிர்க் குடமாகிவிடுகிறது. துளி தண்ணீர் கூடத் தங்குவதில்லை. இப்படியாகத்தான் நம் வாழ்க்கை இருக்கிறது.

குழந்னத கருப்பையிலிருந்து வெளியேறாத வரை உதரம் நிரம்பியிருக்கும். சிசு ஜனித்ததும் வயிறு ஒடுங்கி விடும்.

பிறப்பின் முதல் நாள் இறப்பின் முதல் தினம். நிரம்பியது வடிந்தது. தினமும் மரணம். 'பிறந்த தினம்' எனக் கூறுவதைவிட 'இறந்த நாள்' எனக் கூறுவது சத்திய வாக்கு. ஓர் ஆண்டு மரித்திருக்கிறாய், ஆனால் கூறுவது 'பிறந்த நாள் வந்திருக்கிறது!' ஐம்பது ஆண்டுகள் மரித்திருக்கிறாய், ஆனால் சொல்லிக் கொள்ளுவது 'ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறேன், பொன்விழா கொண்டாடுவோம்! ஐம்பது ஆண்டுகள் தொடர்ந்து மரித்திருக்கிறாய். மரணம் அருகில் வந்து கொண்டிருக்கிறது. வாழ்வு விலகிப் போகிறது. நீர்க்குடம் காலியாகி விட்டது. விலகித் தொலைவில் போவதை,

அருகில் வருவதாகக் கருதுகிறாய்! இதென்ன தப்புக்கணக்கு? தலைகீழ் விகிதம். நாம் தினமும் மரித்துக் கொண்டிருக்கிறோம். இறுதிச் சாவு நெருங்கி வருகிறது.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "விஷயங்கள் (நுகர்பொருள்கள்) விஷம் போன்றவை. அவைகளைத் துய்த்து நாம் மரிக்கிறோம். அவை மூலம் வாழ்வு கிட்டுவதில்லை. அன்பரே! உமக்கு முக்தி பெற விருப்பமானால், விஷயங்களை விஷமெனக் கருதி ஒதுக்கிவிடும். பொறுமை, நேர்மை, தயை, மகிழ்ச்சி, சத்தியம் இவைகளை அமுதமாகக் கருதிப் பேணி வளர்த்துக் கொள்!"

அமுதம் வாழ்வை அளிப்பது, அமரத்துவம் அளிப்பது. இதை உணர்ந்தவனுக்கு மரணம் இல்லை.

பிறகு க்ஷமா (பொறுமை). குரோதம் விஷம், க்ஷமா அமிர்தம். நேர்மை, வஞ்சகம் விஷம், எளிய நேர்மை அமுதம். கொடுமை, கொடூரம் விஷம். தயை, கருணை அமிர்தம். பிறகு, சந்தோஷம். மகிழ்ச்சியின்மை பூச்சி போல் கடித்துக் கொண்டிருக்கும், புண் பரவும். இதயத்தை அரித்தழிக்கும் கேன்சர் (புற்று நோய்) பரவும், விஷத்தைப் பரப்பும்.

சந்தோஷம்- மகிழ்ச்சி, கிடைத்ததைக் கொண்டு திருப்தி, கிடைக்காததைப் பற்றிப் பேரவா இல்லை. கிடைத்தது போதும், இதுவே அதிகம் எனும் மனநிறைவு எதார்த்தமான கண்ணோட்டம், தெளிவான பார்வை.

சந்தோஷத்தை வாழ்க்கையில் திணிக்க முடியாது. கவனிக்கவும்! உனக்குக் கிடைத்தது உன் தேவைக்கு அதிகம். எப்போதுமே இப்படித்தான். நீ விரும்பியபடி உனக்கு வேண்டியது கிடைத்துக் கொண்டிருக்கிறது. நீ துன்பத்தை விரும்பினாய் அது கிடைத்தது. சுகத்தை விரும்பினாய் அதுவும் கிடைத்தது. நீ தவறானதை விரும்பினால் அதுதான் கிடைக்கும். உன் ஆசைதான் உன் வாழ்க்கையை உருவாக்குகிறது. ஆசை, விருப்பம் விதை. வாழ்க்கை அதன் விளைச்சல். பல பிறவிகளிலும் நீ விரும்பியவை உனக்குக் கிடைத்து வருகின்றன. பல தடவை நீ நினைத்திருப்பாய், நான் விரும்பியது ஒன்று, எனக்குக் கிடைத்தது வேறொன்று. உன்

விருப்பத்தில் தவறு இல்லை, விருப்பத்திற்கு நீ தேர்ந்தெடுத்த சொல் தவறானது. நீ வெற்றியை விரும்பியிருப்பாய், ஆனால் உனக்குக் கிடைத்தது தோல்வி. இதைத் திரும்பத் திரும்ப நீ சொல்லிக் கொண்டிருப்பாய்.

ஆனால், வெற்றியை விரும்பியவன், கிடைத்த தோல்வியை ஏற்றுக் கொண்டிருக்கிறான்- உள்ளூர பயப்பட்டாலும், வெற்றி விருப்பம்தான் தோல்விக்குக் காரணம். வெற்றி ஆசை ஏற்படும் போதெல்லாம் தோல்வி எண்ணம் ஏற்படும், வலுப்பெறும். வெற்றி எப்போதாவது கிட்டும், ஆனால் பயணம் தோல்விகளைச் சந்தித்தவாறு தான் தொடரும். ஆக, நீ வெற்றியோடு தோல்வியையும் ஆசைப் பட்டிருக்கிறாய்.

பேரறிஞர் லாவோத்சு சொல்லியிருக்கிறார், "வெற்றியை விரும்பினாய், தோல்வி கிட்டியது. உனக்கு வெற்றி கிட்ட வேண்டு மானால், அதற்கு ஆசைப்படுவதை விட்டுவிடு! பிறகு பார், உனது வெற்றியை எதாலும் தடுக்க முடியாது.

நீ சொல்லுகிறாய், 'நான் பாராட்டை விரும்பினேன், ஆனால் எனக்குக் கிடைத்தது அவமானம். தன்னம்பிக்கை, சுயமரியாதை இல்லாதவன்தான் பிறரிடமிருந்து பாராட்டை, வெகுமதியை எதிர்பார்க்கிறான். தன்மீது அவமதிப்பு கொண்டவன் பிறரிடமிருந்து அவமானத்தை ஏற்கிறான், அதை மூடி மறைக்கிறான். உன்னுள் அவமான உணர்வு இருப்பதால்தான் பிறரிடமிருந்து வெகுமானத்தைப் பெற விரும்புகிறாய். 'எனக்கு எந்தப் பெருமையும் இல்லை' என எண்ணுபவன், பிறர் பாராட்டி, ஆதரித்து பிரபலப்படுத்தி பெருமை சேர்க்க வேண்டுமென் விரும்புகிறான்.

நீ பிச்சைக்காரன்! நீயே உன்னை அவமானப்படுத்திக் கொள்ளுகிறாய், பிறரிடமிருந்து வெகுமானம் பெற ஆசைப்படுகிறாய்! உன் அவமதிப்பு அதிகரிக்கும்.

லாவோத்சு சொல்லுகிறார், "என்னை எவரும் அவமானப் படுத்திவிட முடியாது. நான் வெகுமானத்தை விரும்பியதே இல்லை. வெகுமானம் வேண்டும் போது என்னை வரித்துக் கொள்ளட்டும். இதேபோல், என்னை எவரும் தோற்கடிக்க முடியாது, நான் வெற்றி

பற்றிப் பேசுவதே இல்லை. எப்படி என்னைத் தோற்கடிக்க முடியும்? ஜெயிக்க ஆசைப்படுபவனைத்தான் நீ தோற்கடிக்க முடியும். ஆக, இதொரு சிக்கலான கணக்கு.

உலகியலில், வெகுமானம், பாராட்டு எதையும் விரும்பாத வனுக்குத் தான் அதெல்லாம் வந்து சேரும்! வெற்றி பற்றி விருப்பமில்லாதவனுக்குத்தான் வெற்றி கிட்டுகிறது. மேலும் அவன் வெற்றிகண்ட மனநிறைவோடு செயலாற்றுபவன். பரமாத்மாவின் தொண்டனாகிய உணர்வுடன் வாழ்பவன். அவனுக்கு ஆசைப்பட ஏதும் இல்லை. "எல்லாம் அவன் (பரமாத்மா) செயல்!" என நம்பி வாழ்பவனுக்கு வெற்றி தோல்வி பற்றிக் கவலை இல்லை, ஆசை இல்லை. பரம்பொருள் உனக்கு வாழ்வைக் கொடுத்திருக்கிறான், கௌரவத்தைக் கொடுத்திருக்கிறான், சௌபாக்கியத்தை அருளியிருக்கிறான். அகக் கண்களையும் திறந்து பார்! பூத்துக் காய்த்துக் குலுங்கும் மரங்களைப் பார்! பறவைகளைப் பார்! வண்ண மலர்களைப் பார்! இன்னிசையைக் கேள்! நீர்வீழ்ச்சியின் ஓசையைக் கேள்! மெய் உணர்வு ஏற்பட்டால் புத்தராகி விடுவாய். வேறென்ன வேண்டும்? புகழும் பாராட்டும் பெற்றுவிட்டாய். பரமாத்மா உனக்குச் சான்றிதழ் வழங்கி விட்டார். பிச்சைக்காரனைப் போல் எவரிடம் அத்தாட்சி பெற விரும்புகிறாய்? உன்னிடம் அத்தாட்சி கேட்பவரிடம் நீ உனக்கு அத்தாட்சி கேட்கிறாயா?

இது விநோதமான விவகாரம்- இரு பிச்சைக்காரன்கள் எதிர் எதிரே நின்று கொண்டு ஒருவரிடம் மற்றவன் யாசகம் கேட்கிறான்! எப்படிப் பிச்சை கிட்டும்? இருவருமே யாசகர்கள். நீ யாரிடம் வெகுமானத்தை எதிர்பார்க்கிறாய்? எவன் எதிரில் நிற்கிறாய்? நீ உன்னையே அவமானப்படுத்திக் கொண்டிருக்கிறாய்; இது வளரும்.

மகிழ்ச்சி என்பது உன்னிடம் உள்ளதை அறிந்து திருப்திப்படுவது. இது அஷ்டாவக்கிரரின் மகத்தான, பெருமதிப்புள்ள விளக்கம். போகப் போக இது உனக்கு விளங்கும். அஷ்டாவக்கிரரின் நோக்கு புரட்சிகரமானது. அற்புதமானது; மூலாத்ாரத்திலிருந்து கிளர்ந்த புரட்சி! அவரது போதனை, "சந்தோஷம், சத்தியம் இரண்டையும் அமுதத்தைப் போல் போற்றிப் பயன்படுத்து; அநுபவி!

ஏனென்றால், அசத்தியத்துடன் வாழ்பவன் அசத்தியமாக (பொய்யாக) மாறிவிடுகிறான். பொய் பேசுபவன், பொய்யாக வாழ்பவன் பொய்களால் சூழப்பட்டிருப்பான். நல்லவர்கள், நல்லவைகூட தொடர்பு விடுபட்டுப் போகும்.

பரமாத்மாவுடன் தொடர்பு கொள்ள விரும்புவாயானால், சத்தியத்தின் வழியாகத்தான் கிட்டும். நேர்மை, உண்மை மூலமாகத்தான் பரமாத்மாவுடன் இணைய முடியும். பரமாத்மாவை விட்டு விலக விரும்பினால் அசத்தியத்தின் புகைமூட்டத்தை ஏற்படுத்து. அசத்திய மேகமூட்டத்தை உருவாக்கு! இந்நிலையில் நீ பரமாத்மாவை விட்டு வெகு தொலைவு விலகிப் போவாய்.

அஷ்டாவக்கிரர் கூறுவார், "நீ பூமியோ, நீரோ, காற்றோ, வானமோ இல்லை. முக்தி பெற ஆத்மாவை, உன்னை, உள் உணர்வை (சைதன்யம்) உணர்ந்து கொள்!"

எளிய கருத்துரை முகவுரை- முன்னுரை ஏதும் இல்லை. அஷ்டாவக்கிரர் பேசத் துவங்கியதும், சமாதி நிலை பற்றி நினைவு வந்தது. ஞானிகளுக்கு சமாதி பற்றித் தெரியும் சாமானியர்களுக்கு 'சமாதி' என்றால் திகைப்பும் வியப்புமாக இருக்கும். புரிந்து கொள்ள இயலாது.

அஷ்டாவக்கிரர் புத்தரைப் போல் ஏழடிகள் சென்றபின் 'சமாதி' பற்றிப் பேசவில்லை. முதல் அடி வைத்த பின் சமாதி பற்றிக் குறிப்பிடுகிறார்.

"நீ பூமி, நீர், காற்று, ஆகாயம்- எதுவும் இல்லை- இந்த உணர்வில் நிலை பெற்றிரு! முக்திக்காக ஆத்மாவை, சுயத்தன்மையை, இதற்கெல்லாம் சாட்சியான மெய்ஞானத்தை அறிந்து கொள்!"

'சாட்சி' என்பது மகத்தான சூத்திரம் (சுருக்கம், வாய்பாடு) இதைவிடச் சுருக்கமாகக் கூற முடியாது. பார்வையாளனாக இரு! நிகழ்வதை நிகழவிடு! அதைத் தடுக்காதே. நமது உடல் நீர், நிலம் (மண்), தீ, வானம் சார்ந்தது. நீ உடலுள் ஒளிரும் தீபம்; அதன் ஒளியில் பஞ்ச பூதங்களும் பிரகாசிக்கின்றன. நீ பார்வையாளன் (த்ரஷ்டா) என்பதை நன்கு அறிந்து கொள்! -"ஸாக்ஷிணாம் சித்ரூபம் ஆத்மானம் வித்தி! (உன்னையே சாட்சிகளின் ஞான சொரூபமாக உணர்ந்து கொள்!)

இது இவ்வுலகில் மிகமிக மதிப்புள்ள தத்துவ போதம் (சூத்திரம்). சாட்சியாக இரு! இதனால் ஞானோதயம் ஏற்படும், வைராக்கியம் (துறவு) ஏற்படும், முக்தி கிட்டும்.

கேள்விகள் மூன்று, பதில் ஒன்று.

"நீ தேகத்தைத் தன்னிடமிருந்து விலக்கி, சைதன்யத்துள் (மெய்யுணர்வு) ஆழ்ந்திருப்பாயானால், நீ இப்போதே சுகவாசியாக, சாந்த சொரூபனாக, பாசபந்தங்களிலிருந்து விடுபட்டவனாக விளங்குவாய்!"

இதனால்தான் சொல்லுகிறேன், இந்த தத்துவ போதம் அடிப்படைப் புரட்சி. பதஞ்சலி மகரிஷி கூட துணிந்து கூறவில்லை "இப்போதே" என்று. அவர் கூறினார், "பயிற்சி மேற்கொள், யம-நியமங்களைப் பயில்! பிராணாயாமத்தில் சித்தி பெறு! யோகாசனங்களில் தேர்ச்சி பெறு. பரிசுத்தனாகு! பல பிறவிகளுக்குப் பிறகு சித்தி கிட்டும்."

மகாவீரர் சொல்லுகிறார், "ஐந்து மகாவிரதங்கள். பல பிறவிகள் தொடரும். பிறகு மூப்பு இல்லா நிலை (நிர்ஜரா) கிட்டும். கரும வினைகளின் வலை அறுபடும்."

இப்போது அஷ்டாவக்கிரர் வாக்கைக் கேட்டுக் கொள் -

**"யதி தேஹம் ப்ருதக் க்ருத்ய சிதி விச்ராம்ய திஷ்டஸி,**
**அதுநைவ ஸுகீ சாந்த: பந்தமுக்தோ பவிஷ்யஸி."**

(உன் தேகத்தைத் தனிப்படுத்தி ஞானசிந்தனையில் உள்ளார்ந்து இலயித்திருப்பாயானால், **இப்போதே** சுகமும், சாந்தியும் பெற்று, வினைத் தளைகளிலிருந்து விடுபட்டு வாழ்வாய்!)

'இப்போதே!'... இக்கணமே, இங்கேயே! நீ உன் தேகத்தைத் தனிமைப்படுத்தி, விலக்கிவைத்து ஞான சிந்தனையில் ஒன்றி இலயித்திரு! 'இத்தேகம் நான் இல்லை' என்பதை உணர்ந்து கொண்டால் கூடவே, நான் செய்பவனோ, அநுபவிப்பனோ இல்லை, எல்லாவற்றையும் காண்பவன் என்னுள் மறைந்திருக்கிறான். அவன் பார்த்து வருகிறான்- பாலியப் பருவத்தில் பாலகனாக வாழ்ந்தாய்;

வாலிபம் வந்தது, வாலிபனாக வாழ்ந்தாய். முதுமை வந்தது, கிழவனாக வாழ்ந்தாய். எனக்கும் அப்படித்தான். எல்லாமே வந்து போவது தான். பாலியம், வாலிபம், முதுமை- எதுவும் 'நான்' இல்லை என்பதை உணர வேண்டும். என்னிடம் எல்லாமே வந்து போகும். 'நான்' அப்படியே சாசுவதமாக இருப்பேன்.

ரயில்வே ஸ்டேஷன்கள் தொடர்ந்து வரும், பின்தங்கும், மாறும். இதுபோலத்தான் பாலியம், இளமை, முதுமை பிறவிப் பயணம் மேற்கொள்ளும், தொடரும். எதிர்ப்படும் ரயில் நிலையத்துடன் நீ ஒன்றிப் போவதில்லை, தன்னிடமாகக் கருதுவதில்லை. புனா ஸ்டேஷன் வந்ததும் 'நான்தான் புனா ஸ்டேஷன்' என்று நீ கருதுவதில்லை. அடுத்து மன்மாட் நிலையத்தை அடைந்ததும் 'நான் மன்மாட்' என்று எண்ணுவதில்லை. ஒவ்வொரு ஸ்டேஷனும் வரும், விலகும். நீ பயணி மட்டுமே, பார்வையாளன் மட்டுமே. புனாவைப் பார்த்தாய், அது எதிர்ப்பட்டது; மன்மாடு பார்த்தாய், வந்தது. நீ பார்ப்பவன், சந்திப்பவன், விலகுபவன், விலக்கப்படுபவன்.

முதல் கருத்து, தகவல்- எது நிகழ்கிறதோ, அதிலிருந்து பார்வையாளனை அப்புறப்படுத்து! இதைத்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "உன் உடலை உன்னிடமிருந்து விலக்கி வைத்து, சைதன்யத்தில் (ஆன்மீக உள்ளுணர்வில்) ஒன்றி ஓய்வு பெறு!"

வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை. லாவோத்சுவின் குறிப்பு- சமர்ப்பணம், காணிக்கை செலுத்தல். அஷ்டாவக்கிரரின் சூத்திரக் குறிப்பும் இதுவே- உள்ளார்ந்த ஓய்வு, ரெஸ்ட். வேறு எதுவும் செய்வதற்கு இல்லை.

என்னிடம் அன்பர்கள் வருகிறார்கள். "எப்படித் தியானம் செய்ய வேண்டும்?" என்று கேட்கிறார்கள். கேள்வியே தவறு. அப்படியும் நான் அவர்களிடம் கூறுகிறேன், "செய்யுங்கள்!" பிறகு? ஏதாவது செய்தாக வேண்டும். இப்போது உங்களுக்கு ஏதாவது செய்தாக வேண்டும் என . அரிப்பு. அதை நிறைவேற்றுக! அரிப்பெடுத்தால் என்ன செய்வீர்? சொரிந்து கொள்ளாமல் இருக்க முடியாது. அவர்களை அப்படிச் செய்வித்து, செய்வித்து களைத்துச் சோர்வடையச் செய்கிறேன். பிறகு "இந்தச் செயலிலிருந்து என்னை

விடுவியுங்கள். எவ்வளவு நேரம்தான் இதைச் செய்து கொண்டிருப்பது?'' என்கிறார்கள். "நான் முன்பே தயாராக இருந்தேன். உனக்குத்தான் புரிந்து கொள்ள இவ்வளவு நேரம் ஆயிற்று. சரி, இனி ஓய்வு எடுத்துக் கொள்!'' என்கிறேன்.

ஆக, தியானத்தின் உள்ளார்ந்த பொருள் ஓய்வு. **"சிதி விச்ராம்ய திஷ்டஸி!"** (சித்தத்துள் ஆழ்ந்திருந்து ஓய்வு பெறுகிறாய்) என்கிறார் அஷ்டாவக்கிரர்.

ஓய்வு நிலையில் சுய உணர்வை நிறுத்தி வைப்பவன் அப்படியே நிலைத்திருக்கிறான்.

எதுவும் செய்ய வேண்டாம். நீ தேடுவது உனக்குக் கிடைத்திருக்கிறது. நீ தேடுவதை என்றுமே நீ இழந்ததில்லை. அதை இழக்கவும் முடியாது. இதுவே உன் சுவபாவம், இயல்பு. 'அயம் ஆத்மா பிரும்ம' என்பர். நீ பிரும்மம்- அன்லஹக்! (அஹம் பிரம்மா அஸ்மி. நான் பிரம்மம் எனும் உணர்வு) நீ சத்தியம்! எங்கே போய் தேடுகிறாய்? எங்கெல்லாம் அலைந்து திரிகிறாய்? தன்னை (ஆத்மாவை) தேட எங்கெல்லாம் போகிறாய்? நில்! உட்கார்! ஓடித்திரிந்து தேடுவதால் பரமாத்மா கிட்டாது. ஓடித்திரிபவனிடம் பரமாத்மா மறைந்திருக்கிறது. ஏதோதோ செயல் புரிவதால் அது கிட்டாது. செயல்படுபவனிடம் அது உறைந்திருக்கிறது. பரமாத்மாவாக மாற நீ எதுவும் செய்ய வேண்டாம், நீதான் பரமாத்மா!

இதனால்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "சிதி விச்ராம்ய! (உள்ளுணர்வுள் ஓய்வுகொள்!) தன்னைத் தளர்த்திக் கொள்! மனச்சள்ளையை ஒதுக்கு! எங்கு போவாய்? எங்கும் போக, போய்ச்சேர வேண்டாம். சைதன்யத்துள் (உள்ளுணர்வு) ஓய்வு கொள்! பிறகு நீ அக்கணமே சுகம், அமைதி பெறுவாய். பந்தங்களிலிருந்து விடுதலை பெறுவாய், முக்தி அடைவாய்.!

அற்புதமான தத்தவ வாக்கு. வேறு எந்த சாத்திரமும் இதற்கு ஈடு இணை இல்லை.

"நீ பிராமணன் முதலான வருண இனம் கொண்டவனில்லை. உனக்கு எந்த ஒரு ஆசிரம நிலையும் (பிரும்மசர்யம், கிருஹஸ்தம்,

வானப்பிரஸ்தம், ஸந்நியாயஸம், எனும் ஆசிரம நிலைகள்) இல்லை. நீ மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்புலன்களுக்கு இலக்கானவன் இல்லை. ஒட்டும், உறவும், உருவும் இல்லாத நீ சகலருக்கும், சகத்துக்கெல்லாம் சாட்சி! இதை உணர்ந்து பேருவகை கொண்டிரு!

இப்போது பிராமணன் எப்படி நெற்றித்திலகம் இட்டுக் கொள்ளுவான்? நீ பிராமணன் முதலான வருண வகைப்பட்டவன் இல்லை..."

இப்போது இந்துக்கள் இந்த சாஸ்திரத்தை எப்படித் தலைமேல் வைத்துப் போற்றுவர்? அவர்களுடைய தர்மசாத்திர மெல்லாம் வருணாசிரமப் பங்கீட்டில் அமைந்திருப்பவை. அஷ்டாவக்கிரர் முதலிலேயே அப்பங்கீட்டின் வேர்களை அறுத்துப் போட்டவர். "நீ பிராமணன் இல்லை, நீ சத்திரியன் இல்லை, நீ சூத்திரன் இல்லை! எல்லாம் பிதற்றல். சுமத்தப்பட்டவை. அரசியல், சமுதாய விளை யாட்டுகள். நீ பிரம்மம் மட்டுமே. பிராமணனோ, சத்திரியனோ, சூத்திரனோ இல்லை." என்றார்.

"நீ பிராமணன் முதலான வருண இனம் இல்லை; ஆசிரம நிலையில் இருப்பவனுமில்லை."

அதாவது, நீ பிரும்மசரிய ஆசிரமத்திலோ, (வாழ்வு நிலை) கிருகத்த ஆசிரமத்திலோ (இல்லறம்), வானப்பிரஸ்த ஆசிரமத்திலோ, சன்னியாச ஆசிரமத்திலோ இருப்பவனில்லை. அப்படி எவனும் இல்லை. நீ இந்த ஆசிரம நிலைகளுக்கிடையே பயணிக்கும் பார்வையாளன், சாட்சி.

அஷ்டாவக்கிர கீதையை எம் அறநெறி நூல் என்று இந்து மட்டும் உரிமை கொண்டாட முடியாது. அது எல்லாவருக்கும் பொது. அஷ்டாவக்கிரர் வாழ்ந்த காலத்தில் இந்து, முசல்மான், கிறித்துவர் இருந்திருந்தால், அவர் நேரிடையாகச் சொல்லியிருப்பார், "நீ இந்து இல்லை, நீ முஸ்லிம் இல்லை, நீ கிறித்துவன் இல்லை!" அத்தகைய வருக்கு இக்காலத்தில் எவராவது கோவில் நிருமாணிப்பாரா? அவரது சாஸ்திரத்தை ஏற்றுப் போற்றுவாரா? அவருக்காகப் பரிந்துரைக்க எவர்

முன் வருவார்? அவர் இவர்கள் எல்லாரையும் ஒதுக்கி விட்டவர். ஆனால் இது சத்தியத்தின் நேரிய அறிவிப்பு. அறிவுரை!

'எதிலும் உறவில்லாத, உருவற்ற நீ சகலத்திற்கும், அகில உலகிற்கும் சாட்சி என்பதை உணர்ந்து சுகமாக இரு!'

அஷ்டாவக்கிரர் இப்படிச் சொல்லவில்லை, "இப்படியாக நீ அறிந்து கொண்டால், பிறகு சுகமாக இருப்பாய்!" அவரது வாக்கைச் சரிவரப் புரிந்து கொள்ள வேண்டும். அவர் கூறுகிறார், "இவ்வாறு அறிந்து சுகமாக வாழ்கிறாய்!"

**"ந த்வம் விப்ராதிகோ வர்ணோ**
**ந ஆச்ரமீ ந அக்ஷகோசர:**
**அஸங்கோ (அ)ஸி, நிராகாரோ**
**விச்வஸாக்ஷீ ஸுகீ பவ!"**

- ஸுகீ பவ! - இப்போதே சுகமாயிருக்கிறாய்!

ஜனகர் கேட்கிறார், "எப்படி சுகம் கிட்டும்? பந்தங்களிலிருந்து விடுதலை (முக்தி) எப்படி ஏற்படும்? ஞானம் எவ்வாறு கிட்டும்?"

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "இப்போதே எல்லாம் கிட்டும்" கணநேரம் கூடத் தாமதம் ஏற்படாது. நாளைக்குத் தள்ளிப் போடவோ, தாமதிக்கவோ அவசியம் இல்லை. பிறகு- வருங்காலத்தில் நிகழாது. எப்போது நிகழ்ந்தாலும் 'இப்போது' நிகழ்ந்ததே. 'இப்போது' தவிர வேறு காலம் இல்லை. பிறகு இல்லை. எப்போது நிகழ்ந்தாலும் இப்போது நிகழ்ந்ததாகும்.

ஞானம் பெற்றவர்கள் 'இப்போதே' பெற்றவர்கள்தாம். ஞானம் பிறந்ததே இப்போதுதான். பிறகு எப்போதாவது பெறலாம் என இருக்கலாகாது. இது மனக்கோளாறு. மனத்தின் சஞ்சலம், தந்திரம். மனம் சொல்லும் 'இவ்வளவு சீக்கிரம் எப்படி முடியும்? முன்னேற்பாடு, முயற்சி செய்ய வேண்டுமே!'

என்னிடம் சில அன்பர்கள் வந்து சொல்லுகிறார்கள், "துறவு மேற்கொள்ள வேண்டும். எப்போதாவது துறவறம் ஏற்போம்." எப்போதாவது? எப்போதும் ஏற்க மாட்டாய். நிரந்தரமாகத் தட்டிக் கழிக்கும் வழி இது. 'எப்போதாவது' என்பது வரவே வராது.

மேற்கொள்ளத் தீர்மானித்து விட்டால் 'இப்போதே' செய்தாக வேண்டும். வேறு காலாவதி கிடையாது. 'இப்போதே' என்பது வாழ்க்கை, முக்தி. அஞ்ஞானம், ஞானம், நித்திரை, விழிப்பு எல்லாமே! இப்படியிருக்க 'எப்போதாவது' எதற்கு? மனத்திற்குக் கடினம், அது கூறும் ''முன்னேற்பாடு செய்து கொள்ள அவகாசம் தா!'' எந்தப் பணியும் முன் முயற்சி இல்லாமல் எப்படி நிகழும்? ஒருநபர் பல்கலைக் கழகத்திலிருந்து முதுகலைப் பட்டம் பெற பல ஆண்டுகள் ஆகின்றன. மருத்துவப் பட்டம் பெற 20-25 ஆண்டுகள் ஆகின்றன. முன் முயற்சி செய்து, பாடுபட்டு பிறகுதான் டாக்டர் பட்டம் பெற முடிகிறது. 'இப்போதே' எப்படி சாத்தியமாகும்?

அஷ்டாவக்கிரரும் அறிவார், கடை திறக்க வேண்டுமானால் 'இப்போதே' முடியுமா? சாமான்களைச் சேகரிக்க வேண்டும், இடம், வசதி, சாதனங்கள் சேரவேண்டும். கடை துவங்கி வாடிக்கை யாளர்களைச் சேர்க்க வேண்டும். விளம்பரப்படுத்த வேண்டும். சில வருடங்களாகும். இவ்வுலகில் எதுவும் 'இப்போதே' நிகழ்ந்து விடாது. முறையாக மெள்ள மெள்ள நிகழும். சரி, இதையெல்லாம் அஷ்டாவக்கிரரும் அறிவார். நானும் அறிவேன். ஆனால் ஒரு நிகழ்வு மட்டும் இங்கு 'இப்போதே' நிகழ்ந்து விடுகிறது- அது பரமாத்மா! அது நீ திறக்க விரும்பிய பலசரக்குக் கடையல்ல, தேர்வுக்கூடம் இல்லை, பல்கலைக் கழகமும் இல்லை. பரமாத்மா முறையாகத் தொடர்ந்து நிகழ்வதில்லை. நிகழ்ந்த நிஜம் பரமாத்மா. கண்திறந்து நோக்கும்போது சூரியன் உதித்திருக்கிறான். உன் கண் விழிப்புக்காகச் சூரியன் காத்திருப்பதில்லை. நீ கண் விழித்து எழுந்த பிறகுதான் சூரியன் உதிப்பான் என்பதில்லை. சூரியன் முன்பே உதித்து, வெளிச்சம் பாரெங்கும் பரவிவிட்டது. இரவு பகலாய் அதன் ஒளி பரவிக் கொண்டிருக்கிறது. ஓங்காரத்தொனி எங்கும் எதிரொலிக்கிறது. காதுகளைக் கவனிக்கச் செய்யுங்கள்; கண்களைத் திறந்தே வைத்திருங்கள்.

கண் திறக்க எவ்வளவு நேரமாகும்? பரமாத்மாவைப் பெற அந்தக் கணநேரம்கூட ஆகாது. கண்சிமிட்ட நொடிப்போது பிடிக்கும். பரமாத்மாவைப் பெற அந்த நொடிப்போதும் ஆகாது.

**"விச்வஸாக்ஷீ, அஸங்கோ (அ)ஸி**
**நிராகாரோ ஸுகீ பவ!"**

- இப்போதே நீ சுகபுருஷனாயிருக்கிறாய்! கைமாற்று வாங்கிய சரக்கல்ல அஷ்டாவக்கிரருடைய தர்ம தத்துவம். அசல் மூலதனம், தார்மிக நிதியம்...!

"ஹே வியாபகனே! (எங்கும் நிறைந்திருப்பவன்) தர்மம்- அதர்மம், சுகம்- துக்கம், மனம் சார்ந்தவை. உனக்கானவை அல்ல. நீ கர்த்தா (செய்பவன்) இல்லை, போக்தா (அநுபவிப்பவன்) இல்லை. நீ எப்போதுமே முக்தனே (தளை-தடைகளற்றவன்).

முக்தி நம் இயல்பு-' சுவபாவம், ஞானமும் அப்படியே, பரமாத்மா நாமாக- நமதாக இருக்கும் நிலைப்பாடு, நமது கேந்திரம், நம் வாழ்வின் நறுமணம், நமது ஆளுமை.

**"தர்ம அதர்மௌ ஸுகம், துக்கம் மானஸாநி**
**ந தோ வியோ!"**

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "ஹே வியாபகனே! மிளிரும் ஒளி படைத்தவனே! சாசுவத ஐசுவர்யம் நிறைந்தவனே! தர்மம், அதர்மம், சுகம், துக்கம்- இவை மனம் சார்ந்தவை. இவை எல்லாமே மன அலைகள். கேடு செய்தாய், பாவம் செய்தாய், புண்ணியம் செய்தாய், கோவில் கட்டினாய், தானதருமம் செய்தாய்- எல்லாமே மனம் சார்ந்தவை.

**"ந கர்த்தாஅஸி, ந போக்தா அஸி, முக்த ஏவ**
**அஸி ஸர்வதா."**

நீ எப்போதுமே முக்தன், முக்காலத்திலும் முக்தனே!

முக்தி நிகழ்வு, செயல்பாடு இல்லை, நாம் செய்து முடிக்க, முக்தி நிகழ்ந்துவிட்ட செயல் நம்மைச் சார்ந்ததே. இந்த வாழ்வு நிலையே முக்தியால் ஏற்பட்டதுதான். இவ்வாழ்வின் சகல நிலைகளும் நிகழ்வுகளும் முக்தியால் நிர்மாணிக்கப்பட்டவை. முக்தி மூல உலோகம், அதிலிருந்து எல்லா நிலைகளும் உருப்பெற்றவை. சுதந்திரம் (முக்தி) இயல்பு. புரட்சி ஏற்பட்டிருக்கிறது எனப் பிரகடனம் செய்யப்பட்டுள்ளது. அறிந்து கொள்ளுவதைத் தவிர நாம் எதுவும் செய்ய வேண்டியதில்லை. இத்தத்துவத்தை உள்ளூர உணர வேண்டும். மனம் நிறைவு பெறும் வரை இதைச் செவிமடுத்திக் கொண்டிரு!

ஆக. இன்று இவ்வளவுதான் உரைக்க விரும்புகிறேன்:-

அஷ்டாவக்கிரரைப் புரிந்து கொள்ள முயலுங்கள். அவரிடம் செயல்பாட்டைப் பெற முடியாது. இதற்காக வேறு வழியைத் தேடலாம் என்றும் நினைக்க வேண்டாம். அந்த வழியில் செயல்படலாம் என்றும் எண்ண வேண்டாம். அஷ்டாவக்கிரர் எதையும் செய்யச் சொல்லுவதில்லை, வழிகாட்டுவதுமில்லை நீ நிம்மதியாய், நிதானமாய் கேள்! செய்வதனால் எதுவும் நிகழாது. ஆகையால் குறிப்பெடுக்க, பதிவு செய்ய பேனா- பேப்பருடன் வரவேண்டாம். 'கேட்பதை, அறிந்ததை எழுதி வைப்போம், சூட்சுமமாய் (சூத்திரம்) போதிப்பார், குறித்துக் கொள்ளுவோம் அதன்படி செய்து பார்ப்போம்' என்று நினைக்க வேண்டாம். இதற்கெல்லாம் இங்கு தேவை இல்லை. நீ வருங்காலக் கவலையை விடு! நான் சொல்வதைக் கேள்! கேட்பது மட்டுமே நீ செய்ய வேண்டியது. நீ என் அருகில் அமர்ந்து நான் சொல்லுவதை அமைதியாய், நிதானமாய் கேள். கேட்டுக் கேட்டு நீ முக்தனாகி விடுவாய், சகல பந்தங்களிலிருந்தும் விடுபடுவாய்!

சமணக்குரவர் மகாவீரர் சொன்னார், "அறிவுரைகளைக் கேட்டுக் கேட்டே சிராவகர் (சமணஞானி) முக்தனாகி விடுவான். கேட்பதால் மட்டுமே முக்தி சித்திக்கும். சமணஞானி 'ச்ராவக' சொல்லிற்குப் பொருள் 'உபதேசத்தைக் கேட்டவாறே முக்தி பெறுபவர்' என்பதாகும். 'ஸாது' (சமணத்துறவி) என்பதற்கு கேட்டவாறு முக்தராவதில்லை, மந்த புத்தி உள்ளவர் என்பது பொருள். ஏதாவது செய்தாக வேண்டும். சாட்டையின் நிழல், சொடுக்கல் போதாது. சண்டிக்குதிரை சாட்டையடி வாங்கினால் கொஞ்சம் ஓடும், சொடுக்கினால் நகரும்.

நிழல் போதும். நீ கேட்டுக் கொண்டிரு! சாட்டையின் நிழல் தென்படும்.

அஷ்டாவக்கிரரின் ஒரு விஷயம் நினைவு இருக்கட்டும்- "எதுவும் செய்யத் தேவை இல்லை" ஆகையால் நீ ஆனந்தமாகச் செவிமடுத்திருக்கலாம். பிறகு செய்து பார்க்கலாம் எனக் கருத வேண்டாம். நிகழ்வது செவி சாய்ப்பதில் நிகழும். 'நன்கு உளமாறக் கேட்பது' இதுதான் சூட்சுமம் (சூத்திரம்).

**"அதுனைவ ஸுகீ சாந்த: பந்தமுக்தோ பவிஷ்யஸி!"**

- இப்போதே முக்தனாகி விட்டாய், இக்கணமே. எந்தத் தடையும் இல்லை. அசையக்கூட வேண்டாம். இருக்கிற இடத்திலேயே இருந்தவாறே முக்தனாகி விடு! நீ முக்தன். விழித்தெழு! முக்தனாகி விடு!

**"அஸங்கோ அஸி நிராகாரோ விச்வஸாக்ஷீ ஸுகீ பவ!"**

- சுகமாயிரு! க்ஷணநேரமும் காத்திருக்க வேண்டாம். ஒரே தாவல், க்வாண்டம் பாய்ச்சல். படிகள் இல்லை அஷ்டாவக்கிரரிடம். தொடர் வளர்ச்சி இல்லை. உடனடியாக சுகாநுபவம் சித்திக்கிறது.

**ஹரி ஓம் தத்ஸத்!**



**நேற்று என் பிரவசனம் (சொற்பொழிவு) நிகழ்ந்த சமயத்தில் எனக்கு திவ்விய அநுபவம் ஏற்பட்டது. நான் இப்பூமியில் இல்லை; முக்தனாகி வான் வெளியில் சோதிக் கிரணமாக மாறியிருக்கிறேன். சொற்பொழிவாற்றிய பிறகும் உள்ளம், உடல் இலேசாகி, மலர்ச்சி பெற்று திறந்தவெளியாகிவிட்ட உணர்வு பெற்றேன். அந்நிலையிலேயே வான்வெளியில் பறந்து திரிய விரும்பினேன். ஞானம், கருமம், பக்தி அறியேன். ஆனால் தனியனாகித் திறந்த வெளியில் மூழ்கியிருக்க மனம் விரும்பியது. இது என் மதிமயக்கமோ? பித்தனாகிய தன்மயமோ? எனது அகங்காரத்தின்- 'நான், எனது' எனும் மமதையின் விளையாட்டோ? குரு தேவா! அருள்கூர்ந்து எனக்கு வழிகாட்டுங்கள்!**

இப்பூவுலகில் நாம் வாழ்கிறோம். ஆனால் நாம் இப்பூமியில் உள்ளவர் அல்லர். இப்பூமியில் நாம் அந்நியர், புதியவர்கள், அழியும் சரீரத்தில் குடி புகுந்திருக்கிறோம். சரீரம் நமது வீடு அல்ல. உதாரணமாக, ஒருவர் வெளிநாட்டில் குடிபெயர்ந்திருக்கிறார். தாய் நாட்டை மறந்து போனார். பிறகு காலப்போகில் எதிர்பாராமல் கடைவீதியில் ஒரு மனிதரைச் சந்திக்கிறார். அவர் தாயகத்தையும், சொந்த ஊர், பேட்டை, தெரு பற்றித் தாய்மொழியில் பேசி நினைவுபடுத்துகிறார். அக்கணத்தில் வசித்துவரும் வெளிநாடு மறந்து போகிறது. தாய்நாடு, சொந்தபந்த இடம் நினைவில் தோன்றுகிறது. இயல்பாய் தோன்றிவிடும்.

சாஸ்திரத்தின் மதிப்பீடு இதுவே. ஆள்பவர்களின் (சாஸ்தா) வாக்குகளுக்கு இதுதான் பொருள். இதைக் கேட்டதும் அக்கணத்தில் நாம் இங்கு இருப்பதில்லை; நாம் இருக்க வேண்டிய வேறு இடத்திற்குப் போய் விடுகிறோம், அங்குள்ள இசையில் மிதக்கிறோம். சுற்றுச்சூழல் விலகிப்போகிறது. வெகு தொலைவில் உள்ள இடம் அருகில் வந்து சேருகிறது.

அஷ்டாவக்கிரரின் வசனங்கள் மிக அற்புதமானவை. கேட்கும் போதெல்லாம் அதிசய உணர்வு எழும். மாறி மாறித் தொடர் நிகழ்வுகளைத் தோற்றுவிக்கும் ‘நீ பூமியில் இல்லை; ஆகாசத்தில் இருப்பவன்’ என்ற எண்ணம் தொடர்ந்து ஏற்படும். அந்த வசனங்கள் வானிலிருந்து வந்தவை அதன் மூலத்தானம் சுதேசி. நமக்கும் அதுதான் மூலத்தானம். அங்கிருந்து தான் நாம் வந்தோம்; அங்குதான் போய்ச் சேர வேண்டும். வேறு போக்கிடம் இல்லை. அங்குதான் நிம்மதி கிட்டும்.

சரிதானே?

நேற்று பிரசங்கம் நிகழ்ந்தபோது எனக்குத் தோன்றியது. ‘நான் பூமியில் வாழ்பவனில்லை.’

இப்பூமியில் எவருமே இல்லை. இருப்பதாகப் பிரமை, மாயத்தோற்றம், உண்மையில் நாம் இருப்து ஆகாசத்தில்தான். நம் இயல்பு- சுவபாவம் ஆகாசத்தைச் சார்ந்தது.

ஆத்மா- அதாவது அகத்துள் பரந்துள்ள ஆகர்சம். சரீரம்- உடல் பூமி. இந்தப் பௌதிக உடல் பூமியால் உருவானது. நீ உருவானது ஆகாசத்தால். உன்னுள் பூமி, ஆகாசம் இரண்டும் உள்ளன. கலந்த ஒட்டுறவு.

நீ தொடுவானம்; பூமி ஆகாசத்தைத் தொடுவதாகத் தோன்றும் அடிவானம். ஆனால் பூமியும் வான்முகடும் எங்கும், எப்போதும் தொடுவதில்லை. தொடுவானம் தொலைவில் இருப்பதாகத் தோன்றும். அதை எட்டப் பயணித்தால், பயணம் நீண்டு கொண்டே போகும். இலக்கு எட்டாது. பயணிக்கும்போது சிலமணி நேரத்தில் அதை எட்டிவிட முடியும் எனத் தோன்றும். ஆனால் போய்க் கொண்டே

இருந்தாலும் தொடுவானம் கிட்டாது. அப்படியொரு தோற்றம், அது தொடரும். சிறு தூரத்தில் சில மணி நேரத்தில் எட்டிவிடலாம் என்கிற பிரமைதான் தொடரும் - எண்ணமாக, தோற்றமாகத் தென்படும் பிரமை அது!

அஷ்டாவக்கிரரின் தத்துவ வாக்குகளை உன் உள்ளத்துள் செலுத்தி விட்டால் போதும். அவை உன் சுய-சத்திய உணர்வை எழுப்பி விடும். நீ மறந்துபோன நினைவை வெளிப்படுத்தும். கணநேரத்தில் ஆகாயம் போல் புலப்படும். மேக மறைப்பு விலகிவிடும். உன் பிராணன் (உயிர்) சூரியக் கதிரொளியால் நிரம்பி விடும்.

கடினம்தான். இந்த அநுபவம் நம் வாழ்க்கைக்கு எதிராக இருக்கும். மனக்கலக்கம் ஏற்படும். விலகிப் போன மேகங்கள் உன்னால் விலக்கப்படவில்லை. இது 'சாஸ்தா' (ஆளுமையாளர்)வின் வாக்குகளால் நிகழ்ந்தது. பிறகு மறுபடியும் மேகங்கள் சூழ்ந்துவிடும். நீ வீடு போய்ச் சேரும்போது மேலும் மேகக்கூட்டம் சூழ்ந்து விடும். நீ உன் பழகிப்போன வழக்கத்தை எளிதில், விரைவில் விலக்கிவிட முடியுமா? மேலும் மேகச்சூழல், மேலும் மனச்சள்ளை. தென்படுவதெல்லாம் கனவா? கற்பனையா? சுயச்செருக்கா? உள்ளத்தின் விளையாட்டா? பைத்தியம் பிடித்திருக்குமோ?...

இயல்பாகவே உன் பழக்க வழக்கங்களின் சுமை மிகப் பழையது. இருள் அதிகப் பழமையானது. அப்படி எதுவும் இல்லை என்றாலும், அந்த நிலைமை புராதனமானது. சூரிய உதயம், கதிரொளி புதுமையானது. அவ்வப்போது உதித்து ஒளிரும் புத்தொளி அது. சில கணங்கள் ஒளிரும். பிறகு நீ உன் இருளில் மூழ்கிப் போகிறாய். உனது இருளுக்கு நீண்ட வரலாறு உண்டு. உன்னையும் இருளையும் எடை போடும்போது கதிரொளி மீது உனக்கு ஐயம் எழும். இருள்மீது எழாது. இருள்மீதுதான் சந்தேகம் ஏற்படவேண்டும். ஆனால் கதிரொளி மீது சந்தேகிக்கிறாய். ஏனெனில், கதிரொளி நவீனம், இருள் புராதனம்; பல நூற்றாண்டுகளாகத் தொடரும் பரம்பரை. கதிரொளி இப்போதுதான் உதித்தது புத்தம் புதியது- நம்ப முடியாத புதுமை.

'நான் பூமியில் இல்லை என எனக்குத் தோன்றியது.'

இப்பூமியில் எவரும் இல்லை. நாம் இங்கு இருக்க இயலாது. அப்படி இருப்பதாக நினைப்பு, நம்பிக்கை, தோற்றம் பிரமை; இகவாழ்வு உண்மை இல்லை.

'.... மேலும் எல்லையற்ற விண்ணுலகில் நான் ஒரு சோதிக்கணம்- ஒளிக்கீற்று என்றே எனக்குத் தோன்றுகிறது.'

இது தொடக்கம். 'எல்லையற்ற வான்வெளியில் நான் ஓர் ஒளிக்கீற்று!' உடனடியாய் இந்த உணர்வு ஏற்படும். இது ஒரு தொடக்கம்.

ஆக, எல்லையற்ற ஆகாசத்திலும் நாம் இதுவரை முழுமையாக ஒன்றிவிடவில்லை. எப்போதாவது அப்படித் தோன்றும். பறந்து போவது போல், புயல் வீசுவதாக, அது நம்மை இட்டுச் செல்வதாகத் தோன்றும். அந்நிலையிலும் நம்மைத் தனிமைப்படுத்திக் காப்பாற்றிக் கொள்ளுகிறோம். ஒளிக்கதிர்! இருள் சூழவில்லை. நாமே சோதிமயமாகி விடுகிறோம். ஆனாலும் ஆகாசத்தில் ஒன்றி விடவில்லை, பேதம் தெரிகிறது; இடைவெளி இருக்கிறது. நீ ஆகாச சொருபமாக மாறிய பிறகே ஒட்டுறவு ஏற்படும். நீ ஆகாசத்துடன் இரண்டறக்கலந்த பிறகுதான் சோதிமயமாவாய், சூனிய ஆகாசமாக மாறி இருப்பாய்; இதை நீயே உணர்வாய்!

'நான் சூனிய ஆகாசம் எனக் கூறிக் கொள்ளுவதுண்டு. 'நான்' எனும் உணர்வு உள்ள வரையில் இது எப்படி சாத்தியமாகும்? 'நான்' இருந்தால் ஆகாசம் விலகியிருக்கும். 'சூனிய ஆகாசம்.' எனும் சுய உணர்வு ஏற்பட்டால் 'நான்' இராது. சூனிய ஆகாசம் மட்டுமே இருக்கும். 'அஹம் ப்ரஹ்மா அஸ்மி' (நான் பிரும்மம்) என்பர். பிரும்மம் இருக்கும் போது 'நான்' எப்படிச் சேர்ந்திருக்கும்? பிரும்மம் மட்டுமே இருக்கும், 'நான்' இராது. ஆனால் சேர்த்துச் சொல்லும் வழக்கம் தொடர்கிறது. வேறு வழி இல்லை.

அப்படிச் சொல்லும் மொழித் தொடர் தூங்கிக் கொண்டிருப்பவர்களுடையது. வெளிநாட்டில் வசிப்பவர் அதையே தன் தாய்நாடாகக் கருதுகிறாரே. பேசிப் பழகுகிறாரே? அவருக்கு உரிய மொழி அது. மௌனம்தான் ஞானிகளின் மொழி; வழக்கு மொழி அஞ்ஞானிகளுடையது.

ஆக, மொழியால் வெளிப்படுத்துவதெல்லாம் சத்தியத்தை அசத்தியமாக்கும். "நான் பிரும்மம், நான் ஆகாசம்" -இதைக் கூறும்போதே அசத்தியம் மேலெழும். 'பிரும்மம், ஆகாசம்' மட்டுமே சத்தியமாகும்.

மேலும், 'ஆகாசம் மட்டுமே உள்ளது' என்பதும் முழு உண்மை (பூர்ண சத்தியம்) இல்லை. 'மட்டுமே' என்பதால் வேறொன்றும் உள்ளது எனப் பொருள் படுகிறது. 'ஆகாசம் உள்ளது' என்று சொன்னால் போதுமே. இதிலும் சிக்கல், எது உள்ளதோ, அது இல்லை என ஆகாது.

'வீடு இருக்கிறது' என்று சொல்லுகிறோம். வீடு எப்போதும் நிரந்தரமாக இருப்பதில்லை; இடிந்து போகிறது, பாழடைந்து விடுகிறது. 'மனிதன் இருக்கிறான்' என்கிறோம். ஆனால் மனிதன் வயதாகி உருமாறுகிறான், ஒருநாள் மரிக்கிறான். ஆகாசம் இப்படி இல்லை. அது இருக்கிறது, இருந்தது என்பதில்லை. அது எல்லாக் காலத்திலும் இருந்து கொண்டிருக்கிறது. ஆக, 'ஆகாசம் இருக்கிறது' என்று சொல்லுவது கூறுவது கூறல்; "ஆகாசம்" எனக் கூறினால் போதும். அதை ஒரு சொல்லால் குறிப்பிடும்போது குற்றம் ஏற்படுகிறது. இல்லாமல் இருந்ததும் இருக்கப் போவதும்தான் 'இருக்கிறது' எனக்குறிப்பிடப்படும். 'மனிதன் இருக்கிறான்' ஆனால் முன்பு இல்லை, பின்னால் இல்லாது போவான். 'இருக்கிறான்' என்பது இரு 'இல்லை' களுக்கு இடைப்பட்டது. ஆகாசத்தின் 'இருத்தல்' முக்காலத்திலும் உள்ளது. இதற்குப் பொருள் (அர்த்தம்) கிடையாது. இரு 'இல்லை'களுக்கு இடைப்பட்ட 'இருக்கிறது' எனும் சொல் பொருளுடையது. 'ஆகாசம் ஒன்று' என்றும் கூற முடியாது. 'ஒன்று' என்றால் மற்றொன்று இருப்பதாகப் பொருள்படும். இரண்டு, மூன்று, நான்கு என இருக்கும்போது 'ஒன்று' பொருள் உள்ள சொல்லாகும். 'ஆகாசம்' எனவும் ஏன் சொல்ல வேண்டும்?

ஆகையால் ஞானம் மௌனமாகும். மெய்ஞானத்தை சொற்களுக்குள் அடக்க முடியாது, சொற்களால் விளக்கவும் இயலாது.

நாம் பாக்கியசாலிகள், அஷ்டாவக்கிரர் முதலான மெய்ஞானிகள் சோர்வுறாமல், செயற்கரிய செய்திருக்கிறார்கள். அவர்கள் இயன்றவரை

ஓரளவுக்கு சத்தியத்தின் சுகந்தத்தை சொல்லில் கொணர முயன்றிருக்கிறார்கள்.

மேலும், அஷ்டாவக்கிரருடையது போன்ற வெற்றிகரமான மெய்யுணர்வு (சேதனா) மிக அரிது. பலரும் பிரயாசைப்பட்டிருக் கிறார்கள் - சத்தியத்தை சொல்லோடு இணைக்க; அனைவரும் தோற்றுப் போனார்கள். தோற்பது உறுதி. தோற்றவர்களில் கணக்கிட்டால் அஷ்டாவக்கிரர் மிகக் குறைவாகத் தோற்றிருக்கிறார், அதிகம் வெற்றி பெற்றிருக்கிறார். கவனமாகக் கேட்டால் வீடு நினைவுக்கு வந்துவிடும்.

சுபமான உணர்வு, நான் 'ஜோதி கணம்' (ஒளிக்கதிர்) என உணர்கிறேன். இழக்கத் தயாராக இருக்க வேண்டும். 'ஜோதிகணம்' தொலைந்து போனதாக உணர்வேன். ஆகாசம் தான் எஞ்சியிருப்பது. அப்போது போதைக் கிறக்கம் பரவும். சத்தியத்தின் மதுபானத்தில் மூழ்கி விடுவாய், களிநடனக் கூத்தாடுவாய்! அமிர்தத்தின் முழுச்சுவையும் கிட்டும்.

'.... பிரவசனம் (சொற்பொழிவு) நிகழ்த்திய பின் நொய்மை வெறுமை உணர்வு மேலிட்டது. அதே ஆகாச வெளியில் சஞ்சரிக்க மனம் விழைந்தது.'

இங்கு சிறு சறுக்கல். எப்போதெல்லாம் சுகானுபவம் நமக்கு ஏற்படுகிறதோ, அது அடிக்கடி ஏற்பட விரும்புகிறோம். மனித மனத்தின் பலவீனம் இது. ஆசை, அவா நிரம்பி விடுகிறது. விருப்ப மயக்கம் ஏற்படுகிறது. சுகமானதை மறுபடியும் பெற மனம் விழைகிறது. ஆனால் ஒன்றை நினைவில் வைக்க வேண்டும், திரும்பத் தொடர்வதால் தவறு ஏற்படுகிறது. நீ மறுபடியும் அந்த சுகானுபவம் பெற வேண்டும் என விரும்பினால், அது நடவாது. ஏனெனில் முதல் முறையாக நிகழ்ந்தது உன் விருப்பத்தினால் ஏற்படவில்லை. எப்படியோ நிகழ்ந்த செயல் அது, உன் செயல், முயற்சியால் ஏற்பட்டதல்ல.

இந்த நிலையைத்தான் அஷ்டாவக்கிரர் அறுதியிடுகிறார்- சத்தியம் நிகழ்கிறது. செயற்பாடு அல்ல, இயல்பு நிகழ்வு. கேட்டுக் கொண்டிருக்கும்போது நிகழ்ந்தது. நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?

செவி சாய்ப்பது என்பதன் பொருள் நீ எதுவும் செயலாற்றவில்லை என்பதுதான். நீ சூனிய நிலையில் உட்கார்ந்திருந்தாய். நீ மௌனமாக, விழிப்புணர்வுடன் இருந்தாய். உறங்கி விடவில்லை.

நல்லது; நீ என்ன செய்து கொண்டிருந்தாய்? நீ வாங்கிக் கொள்பவன் (நுகர்வோன்) மட்டுமே. உனது உளப்பாங்கு கண்ணாடிபோல் இருந்தது. தென்படுவதைப் பிரதிபலிக்கும் ஆடி; கூறுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிற மாதிரி. நீ அதில் எதையும் சேர்க்கவில்லை, புகுத்தவில்லை. ஒருக்கால் நீ அப்படிச் செய்தால், அந்த நிகழ்வு ஏற்பட்டிருக்காது. நீ விளக்கமளிக்கவும் இல்லை. நீ அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்தபோது, உன் உள்ளத்துள் இச்சிந்தனைகள் எழவில்லை- "இது சரி, இது தவறு, எனக்கு ஒத்துவரவில்லை, சாத்திரத்தில் இப்படிக் கூறப்பட்டுள்ளதோ? இல்லையோ?..." நீ தருக்க வாதம் செய்யவில்லை. நீ அப்படி எல்லாம் செயற்பட்டிருந்தால், அந்த மூல நிகழ்வு ஏற்பட்டிருக்காது.

யார் என்னிடம் கேள்வி கேட்டது?... ஆம், சுவாமி ஓம் பிரகாஷ் சரஸ்வதி கேள்வி கேட்டார். அவரை நான் அறிவேன், தருக்கம் செய்தல், விவாதித்தல், சந்தேகப்படுதல் அவரிடம் இல்லை. இளம் பிராயத்தில் செய்திருக்கலாம். அது கடந்த கால நிகழ்வாயிருக்கும். இப்போது மிகவும் பரிபக்குவம் அடைந்திருக்கிறார். சிறுபிள்ளைத் தனமெல்லாம் இப்போது அவரது பண்பட்ட உள்ளத்தில் அறவே இல்லை. ஆகையால் சத்திய ஞான நிகழ்வு சாத்திய மாகியிருக்கிறது. எனது அறிவுரையைக் கேட்டுக் கொண்டிருந்தார். வேறெந்தச் செயலும் இல்லை. உட்கார்ந்து செவிமடுத்தபோது அது நிகழ்ந்தது.

முதல் முறை நீ செயல்படாதிருந்து, மறுமுறை நிகழ்வுற நீ விருப்பம் கொண்டால் தடை ஏற்படும். விருப்பம் அந்நிகழ்விற்குக் காரணம் இல்லை. ஆகையால் அபூர்வ நிகழ்வுகள் ஏற்படும் போது அவை பற்றி விருப்பம் கொள்ளலாகாது. நிகழ்ந்த பிறகு பேரானந்தத்துடன் ஏற்றுக் கொள்ள வேண்டும். நிகழவில்லை எனில் குறை கூறலாகாது. கோரினால், விரும்பினால் தோல்விதான். கோரிக்கை- விருப்பத்தில் ஒரு நிர்ப்பந்தம் (கட்டாயம்) இருக்கிறது. தீவிர கோரிக்கை இருக்கிறது. 'நிகழ வேண்டும், ஒருமுறை நிகழ்ந்தது இப்போது ஏன் நிகழ்வதில்லை?' - இது தீவிர எதிர்பார்ப்பு.

இப்படித் தினமும் நிகழ்கிறது. இங்கு ஆசிரமத்திற்குத் தியானம் செய்ய வருபவர்கள், துவக்கத்தில் புதியவர்களாக, புத்துணர்வு உள்ளவர்களாக இருக்கிறார்கள். முன் அநுபவம் இல்லாது போனாலும் நிகழ்வு ஏற்படுகிறது. இது கவலைக்குரிய விஷயம். இதை நீ உணரவேண்டும். அஷ்டாவக்கிரரை அறிந்து கொள்ள இந்த உணர்வு உதவும். என் தினசரி அநுபவம் இது. புதிதாக இங்கு தியானிக்க வருபவர்கள், முன் அநுபவம் இல்லாதிருந்தும் நிகழ்வைப் பெறுகிறார்கள்; மகிழ்ச்சியடைகிறார்கள். ஆனால் இங்கு சிக்கல் ஏற்படுகிறது. அந்நிகழ்வைத் தினமும், மறுபடியும் பெற விரும்புகிறார்கள். மேலும் அதிகமாகப் பெறவும் விரும்புகிறார்கள். பிறகு அது நிகழ்வதில்லை. என்னிடம் வந்து முறையிடுகிறார்கள். "என்ன ஆயிற்று? எங்காவது தவறு நிகழ்ந்ததா? முன்பு நிகழ்ந்தது. இப்போது இல்லையே?"

தவறு இதுதான், முதலில் நிகழ்ந்தபோது நீ கோரவில்லை. இப்போது கோருகிறாய், விரும்புகிறாய். முதலில் உன் உள்ளத்தில் தூய்மை இருந்தது. இப்போது உன் கோரிக்கை, விருப்பம் அத்தூய்மையை அகற்றிவிட்டது. இப்போது நீ எளிமையாக, தூய்மையாக இல்லை. கோரிக்கை உன் மனக்கதவுகளை மூடிவிட்டது. ஆசை ஆர்வம் மேலோங்கி விட்டது. அது மனத்தெளிவை, தூய்மையைக் கெடுத்து விட்டது. காமம், உலோபம் மேலெழுந்தன.

இப்படித் தினமும் நிகழ்கிறது. இங்கு தியானம் பயில வருபவர்கள் தொடக்கத்தில் உற்சாகமாக இருப்பார்கள். முன் அநுபவமும் ஏற்படுவதில்லை. ஆனால் தியான லயம் நிகழ்கிறது. இது கவலை கொள்ளும் நிலை. இதை உணர்ந்து கொள்ள வேண்டும். அஷ்டாவக்கிரரை அறிந்து கொள்ள இந்த உணர்வு உதவும். எனக்குத் தினந்தோறும் ஏற்படும் அநுபவம் இது. தியானம் பயில புதிய மனிதர்கள் உற்சாகத்துடன் இங்கு வருகிறார்கள். முன் அனுபவம் இல்லாதிருந்தும் அவர்களுக்கு ஆரம்பத்திலேயே தியான லயம் ஏற்பட்டுவிடுகிறது. மகிழ்ச்சியில் திளைக்கிறார்கள். இங்குதான் சிக்கல் துவங்குகிறது. விருப்பம் தேவையாகிறது. இன்று ஏற்பட்ட அநுபவம் (தியான லயம்) நாளைக்கும் ஏற்பட வேண்டும். இதைவிட அதிகமாக ஏற்படவேண்டும். ஆனால் அது நிகழ்வதில்லை. பிறகு என்னிடம் வந்து முறையிடுகிறார்கள், "என்ன ஆயிற்று எங்களுக்கு? எங்கோ

தவறு ஏற்பட்டிருக்க வேண்டும். முன்பு நிகழ்ந்தது பிறகு நிகழ்வதில்லை.''

நான் கூறினேன். ''தவறு இதுதான். முதலில் நிகழ்ந்த போது நீ கோரவில்லை. சுயமாக ஏற்பட்டது. இப்போது விரும்புகிறாய், கோருகிறாய். உன் மனது கெட்டு விட்டது. உன் விருப்பம் மனதைக் கெடுத்து விட்டது. இப்போது நீ இயல்பாக இல்லை. முன்போலத் திறந்த மனத்துடன் இல்லை. உன் விருப்பம், கோரிக்கை எழுந்ததால் கதவுகள் அடைபட்டன. ஆசை இயல்புகளைக் கெடுத்து விடும். பற்றுதல் மேலோங்கியது. ஆசை வெளிப்பட்டது.

இப்படித் தினமும் நிகழ்கிறது. பல நாட்களாகத் தியானயோகத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் பல முறைகளைக் கையாளுகிறார்கள். தியான லயம் இலகுவில் ஏற்படுவதில்லை. சிரமப்பட்டு அது பெறப்படுகிறது. முன் அநுபவமே தடையாகிறது. சிந்தனை அலைகளில் மிதந்து ஒருவன் தியான யோகத்திற்கு வருகிறான். மற்றொருவன் ஆர்வம் எழுந்ததும் வருகிறான். வேறொருவன் எவ்வித உந்துதலும் இல்லாமல் - பழக்கம், ஆன்மிகத் தேடல், ஆர்வம் எதுவும் இல்லாமல் - எதேச்சையாக வருகிறான். மற்றவர்கள் தியான யோகத்தில் ஈடுபடுவதைக் காண்கிறான், உணர்வு அலை வீசுகிறது. அவனும் ஈடுபடுகிறான். அவனுக்கு இலகுவாய் நிகழ்ந்து விடுகிறது. தியான லயம். வியப்படைகிறான், 'நான் தியானம் பயில வேண்டி வரவில்லை. ஆனாலும் தியான லயிப்பு ஏற்பட்டுவிட்டதே!' பிறகுதான் சிக்கல், மறுபடியும் வருகிறான்; மனத்தில் ஆவல், ஆர்வம், ஈடுபாடு, மறுபடியும் அந்த அநுபவத்தைப் பெற ஆசைப்படுகிறான். மனம் குறுக்கிட்டதால் எல்லாம் தோல்வி.

மனம் குறுக்கிடாமல் இருந்தால் நிகழ்வு கிட்டும்.

கவனம் இருக்கட்டும், மனம் தொடர் சிந்தனை கொண்டது. 'சுகமானது மறுபடியும் நிகழவேண்டும், துன்பமானது மறுமுறை நிகழலாகாது.' இதுதான் மனப்போக்கு. 'இது வேண்டும், இது வேண்டாம்' எனத் தேர்வு செய்கிறது மனது. 'இது நிகழட்டும், இது நிகழ வேண்டாம், இது தொடர்ந்து நிகழவேண்டும், இது ஒருக்காலும் நிகழலாகாது.' இது மன இயல்பு, மனப்போக்கு.

நீ வாழ்க்கையோடு பயணிக்கும்போது, இந்த உணர்வுகள் உடன் இருக்க வேண்டும். 'எது நிகழ்ந்தாலும் சம்மதம், எதுவும் நிகழாதிருந்தாலும் சம்மதம், துன்பம் வந்தால் ஏற்போம், விரோதமில்லை; சுகம் வந்தாலும் ஏற்போம், கர்வப்படவில்லை. சுகமும் துக்கமும் சமமாக இருந்தால் சமத்துவபுத்தி நிலை பெறட்டும். போகப் போக சுகமும் துக்கமும் ஒன்று போல் தோன்றும். ஏனெனில் நாம் தேர்வு செய்வதில்லை, நம் வசத்திலும் இல்லை. நிகழ வேண்டியது நிகழ்ந்து கொண்டிருக்கும்; நாம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். இதைத்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "ஸாக்ஷீ பவ!" (சாட்சியாக இரு). அவர் மேலும் கூறுகிறார், "சாட்சித்தன்மை சித்தித்தால் எல்லாமே சித்தித்ததாக ஆகும். அத்தன்மை சாட்சியாக இருப்பவனைத் தட்டி எழுப்புகிறது. உள்ளும் புறமும் சமத்துவத்தை சேர்க்கிறது. சமத்துவம் சாட்சித் தன்மையின் நேரிய நிழல்.

நீ சமத்துவத்தோடு இணைந்திருந்தால் சாட்சித் தன்மை வந்து சேரும். இரண்டும் சேர்ந்தே செல்லும். அவ்வை ஒரு நிகழ்வின் இரு கால்கள் அல்லது இரு இறக்கைகள்.

'.... அதே வான்வெளியில் சஞ்சரிக்க மனம் விழைகிறது, ஆர்வம் எழுகிறது.'

இந்த நிலையில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். மனத்திற்கு வாய்ப்புக் கொடுப்பது தியான யோகத்தைக் கெடுப்பதாகும். மனம்தான் உலகியல் வாழ்வைக் கெடுத்திருக்கிறது. இதுதான் ஜீவிதத் தொடர்புகளைக் குலைத்தது. பௌதிக வாழ்க்கையைப் பாலைவனமாக்கியதும் இதே மனம். மலர்கள் மண்டி மணக்கும் மண்ணில் முட்புதர்களைத்தான் பெற்றோம் மனத்தின் பாதிப்பால். ஆகையால் உள்ளார்ந்த (தியான) பயணத்தில் மனசைத் துணையாக்காதே. வணக்கம் கூறி விடை கொடுத்து அனுப்பிவிடு. அன்பாகப் பேசி விலக்கிவிடு. அதனிடம் கூறு, "ரொம்பவும் அநுபவித்தாகி விட்டது. இனி எதையும் உன்மூலம் கோர மாட்டேன். எது நிகழ்ந்தாலும் விழிப்புடன் எதிர்கொள்ளுவேன், சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருப்பேன்."

நீ கோரினால் சாட்சியாக இருக்க முடியாது. 'போக்தா' (அநுபவிப்பவன்) ஆகிவிடுகிறாய். தியானத்தை அநுப்விக்கத்

(உள்ளத்துள் உணர்ந்து மகிழ) தொடங்கினால், தியானம் விலகிப் போகும். 'போக்தா' என்பதன் கருத்து, நீ முன்பு கூறினாயே, 'இதில் எனக்கு உவப்பு, இன்பம் ஏற்படுகிறது' என்று, அந்த அநுபவம்தான்.

'... ஞானம், கர்மம், பக்தி நான் அறியேன். ஆனால் தனிமையில் இருக்கும் போது இந்த உணர்வு நிலையில் மூழ்கி இருக்க உள்ளம் விழைகிறது.'

இந்த ஆசையை விட்டுவிடு! இதே உணர்வு நிலையுள் நீ மூழ்கிப் போவாய். தனிமையில் மட்டுமல்ல, ஜனக்கூட்டத்துள் இருந்தாலும் மூழ்கித்தான் போவாய். கடைத் தெருவில் சந்தடிக்கிடையில் இருந்தாலும் மூழ்கிப் போவாய். இந்த உணர்வு நிலைக்கு தனிமை- கும்பல்கூட எந்த சம்பந்தமும் இல்லை. கோவில், பஜார் கூடவும் இல்லை. இந்த நிலைக்குத் தொடர்பு உன் மன அமைதியோடுதான், சமநிலை மனப்பாங்கோடுதான். அமைதியும் சமநிலையும் உள்ள இடத்தில் தியான லயம் நிகழும். இதை நீ கோராதே, வேண்டாதே! வேண்டினால் அமைதியின்மை, அவசரம், படபடப்பு ஏற்படும்.

அஷ்டாவக்கிரர் கூறுவார், "இப்போதே, இங்கேயே..."

வேண்டுவது வருங்காலத்திற்காகத்தான். கோரிக்கை 'இப்போதே, இங்கேயே...' பெற அல்ல. கோருவது நிகழ்காலத்திற்காக அல்ல. கோருவதன் நோக்கம், 'நாளைக்கு வேண்டும், சிறிது நேரத்திற்குப் பிறகு வேண்டும்., பிறகு வேண்டும்' என்பது.

கோரிக்கை உடனடியாக அப்போதே பெற எழுவதில்லை. அதற்கு அவகாசம் தேவை. சிறிது நேரமோ, காலமோ பிறகுதான் தேவை. வருங்காலத்தில் எனப் பொதுவாகக் கூற முடியாது. இல்லாதது என்பது வருங்காலம். இருக்கிறது என்பது நிகழ்காலம். இதற்கும் கோரிக்கைக்கும் தொடர்பு கிடையாது. நிகழ்காலத்தில் நீ வாழும்போது கோரிக்கை எழாது. அப்போதும் நிகழ்வு சித்திக்கும். நிகழவேண்டும் எனும் ஆவல் மனத்தில் எழாதபோது தியான லயம் சிறப்பாக நிகழும்.

இதொரு புதிர். தெளிவாகப் புரிந்து கொள். இதன் எல்லாக் கோணங்களையும் அறிந்து கொள். நீ என்றைக்கு எதையுமே

கோராதபோது எல்லாமே நன்கு நிகழும். நீ பரமாத்மாவை நாடி, தேடி அலையாத போது, பரமாத்மா உன் பின்னால் வரும். தியான லயிப்பு வேண்டி ஆர்வம், பதைப்பு கொள்ளாதிருக்கும் போதுதான் அது நிறைவாக நிகழும்.

தியானம் வெளியிலிருந்து வருவதில்லை. மனச்சஞ்சலம், பதைப்பு இல்லாமல், உன்னுள் உணர்வு மட்டும் இருக்குமானால், இதுதான் தியானம். உன்னுள் ஆசைப்பற்று இல்லாமல், உணர்வு மட்டும் இருப்பதே தியானம்.

ஏரியில் அலைகள் பரவுகின்றன. காற்றும் அலை வீசுகிறது. ஏரியின் உள்ளே புயல் நிரம்புகிறது. சூறாவளி வீசத் துவங்குகிறது. எல்லாமே நிலைகுலைந்து போகின்றன. வானத்தில் முழுமதி தோன்றுகிறது. ஆனால் அதன் பிரதி பிம்பம்- நிழல் உரு ஏற்படுவதில்லை. காரணம், ஏரி நடுங்குகிறது. எப்படிக் கண்ணாடி போல் தெளிவாக இருக்கும்? சந்திர பிம்பம் பிரதிபலிக்கிறது. அலை அலமலப்பில் பிம்பம் பல துண்டங்களாகச் சிதறுகிறது. நிலா ஒளி ஏரி முழுவதிலும் பரவுகிறது. சந்திரனின் முழுபிம்பம் தெரிவதில்லை. பிறகு ஏரி அமைதியாகிறது. அலைகள் ஓய்ந்தன. அவை எங்கிருந்து வந்தன? எங்கே போயின? அலைகள் ஏரிக்கு உரியவை. ஏரி உறங்குகிறது. அசையா நிலையில் அமைதியாக இருக்கிறது. ஏரியில் சந்திரன் நிலா உருவில் பரந்திருக்கிறது. கூடவே பிரதிபிம்பமாகவும் சுயஉருவில் பிரதிபலிக்கிறது. முழுமையாக!

இதேபோல், உன் மனமெனும் ஏரியில் அலைகள் பரவாதிருக்கும் போது, அலை போன்ற ஆசாபாசம், கோரிக்கை, 'இது, இப்படி நிகழட்டும்' எனும் எதிர்பார்ப்பு- எல்லாமே அலைகள்தாம். மனமெனும் ஏரியில் அலைவீச்சு எழாதபோது, சத்தியம் அப்படியே பிரதிபலிக்கும். சந்திரன் உன் உள்ளத்துள் இருக்குமானால் அதன் அழகே தனி, பொலிவே தனி! அதன் சுகாநுபவம் அற்புதம். சுவை உணர்வு பெருகும். மூலமும் பிரதியும் ஒருங்கிணையும். பிறகு மகிழ்ச்சி, ஆனந்தம், முதலிரவு தரும் சுகாநுபவம்.

ஆனால் நீ கோரினால், வேண்டினால் தோல்வியும் தவறும் ஏற்பட்டுவிடும்.

மேலும், எனக்கும் தெரியும், விருப்புற்று வேண்டுவது இயல்பானது எனத் தோன்றும். சிக்கல் தொடரும். சுகாநுபவத்தின் கவர்ச்சி, ஈர்ப்பு பற்றிக் கொள்ளும் போது கோரிக்கை எழுச்சியிலிருந்து எப்படித் தப்ப முடியும்? மனித இயல்பு, பலவீனம். நீ மனிதத் தன்மைக்குப் புறம்பாக பெரிய குற்றம் புரிந்திருக்கிறாய் என்று நான் சொல்ல மாட்டேன். மனித இயல்பான பொதுவான குற்றம்தான் இது.

கணநேரத்திற்குச் சாளரம் திறக்கிறது, வானம் புலப்படுகிறது. அக்கணத்தில் இருள் விலகுகிறது. ஒளிக்கதிர்கள் பரவுகின்றன. இது அரிதாகத்தான் நிகழும். கிட்டத்தட்ட நிகழ முடியாதது. ஆதலால் இந்நிலையை வேண்டாதே.

ஆனால் நிகழ முடியாததைக் கற்க வேண்டும். இன்றோ, நாளையோ, மறுநாளோ கற்கத்தான் வேண்டும். விரைவாகக் கற்றுக் கொள். இப்போதே தயார் செய்து கொள், முனைந்துவிடு. நிகழ்வது சீக்கிரமாகும். கணநேரம் கூடக் காத்திருக்க வேண்டிய அவசியம் ஏற்படாது.

'......... இந்த நிலையில் மூழ்கியிருக்க உள்ளம் விழைகிறது.'

இந்த நிலை நிகழும். இதற்கு உன் உள்ளம் பொறுப்பல்ல. அதன் உதவி தேவையில்லை. ஆகையால் உன் மனத்தைப் புறம் தள்ளிவிடு! அது குறுக்கிட்டால், எச்சரித்து விடு, "தயவு செய்து ஒதுங்கி இரு! மன்னிக்கவும், நிறைய அநுபவித்து விட்டேன் உன்னால். ஆளை விடு! பௌதிக (உலகாயத) வாழ்வைக் கெடுத்தாய், போதும்! இனி பரம்பொருளையும், கெடுத்துவிடாதே! இக வாழ்வின் சுகங்களை யெல்லாம் கலைத்து விட்டாய்; இப்போது ஆத்மார்த்தமான அகமகிழ் சுகம் கிட்டப் போகிறது. இதையும் கெடுத்து விடாதே!"

விழிப்புடன் இருந்து மனத்திற்கு வணக்கத்துடன் விடை கொடுத்தனுப்பு. மெள்ள, மெள்ள, மெள்ள ஏற்ற தருணங்கள் வரத்துவங்கும். உன் சுயாநுபவத்தாலே வந்து சேரும். மனம் குறுக்கிடாதபோது, அந்தச் சாளரம் திறக்கும்; இனிய உணர்வு பெருகிவரும். பேரொளி பரவும். நீ சுயம் பிரகாசமாவாய். பிறகு நீ அதில் ஆழ்ந்து போவாய், அமுதவெள்ளத்துள் மூழ்குவாய். இப்படி அடிக்கடி நிகழும்போது தெளிவு ஏற்படும். மனச்சள்ளையிலிருந்து

உன்னை விலக்கி வைத்துக் கொள்ளும் திறமையைப் பெறுவாய், மனத்தை வென்றவனாகத் திகழ்வாய்!

அது நிகழும் போது நிகழட்டும், நிகழாத வரைக்கும் அமைதியாக எதிர்ப்பார்த்திருக்க வேண்டும். தக்கதருணம் வரும். ஒருமுறை நிகழ்ந்தால், பிறகு அடிக்கடி நிகழும். நீ கோராதே, கேட்காதே. நீ (உன்மனம்) குறுக்கிடலாகாது. நீ இடைஞ்சலாக இராதே.

'........ ஆனால், இது என் பித்துக்குளித்தனமோ என்கிற எண்ணம் எழும், எப்போதாவது எழும்.'

புத்தி (பகுத்தறிவு) அந்த எண்ணத்தை எழுப்பும். ஆனந்த பரவசம் ஏற்படும் என்பதை புத்தி ஏற்காது. புத்தி துன்பத்துடன் ஒட்டுறவு கொண்டுள்ளது. துன்பத்தை இயல்பாக அது ஏற்றுக் கொண்டுள்ளது. காரணம், துன்பத்தை, துக்கத்தைத் தோற்றவிப்பதே புத்திதான். தான் பெற்றெடுத்ததை யார்தான் ஏற்கமாட்டார்? புத்தியின் கருத்து 'துக்கம் ஏற்படுவது இயற்கை, சம்மதம்.'

ஆனால் மகாசுகம்- பேரின்பம்? எங்கோ கோளாறு ஏற்பட்டிருக்க வேண்டும். இப்படியும் நிகழ முடியுமா? வெறும் கற்பனை, கனவு, பகல் கனவு. மதி மயக்கத்தில் மூழ்கியிருக்கலாம். எங்கோ, எப்படியோ பைத்தியக்காரத்தனம் புகுந்திருக்கிறது.

புத்தி இப்படித்தான் கூறிக் கொண்டிருக்கும். காதில் போட்டுக் கொள்ளாதே. பொருட்படுத்தாதே. அதில் கவனம் செலுத்தி ஏற்றுக் கொண்டால் அந்த நிகழ்வுகள் நின்றுவிடும். கதவுகள், ஜன்னல்கள் திறக்கப்பட மாட்டா.

ஒரு விஷயத்தைக் கவனத்தில் கொள். ஆனந்தம் சத்தியத்தின் அடையாளம், விளக்கம். எங்கிருந்தெல்லாம் பேருவகை (ஆனந்தம்) கிட்டுகிறதோ, அங்கெல்லாம் சத்தியம் இருக்கிறது. இதனால் நாம் பரமாத்மாவை 'சச்சிதானந்தம்' (சத், சித், ஆனந்தம்) எனக் கூறினோம். ஆனந்தம் அதன் கடைசிக் குறியீடு (பரிபாஷை). சத்தியத்திற்கும் மேலே, சித்துக்கும் (புத்தி; ஆன்மா) மேலே 'ஆனந்தம்' வைக்கப்பட்டுள்ளது- 'சச்சிதானந்தம்' எனக் கூறப்படுகிறது. சத்தியம் (சத்) ஒருபடி கீழே; சித் (புத்தி, ஆன்மா) ஒருபடி கீழே 'ஆனந்தம்' இரண்டிற்கும் மேலே மேன்மை நிலையில்; பரம சத்தியம்.

ஆனந்தம் பெருகும்போது, ஆனந்த அநுபவம் ஏற்படும் போது- நீ கவலையே படாதே!- சத்தியத்தின் அருகில் இருக்கிறாய். ஒருவன் பூந்தோட்டத்தின் அருகில் வந்து கொண்டிருக்கிறான், குளிர்ந்த காற்று வீசுகிறது, புள்ளினங்களின் இனிய கூவல் தொனிகள் இசைக்கின்றன. குளிர்ச்சி பரவுகிறது- இந்நிலையில் தோட்டம் தென்படாவிட்டாலும், அது உள்ளது எனும் உணர்வு, அறிவு ஏற்படுகிறது. சரியான பாதையில்தான் வந்திருக்கிறோம், தோட்டம் பக்கத்தில் இருக்கிறது என்று தோன்றுகிறது. இதேபோல, நீ சத்தியத்தின் அணுக்கத்தில் பயணிக்கும்போது ஆனந்தம் பெருகுகிறது. மனம் குளிர்ந்து போகிறது, நிதானம் ஏற்படுகிறது, பொறுமை வலுப்படுகிறது, சுகம் அதிகமாகிறது. உற்சாகம், ஊக்கம் சூழ்ந்து கொள்ளுகிறது- 'எப்படி? ஏன்?' எனத் தெரிவதில்லை. காரணம் புலப்படுவதில்லை. எந்த லாட்டரிப்பரிசும் கிட்டவில்லை; தொழிலில் அதிக ஆதாயம் கிடைத்து விடவில்லை; மேலதிகாரிப் பதவி கிட்டவில்லை- இப்படி எந்தக் காரணமும் இல்லை. எதிர்மறையாக நிகழ்ந்திருக்கலாம்- இருந்த நல்ல பதவி போய்விட்டது; கைவசமிருந்த செல்வம் தொலைந்தது; தொழில் திவாலாகிவிட்டது; அப்படியும் காரணம் புரியாத உற்சாகம், மகிழ்ச்சி, ஊக்கம் உள்ளத்துள் களிநடம் புரிகின்றன! ஓயவில்லை. அப்போது புத்தி கூறும், "பைத்தியம் பிடித்திருக்கிறதா? பித்துப் பிடிப்பின் அடையாளம் இது."

இது அதிசய உலகம். இங்கு பித்தர்கள் தான் சந்தோசமாக இருக்கிறார்கள். இதனால்தானோ என்னவோ, புத்தி கூறுகிறது, "நீ பைத்தியக்காரனாகி இருப்பாய். இங்கு பைத்தியங்களைத் தவிர வேறு எவரும் மகிழ்ச்சியோடு இருப்பதில்லை" உலகியல் வாழ்வில் ஆயிரம் காரணங்கள் உள்ளன மகிழ்ச்சி அளிக்க, ஆனாலும் மனிதன் மகிழ்ச்சியுடன் இருப்பதில்லை. மாளிகை இல்லம், செல்வப் பெருக்கம், வசதி, சௌக்கியம் எல்லாம் இருந்தும் மனிதன் சந்தோசமாக இருப்பதில்லை. இந்த உலகமே தூக்கப்பட்டவர்களுடையது போலும். துக்கித்தவர்களின் கூட்டம் அதிகம்.

இங்கு இயல்பாக நீ சிரித்து மகிழ்ந்தால், சனங்கள் உன்னைப் பைத்தியம் என்பார்கள். "எனக்குக் காரணம் தெரியாமல் சிரிப்பு வருகிறது, தொடருகிறது, உள்ளத்திலிருந்து பொங்குகிறது, அலை மோதுகிறது" என்று சொல்லிப் பார், "இவனுக்கு மூளை

கெட்டுவிட்டது'' என்பார்கள். இந்த உலகில் நீ வேஷதாரியாக நடமாடு. விசனத்தை வெளிப்படுத்து. முகபாவத்தைக் கோரமாக வைத்துக் கொள்- பேய் பிசாசுகள்கூடப் பயப்படும்படி - "நீ சரியாகத்தான் இருக்கிறாய்' என்பார்கள். எந்தச் சங்கடமும் ஏற்படாது. எல்லாம் சரிவர இருப்பதாக கருதுவார்கள். மனிதனைப் போல் மனிதனாக இரு; மனிதன் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருந்து வா. ஆனால், நீ இயல்பு மாறி, புன்சிரிப்போ, அட்டகாசச் சிரிப்போ செய்தால், பாட்டு வரிகளை முணுமுணுத்தால், தெரு முக்கத்தில் நின்று கூத்தாடினால்- இது போதும், நீ பைத்தியம் என்றே தீர்மானிக்கப்படுவாய்.

பரமாத்மாவை நாம் இதே போலத்தான் மறுதலித்திருக்கிறோம். பரமாத்மா நேரில் வந்தால், உடனே பைத்தியக்கார மருத்துவமனையில் அடைத்திருப்போம். இதனால்தான் பரமாத்மா நம்மிடம் வருவதில்லை, வருவதற்குப் பயப்படுகிறார் போலும்.

நீ சற்று சிந்தித்துப் பார். கண்ணபிரானை நாற்சந்தியில் புல்லாங்குழல் இசைத்துக் கொண்டு, தலையில் மயில் பீலி செருகிய கிரீடத்தைத் தரித்துக் கொண்டு, மஞ்சளித்த பீதாம்பரம் உடுத்திக் கொண்டு, கோபியருடன் கைகோத்து களிநடம் புரிந்தால்- நீ என்ன செய்வாய்? உடனே காவல்நிலையம் போவாய். "ஐயா! நாற்சந்தியில் ஒரே களேபரம், நடக்கக் கூடாததெல்லாம் நடந்து கொண்டிருக்கிறது. அந்தக் கிறுக்கனை (கண்ணபிரான்) சிறையில் அடையுங்கள்!'' என்று கூச்சலிடுவாய்.

ஆனந்தம் (அகமகிழ்ச்சி) வெளியேற்றப்பட்டு விட்டது. நாம் ஆனந்தத்தை இகவாழ்விலிருந்து புறம் தள்ளிவிட்டோம். துன்பத்தை- துக்கத்தை நாம் தழுவி அணைத்துக் கொண்டு உட்கார்த்திருக்கிறோம். துக்கப்பட்டவன், துன்பப்படுபவன் இங்கே புத்திமானாகக் கருதப் படுகிறான். ஆனந்தக் களிப்பில் இருப்பவன். பைத்தியக்காரனாகத் தெரிகிறான். வரைமுறை தலைகீழாகியிருக்கிறது!

ஆக, இதெல்லாம் இயல்பு. வாழ்க்கை முழுவதிலும் நீ எதைப் புத்திசாலித்தனம் எனக் கருதி இருந்தாயோ, அது இன்று திடீரென விலகிவிட்டால், தொலைந்து போனால், அதன் வேர்ப்பிடிப்பு அறுபட்டுப் போனால், உடனே மகிழ்ச்சி காரணத் தொடர்பு இல்லாமல்

வந்து சேரும். இதைக் கவனத்தில் கொள்வாயாக. பைத்தியத்தின் அர்த்தம் திடீரென (காரணமில்லாமல்) மகிழ்ச்சியின் எழுச்சி. இதற்கு எந்த முகாந்தரமும்- காரண சம்பந்தமும் கிடையாது. தனியாக உட்கார்ந்திருக்கிறாய், சிரிப்பு வருகிறது, புன்சிரிப்பு மலர்கிறது. போதும், நீ பைத்தியமாகி விட்டாய். ஏனெனில் நாம் இவ்வகையில்தான் பைத்தியங்களைப் பார்த்திருக்கிறோம்.

கவனமிருக்கட்டும், பைத்தியங்களுக்கும் பரமஹம்ஸர்களுக்கு ஓரளவு ஒற்றுமை உண்டு. பைத்தியமும் மகிழ்ச்சியாக இருக்கிறான், தனக்குள் சிரித்துக் கொள்ளுகிறான், புத்தியை (பகுத்தறிவை) இழந்திருக்கிறான். பரமஹம்ஸரும் சிரிக்கிறார், மகிழ்ச்சியுடன் இருக்கிறார். காரணம், அவர் புத்தியின் ஆதிக்க எல்லையைக் கடந்தவர். புத்திக்குக் கீழே இருப்பதால் பைத்தியம் சிரித்துக் கொள்ளுகிறான். பரமஹம்ஸர் புத்தியைக் கடந்தவர், அதனால் சிரிக்கிறார்.

பைத்தியம்- பரமஹம்ஸர் இருவரும் ஒரு விஷயத்தில் சமானம். இருவருமே புத்தியை இழந்தவர்கள். பரமஹம்ஸர் சுயபிரக்ஞையுடன் புத்தியை இழந்தவர், பைத்தியம் மயக்கத்தில் இழந்தவன். இரண்டிற்கும் வித்தியாசம் அதிகம்- பூமிக்கும் வானத்திற்கும் போல. இருந்தாலும் ஓரளவு சமத்துவம் உள்ளது. இதனால் தான் சிலபோது உனக்கு பைத்தியத்துள் பரமஹம்ஸர் தெரிகிறார், பரமஹம்ஸருக்குள் பைத்தியம் தோன்றுகிறது. இதனால் தவறுதல் ஏற்படுகிறது.

மேற்கத்திய நாடுகளின் மனநோய் மருத்துவமனைகளில் மனநோயாளி அல்லாதவர்கள் ,பலர் அடைபட்டிருக்கிறார்கள். இதற்காக அங்கு போராட்டம் நடைபெறுகிறது. சில மனவியல் விஞ்ஞானிகள், குறிப்பாக ஆர்.டி.லைங்க், இவர் தோழர்கள் போராட்டம் நடத்தி வருகிறார்கள், "மனநோயாளி அல்லாதவர்கள் பலர் மன மருத்துவமனைகளுள் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் கீழை நாடுகளில் இருந்தால் பரமஹம்ஸர்களாகப் போற்றப்படுவார்கள்" என்பது அவர்கள் வாதம். ஆர்.டி.லைங்க் அவர்களுக்குத் தெரியாது. இதற்கு எதிர்மறையாக கிழக்கத்திய நாடுகளில் நிகழ்ந்திருக்கிறது. இங்கு பல பைத்தியங்கள்

பரமஹம்ஸர்களாகக் கருதப்படுகிறார்கள். ஆக, மனிதன் மனிதன் தானே. இங்கு கீழைநாடுகளில் பல பித்தர்கள் பரமஹம்ஸர்களாக (ஞானயோகி) மதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதில் தவறு அறியாமையால் ஏற்பட்டு விடுகிறது. காரணம், பைத்தியம்- பரமஹம்ஸர் இருவருக்கும் உள்ள எல்லைகள் ஒட்டியிருக்கின்றன. ஐயம், மயக்கம் இயல்புதான்.

இதில் ஒன்றைக் கவனிக்க வேண்டும். ஆனந்தம் (உள்ளார்ந்த உவகை) பெருகினால் பயப்படலாகாது. ஆனால் அப்பெருக்கம் பைத்தியம் காரணமாகவும் ஏற்படலாம். பாதுகாப்பிற்கு உரைகல் எது? உன்னுள் ஆனந்தம் பெருகுகிறது. இதனால் பிறருக்கு எந்தத் துன்பமும் ஏற்படவில்லை என்றால், கவலையை விடு. உனது ஆனந்தம் பிறரை இமிசித்தாலோ, தாக்கினாலோ, துன்புறுத்தினாலோ. நீ ப்யப்படத்தான் வேண்டும். உன் பைத்தியம் இப்படி ஆட்டுவிக்கிறது. அவை இல்லாது போனால் பைத்தியம் பற்றிக் கவலையோ, அச்சமோ கொள்ள வேண்டாம். பிறர்பால் பாதிப்பு இல்லாத பித்தன் நிலை நல்லது; தயக்கமின்றி, கவலையில்லாமல் அப் பைத்திய நிலையில் பிரவேசிக்கலாம்.

கவலை, அச்சம் கொள்ள வேண்டிய நிலைமை, பித்தனாகிய நீ பிறருக்குத் துன்பம் தந்தால்தான். ஆடிப்பாடி நீ அகம் மகிழ்வதால் பிறருக்கு இடையூறு, இன்னல் ஏற்படாதிருந்தால் சரி. நீ ராமநாமத்தை ஜபித்துக் கொண்டிரு; ஆனால், ஒலிபெருக்கி வைத்து நடுநிசி வரை தெருவெல்லாம் அதிரும்படி பஜனை- கீர்த்தனை என்று கூச்சலிட்டால், நீ அசல் பைத்தியம். பிறர் உன்னைப் பைத்தியம் எனச் சொல்ல மாட்டார்கள். நீதான் ராமநாம சங்கீர்த்தனம் உரக்க இசைக்கிறாயே. இப்படிப் பல பைத்தியக்காரர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கூறுவார்கள், 'நாங்கள் அகண்ட (இடைவிடாத) கீர்த்தனம் இசைத்துக் கொண்டிருக்கிறோம்; இராப்பகல் பூராவும் கதாகாலட்சேபம் நிகழ்த்துவோம். நீ தூங்கு, தூங்காமல் இரு. உன் விருப்பம். நீ தடுத்தால், இடைஞ்சல் செய்தால் நீ பாவி, அதர்மவான்!

இதைக் கவனத்தில் கொண்டிரு. உன் ஆனந்தம் பிறரை இமிசிக்கலாகாது. இவ்வளவு போதும். உனது அகமகிழ்வு- ஆனந்தம் உனக்கு மட்டுமே சொந்தமானது. இதன் மூலம் பிறரது வாழ்வில் உபாதி, இன்னல் ஏற்படலாகாது. உன் அகமலர் மலரட்டும், அதன்

முட்கள் பிறரை வதைக்கலாகாது. இந்த அளவுக்கு நீ கவனமாக இருந்தால், நீ சரியான வழியில் பயணிக்கிறாய்.

எப்போது உனக்கு நம்மால் பிறருக்கு உபாதி ஏற்படுகிறது எனத் தெரிகிறதோ, அங்கு அப்போதே எச்சரிக்கையாக இரு. மாறாக, பரமஹம்ஸரைப் போல் பயணித்து, அசல் பைத்தியமாகி விடாதே!

'ஓம் பிரகாசம்' (ஆன்மிக ஞானி) நிலையில் எவருக்கும் எந்தவிதத் துக்கமும் இல்லை. தயங்காமல் தைரியமாக முன்னேறிச் செல்லலாம். நேற்று நான் ஒரு பாடலைப் படித்துக் கொண்டிருந்தேன்; அதன் கருத்து-

**அழகாய் இருந்ததை செல்வத்தை**
**விரும்பத்தக்கதை - மேலும்,**
**நல்லது, சுத்தமானது, புதியது சத்தியசாரம்**
**என்றே அவற்றை நான் பொறுக்கியெடுத்து வந்தேன்.**

**நைவேத்யப் படையலாக அர்ப்பணித்தேன்,**
**ஆனால் ஏன் இப்படி ஆகிவிட்டது?**
**எல்லாமே வாடி வதங்கிப் போயிற்று,**
**காய்ந்து சுருங்கிப் போனது,**
**எதையும் அவன் கைநீட்டி வாங்கிக் கொள்ளவில்லை;**

**எங்கேயோ எழுதப்பட்டுள்ளது-**
**ஆனால், நான் எதைக் கொடுத்தேனோ**
**எதைப் பெற்றேனோ, பருகினேனோ,**
**எதைக் கீழே போட்டேனோ,**
**எதைக் கவிழ்த்தேனோ, கீழே தெளித்தேனோ**
**எதைக் கழுவினேனோ, வடிக்கட்டினேனோ,**
**எதைக் கீழே இறக்கினேனோ,**
**எதை மேலே தூக்கி வைத்தேனோ**
**எதைச் சேர்த்தேனோ, உடைத்தேனோ,**
**எதைக் கைவிட்டேனோ- எல்லாவற்றுக்கும்**
**கணக்கு உள்ளது;**
**நான் அந்த யாக வேள்வித் தீயில்**
**கவிழ்ந்து விழுவதைப் பார்த்தேன்.**
**அக்கணமே எனக்குத் தெரிந்தது**
**நான் தீக்குண்டத்திலிருந்து மீண்டேன்,**

**சரி, சரி! என் புத்திபேதலித்து விட்டது!...**
**மனிதன் மூழ்கடிக்கப்படுகிறான்-**
**பித்துப் பிடித்துவிட்டதால்!**

பரமாத்மாவிற்கு தேடிச் சேகரித்த பொருள்களை அர்ப்பணி, நல்ல, மேலான காணிக்கைகளைச் செலுத்து. இதனால் எந்தப் பயனும் ஏற்படாது. நீ உன்னையே சமர்ப்பணம் செய்தால்தான் பயன் பெறலாம்.

மறுபடியும் அப்பாடலைக் கேள்-

**"அழகாய் இருந்ததை, செல்வத்தை,**
**விரும்பத்தக்கதை- மேலும்**
**நல்லது, சுத்தமானது, புதியது, சத்தியசாரம்**
**என்றே அவற்றைப் பொறுக்கி எடுத்துவந்தேன்**
**நைவேத்தியப் படையலாக அர்ப்பணித்தேன்,**
**ஆனால் ஏன் இப்படி ஆகிவிட்டது?**
**எல்லாமே வாடி வதங்கிப் போயிற்று,**
**காய்ந்து சுருங்கிப் போனது,**
**எதையும் அவன் கைநீட்டி வாங்கிக் கொள்ளவில்லை!"**

நீ மிக அழகானதைத் தேடி, தேர்ந்தெடுத்துக் கொண்டு வா! விலைமதிப்பு மிக்கவைகளைச் சேகரித்து எடுத்து வா! கோஹினூர் வைரத்தையே சமர்ப்பி! எல்லாமே வாடிப்போகும், வீணாகும். தாமரைப் பூக்களை, ரோஜா மலர்களைச் சூட்டு, எல்லாம் வாடிப்போகும். ஒரு பொருள்தான் அங்கு அங்கீகரிக்கப்படும்- அது உனது சிரம், உனது அகந்தை, உன் அறிவு, உன் மனம். பெயர்கள் வெவ்வேறாக இருக்கலாம், பொருள் ஒன்றுதான். உன்னையே அங்கு அர்ப்பணித்து விடு!

**"அக்கணமே எனக்குத் தெரிந்தது**
**நான் தீக்குண்டத்திலிருந்து மீண்டேன்,**
**சரி, சரி! என் புத்தி பேதலித்து விட்டது!...."**

பொது ஜனங்கள் சொல்லுவார்கள், "ஓம் பிரகாஷ்! அதாவது பித்துப் பிடித்து விட்டது." சொல்லிவிட்டுப் போகட்டும். அதனால் கவலை இல்லை. சனங்கள் "உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது" என்று சொன்னால், தம் தலைகளைக் காப்பாற்றிக் கொள்ளுகிறார்கள் என்று பொருள், இவ்வளவுதான். சனங்கள், "உனக்குப் பைத்தியம்

பிடித்திருக்கிறது.'' என்றால், அவர்கள் சொல்லி விரும்புவது இதுதான், ''எங்களைக் காப்பாற்று! இந்த நிலையில் எங்களிடம் நீ வராதே! உன் பாடலை எங்கள் காதுபட இங்கு பாடாதே! உன் வெகுளிச் சிரிப்பை எங்களிடம் கொணராதே! கிறங்கியிருக்கும் உன் கண்களை எங்களுக்குக் காட்டாதே! இந்தச் செய்திகளை இங்கு கூறாதே!'' ஆக, அவர்களுக்கு உள்ளூர கிலி, பதைப்பு. ஆனாலும் அவர்களின் உள்ளங்களிலும் அதே பாடல் இசை ஒலிக்கும். அவர்கள் உள்ளங்களிலும் காலம் காலமாக மீட்டி இசைக்க வேண்டிய வீணை காத்திருக்கிறது. ஆனால் உள்ளூர கிலி, பதைப்பு. அவர்கள் (பொது சனங்கள்) பலவற்றையும் பொய்யுலகில் உருவாக்கி, மனத்துள் பதித்து வைத்திருக்கிறார்கள் எவரும் பிடுங்கி விடாதபடி.

நான் அலாகாபாதில் இருந்தேன், ஓர் அன்பர் எதிரே அமர்ந்து என் சொற்பொழிவை ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார். பலரும் என் எதிரே அமர்ந்து கேட்டிருக்கிறார்கள். ஆனால் அந்த அன்பரைப் போல ஈடுபாட்டுடன் என் பிரசங்கத்தைக் கேட்டவர்கள் மிகச் சிலர்தான். அன்பரின் கண்களிலிருந்து கண்ணீர் வழியும். ஒருநாள் பிரசங்கத்தின் நடுவிலே எழுந்து அவைக் கூடத்தை விட்டு வெளியேறி விட்டார். நான் சிறிது திகைத்தேன். இவருக்கு என்ன ஆயிற்று? விசாரித்தேன். அமைப்பாளர் சொன்னார், அவர் பிரபலமானவராம். எனக்கும் முதலில் தெரியாது. பிறகு தெரியவந்தது. கவிஞர், எழுத்தாளர், சிந்தனையாளர்.

அமைப்பாளர் அவரைப் போய் சந்தித்து, அவையை விட்டுப் பாதியில் எழுந்து போனது பற்றி விசாரித்தார். அந்த அன்பர் சொன்னாராம்,

''மன்னிக்கவும். நான் பயந்து போனேன். இருபது நிமிடம் பிரசங்கத்தைக் கேட்ட பிறகு என் மனது எச்சரித்தது. 'இனி, இங்கே இருக்காதே, கிளம்பிப் போய்விடு! தொடர்ந்து கேட்டால் சங்கடம் ஏற்படும். எதுவும் நிகழலாம். இந்த ஆசாமி (ஓஷோ) கிறுக்குப் பிடிச்சவன். என்னையும் பைத்தியமாக்கி விடுவான். எழுந்துபோ!...' அதனால்தான் வெளியே வந்து விட்டேன். பிறகு அங்கு அவரது அறிவுரையைக் கேட்க வருவேன். இப்போது இல்லை. இரண்டு நாட்களாய் இரவில் தூங்கவில்லை. அவரது உரை என் மனத்தில்

எதிரொலித்துக் கொண்டிருக்கிறது. நான் அங்கே இப்போதைக்கு வரமுடியாது. நிறைய வேலைகள், கடமைகள் காத்திருக்கின்றன. என் பிள்ளைகளை நல்லபடியாக வளர்க்க வேண்டும், குடும்பம் நடத்த் வேண்டும். இப்போதைக்கு என்னால் அங்கு வரமுடியாது. ஆனால் பிறகு வருவேன். அவரிடம் சொல்லு, நிச்சயம் அங்கு வருவேன். தற்சமயம் வர இயலாது."

எவராவது உன்னிடம், "உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது" என்றால், அவர் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுகிறார் என்று அர்த்தம். என்னிடம் எவராவது அதைச் சொன்னால், நான் என்னை அடக்கிக் கொள்ளுவேன். அவனுள்ளும் அடங்காத ஆசாபாசம் இருக்கிறது.

பரமாத்மாவை நாடாதவர் எவர்? ஆனந்தத்திற்கு ஆசைப்படாதவர் யார்? சத்திய வேட்கை கொள்ளாதவர் எவர்? மாறாக எவரும் பிறந்ததில்லை. நீ நாத்திகர் என்று எவரைக் கூறுகிறாயோ, அவர்கள் பயந்தவர்கள், 'பரமாத்மா' என எதுவும்- எவரும் இல்லை என்பவர்கள். பரமாத்மாவை மறுதலிக்காது போனால், அவர்கள் ஆராய்ச்சியில் ஈடுபடவேண்டியதாகும்.

என் சுய அநுபவம் இது, நாத்திகர்களிடம் ஆத்திகர்களைவிட சத்திய சோதனையில் ஆர்வம் அதிகமிருக்கும். நாத்திகன் கோவிலுக்குப் போகப் பயப்படுகிறான், ஆத்திகனான நீ பயப்படுவதில்லை. ஏனெனில், உன் உள்ளத்தில் பித்துப் பிடிக்கும் அளவுக்கு தீவிர ஆர்வம் இருப்பதில்லை. கடைவீதிக்குப் போய் வருவதுபோல், நீ கோவிலுக்குப் போய் வருகிறாய், கோவிலுக்கு உள்ளேயும் வெளியேயும் நீ சுற்றி வருகிறாய்; உன்னிடம் எந்த பாதிப்பும் ஏற்படுவதில்லை.

நாத்திகன் நிலைமை அறிந்தவன். அவன் கோவிலுக்குள் சென்று வந்தால் உள்ளபடி திரும்ப மாட்டான். உள்ளே போகும்போது எப்படி இருந்தானோ, அதேபோல் திரும்பும்போது இருக்க மாட்டான். இதைத் தவிர்க்க ஒரேவழி கடவுளை மறுப்பது. "ஈசுவரன் என எவனும் இல்லை. தர்மம், சம்பிரதாயம், மதம் எல்லாம் பித்தலாட்டம்?" இப்படிக் கூறி தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுகிறான். தனக்கும், பிறருக்கும் அறிவிக்கிறான், "கடவுள் இல்லை எனும்போது கோவிலுக்கு ஏன்

போக வேண்டும்? ஏன் ஆய்வில், விவாதத்தில் சிக்கிக் கொள்ள வேண்டும்? தியானம் ஜபம், பிரார்த்தனை, வழிபாடு எல்லாம் எதற்கு?..''

நான் பார்த்த வரையில், நாத்திகனுக்குள் சுயபாதுகாப்பு தொடர்கிறது. உண்மையான நாத்திகனை நான் இதுவரை பார்த்ததில்லை. ஒரு மனிதன் எப்படி நாத்திகனாக இருக்க முடியும்? 'இல்லை'என்பதை நம்பி வாழ்பவன் நாத்திகன், இல்லாமைக்குள் வாழ முயற்சிப்பவன். ஆனால், 'இல்லை' எனும் நிலைமையில் ஒருவன் எப்படி வாழ்வான்? நாத்திக நிலைக்குள் எப்படி வாழமுடியும்? வாழ்வதற்கு 'ஆம்' எனும் ஒப்புதல் தேவை. 'இல்லை' என்பதில் எது மலரும்? ஒப்புதல், ஏற்றல் வேண்டும்.

வாழ்க்கையில் ஏற்றலுக்கு ஏற்பவே நலன்கள் மலரும். எல்லை கடந்து அவை மலரலாகாது எனும் அச்சம் ஏற்படுவதும் இயல்பே. கூடவே, என்னால் சேமிக்க முடியாத, பாதுகாக்க முடியாத அளவுக்கு நன்மலர்கள் பூத்துக் குலுங்க வேண்டாம் எனும் பயமும் இயல்பே.

நேற்று இரவு ஒரு வாலிபன் என்னிடம் வந்து முறையிட்டான், "என்னைக் காப்பாற்றுங்கள்! என் ஆத்மானந்தம் (அக மகிழ்வு) தாங்க முடியாத அளவுக்கு அதிகரிக்கிறது. நான் ஒடிந்து விழுந்து விடுவேனோ எனும் அச்சம் மேலிடுகிறது. இவ்வளவு அதிகப் பேரானந்தத்தை என்னால் சமாளிக்க முடியாது. என் இதயம், மனம் சிறியவை, இந்த ஆனந்தப் பெருவெள்ளத்தை வைத்திருக்க முடியாது. என்னைக் காப்பாற்றுங்கள்! நான் இந்த வெள்ளப் பெருக்கில் மிதந்து போகிறேன், எல்லைத் தடுப்புகள் உடைந்து போயின. இந்த வெள்ளப் பெருக்கில் மிதந்து போனால் நான் திரும்பி வர மாட்டேன்,....''

கட்டுப்பாடு தகர்ந்து போய் விடுமோ என்கிற பயம். 'தான்', 'தனது' எனும் சுயஉணர்வு (அகங்காரம்) துன்புத்துடன் கூடி வாழ்கிறது. ஏனெனில் துன்பநிலையில் கட்டுப்பாட்டை இழப்பதில்லை. துக்கத்தில் நீ எவ்வளவுதான் அழுதாலும் உனக்கு நீ எசமானன். ஆனந்த பரவசத்தில் கட்டுப்பாடு தொலைகிறது, எல்லையைக் கடக்கிறது ஆனந்தம். துக்கத்தில் அப்படி ஏற்படுவதில்லை. நரகத்திலும் எல்லை உடைகிறதில்லை. நீ நரகத்தில் கிடக்கும் போது உனக்குள்

வலியவனாக இருப்பாய். எல்லை உடைபடுவது சுவர்க்கத்தில். அங்கு சுயக்கட்டுப்பாடு விலகி விடுகிறது. கட்டுப்பாட்டை இழக்கும்போது அகங்காரமும் (சுய உணர்வு) தொலைந்து போகும். மேலும் புத்தியின் பிடிப்பு அகன்று விடுகிறது. தர்க்கிக்கும் (வாத விவாத) விசாரணை வலையும் விலகி விடுகிறது.

இதுதான் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. பயப்பட வேண்டாம். நீர்ப் பெருக்கில் இறங்கும் தருணம் நெருங்குகிறது. பித்தனாகிய பிறகு வெள்ளத்துள் கால் பதிக்கலாம். பித்தனாகாமல் அது சாத்தியமில்லை.

**ஓர் இசைவுக்கருத்தைத் தேடிக் கொண்டிருக்கிறேன்-**
**உதடுகளில் ஒலிக்காதது**
**ரத்த நாளங்களில் துள்ளி எழுகிறது**
**தீக்குழம்பாய் கொதிக்கிறது-**
**கரைந்து வழிந்துபோக,**
**ஒரு தீயைத் தேடிக் கொண்டிருக்கிறேன்**
**உரோமக்கால்கள் விதிர்க்க வேண்டும்**
**நான் சிதைந்து சிதறிப் போக வேண்டும்**
**என் சிதறல்களைச் சேர்த்து வலை பின்ன**
**எவனாவது முனைய வேண்டும், இதனால்**
**நான் ஒளி ஊடுருவியாக மாறவேண்டும்;**
**ஒரு நறுமணத்தைத் தேடுகிறேன்**
**நான் இலேசாகி காற்றில் மிதக்க வேண்டும்**
**இளந்தூறல் திவலைகளில் நனைந்து நடுக்க வேண்டும்**
**மாலை மயங்கி இரவு இருளில் வானில்**
**ஒளிவீசிப் பளபளக்க ஆசைப்படுகிறேன்**
**ஓர் அடர்- ஒளிர் வண்ணத்தைத் தேடுகிறேன்.**

ஓம்பிரகாஷ்! அதே அடர்- ஒளிர் வண்ணத்தை உனக்குக் கொடுத்திருக்கிறேன். இந்தக் காவி ஆடை அதே வண்ணத்தில் உள்ளது. மிதந்து போ! நீரோட்டத்துடன் கலந்து விரைந்து போ! எல்லைகளைத் தகர்த்துச் செல்! புத்தியைக் கடந்து போ! கட்டுப்பாட்டை ஒதுக்கிவிடு. கட்டுப்பாடு என்பது செயலாளன். உண்மையான செயலாளன் பரமாத்மா ஒருவனே. நீ பரமாத்மாவோடு போட்டி போடாதே. பழிவாங்க முற்படாதே. போராடாதே. அடிபணிந்து ஆத்ம சமர்ப்பணம் செய்துவிடு. பரமாத்மாவின் வெள்ளப் பெருக்கில்

மிதந்து போ! மிதப்பாய், மூழ்குபவர்கள்தான் மிதப்பார்கள். முதலில் மிதக்க முற்படுபவர் மூழ்கிப் போவார்கள்.

**இரண்டாவது கேள்வி:**

**எப்போதுமே ஆய்வாளர்களின்- தேடிப் போகிறவர்களின் கண்ணோட்டம் இப்படித்தான் இருந்திருக்கிறது - 'பரமாத்ம சித்தி சாத்யமில்லாதது.' ஆனால் உங்களைப் போன்ற ஞானசித்தி பெற்ற பெரியோர்கள் எப்போதும் இந்த விஷயத்தில் தீர்மானமாக வலி யுறுத்தி வருகிறார்கள்- 'பரமாத்ம சித்தி இப்போதே, இங்கேயே நிகழக்கூடியது, சாத்தியமானது.' இதையே அடிக்கடி, தொடர்ந்து கூறுவது ஒரு சூளுரையா? முயற்சிக்கும் வழி முறையா? அல்லது ஓர் உபாயமா (தந்திரம்)?**

இதுதான் சத்தியம். வழிமுறையோ (விதி), உபாயமோ இல்லை, நீ அப்படிக் கேட்பது தப்பித்துக் கொள்ளும் முறை அல்லது உபாயம். 'பரமாத்மா இப்போதே, இங்கேயே கிட்டுவார்' என்பதை எம் மனது ஏற்கவில்லை. ஏன்? இப்போதே, இங்கேயே கிட்டுவார் என்றால் கிட்டவில்லையே. காரணம்? மனக்கலக்கம் ஏற்படுகிறது. கிடைப்பார், ஆனால் கிடைக்கவில்ல்ல. இதை எப்படிப் புரியவைப்பது? சங்கடமான சிக்கல் இது. இந்தச் சிக்கலை விடுவிக்க வேண்டி நீ கூறுவாய், "பரமாத்மா கிட்டுவார், ஆனால் அதற்குத் தகுதி வேண்டும்." என்று.

புத்தி வழிகாட்டுகிறது, சிக்கலை விடுவிக்கிறது, "போதனை மூலம், வழிதேட வேண்டும். தகுதியைத் தேடிக் கொள்ள வேண்டும், பரிசுத்தமாக வேண்டும். அப்போதுதான் இலட்சியம் சித்திக்கும்." அஷ்டாவக்கிரர் 'பரமாத்மா இங்கே இப்போதே கிட்டுவார்' எனக்கூறுவதில் ஒரு காரணம் இருக்கிறது! நீ தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும், ஈடுபாட்டுடன் செய்ய வேண்டும் என்பதுதான் அது. ஈடுபாட்டிற்கும் முன்முயற்சி அவசியம்.

மனது மிக்க திறமைசாலி.

அஷ்டாவக்கிரரின் அறிவுரை தெளிவானது, நேர்மையானது. 'பரமாத்மா இங்கே இப்போதே கிட்டுவார்.' பரமாத்மா சாதனைச் செயல் இல்லை. பரமாத்மா உன் சுவபாவம்- இயல்பு. நேர்மையில் தீவிரம் தேவை. 'நீ பரமாத்மா' இனி 'கிட்டுவார்' எனக் கூறுவது தவறு; 'கிடைத்திருக்கிறார். எனப் பொருள் கொள்ள வேண்டும். அகக் கண்களைத் திறந்து பார்! 'பரமாத்மா கிட்டுவார்' எனும் மொழி சரியில்லை. இதனால் 'நீ வேறு, பரமாத்மா வேறு' எனப் பொருள் தொனிக்கிறது. நீ தேடுபவன், பரமாத்மா தேடப்படும் இலக்கு- இலட்சியம். நீ யாத்திரிகன், பரமாத்மா சேருமிடம்- இலக்கு. 'இங்கே இப்போதே கிட்டுவார்' என்பதன் கருத்து, 'எவரை நாடித் தேடுகிறயோ அவர் நீதான்!' என அறிந்து கொள். உன்னை நீ அறிந்து கொள். கண்கள்ள விழித்துப் பார்! கண்களை மூடிக் கொண்டும் பார். பார்ப்பது முக்கியம். பார்வைதான் தேவை, மற்ற அருகதை தேவை இல்லை.

இங்கு அருகதை (தகுதி)யின் பொருள் பரமாத்மாவும் வியாபாரச் சரக்கு என்பதாகும். நீ அங்காடி வீதிக்குப் போகிறாய், பல பெருங்கடைகள், ஒரு பண்டம் ஆயிரம் ரூபாய், மற்றொன்று இலட்சம் ரூபாய், வேறொன்று பத்து இலட்சம். ஒவ்வொரு பொருளுக்கும் விலை நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஆக, அருகதை- தகுதி என்பதன் பொருள், பரமாத்மாவிற்கும் விலை மதிப்பு உண்டு. தகுதியுள்ளவன் விலையைக் கொடுத்து அதற்கான பொருளை வாங்குவான். நீ பரமாத்மாவை கடைத்தெருப் பண்டமாக்க விரும்புகிறாய். தியாகம் செய், தவம் செய், பரமாத்மா கிட்டுவார். இதுதான் அவருக்குள்ள விலை. பரமாத்மாவைப் பெற அந்த விலையைக் கொடுக்க வேண்டும். இனாமாகக் கிடைக்காது. நீ பரமாத்மாவை இழுத்து வந்து கடையில் விற்பனைக்கு வைத்திருக்கிறாய். பெட்டகத்துள் மூடி வைத்திருக்கிறாய். விலை நிர்ணயித்திருக்கிறாய், கூடவே நீ கூறுகிறாய், "உண்ணாவிரதம் இரு! தியானம் செய்! தவம் செய்! வெயிலில் காய்ந்திரு! குளிரில் நடுங்கு! எல்லாவற்றையும் சகித்துக் கொள்! பரமாத்மா கிட்டுவார்.

இப்படியாக நீ என்னவெல்லாம் செய்து கொண்டிருக்கிறாய்- என்பதை யோசித்தாயா? நீ ஏதேதோ செய்ததால் தான் பரமாத்மா கிடைக்க வாய்ப்பு இருப்பதாகச் சொல்லுகிறாய். நீ என்ன செய்தாலும் அது உனது செயல்தான். உனது செயல் உன்னைவிட மேலானது அல்ல. உன் தபஸ் உனக்கு உட்பட்டது. அது உன்னைப் போலவே

தாழ்ந்ததாய், களங்கமுள்ளதாய்தான் இருக்கும். உன் தவம் உன்னைவிட உயர்ந்ததல்ல. தவசித்தியால் கிடைப்பதற்கும் எல்லை இருக்கும். அளவு இருக்கும். எல்லை- அளவுக்கு உட்பட்டதால் கிடைப்பதும் அளவோடு இருக்கும். எல்லை இல்லாது அபாரமாகக் கிடைக்காது. தவம் புரிவதால் கிட்டுவது உன் மனோபாவத்தைக் கொண்டதாக இருக்கும். பரமாத்மாவாக இராது.

"பரமாத்மா உள்ளார்" என்று அஷ்டாவக்கிரர் கூறுகிறார், பரமாத்மா உன் உள்ளத்துள்- இதயத்துள் உயிர்த்துடிப்பாக உள்ளார், உயிர்மூச்சாக சுவாச கதியில் இயங்குகிறார். அவர்தான் பிறந்தார். அவர் பிரிந்து போவார். அவர்தான் காலம் காலமாக எண்ணற்ற உருவங்களில் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறார் - ஓரிடத்தில் மரமாக, மற்றோரிடத்தில் பறவையாக, சில இடங்களில் மனிதராக.

பரமாத்மா உள்ளார்! அவரைத் தவிர வேறேதும் இல்லை. இந்த சத்தியத்தின் நிரந்தர நினைவு, உணர்வு...

**நா**ன் கேட்ட கதை இது. ஒரு பேரரசன் மகனிடம் கோபம் கொண்டான், நாடுகடத்தி விட்டான். சம்ராட்டின் புத்திரன், எந்த வேலையும் செய்து பழகாதவன், எதுவும் தெரியாதவன். பிச்சை எடுத்துப் பிழைத்தாக வேண்டும். வேறு என்ன செய்வது, சம்ராட் சம்ராட்டாக இல்லாது போனால் பிச்சை எடுப்பதைத் தவிர வேறு வழி இல்லை.

இராஜகுமாரன் பிச்சை எடுக்கலானான். இருபது வருசங்கள் கடந்தன. இவ்வளவு காலம் பிச்சை எடுத்து வாழ்ந்தவன் தன்னை (முன்னாள்) சம்ராட் என நினைப்பு எழ இயலாது. நினைவு வந்தாலும் மிக்க வேதனை தரும். பிறகு பிச்சை எடுப்பதும் சங்கடமாகும். மறந்து போவது நல்லது. அவன் மறந்து விட்டான். இல்லையென்றால் எப்படி பிச்சை எடுப்பான்? சம்ராட், பிச்சைக்காரன்! தெருத்தெருவாக வீடுவீடாக கப்பரை ஏந்தி எப்படி யாசிப்பான்? உணவகம், சிற்றுண்டிக்கடை எதிரே நின்று எப்படிப் பிச்சை கேட்பான்? எச்சில் பண்டமாவது கிட்டாதா என்று ஏங்குவான். சம்ராட் நினைவோடு இதெல்லாம் நடவாது. அதை மறந்து விட வேண்டும். நினைவிலிருந்து அகற்றிவிட வேண்டும்.

இதெல்லாம் முடிந்தது. அந்த அத்தியாயம் நிறைவுற்றது. கனவு கண்டிருப்பான்; எங்காவது கதை கேட்டோ, படித்தோ இருப்பான். திரையில் படம் பார்த்திருப்பான். சரி, இதனாலெல்லாம் என்ன ஆகிவிடப் போகிறது? சுயநினைவு பற்றியதால் என்ன இலாபம்? தொடர்பே வேண்டாம்.

இருபது வருஷங்களுக்குப் பிறகு சம்ராட் கிழவனாகி விட்டான். கிழத்தந்தை பயந்து போனான். ஒரே மகன், அவனுக்கு இந்தக் கதியா? மனம் பதறியது. இப்பவும் அவன் ஆட்சியாளன். மந்திரி பிரதானிகளை அழைத்து மகனைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்துவர ஆணையிட்டான். "மகனை நான் மன்னித்து விட்டேன்" என்று அவனிடம் சொல்லுங்கள். நான் சாகக் கிடக்கிறேன், என் மன்னிப்புக்கும் மன்னிக்காததற்கும் மதிப்பில்லை. செத்துக் கொண்டிருக்கிறேன். இந்த ராச்சியத்தை யார் ஆட்சி புரிவது? மாற்றார். மற்றவர் கையில் இது போவதை விட, என் ரத்தத்தின் ரத்தம்- மகன் கைக்குப் போவதுதான் நியாயம். நல்லது- கெட்டது எப்படியானாலும் சரி, என் மகனை இங்கு அழைத்து வாருங்கள்!"

ஓர் அமைச்சர் தேடிச் சென்றபோது, பெரிய ஹோட்டல் எதிரே அரசகுமாரன் பிச்சை எடுப்பதைக் கண்டார். உடைந்த கப்பரை, காலணி இல்லாத வெறும் பாதங்கள். வெயில் தகிக்கிறது. அனல்காற்று வீசுகிறது. கால்களில் எரிச்சல் தாங்க முடியவில்லை. "ஐயா! செருப்பு வாங்க காசு போடுங்க! போடுங்க!" என யாசித்துக் கொண்டிருந்தான். கப்பரையில் சில்லறைகள் விழுந்திருந்தன.

அரண்மனை ரதம் அவனெதிரே நின்றது. அமைச்சர் இறங்கி வந்தார். அவன் காலடியில் தலை வணங்கினார். வருங்கால சம்ராட்! மறுகணமே அது நிகழ்ந்தது. இருபது வருடங்களாக மறந்திருந்த உண்மை 'நான் சம்ராட்டின் மகன், சம்ராட்டாக வேண்டியவன்' எனும் நினைவு அக்கணத்தில் மனத்துள் எழுந்தது. அவன் உட்கார்ந்து யோசிக்கவில்லை, தவயோகம் அநுட்டிக்கவில்லை, தியானத்தில் ஆழவில்லை. 'நான் யார்? என்ன செய்து கொண்டிருக்கிறேன்? என்ன செய்ய வேண்டும்?...' எனும் சிந்தனையும் மேலோங்கவில்லை. அந்த ஒரு கணத்தில் மாற்றம் ஏற்பட்டுவிட்டது! அவனே மாறிவிட்டான். இதுகாறும் ஏழை, ஏதலன், பிச்சைக்காரன். அரை நிர்வாணம்,

கால்களுக்குச் செருப்பில்லை. கையிலிருந்த உடைந்த கொப்பரையை வீசி எறிந்தான். மந்திரி பிரதானிகளிடம் சொன்னான், "கிளம்புங்கள்! எனக்கு மங்களஸ்னானம் செய்துவைக்க, புத்தாடைகள், அணிமணிகள் அணிவிக்க உடனே ஏற்பாடு செய்யுங்கள்" கூறிவிட்டு, அவன் ரதத்தில் அமர்ந்து கொண்டான். அப்போது அவன் முகமலர்ச்சி, கண்களில் பொலிவு பிரமிக்க வைத்தது. அவன் பழைய பிச்சைக்காரத் தோற்றத்தில்தான் இருந்நதான். ஆனால் அவனது முகத்தில் தனிசோபை, பெருமிதம். சுற்றிலும் ஒளிவட்டம். சம்ராட்டாகி விட்டான்!.... தந்தை அழைத்திருக்கிறார்; பழைய நிலை திரும்புகிறது.

இதே போலத்தான் உன் நிலையும்.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "இங்கேயே இப்போதே...." என்றால், அதன் கருத்து இதுதான். 'எத்தனை காலம் கடந்தாலும், அது இருபது வருடமோ, பிறவிகளோ கடக்கட்டும், நாடு கடத்தப்படட்டும், பிசையெடுத்துப் பிழைக்கட்டும், முந்தைய நிலையை முற்றிலும் மறந்தாலும் சரி, நினைவை நிரந்தரமாய் உறங்க வைத்துவிட்டாலும் சரி, (மறக்காவிட்டால் பிச்சை எடுக்க முடியாது). தெருத்தெருவாய், வீடுவீடாய் பிச்சைக் கப்பரையை ஏந்தி யாசித்திருந்தாலும் சரி,...' அஷ்டாவக்கிரர் அறிவுறுத்துகிறார். "அழைப்பு வந்துவிட்டது. விழித்தெழு! நீ பிச்சைக்காரன் இல்லை, சம்ராட், பேரரசன்!"

சரியாகச் செவிமடுத்திருந்தால், அப்போதே அது நிகழ்ந்து விடும். இதுதான் அஷ்டாவக்ர கீதையின் மகத்துவம், மகிமை, பெருமை. ஏதாவது செய் என வற்புறுத்தவில்லை. சரியாகச் செவி கொடுத்துக் கேட்டுக் கொள்! சத்தியத்தை உன் இதயத்துள் புக வை! நீ தடுக்காதே. ஏற்பவனாக. நுகர்பவனாக இரு. கவனமாய் கேட்டுக் கொள், போதும். அம்புபோல் உன் இதயத்தைத் தைக்கும், உட்புகும். இது போதும், ஜன்ம- ஜன்மாந்தரங்களின் மறதி தகர்ந்து போகும், சுய நினைவு திரும்பும். 'நீ பரமாத்மா' என்பதை உணர்வாய். இதனால்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "இங்கேயே இப்போதே..."

நீ தந்திர உபாயங்களைத் தேடாதே. நீ சொல்ல வேண்டும்; சொல்லுகிறாய், "இதுதான் விதிமுறை. உபாயம், உதவிகரம். இதனால் தீவிரமாக, விரைவாகச் செயல் புரிவாய்!"

சுவாமி யோக சின்மயர் வினவினார். சின்மயரின் புத்தியில் செயல், முயற்சி, தவம் அதிகம். யோகிகளுக்கு உள்ள தேர்ந்த அநுபவம் கொண்டவர்.

இந்த அஷ்டாவக்கிரர் வாக்குகள் சாதாரண யோகியருக்கு அல்ல. அசாதாரணமான, மகாபிராக்ஞரான (பேரறிவாளர்) சாதகர்களுக்கு உரியவை. கேட்டதும் விழிப்புறும் சாதகர்களுக்கு. சின்மயயோகி ஓரளவு ஹடயோகம் பயின்றவர். தீவிரமாக ஊக்குவித்தால் கொஞ்சம் இயங்கலாம். சாட்டையைக் கண்டதும், அதன் நிழலைக் கண்டதும் ஓடத்துவங்கும் குதிரை இல்லை.

சிரிக்கத் தோன்றுகிறதா? வேண்டாம். சின்மயர் போன்றவர்கள் பெரும்பாலோர். நீ சிரித்து, நினைத்துக் கொள்ள வேண்டும். 'நான் சின்மயரைவிட மாறுபட்டவன்!' இதை உணர்ந்து சிரித்துக் கொள். சின்மயராவது கொஞ்சம் தைரியமாகக் கேள்வி கேட்டார். நீ அதுவும் கேட்கவில்லை. இருவருக்கும் இதுதான் வேறுபாடு. நீயும் ஏறத்தாழ சின்மயர் வரிசையில் இருப்பவன்தான்.

இந்த அஷ்டாவக்கிர கீதைச் சொற்பொழிவை இறுதி வரை நீ கேட்டிருக்கிறாய். இது முடிந்த பிறகும் நீ "பரமாத்மா' ஆகவில்லை, என்றால், நீ பழைய இடத்தில் தான் இருக்கிறாய். எந்த முன்னேற்றமும் இல்லை. நீ இப்பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது விழிப்புற்றால், பரமாத்ம நிலையை எட்டி விட்டால், சவுக்கின் நிழலைக் கண்டதும் ஓடத்துவங்கும் நல்ல குதிரைக்கு ஒப்பானவன் நீ!

'எப்போதுமே ஆய்வாளர்களின் கண்ணோட்டம் இது தான்- 'பரமாத்ம சித்தி என்பது நிகழமுடியாத நிகழ்ச்சி, சாத்யமற்ற காரியம்.'

ஆய்வாளன் தேடலில் ஈடுபடுபவன், தொடக்கத்திலிருந்தே கிறுக்கன். நாம் குறிப்பிடும் ஆய்வாளன் பரமாத்மாவைத் தேடுபவன். அவனது கருத்து, 'பரமாத்மாவை தொலைத்து விட்டேன், இப்போது தேடிக் கொண்டிருக்கிறேன், தேடிப் பெறவேண்டும்' பரமாத்மாவைத் தொலைத்து விட்டேன் என்பதை ஒப்புக் கொள்ளுகிறான். இப்படி ஒரு கருத்தா? பரமாத்மாவை எப்படித் தொலைக்க முடியும்?

என்னிடம் பலர் வருகிறார்கள், அவர்கள் என்னிடம் "பரமாத்மாவைத் தேட வேண்டும்" என்கிறார்கள். நானும் சொல்லி

வைக்கிறேன். "அப்படியே செய்! தேடிப் பார்! ஆனால் நீ எங்கே, எப்போது தொலைத்தாய்?" அவர்களது பதில், "இது பற்றி எமக்கு ஏதும் தெரியாது." சரி, நீ தொலைத்தாயா இல்லையா என்பதை முதலில் கண்டுபிடி! ஒருக்கால், தொலைக்காமலே இருந்தா?....

சில சமயம் இப்படி நிகழ்வதுண்டு- பார்வைக் கண்ணாடி மூக்கு மேலே இருக்கும், அதன் வழியே பார்த்தபடியே கண்ணாடியைத் தேடுவதுண்டு. கண்ணாடி போல் பரமாத்மா உன்னிடமே இருந்து, நீ அதைத் தேடுகிறாயோ? அப்படித்தான். தேடுபவன் (ஆய்வாளன்) அடிப்படையில், விபரீத புத்தி கொண்ட கிறுக்கன். ஒரு விஷயத்தை ஒப்புக் கொண்டிருக்கிறான்- "நான் பரமாத்மாவைத் தொலைத்து விட்டேன். அல்லது, பரமாத்மாவை இதுவரை நான் தேடவில்லை, பெறவில்லை. அவர் எங்கோ வெகு தொலைவில் இருக்கிறார், அவரைத் தேடிப் பெறவேண்டும்."

தேடுவதால் பரமாத்மா கிட்டிவிடுவதில்லை, தேடித் தேடி அலைவதால் கிடைப்பது இதுதான்- தேடுவதால் இது சிட்டுவதில்லை. சோர்ந்து போய் தேடுதலைக் கைவிட்ட பிறகு பரமாத்மா கிட்டுகிறார்.

**கௌ**தம புத்தர் ஆறு ஆண்டுகள் தேடினார். தீவிரமாகத் தேடினார். அவரைவிடச் சிறந்த ஆய்வாளர் எங்கு கிடைப்பார்? எங்கெல்லாம் ஞானபோதம் கிட்டும் என்று கேள்விப்பட்டாரோ, அங்கெல்லாம் போய்ப் பார்த்தார். பல குருமார்களை அடி பணிந்தார். குருமார்கள் கூறிய படியெல்லாம் செய்தார். வழிகாட்டிய குருமார்கள் சோர்ந்து போனார்கள். உபதேசத்தை மீறும் சீடர்களால் குருமார்கள் எப்போதும் சோர்ந்து விடுவதில்லை. குருமார்களுக்கு சமாதானம் கூற வாய்ப்பு இருந்து கொண்டிருக்கும். "நான் சொன்னபடி நீ செய்யவில்லை. என் ஆணையை ஏற்கவில்லை. அதனால் உனக்கு சித்தி கிட்டவில்லை. நான் என்ன செய்ய முடியும்?" குருவிற்கு இது சௌகரியமான பதில். இதைச் சொல்லிச் சொல்லியே காலம் கடத்தலாம். "நான் சொன்னபடி நீ செய்திருந்தால் உனக்கு சித்தி (பரமாத்மா) கிட்டியிருக்கும்" என நீக்குப்போக்காகப் பதில் சொல்லிக் கொண்டிருக்கலாம்.

ஆனால் புத்தர் விஷயத்தில் இது எடுபடவில்லை. அதனால் தான் குருமார்கள் சோர்ந்து போனார்கள். குரு சொன்னபடியே - மேலும்

சிறப்பாகவே புத்தர் செய்தார். குரு தோற்றுப்போய், "அன்பனே! நீ வேறு எவரிடமாவது போய்ச் சேர், என்னை விட்டுவிடு!" எனச் சரிந்து போனார்.

"என் இலட்சியம் என்ன ஆவது?" - புத்தர்

"என்னிடம் உள்ளது இவ்வளவுதான். ஆளை 'விடு!" - குரு.

"இதன்மூலம் எனக்கு ஏதும் கிட்டவில்லையே?"

"எனக்கும் ஏதும் கிட்டி விடவில்லையே! உன்னிடம் மறைப்பானேன்? என் தகுதி திறன் இத்தான். உனக்கு இது உதவாது. வேறு பெரிய ஞானகுருவை நாடு!" குரு புத்தரை அனுப்பி விடுவார்.

நேர்மையான, தீவிரமான ஆய்வாளனை வழிகாட்டியாக வரும் ஆசான் ஏமாற்ற முடியாது. பல இடங்களிலும் சென்று, தேடி, ஆய்ந்த பின் புத்தர் உணர்ந்தார், 'இப்படித் தேடித் திரிவதால் சித்தி கிட்டாது? உலகமே மாயை, வீண். ஆன்மீகமும் வீண்தான். சுகபோகமும் மாயை, வீண். அதனால்தான் அரச மாளிகையைத் துறந்து வெளியேறினேன். யோக வாழ்வும் வீண்தான். போகம், யோகம் இரண்டிலும் ஏதும் இல்லை. இனி என்ன செய்வது? செய்ய என்ன இருக்கிறது? செயல்படுவதற்கும் வசதி வாய்ப்பு இல்லை;...'

இந்த சூட்சுமத்தை சரியாக அறிந்து கொள். போகம், யோகம் எதுவும் எஞ்சவில்லை, இகம்- பரம் (பூவுலகு, சுவர்க்கம்) எஞ்சவில்லை. செயலாற்ற, செயலனாக இடமே இல்லை. ஏதாவது செய்ய வேண்டியது இருந்தால்தானே 'கர்த்தா' (செய்பவன்) தேவை? எதுவும் செய்ய வாய்ப்பு இல்லை. அன்று இரவே அந்நிகழ்வு சம்பவித்தது. புத்தர் அன்று மாலைப்போதில் போதி விருட்சத்தின் அடியில் அமர்ந்த போது செய்வதற்கு எதுவும் இல்லாத நிலைமை. மன உளைச்சலில் கலங்கினார். உலகியலைத் துறந்து யோக வாழ்வை மேற்கொண்டார். பிறகு ஆன்மீகத்தில் ஈடுபட்டார். ஏதாவது செய்ய வேண்டுமே; செய்ய வேண்டியது இருந்தது. உள்ளம் கலங்கியது. உள்ளத்திற்கு உறைய இடமில்லை. மனப்பறவை சிறகடித்துப் பறக்கக் காத்திருந்தது. எங்கு செல்ல? இலக்கு இடம் தெரியவில்லை. சுய ஆளுமைக்கு (அகங்காரம்) செயல்திறன் தேவை; கடமை வேண்டும். செயலாற்றத் தானே அகங்காரம் காத்திருக்கிறது. எதுவுமே செய்வதற்கு இல்லை.

சிறிது நிதானித்துச் சிந்தித்துப் பார்! ஆழ்ந்த பற்றின்மை, விரக்தி; இதைத்தான் அஷ்டாவக்கிரர் 'வைராக்யம்' என்கிறார். புத்தருக்கு இது தோன்றியது.

யோகி வைராக்கியம் உள்ளவன் இல்லை. போகியும் அப்படித்தான், யோகி புதிய போக அநுபவத்தைத் தேடுகிறான், அது ஆன்மிக போகாநுபவம். ஆதலால் அவன் விரக்தி கொண்டவன் அல்லன். அநுபவ ஆசை இருக்கிறது. பௌதிக வாழ்வில் கிடைக்காத அநுபவத்தை பரமாத்மாவிடம் தேடுகிறான், நாடுகிறான். ஆக, தேடல்-நாடல் தொடர்கிறது. இங்கே கிடைக்காவிட்டால், அங்கே; புறத்தில் கிட்டாவிடில் அகத்தே எனத் தேடுகிறான். ஆக, தேடல் தொடர்கிறது.

போகி, யோகி இருவருமே வைராகிகள் (பற்றில்லாதவர்) அல்லர். அவர்கள் நாடும், தேடும் ஆசைகள் வெவ்வேறு. போகி புறத்தில் தேடுகிறான், யோகி அகத்தினுள் தேடுகிறான். தேடி அலைவது இருவருக்கும் உண்டு.

அன்று இரவு புத்தருக்கு மேலும் பயணிக்க இலக்கு இல்லை- உள்ளேயும் வெளியேயும். அன்றைய இரவைக் கற்பனை செய்து பார்! அந்த இரவு எப்படி இருந்திருக்கும் என்று யோசித்துப் பார்! சிந்தனையை எழுப்பு. அன்றைய தினம் முதல் முறையாக ஓய்வு கிடைத்தது. இதை அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "எவன் தன் உள்ளத்துள் ஒடுங்கி ஓய்வு பெறுகிறானோ, அவனுக்கு சத்தியம் கிட்டி விடுகிறது." அன்றைய தினம் புத்தருக்கு உளமார்ந்த ஓய்வு கிட்டியது.

செய்ய வேண்டிய பணி மீதம் இருக்கும் வரை உழைப்பு தொடரும், பதைப்பு இருக்கும். இப்போது பதைபதைப்பு இருந்து என்ன பலன்? உடலும் உள்ளமும் தளர்ந்து சோர்ந்து விட்டன. புத்தர் போதி மரத்தடியில் கிடந்தார், உறங்கி விட்டார். காலையில் கண் விழித்தபோது விழிப்புணர்வு ஏற்பட்டுவிட்டது. யுகம்யுகமாக மூடிக்கிடந்த கண்கள் முதல் முறை மலர்ந்தவை போல் இருந்தது அந்தக் கண்விழிப்பு. விடிவெள்ளி மறையும் நேரம். இரவின் கடைசித் தாரகை அஸ்தமனமாவதை அவர் கண்டார். அதே சமயம் உள்ளத்துள் புதிய விடிவெள்ளி உதயமாவதையும் உணர்ந்தார். உள்ளும் புறமும் எதுவும் இல்லை. ஆழ்ந்த அமைதி- பரமசாந்தி. பாரளாவிய சூனியம்-வான் வெளியாக வியாபித்தது.

புத்தர் ஏழு நாட்கள் அந்நிலையிலேயே அமர்ந்திருந்தாராம்- சிலைபோல. அசைவு, மாற்றம் இல்லை. தேவர்கள் பயந்து போனார்களாம். வானுலகிலிருந்து தேவர்கள், தேவதைகள் இறங்கி வந்தார்கள். பிரும்மா வந்தார். புத்தர் பாதங்களில் பணிந்து விண்ணப்பித்தார். "உபதேசித்து அருளுங்கள்."

இத்தகைய அரிய- அதிசய நிகழ்ச்சி நூற்றாண்டுகளுக்கு ஒருமுறை தான் நிகழும். மிக அரிதாகவே, சோதனைகளுக்கிடையே நிகழும்.

"புத்ததேவா! ஏதாவது சொல்லுங்களேன். உங்கள் அருளுரையைக் கேட்க ஆவலுடன் காத்திருக்கிறோம். என்ன நிகழ்ந்தது உங்களுக்கு?..."

சனாதன இந்துக்கள் இக்கதைக்காகக் கோபப்படுகிறார்கள். 'பிரும்மதேவரைப் பூவுலகில் இறக்கி, புத்தர் கால்களில் விழ வைத்திருக்கிறார்களே!' என்கிற கோபம். அது நல்ல நேரிய கதை. தேவர்கள் சொர்க்கபுரியில் வசித்தாலும் ஆசைபாசம் இல்லாதவர்களா? அன்று பூவுலகில் ஒருமா மனிதர் ஆசைபாசங்களைக் கடந்து வெளியேறியிருக்கிறார்!

புத்தருக்கு மேற்பட்டவர் எவரும் இல்லை. புத்தத்துவம் (புத்தரின் தன்மை- ஆளுமை) இறுதியான பரிணாமம். தேவர்கள் புத்தருக்குக் கீழே உள்ளவர்கள். அந்நிலையிலும் அவர்களுக்கு சுவர்க்க சுகத்திலும் காமபோகத்தில் ஆசை உள்ளது. இதனால்தான் கதைகள் உருவாயின.

தேவேந்திரனின் அரியணை ஆட்டம் கண்டு விடுகிறது. எப்போது? அவனுக்குப் போட்டியாக எவராவது மேலோங்கினால்; ரிஷி, முனிவர் எவராது கடுந்தவம் புரியத் துவங்கினால் இந்திரன் பயப்படுகிறான். அவனுடைய பதவிப்பீடம் ஆடுகிறது. இந்த நிலைதான் பாரத தேசத்தின் ராஜதானியிலும். இன்றும். இந்திரனாகட்டும், இந்திராவாகட்டும்- ஒரே கதைதான். அதிக வித்தியாசம் இல்லை. எவராவது மேலோங்கி வந்தால் போதும், போட்டி, பயம், கலக்கம்!

புத்தர் எதுவும் செய்யாமல் (செயலைக் கடந்து) புத்தத்துவ நிலையைப் பெற்றார். புத்தர் வாழ்க்கையில் நிகழ்ந்ததுதான்

அஷ்டாவக்கிரரின் வாழ்க்கையிலும் நிகழ்ந்திருக்கும். இது சார்ந்த கதை (சரித்திரம்) நம்மிடம் இல்லை. எவரும் எழுதி வைக்கவில்லை. ஆனால், நிச்சயம் நிகழ்ந்திருக்கும். அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "நீ அதிகம் அலைந்து திரிந்து தேடி விட்டாய். போதும், நிறுத்திக் கொள்! அதனால் பரமாத்மா கிட்டமாட்டார். அலைந்து திரிவதை நிறுத்து! நின்றபிறகு பரமாத்மா கிட்டுவார். நிறையத் தேடிப் பார்த்து விட்டாய், இனி தேடலை விடு! தேடினால் (ஆராய்ந்து கொண்டிருந்தால்) சத்தியம் கிட்டாது. சத்தியம் தேடுபவனிடமே மறைந்திருக்கிறது. இதை உணராமல் எங்கெல்லாமோ தேடி ஓடுகிறாயே, ஏன்?

கஸ்தூரி மான் கதைதான். அதன் நாபியிலிருந்து வெளிப்படும் கஸ்தூரிப்பை உடைபடும் போது, மான் பித்துப்பிடித்துத் தவிக்கிறது. தாறுமாறாய் ஓடுகிறது. இங்கும் அங்கும் ஓடித் தேடுகிறது. 'கமகமக்கும் கஸ்தூரி எங்கே? எங்கே?' நிலை கொள்ளாமல் ஓடிக் கொண்டிருக்கிறது. தேடல் தீவிரம். 'எங்கிருந்து வருகிறது இந்த நறுமணம்? யார் இதைக் கொண்டு வருவது? எங்கிருந்து?...' மானுக்கு வெளிப்புறத்திலிருக்கும் பொருளிலிருந்து தான் நறுமணத்தை நுகர்ந்து பழக்கம். பூவிலிருந்து சுகந்தத்தை நுகர்ந்திருக்கிறது. இப்படி வேறு வெளிப் பொருளிலிருந்து அறிந்திருக்கிறது. தன் உடலுக்குள்ளிருந்து நறுமணம் கமழ்வதை அதனால் ஊகிக்க முடியவில்லை. வெளிப்புறத்தில் தேடுகிறது, கஸ்தூரி அதன் நாபி குண்டலத்தில் (சதைப்பை) உரைந்திருக்கிறது.

பரமாத்மா உன் உள்ளே வசிக்கிறார். நீ வெளியே யோகத்திலோ, போகத்திலோ எங்கு தேடினாலும், வீண்.

பொதுவாக யோகி போகத்திலிருந்து விலக்கி அழைத்துப் போவார். அஷ்டாவக்கிரர் யோகம்- போகம் இரண்டிலிருந்தும் விலக்கி, விடுவித்து வெளியே அழைத்துப் போகிறார். அந்த வழி யோகம் கடந்தது, போகம் கடந்தது. உலகியல் ஆளுமை (அகங்காரம்) ஏற்படுவதை உணர்ந்திருப்பாய். நீ யோகியின் அகங்காரம் பார்த்திருக்கிறாயா? இல்லையா? உலகியல் வாழ்வில் கோபதாபத்தைப் பார்த்திருப்பாய். நீ துர்வாச மகரிஷி போன்றோரின் கோபத்தைப் பார்த்திருக்கிறாயா? சம்சாரி மனிதன் செருக்கு மெதப்புடன் செல்வதை, கொடிபிடித்து மிடுக்கு நடை போடுவதைப் பார்த்திருப்பாய். நீ

யோகிகளின் புதாகைகளை, யானை- குதிரைகளுடன் உலாவருவதைப் பார்த்ததுண்டா? மனிதன் தன் செல்வத்தை, பதவியைப் பிரகடனப் படுத்துகிறான். யோகிகள் தாம் பெற்ற யோக சித்தி பற்றிச் சிலாகித்துக் கொள்ளுவதைக் கேட்டதுண்டா? இதெல்லாம் உலகாயத வழக்காறுகள், தொடரும்.

யோகி யோக சாதனையிலிருந்து விலகி இருக்கும் வரை, மனிதன் 'நான்- எனது' எனும் செயலாக்க செருக்கிலிருந்து விடுபடும் வரை சத்திய தரிசனம் ஏற்படாது. பச்சோந்திபோல் உருமாறிக் கொண்டிருக்கலாம். நீ மாறவில்லை, நிறம் மாறியிருக்கிறது.

'எக்காலத்திலும் ஆய்வாளர்களுடைய நோக்குப்படி பரமாத்மாவைப் பெறுவது மிகக்கடினம், சாத்தியமற்றது.'

இது ஒருவகையில் உண்மை. நீ வேகமாய் ஓடி வருவதை, காதைப் பொத்திக் கொண்டு ஓடுவதை யார் தடுப்பது? ஏன் தடுக்க வேண்டும்? உன் விருப்பம், செய்து கொள். ஆனால் இது சலிப்பூட்டும் செயல் என்பதை உணர்வாய். இதற்கு உன் கால்களோ, காதுகளோ காரணமில்லை. தலைகீழாக நின்று சிரசாஸனம் செய்கிறாய், அந்நிலையில் சில அடிகள் நடக்கிறாய் (தலை- கைகளால்) பிறகு, இது கஷ்டமான காரியம், செய்ய இயலாது என்று எண்ணுகிறாய். இது சரியான எண்ணம்தான். இதே போலத்தான், உண்ணா நோன்பு, தீக்குண்டத்தில் இறங்குவது (தீமிதி செய்வது), தவம் கிடப்பது, பல வகையிலும் உடலை வருத்துவது- இப்படிப் பல பைத்தியக்காரச் செயல்களைச் செய்- பிறகு இறுதியாக 'பரமாத்மாவை எட்டுவது சாத்தியமற்ற செயல்' என்று சொல்லுகிறாய். நீ சரியாகத்தான் சொல்லுகிறாய்.

நீ சுலபமாகச் சென்றடையும் இடத்திற்கு, மாறுபட்டு சிரமப்பட்டு ஓடிச் சென்றடைகிறாய். அப்போது அது கஷ்டமான காரியமாகத்தான் தெரியும். நீ செல்லும் முறை தவறு.

சாத்தியமில்லாத கஷ்டமான முறையை மனிதன் ஏன் தேர்ந்தெடுக்கிறான்? சிந்திக்க வேண்டும். கால்கள் சரியாக இருக்கும் போது தலையால் நடப்பானேன்? அப்படி நடந்து பார்க்க ஆசை. அதில் மகிழ்ச்சி. உன் அகங்காரத்திற்கு உள்ள ஆசை.

முல்லா நஸருத்தீன் ஓர் ஏரியில் மீன் பிடித்துக் கொண்டிருந்தான். நானும் அருகில் நின்று பார்த்தேன். இரண்டு மணி நேரமாகியும் ஒரு மீன்கூடத் தூண்டிலில் மாட்டவில்லை. மீன்பிடிப்புப் பழக்கமில்லாதவனோ? ஏரியில் மீன்களைக் காணோம். நடுவில், மடுவில் கொஞ்சம் இருக்கலாம். தூண்டில் அதை எட்டாது. நான் கேட்டேன், "நஸருத்தீன்! இந்த ஏரியில் மீனைக் காணோமே. எத்தனை நேரம் உட்கார்ந்திருப்பாய் தூண்டில் குச்சியை நீட்டிக் கொண்டு? பக்கத்தில் வேறொரு ஏரி இருக்கிறதே. அங்கே போய் மீன் பிடிக்க லாமே? அங்கே பல பேர்கள் மீன்பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். இங்கே உன்னைத் தவிர வேறு எவரையும் காணோமே?"

நஸருத்தீன் சொன்னான், "ஐயா! அந்த ஏரியில் மீன்பிடிப்பது பெரிய அரிய செயலா? அங்கே கூட்டம் கூட்டமாக மீன்கள் மண்டிக் கிடக்கின்றன. அங்கே மீன்பிடிப்பது அசாத்திய வேலையா? இங்கே பிடிப்பதுதான் சாதிக்க வேண்டிய கடினமான வேலை."

கடினமான அசாத்தியப் பணியில் கவர்ச்சி அதிகம். அதில் சுயாபிமானம் (அகங்காரம்) வலுவடைகிறது. கடினமான- செயற்கரிய செயலைச் செய்து முடிப்பதால் நம் சுயாபிமானம் பெருமிதம் கொள்ளுகிறது. வலுவடைகிறது. எல்லாரும் எளிதாகச் செய்வதை நீயும். செய்வதில் என்ன அருமை- பெருமை? எல்லாரையும் போல் நீயும் கால்களால் நடந்தால் அதிலென்ன சிறப்பு? தலைகீழ, தலையால் நடந்து பார்! அது அசாதாரணம், தனிச்சிறப்பு.

நான் கண்டவரையில், கடின சாதனைக்கும் பரமாத்மாவிற்கும் சம்பந்தம் இல்லை. அந்த சம்பந்தம் அகங்காரத்திற்கு உள்ளது. கடினமான- அசாத்தியமான செயலைச் செய்வதில் அகங்காரத்திற்கு விருப்பு, மகிழ்வு அதிகம். எளிதான செயலை எல்லாரும் செய்து கொண்டிருக்கிறார்கள். அதிலென்ன சிறப்பு? பெருமை? நீ மற்றவரிடம் சொல்லிப் பார். "நான் கால்களால் நடக்கிறேன்" அவர்கள் சிரிப்பார்கள். "உனக்கு மூளை குழம்பி விட்டதா? எல்லாரும்தான் காலால் நடக்கிறார்கள். நீ என்ன உயர்த்தி?" என்பார்கள். ஆனால் நீ தலையால் நடந்து காட்டு. உன் படத்தைப் போட்டு பத்திரிகைகள் பெட்டிச் செய்தி வெளியிடும், புகழ்ந்து பாராட்டும். சனங்கள் உன்னைத் தேடி வருவார்கள். உன் பாதங்களில் விழுந்து வணங்குவார்கள். "உனக்கு

அபூர்வ யோக சித்தி கிட்டியிருக்கிறது. தலையால் நடக்கிறாய்!'' எனச் சிலாகித்துப் போற்றுவார்கள்.

உன் சுய ஆளுமை (அகங்காரம்) செயற்கரிய செயலைச் செய்து காட்டும் போதுதான் போற்றப்படும், பூசிக்கப்படும்.

ஹில்லெரி இமய மலையில் ஏறிச்சென்று எவரெஸ்டு சிகரத்தை அடைந்தார். உலகம் முழுவதிலும் செய்தி பரபரப்புடன் பரவியது. நீ புனா நகர்ப்புறத்திலுள்ள மலைமீது ஏறிச் சிகரத்தை எட்டு. அங்கு நிமிர்ந்து நின்று, கொடியை நாட்டு. பிறகு சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, "என்ன அநியாயம்? ஒரு பத்திரிகைக்காரனையும் காணோம்? போட்டோ கிராஃபரைக் காணோம்? ஏன் இந்த பாரபட்சம்? மலையேறி ஹில்லெரிக்கு மட்டும் கோலாகல வரவேற்பு, பாராட்டு, என்னை எவனுமே கண்டு கொள்ளவில்லையே!....? வரலாற்றில் அவருக்கு சாசுவதமான இடம், எனக்குத் தினசரிச் செய்தியில்கூட இடமில்லை! ஓரவஞ்சனை. அவர் செய்ததைத்தானே நானும் செய்தேன்? மலைச் சிகரத்தில் ஏறி நானும்தானே கொடி நாட்டினேன்?

எவரெஸ்டு சிகரத்தை ஏறிச் சென்று எட்டுவது மிகமிகக் கடினம், அசாத்தியமான காரியம். ஐம்பது- அறுபது வருடங்களாகப் பல மலையேறி வீரர்கள் முயற்சித்துத் தோற்றுப் போனார்கள். ஹில்லெரி ஒருவர்தான் நேபாளி கோர்கா துணையுடன் மலையேறி எவரெஸ்டு சிகரத்தை எட்டியிருக்கிறார். இனி பலரும் முனைவார்கள், சிலர் வெற்றி பெறுவார்கள். போகப் போக, அங்கு செல்ல மலைப்பாதை அமைக்கப்படும். பேருந்துகள் விடப்படும். மனிதனால் எட்ட முடியாமலிருந்த எவரெஸ்ட் இலகுவாய் எட்டும் இலக்காகி விடக்கூடும். ஒருவன் சாதித்தபின், தொடர்ந்து பலரும் முனைவார்கள்.

இன்று சிறிது நேரத்திற்கு முன்பு சில மங்கையர் அங்கு வந்தார்கள். கூடவே மற்றவர்களும் வரத்தானே செய்வார்கள்? வந்து சேர்ந்தார்கள். அங்கே குடியமர்ந்தார்கள். இனி ஹோட்டல்கள், அங்காடிகள், ஷாப்பிங் சென்டர்கள், பேருந்துப் போக்குவரத்து எல்லாமே வந்து சேரும். நீ அங்கு போய் ஒரு கொடியை நட்டு வை. அறிவிப்பு செய், "இங்குதான் முன்பு ஹில்லெரி வந்து கொடி நாட்டினார் முதல் முறையாக. இதை ஜனங்கள் மதிப்பதில்லை. ஏன் பாரபட்சம் காட்டுகிறார்கள்? மோசம்.''

கடினமான செயலில் அகங்காரம் மகிழ்கிறது. மனிதன் பல வேலைகளைக் கடினமாக்கி விடுகிறான். இதன் மூலம் அகங்கார மகிழ்ச்சியை ரசித்து அநுபவிக்க விரும்புகிறான். நாம் பல காரியங் களை அசாத்தியமாக மிகக்கடினமாகக் காட்டிக் கொள்ளுகிறோம். பரமாத்மாவைப் பெறுவதில் கடினம் இல்லை; அது அகங்காரத்தின் சுவை.

'பரமாத்ம சித்தி மிகவும் அசாத்தியமான நிகழ்வு' என ஆய்வாளர்கள் கருதுவது சரிதான். அந்த ஆய்வாளர்கள் அகங்காரம் கொண்டவர்கள். அவர்கள் எந்தக் காலத்தில் பரமாத்மாவை எட்டியிருக்கிறார்கள்? ஆராய்ச்சி, தேடல் நிறுத்தப்படும் போதுதான் பரமாத்மா கிட்டுகிறார். நீ எங்கும் அலைந்து திரிந்து தேடுவதில்லை. வெறுமனே உட்கார்ந்திருக்கிறாய், விசிராந்தியாக, ஓய்வாக அமர்ந்திருக்கிறாய், தேடல் பயணம் முற்றிலும் கைவிடப்பட்டது- இந்த நிலையில்தான் பரமாத்ம சித்தி கிட்டுகிறது.

பொதுவாக சனங்கள் 'பரமாத்மா கிட்டியதும் தேடல் யாத்திரையை நிறுத்தி விடலாம்,' என்று எண்ணுவார்கள்.ஆனால் எதிர்மறையான கருத்து இது. நீ தேடல் பயணத்தை நிறுத்து, உடனே பரமாத்மாவை எட்டி விடலாம். பொது சனங்கள் யோசிப்பது வழக்கம், 'உறைவிடம் கிடைத்ததும் ஓய்வு கொள்ள வேண்டும்' நிலைமை மாறானது; நீ ஓய்வெடுத்துக் கொள், உறைவிடம் தானே கிட்டும்.

ஓய்வு, தியானத்திற்கும் யோக சமாதிக்கும், சூட்சும காரணம் (சூத்திரம்), முனைப்பு- உழைப்பு அகங்காரத்தின் சூத்திரம். ஆகையால் ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். எந்த மதத்தில் பாடுபட்டு உழைக்க வேண்டிய அவசியம் விதிக்கப்பட்டுள்ளதோ, அம்மதத்தின் சாமியார்கள் அகங்காரம் (செருக்கு) அதிகம் உள்ளவராக இருப்பார்கள். சமண சாதுக்கள் அதிக அகங்காரிகள். இந்துமதச் சாமியார்கள் அந்த அளவுக்கு இல்லை. ஜைனசாது கூறுவார், "இந்துமதச் சாமியாராக ஆவது வெகு சுலபம். எவர் வேண்டுமானாலும் இலகுவாய் சாமியாராகி விடலாம்." சமணத் துறவிகளுக்கு நியம நிட்டைகள், கட்டுப்பாடுகள் அதிகம். ஒருவேளை உணவு, அதுவும் இல்லாமல் பலமுறை உபவாசம் (உண்ணா நோன்பு). மேலும் உடலை வருத்திக் கொள்ளும் பல சடங்குகள்.

ஜைனர்கள் இரு பிரிவினர் - திகம்பரர்கள் (அம்மணமாக இருப்பவர்கள்- அமணர்), சுவேதாம்பரர்கள் (வெள்ளை ஆடை அணிபவர்). அமணர்கள் கூறுவார்கள், "சுவேதாம்பரர்களாக இருப்பதில் என்ன சிறப்பு? வெள்ளைத்துணியைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். திகம்பரராக இருப்பதுதான் துறவிக்குச் சிறப்பு. இதனால்தான் அமணர்களுக்கு இருக்கும் அகங்காரம் வேறு எங்கும் எவரிடமும் காண முடியாது. உடம்பை விரதம், நோன்புகள் மூலம் மிகவும் வருத்துவார்கள். உடல் ஒடுங்க வேண்டும். எலும்புக்கூடாக மாறவேண்டும். பல கஷ்டங்களை அநுபவிக்க வேண்டும். வெப்பம், குளிர்களைச் சகித்துக் கொள்ள வேண்டும். ஆனால் அகங்காரம் மேலோங்கி இருக்கும். மலையேறி ஹில்லெரிக்கு இருந்த பெருமித மெதப்பு தலை தூக்கும்.

இந்தியாவில் ஏறத்தாழ இருபது பிரபல திகம்பர அமண முனிகள் இருப்பார்கள். சுவேதாம்பர சமண முனிவர்களோ ஏழாயிரம் பேர்கள் இருக்கிறார்கள். இந்துசமயத் துறவிகள், சாமியார்கள், மடாதிபதிகள் என ஐம்பது இலட்சம் பேர்கள் வளைய வருகிறார்கள். எனக்கு அதிகாரம் இருந்தால், உலகத்தார் சகலரையும் சன்னியாசிகளாக்கி விடுவேன். ஆதலால் நான் சன்னியாசியாக (சாது முனிவர், துறவி, சாமியார், பிக்கு முதலானோர்) இருப்பதில் கொஞ்சமும் அகங்காரம் ஏற்படுவதில்லை. ஏனென்றால், 'நீ இதைச் செய், அதைச் செய், இப்படிச் செய்!' என்று சொல்லுவதில்லை. இது மிக எளிதான விஷயம். காவி ஆடையை உடுத்திக் கொள், நீ சன்னியாசி ஆகிவிட்டாய்!

சன்னியாசம் எளிதாகி விட்டால் அகங்காரத்திற்கு மதிப்பு ஏது? கவர்ச்சி ஏது?

என்னிடம் வரும் அன்பர்கள் சிலர் கூறுகிறார்கள், "குருதேவ்! நீங்கள் பிறருக்குத் துறவறம் (சன்னியாசம்) தருகிறீர்கள். இதற்கு விசேஷமான சடங்குகளைப் பகட்டாகச் செய்ய வேண்டும்" சன்னியாசம் மேற்கொள்ள விசேஷச் சடங்குகள்! அவர்கள் சொல்லுவது சரிதான். நடைமுறையில் அப்படித்தான் இருந்து வருகிறது.

ஜைனர்கள் துறவுதீட்சை அளிப்பதைப் பார்த்திருக்கிறேன். கோலாகலக் கொண்டாட்டம். குதிரை சவாரி. பேண்டு வாத்தியக் குழு; பார்க்க, கேட்க நிரம்ப சந்தோசம். ஏதோ பெரிய விழா நடப்பது போல் இருக்கும். பேரரசு மகுடாபிஷேக வைபம் போல் இருக்கும். துறவறம் (சன்னியாசம்) மேற்கொள்ளுவதும் மகுடாபிஷேகம் போல் ஆகிவிட்டது. அன்பர்கள் ஜெயகோஷம் எழுப்புகிறார்கள். பெரிய அரிய சாதனை நிகழ்வதைப் போலக் கொண்டாடுகிறார்கள். நான் மௌனமாக, சுலபமாக உடனடியாகச் சன்னியாசம் அளித்து விடுகிறேன். தபால் மூலமாகவும் பிறர்அறியாதபடி சன்னியாசம் அளிக்கிறேன். என்னிடம் சன்னியாசம் பெறுபவர் பிரபலமானவரா, சாமானியரா, சான்றோரா, பாமரரா- எனக்குத் தெரியாது; அவர்களுக்கும் தெரியாது. நல்லதுதான்!



என் கருத்துப்படி துறவறம் எளிதாக இருக்க வேண்டும்; பரமாத்மா ஒய்ந்திருக்கும்போது கிடைக்கிறார், அகங்காரத்தில் இல்லை. கடமை, சடங்கு, ஆய்வு, தேடல் எதுவும் இல்லை. பரமாத்மா கிட்டியிருக்கிறார். நீ விசிராந்தியாக, இயல்பாக இரு. அமைதியாக இரு. கொஞ்சம் பொறுத்திரு. திடீரென 'அவர்' எப்போதும் உன்னோடு, உன்னிடம் இருந்ததை உணர்வாய்.

**கடைசிக் கேள்வி :**

**நமது சரீரத்தில் இருபது மில்லியன் (பத்து இலட்சம்) நாடி-நரம்புத் துவாரங்கள் உள்ளன. உடலில் கணம் தோறும் ரசாயன பாதிப்பு (மாறுதல்) ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. நீங்களோ, அஷ்டாவக்கிரரோ சொல்லுவது "நீ பார்வையாளனாக இரு!" சரி, இதை நீங்கள் யாரிடம் சொல்லுகிறீர்கள்?**

உடம்பில் இருபது மில்லியன் துவாரங்கள் உள்ளன எனச் சொல்பவர் யார்? நிச்சயமாக எந்தக் 'கோசிகா'வும் (துவாரம்) இதைச் சொல்லவில்லை. ஒரு 'கோசிகா' இதர கோசிகாக்களைக் கணக்கிட முடியாது. இருபது மில்லியன் துவாரங்கள், இதைவிட அதிக எண்ணிக்கையில் உயிரணுக்கள் உள்ளன என்று சொல்பவர் யார்?

வினவியவர் யார்? இதையெல்லாம் அறிந்தவர் யார்? நிச்சயமாக உன்னுள் துவாரங்கள் - உயிரணுக்களைத் தவிர வேறொன்று உள்ளது. அது கணக்கெடுக்கிறது எல்லாவற்றையும்.

'நமது சரீரத்தில் இருபது மில்லியன் நாடி - நரம்புத் துவாரங்கள் உள்ளன. உடலில் கணந்தோறும் ரசாயன பாதிப்பு (மாறுதல்) ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. நீங்களோ, அஷ்டாவக்கிரரோ சொல்லுவது, "நீ பார்வையாளனாக இரு!' சரி, இதை நீங்கள் யாரிடம் சொல்லுகிறீர்கள்?'

இருபது மில்லியன் துவாரங்கள் உள்ளன - என்று சொல்லுகிறானே, அவனிடம் தான் சொல்லுகிறோம், "நீ த்ரஷ்டாவாக (பார்வையாளனாக) இரு!" என்று.

'தலை-மூளைத் துவாரங்களிடம் இதைச் சொல்லுவது வீண். புத்தி (மூளை) அழியக்கூடியது.'

இல்லை, நாமும் மூளைத்துவாரங்களிடம் இதைச் சொல்லவில்லை, உன்னிடம் சொல்லுகிறோம். அஷ்டாவக்கிரரும் உன்னிடம்தான் இதைச் சொல்லுகிறார். உன் மூளை நாளங்கள் - துவாரங்களுடன் பேசும் அளவுக்கு அவர் அசடர் அல்லர். உன்னோடு பேசுகிறார். நீ வாழ்வது உன் நாடி நரம்பு நாளங்களுக்கு அப்பாற்பட்டது. உண்மையில், நீ அவைகளை உபயோகப் படுத்திக் கொள்ளுகிறாய். காரில் உட்கார்ந்திருக்கும் டிரைவர் காரை ஓட்டுகிறான். ஓடவைக்கிறான் - மணிக்கு நூறு மைல் வேகத்தில் ஓட விடுகிறான். காருக்குள் இருக்கும் காரோட்டி கார் 'இல்லை. ஒருவேளை போக்குவரத்துக் காவலர் விசில் ஊதி' காரை நிறுத்து!' என்று உத்திரவிட்டால் நீ அவரிடம், "யாரிடம் சொல்லுகிறீர்? கார் இன்ஜினிடமா? அதுதான் இயங்குகிறது. வேறு யாரிடம் கூறுகிறீர்? பெட்ரோலிடமா? பெட்ரோல்தானே வண்டியை ஓடவைக்கிறது. வேறு யாரிடம்? கார், வீல்-டயர்களிடமா? ஓடுவது சக்கிரங்கள் தானே? போலீஸ்காரர் என்ன சொல்லுவார்? அவரைப் போலவே நான் சொல்லுகிறேன், "விசில் ஊதியது உனக்காகத்தான். உன்னிடம்தான் சொல்லுகிறேன்."

"ஒருக்கால், நீங்கள் ஆத்மாவை எழுப்புகிறீர்கள் என்றால், இது வீண் பேச்சு. ஆத்மா எப்போதும் விழித்திருக்கிறது. அதை எழுப்பு, அறிந்து கொள்!' எனச் சொல்லுவது மடத்தனம்."

உண்மை. சரியான பேச்சு. ஆத்மா எப்போதும் விழித்திருப்து. அதை எழுப்ப எந்த உபாயமும் இல்லை. நாம் அதை எழுப்பவும் இல்லை.

இது எடுத்துக்காட்டு. நீ செயற்கையாகக் கிடக்கிறாய். விழித்திருக்கிறாய், கண்களை மூடிக் கொண்டிருக்கிறாய். நிசமாய் தூங்குபவனை எழுப்புவது சுலபம். அசைத்துப்பார், தண்ணீரைத் தெளி, எழுந்து விடுவான். விழித்தவாறே ஒருவன் கண்களை மூடிப் படுத்திருக்கிறான், தூங்குவதாகப் பாசாங்கு செய்கிறான். இவனை எப்படி எழுப்ப இயலும்? உலுக்கு, தண்ணீரைத் தெளி, புரண்டு ப்டுத்து தூங்குவான். பெயரைச் சொல்லிக் கூவு. கேட்டுக் கொண்டே பதில் சொல்ல மாட்டான். தூங்குவது போல் கிடப்பான். உன் நிலைமை இப்படித்தான் இருக்கிறது.

விழித்திருப்பவனை எழுப்புவது வீண் செயல். அவன் தூங்குவதாகப் பாசாங்கு - பாவனை செய்கிறான். அவனை எழுப்பியாக வேண்டும்.

தூங்கியவனை எழுப்பவில்லை. ஆத்மா தூங்காது. உடல் உறங்குகிறது. அதை எழுப்ப முடியாது (எழுப்பத் தேவை இல்லை); எப்போதும் விழித்திருக்கும் ஆத்மாவை எழுப்புவது பொருளற்றது. சரியாகத்தான் சொல்கிறாய். அறிவார்ந்த பேச்சு. ஆனால் கடன் வாங்க வேண்டியிருக்கும். சுய அறிவால் உணர முடிந்தால் கேள்வி கேட்க வேண்டியிராது. விழித்துக் கொண்டிருந்தாலும் விழிப்புணர்வு. ஏற்படாதவனைத்தான் நானும் அஷ்டாவக்கிரரும் எழுப்புகிறோம். விழித்திருப்பவன் தூங்கும் பாவனையில் கிடக்கிறான். 'தூங்கா - மூச்சி' விளையாடுகிறான். இதனால் எழுப்புவது மிகக் கடினம். மெத்தக்கடினம்.

'உங்களையெல்லாம் பிரமையில் - மயக்கத்தில் ஆழ்த்து கிறேனோ?'

நீ நினைக்கிறாய், சனங்கள் எந்தப் பிரமையிலும் கிடக்கவில்லை. உண்மையிலேயே அவர்கள் பிரமையில் சிக்கவில்லை என்றால் நிச்சயம் அவர்களை மயக்கத்தில் ஆழ்த்துகிறேன். ஆனால் அவர்கள் பிரமையில் சிக்கவில்லை என்றால் எப்படி 'பிரமையில் சிக்கியவர்கள்'

என்று கூற முடியும்? எப்படி சிக்க வைக்க முடியும்? பகுத்தறிவாளி களை எப்படி மயக்கத்தில் ஆழ்த்த முடியும்? ஒருவேளை அவர்கள் பிரமையில் சிக்கியிருந்தால், நான் செய்வது அவர்களைப் பிரமையிலிருந்து விடுபட வைக்கும் முயற்சிதான். நீ எப்படி இருந்தாலும் உன் நிலைக்கு எதிராகத்தான் நான் செயல்படுகிறேன். நீ மயக்கத்தில் சிக்கியிருப்பதாக நினைத்தால், என் செயல் உன்னை விழிப்படையச் செய்வதுதான். ஒருக்கால், நீ விழிப்புடன் இருப்பதாக எண்ணினால், இந்தச் செயல் உன்னை மயக்கத்தில் ஆழ்த்துவதாக அமையும். சரி, நீ விழிப்புடன் இருந்தாயானால் எவர் உன்னைப் பிரமையில் சிக்கவைக்க முடியும்?

முதலில் கவனிக்க வேண்டியது, 'மிருகங்கள், தாவரங்கள் உன் நிலைமையை விட மோசமான நிலைமையில் உள்ளன' என்று யார் சொன்னது? நீயே நினைத்தாயா? அவைகளிடம் விசாரித்துப் பார். 'மிருகங்களிடம் கேட்டுப் பார். அவைகளின் கண்களை உற்றுப்பார்!'

இதுவும் மனிதனின் அகங்காரம் (செருக்கு). நான் மிருகங்களைவிட மேலானவன் என்று நினைக்கிறான். இதுபற்றி மிருகங்களிடம் விசாரிக்கவில்லை. இது வேடிக்கையாக இருக்கிறது. ஒரு சார்பாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. தான்தோன்றியாக நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது.

ஒருக்கால், மிருகங்களும் தமக்குள் புத்தகம் எழுத முடிந்தால், நெறிமுறை நூல்கள் இயற்றப்பட்டிருந்தால், அவற்றில் இப்படி எழுதி வைத்திருக்கும். 'மனிதன் மிகக்கேடு கெட்ட, மோசமான மிருகம்' என்று.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்- "மனிதன் மிக மோசமான குரங்கு." என்று குரங்குகள் பேசிக் கொள்ளுமாம். மனிதன் குரங்கிலிருந்து வளர்ந்தவன் என்று டார்வின் சொல்லுகிறான். டார்வின் என்ன நேரிய அத்தாட்சியா? குரங்குகளிடம் கேட்டுப் பார். இரு தரப்பாரிடமும் கேட்டுப் பார்க்க வேண்டும். குரங்குகள் மனிதன் இழிந்தவன் என்று சொல்லுகின்றன. அவை கூறுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. சரியாகத்தான் சொல்லுகின்றன. குரங்குகள் மரங்களின் உச்சாணியில் இருக்கின்றன, நீ தரையில் இருக்கிறாய், தாழ்ந்தவன் தானே? குரங்கு மேலேயும் நீ கீழேயும் இருப்பது

நிசந்தானே? எங்கே, ஒரு குரங்குடன் போட்டி போட்டுப்பார்! உன் வலிமை பெரிதா, சிறிதா என்பது தெரிந்துவிடும். உன் திறமை வளர்ந்ததா அல்லது குறைந்ததா என்பதும் புரியும். ஒரு மரத்திலிருந்து பக்கத்து மரத்திற்குத் தாவிப் பார், உன் உடல் உறுப்புகள், எலும்புகள் நொறுங்கிவிடும். தாவும் கலைத் திறன் வந்ததா, போனதா? நிலைமை இப்படி இருக்க, குரங்கு மனிதனை விட (உன்னைவிட) தாழ்ந்தது என்று எவன் சொன்னான்? நீயாக நினைத்துக் கொண்டாயா?

இது பெரிய வேடிக்கை. மனிதனுக்குள்ள மன நோய்களில் ஒன்று, 'நான் பிறரைவிட மேம்பட்டவன்' என்று எண்ணிக் கொள்ளுவது. ஆண்களிடம் கேட்டுப்பார், 'நாங்கள் பெண்களைவிட மேம்பட்டவர்கள்' என்பார்கள்; அதுவும், பெண்களிடம் கேட்காமலேயே. பெண்களிடம் இது பற்றிக் கலந்து பேசுவதும் இல்லை. வாக்கெடுப்பு நடத்திப் பார்க்கவில்லை. ஏனென்றால், ஆண்கள் தானே நீதிநெறி நூல்களை எழுதி வைத்திருக்கிறார்கள்; மனம் போனவாறு எழுதியிருக்கிறார்கள்! இதையெல்லாம் பெண்கள் படித்து விட்டால், சங்கடம் ஏற்பட்டு விடுமே என்பதற்காக 'பெண்கள் படிக்கக் கூடாது, கல்வி கற்கக்கட்டாது' என்று தடை போட்டு விட்டார்கள் ஆண்கள். அறநெறி நூல் எழுதும் பண்டிதரின் மனைவி அதைப் படித்து விட்டால் தடை, இடைஞ்சல் செய்து விடுவாளே, என்பதற்காக அவள் படிப்பறிவு பெறுவதையே தடுத்து விட்டார்கள். பெண்கள் வேதம் ஓதக்கூடாது, சாத்திரம் படிக்கக் கூடாது என்று தடை விதித்தார்கள். பெண்கள் மோட்சம் பெறலாகாது என்று விதித்தது பெரும் அநீதி. மோட்சம் பெறப் பெண்கள் ஆண்களாகப் பிறக்க வேண்டுமாம். சலுகை இலக்கு, ஆண்களைப் போலவாவது மாற வேண்டுமாம்!

ஆண்களிடையே கேட்டுப் பார், சிவப்பாயிருப்பவன் கருப்பாக இருப்பவனைவிட மேம்பட்டவனாம்! சரி, கறுப்பர்களிடம் கேட்டுப் பார்;...

நான் கேள்விப்பட்டிருக்கிறேன், ஆப்பிரிக்கா நாட்டுக் காட்டுப் பகுதியில் ஒரு வெள்ளைக்காரன் வேட்டையாடச் சென்றான். ஒரு நீக்ரோவை வழிகாட்டித் துணையாகக் கூடவே அழைத்துப் போனான். இருவரும் காட்டுக்குள் அலைந்தார்கள். ஒருநாள் நடுக்காட்டில், நூறுக்கும் அதிகமாக நீக்ரோ காட்டுவாசிகளின் கூட்டம் எதிரே

வருவதைக் கண்டார்கள். வெள்ளையன் நடுங்கிப் போனான். வழிகாட்டி நீக்ரோவிடம் சொன்னான், "நம் உயிருக்கு ஆபத்து நெருங்குகிறது." நீக்ரோ பதிலளித்தான், "நமக்கு என்று சொல்லாதே. என்னை விட்டு விடு. நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்! எனக்கு ஏன் ஆபத்து?"

வெள்ளைக்காரனுக்குத் தான் மேலானவன் என்று எண்ணம்; கறுப்பனுக்குத் தான் மேலானவன் என நினைப்பு. சீனத்தவரைக் கேட்டுப் பார். சீனர்கள் தம் நூல்களில் வெள்ளைக்காரர்கள் குரங்குகள் என எழுதி வைத்திருக்கிறார்கள். வெள்ளையரை அவர்கள் மனிதர்களாக மதிப்பதே இல்லை.

உலகம் முழுவதிலும் இந்த நோய் பரவியிருக்கிறது. மனிதனிடம் இந்த நோய் ஆழமாகப் பதிந்திருக்கிறது. எதிர்த்தரப்பைக் கேட்காமலேயே தன்னிச்சையாய் தீர்மானித்து விடுகிறான் மனிதன். இது அகங்காரத்தின் ஆட்டம். அகங்காரத்தை ஒதுக்கி விட்டுப் பார்த்தால், எல்லாருமே - எல்லாமே பரமாத்மாவின் சொரூபங்கள் என்பது புலப்படும்; மிருகங்கள், ஆடு - மாடுகள், பறவைகள், தாவரங்கள், மலை, நதி, கடல்கள், மனிதர்கள் என எல்லாமே.

பரமாத்மா பசுமை மூலம் வெளிப்பட வேண்டும் என விரும்பினால் அப்படியே நிகழும். புள்ளினங்களின் கீசுகீசு கீதங்கள் வழியே புலப்பட வேண்டும் என ஆசைப்பட்டால், அப்படியே ஒலிக்கும். மனிதனாக அவதரிக்க வேண்டும் என் எண்ணினால், மனிதப் பிறவியில் ஆவிர்ப்பவிப்பார் பரமாத்மா. இதில் ஏற்றத்தாழ்வு இல்லை. விருப்பு வெறுப்பு இல்லை. எல்லா ஜீவராசிகளும் பரமாத்மாவின் முடிவில்லாத அலைகள். எல்லா அலை வகைகளிலும் பரமாத்மா உள்ளார். புல்லிலும், வானளாவிய மரத்திலும், செடிகொடிகளிலும் அவர் உள்ளார்.

ஆன்மீகம் வலியுறுத்துவது இதுதான் - இக்கணத்தில் எது உள்ளதோ அது பரமாத்மா. முன் பின், மேல், கீழ் எப்படி ஏற்படும்? அப்படி ஏற்பட்டு விட்டால் மிகச் சிக்கலாகிவிடும். பரமாத்மாவில் கொஞ்சம் கீழே, கொஞ்சம் மேலே எனப் பாகுபாடு செய்வது சாத்தியமில்லை. பரமாத்மா ஒன்றே, ஒரே நிலைப்பாடு. "சாட்சியாக இரு!" என்று அஷ்டாவக்கிரர் கூறுகிறாரே, அந்த நிலையில் இருந்து பார்த்தால் 'எல்லாம் ஒன்றே' என்பது தெரியும், புரியும்.

ஆகையால் இப்படிக் கேள்வி கேட்பதை விட்டுவிடு. "மனிதர்கள் சுக- துக்கங்களுக்கு ஆட்பட்டு செயல்படுவதை விட்டுவிட்டால், மிருகங்கள், தாவரங்கள் போல் ஆகிவிட மாட்டார்களா?" அப்படியே ஆகிவிட்டாலும் ஏதும் கேடு வந்துவிடாது. ஹிட்லர் மிருகமாகவோ, மரமாகவோ ஆகியிருந்தால் என்ன நட்டம்? உலகப் போரில் பல்லாயிரம் மனிதர்கள் சாகடிக்கப்படாமல் இருந்திருப்பார்கள். வேறு எந்த இழப்பும் ஏற்பட்டிராது. நாதிர்ஷா புலியாக இருந்திருந்தால் என்ன நட்டம்? நாலைந்து பிராணிகளைக் கொன்று திருப்திப்பட்டிருக்கும். உணவுக்காகக் கொல்லும். காரணமில்லாமல் பல்லாயிரம் மனிதர்களைக் கொன்று குவித்திருக்காது. மிருகங்களில் எதுவும் அணுகுண்டை உருவாக்கவில்லை, நாசகாரி ஆயுதங்களைக் கண்டுபிடிக்கவில்லை. விலங்குகள் நகங்களை ஆயுதமாகப் பயன்படுத்துகின்றன. அதற்குப் பரம்பரை வழக்கம். பசியாற உணவுக்கு வேண்டி சில சமயம் வேட்டையாடுகின்றன.

மனிதன்தான் விசித்திர விலங்கு; உணவுக்காக மட்டும் அவன் கொல்லுவதில்லை. வேட்டையாடப் போகிறான் காட்டிற்கு, பிராணிகளைக் கொல்லுகிறான். "வேட்டையாட விளையாட்டாக வந்தோம்" எனக் கூறுவான். சிங்கமோ, புலியோ அவனைத் தாக்கினால் அது வேட்டை இல்லை. 'அவை வேட்டையாடுவதாக விளையாடுகின்றன, விளையாடி விட்டுப் போகட்டும்' என்று சொல்ல மாட்டான்.

நீ விளையாட்டாக வேட்டையாடிக் கொல்லுகிறாய். எந்த மிருகமும் அப்படிக் கொல்லுவதில்லை.

மற்றொரு சுவையான விசயம், எந்த மிருகமும் தன் இனத்தில் (வர்கத்தில்) வேட்டையாடுவதில்லை. சிங்கம் வேறொரு சிங்கத்தை, குரங்கு -மற்றொரு குரங்கைக் கொல்லுவதில்லை. மனிதன் என்கிற இழிந்த மிருகம்தான் தன் இனத்தவரை - மனிதர்களைக் கொல்லுகிறான். எறும்பு மற்றொரு எறும்பைக் கொல்லுவதில்லை. யானை வேறொரு யானையைக் கொல்லுவதில்லை. நாய் இன்னொரு நாயைக் கொல்லுவதில்லை. சண்டை போடும், கொலை செய்யாது. மனிதமிருகம் தான் மனிதரைக் கொல்லுகிறான். சண்டையுமிடுகிறான்.

மனிதனிடம் அப்படி என்ன இருக்கிறது? அவனைப் பற்றி நீ ஏன் சங்கடப்படுகிறாய்? அவன் இழந்தால் எதை இழக்கப் போகிறான்? மரம் - செடி - கொடிகள் மிக அழகானவை; மிருகங்கள், பிராணிகள் குற்றமற்றவை. 'நீ மரம் - செடியாகவோ, பிராணியாகவோ மாறிவிடு!' என்று சொல்ல வரவில்லை. உன் அகந்தையை விட்டுவிடு என்று சொல்லுகிறேன்.

மற்றொரு விஷயம், 'நீ சுக - துக்கங்களில் எதிர்வினையை (பாதிக்கப்படுவதை) விட்டுவிடு!' என்றும் நான் சொல்லவில்லை. அஷ்டாவக்கிரரும் இப்படிச் சொல்லவில்லை. சுக - துக்கங்களில் சமநிலை கொள்ளுவது என்பது எதிர்வினை செய்வதை விட்டு விடவேண்டும் என்று பொருள் இல்லை. சுக - துக்கங்களில் சமநிலை மேற்கொள்ளுவது என்பது இதுதான் - 'நான் சாட்சியாக இருப்பேன். சுகதுக்கங்களை உணர்ந்து ஏற்றுக் கொள்ளுவேன்.'

இதற்கு இப்படி அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது - 'புத்தரை நீ முள்ளால் குத்தினால், அவருக்கு துன்ப வேதனை (துக்கம்) ஏற்படாது.' புத்தருக்கு உனக்கு ஏற்படும் வலி வேதனையைவிட அதிகமாகவே ஏற்படும். அவர் உன்னைவிட மென்மை உணர்வு அதிகம் உள்ளவர். நீ கற்பாறை போன்றவன், புத்தர் மென்மையான கமலப்பூ போன்றவர். அவரை நீ முள்ளால் குத்தினால் உன்னைவிட அதிக வலி அவருக்கு ஏற்படும். வலி உடலுக்குத்தான் என உணர்ந்து அவர் ஒதுங்கி இருப்பார். பார்த்தாலே தெரிகிறது, வலிக்கிறது, உணரவும் செய்கிறார். ஆனாலும் அவர் வலியோடு ஒட்டுறவு கொள்ளுவதில்லை. 'நான் அறிபவன், உணர்பவன், ஞான சொரூபன்' என்ற போதம் (உள்ளுணர்வு) கொண்டவர் புத்தர்.

எதிர்வினையை விட்டுவிட வேண்டும் என்று சொல்லவில்லை. 'உன் எதிரே வீடு பற்றி எரிகிறது, நீ பார்த்துக் கொண்டிரு, நீ புத்தராகி விட்டாய், வெளியே ஓடிப் போகாதே' என்று நான் கூறவில்லை. நீ ஓடிப் போகும் போதும் 'வீடுதான் எரிகிறது, நான் எரியவில்லை' என்பதை அறிய வேண்டும். ஒரு வேளை உன் உடலிலும் தீப்பற்றிக் கொண்டால், "உடல்தான் எரிகிறது, நான் எரியவில்லை," என உணர வேண்டும். இதற்கு உன் உடலை எரியவிட வேண்டும் என்று அர்த்தம் இல்லை. உடலை வெளியே கொணர வேண்டும். உடம்பை எரியவிட்டு வேதனைப்பட வேண்டும் என்று சொல்லவில்லை.

எதிர்வினை (ரியாக்ஷன்) இல்லாமல் செய்வதன் பொருள், 'நீ கல்லாகிவிட்டாய், ஜடப் பொருளாகி விட்டாய்' என்பதுதான். புத்தர் கல்லோ, ஜடமோ இல்லை. புத்தரைப் போன்ற கருணைமிக்கவரை எங்காவது காணமுடியுமா? அஷ்டாவக்கிரரும் கல்லாகி விடவில்லை. அன்பு வெள்ளம் பெருகியது. எவரிடமிருந்து அன்பு வெள்ளம் பெருகுகிறதோ, அவருடைய பரிவு பாசம் நிரம்பிய உணர்ச்சி பெருகியிருக்கும், குறைந்திருக்காது. அவரிடம் மகா கருணை குடி கொண்டுள்ளது!

ஆனால் நீ தவறாக விளக்கம் செய்து கொள்ளக்கூடும்.

மேலும், என்னிடம் கேள்வி கேட்டவர்கள் பகுத்தறிவாளிகளாக இருக்கலாம், அவர்களது அறிவில் குப்பைகூளம் அதிகம் நிரம்பியிருக்கலாம். ஏதோ கொஞ்சம் படித்திருப்பார், கல்வி கேள்வி பெற்றிருப்பார், அறிவுப் பெட்டகத்தில் நிறைய சேகரித்திருப்பார் - அதனால்தான் அலைபாய்கிறார். அவர்கள் கேட்க விடுவதில்லை, பார்க்கவும் விடுவதில்லை; கருத்துக்களை, செயற்பாடுகளை மாற்றிக் கொச்சைப்படுத்திக் கொண்டிருப்பார்கள். சில கவிதை வரிகள் -

**பயணிகள் யாவரும் தங்கியிருக்கிறார்கள்,**
**உள்ளுறை நீர் பாதிச் சிரிப்பில் துளும்ப**
**வெளியே பனிப்படலம் உரைந்துள்ளது,**
**ஆழங்காணாச் சேற்றில் புதைந்துள்ள மார்பு**
**வெள்ளப்பெருக்கெடுத்த காட்டாறு ஒருபுறம்;**
**கண்டபடி வீசிப் பரவும் காற்றலைகள்**
**கானகம் முழுவதும் குவிந்திருக்கிறது,**
**பயணிகள் யாவரும் தங்கியிருக்கிறார்கள்,**
**மூடிய கதவுகள், பாதி திறந்த சன்னல்கள்**
**சில கண்கள் எட்டிப் பார்க்கின்றன,**
**பகலவனின் முகத்தில் அந்திவேளையின்**
**பலப்பல கரிய அம்புகள் போன்ற**
**குத்தூசிகள் தைக்கின்றன**
**தம் முகத்திற்குப் பின்னால் மௌனமாய்**
**திகிலடைந்து ஒளிந்து மறைந்திருக்கும்**
**பயணிகள் யாவரும் தங்கியிருக்கிறார்கள்!**

இந்த முகங்கள், முகமூடிகள் புத்திசாலித்தனம், பாண்டித்தியம், அறநெறி நூல் வித்தகம் சார்ந்தவை. இவைகளுக்குப் பின்னால் எத்தனை நாள் ஒளிந்திருப்பாய்? கருத்துக்களின் மடிப்புகளுக்குள் எவ்வளவு காலம் பதுங்கியிருப்பாய்? இவைகளை அகற்றிவிடு! உள்ளுறைந்த சுத்த சைதன்யத்தை (தூய உணர்வை) எழுப்பு!

பார்வையாளனாக இருந்து கவனி! ஆய்வாளனாக இராதே. ஆய்வாளனுக்கு மனப்போக்குடன் சிந்தனை வீச்சு துவங்கி விடுகிறது.

அஷ்டாவக்கிரரைப் புரிந்து கொள்ள வேண்டுமானால், சுத்த சைதன்யத்தை அறிந்து கொள்ளுவதைப் போல முற்பட வேண்டும். தாறுமாறாகச் சிந்திக்கத் துவங்கினால், பல்வேறு எண்ணங்களில் சிக்கிக் கொண்டால் அஷ்டாவக்கிரரை அறிந்து கொள்ள முடியாது, தவறிப் போவாய்.

அஷ்டாவக்கிரர் தத்துவ ஞானியோ, ஆழ்ந்த சிந்தனையாளரோ இல்லை. அவர் போதனைத் தூதுவர், சைதன்யத்தின், சாட்சியின் தூதுவர். சுத்த சாட்சித் தூதர். பார்வையாளனாக இரு. துக்கம் ஏற்பட்டால் துக்கத்தைப் பார், சுகம் ஏற்பட்டால் சுகத்தை மட்டும் பார். துக்கத்தைப் பார்த்து 'நான் துக்கமாகி விட்டேன்' என்று சொல்லாதே. சுகம் வந்தால், 'நான் சுகமாகி விட்டேன்' எனக் கூறாதே. சுகம் - துக்கம் இரண்டும் வரட்டும், போகட்டும்; வரவிடு, போகவிடு! இரவு வந்தால் இரவைப் பார், பகல் வந்தால் பகலைப் பார். இரவில் 'நான் இரவாகி விட்டேன்' எனக் கூறாதே; பகலில் 'நான் பகலாகி விட்டேன்' என்று சொல்லாதே. தனித்தே ஒதுங்கி இரு! கரைகடந்து, கடந்த காலத்தில், மேலே, தொலைவில் இரு! ஒரே நிலையில் ஒன்றி இரு! 'நான் பார்வையாளன், சாட்சியானவன்,' என இணைந்திரு.

ஹரி ஓம் தத்ஸத்!



அஷ்டாவக்கிரர் கூறினார்-

ஏகோ த்ரஷ்டா(அ)ஸி ஸர்வஸ்ய முக்தப்ராயோ (அ)ஸி ஸர்வதா |
அயமேவ ஹி தே பந்தோ த்ரஷ்டாரம் பச்யஸி இதரம் || (7)

அஹம் கதேத்யஹம் மான-மஹாக்ருஷ்ணஹி தம்சித |
நாஹம் கர்த்தேதி விச்வாஸ-அம்ருதம் பீத்வா சுகீ பவ || (8)

ஏகோ விசுத்த போதோ (அ)ஹம் இதி நிஸ்ச வஹ்நிநா |
ப்ரஜ்வால்யஅஞான கஹனம் வீத சோக: சுகீ பவ || (9)

யத்ர விச்வமிதம் பாதி கல்பிதம் ரஜ்ஜுஸர்ப்பவத் |
ஆனந்த பரமானந்த: ஸ போதஸ்த்வம் ஸுகம் சர || (10)

முக்தாபிமானீ முக்தோ ஹி பத்தோ பத்தாபி மான்யபி |
கிம்வதந்தீஹ ஸத்யேயம் யா மதி: ஸ கதிர் பவேத் || (11)

ஆத்மா ஸாக்ஷீ விபு: பூர்ண ஏகோ முக்தஸ்சித் க்ரிய: |
அஸங்கோ நிஸ்ப்ருஹ: சாந்தோ ப்ரமாத் ஸம்ஸாரவானிவ || (12)

கூடஸ்தம் போதமத்வைதம் ஆத்மானம் பரிபாவய |
ஆபாஸோ (அ)ஹம் ப்ரமம் முக்த்வா பாவம் பாஹ்யம் அத
ஆந்தரம் || (13)

முதல் சூத்திரம் -

அஷ்டாவக்கிரர் உரைத்தார் - நீ சகலத்தையும் காண்பவன், எப்போதுமே முக்தன். உனக்குள்ள பந்தம் (தளை, பிணைப்பு) இதுதான் - நீ உன்னை விட்டுப் பிறரைக் காண்பவனாக (த்ரஷ்டா) பார்க்கிறாய்.'

இந்த சூத்திரம் பெருமதிப்பும் பொருட்செறிவும் கொண்டது. ஒவ்வொரு சொல்லையும் சரிவர அறிந்து கொள்ள வேண்டும்.

நீ எல்லாவற்றையும் காண்பவன் - 'ஏகோ த்ரஷ்டா அஸி ஸர்வஸ்ய' - மேலும், எப்போதும் உண்மையாக நீ முக்தன் (முக்தி பெற்றவன்).

பொதுவாக, நமக்கு சொந்த வாழ்க்கை உணர்வு பிறர் நோக்கால் கிடைக்கிறது. நாம் பிறர் கண்களைக் கண்ணாடி போல் பயன்படுத்திக் கொள்ளுகிறோம். இதனால் நாம் 'த்ரஷ்டா' (காண்பவன்) என்பதை மறந்து விடுகிறோம். பிறருக்குக் காட்சிப் பொருளாகி விடுகிறோம். இது இயற்கை.

பிறந்த குழந்தைக்கு தன்னைப் பற்றித் தெரியாது. பிறர் கண்களைப் பார்த்து தன்னை அறிந்து கொள்ளும். நம் முகம் நமக்குத் தெரிவதில்லை; கண்ணாடியில் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும். கண்ணாடியில் உன் முகத்தைப் பார்க்கும்போது நீ தென்படுகிறாய், நீயாகவே உன்னைப் பார்ப்பவன் (த்ரஷ்டா) இல்லை. உன்னை நீ எவ்வளவு அறிந்து வைத்திருக்கிறாய்? கண்ணாடி காட்டுவதைக் கண்டு தெரிந்து கொள்ளுகிறாய்.

தாய் மகனை நீ அழகாய் இருக்கிறாய் என்கிறாள். மகன் தன்னை அழகனாகக் கருதுகிறான். பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் மாணவனைப் பார்த்து 'நீ புத்திசாலி' என்கிறார்; அவன் தன்னைப் புத்திசாலி என்று நம்புகிறான். ஒருவர் நம்மை அவமானப்படுத்தினால், நிந்தித்தால், அதன் பாதிப்பு நம்முள் பதிந்து விடுகிறது. இதனால்தான் நம்மைப் பற்றிய உணர்வு பிரமையில் (கலக்கத்தில்) ஆழ்த்துகிறது. அவ்வுணர்வு பல கருத்துக்களால் உருப்பெற்றது. மாறுபட்ட கருத்துக்களாலும் உருவாக்கப்பட்டது. ஒருவன் சொல்லுவான், "நீ அழகனா? கண்ணாடியில் உன் மூஞ்சியைப் பார்" என்பான். இரு குரல்களும் நம்முள் புகுந்து சண்டையிடுகின்றன. ஒருவன், "நீ மகா புத்திசாலி" என்கிறான்; மற்றொருவன் "உன்னைப் போன்ற மடையனை நான் பார்த்ததில்லை" என்கிறான். இரு கருத்துக்களும் நம்முள் புகுந்து கலவரப்படுத்துகின்றன. மனச் சள்ளை அதிகரிக்கிறது; மனப் போராட்டம் தொடர்கிறது. ஆகையால் 'நீ யார்?' என்பது தீர்மானிக்கப்படவில்லை. கருத்துக்களின் மோதலை நீ ஏற்படுத்திக் கொண்டாய். பல வகைக் கண்ணாடிகளில் உன்னைப் பார்த்திருக்கிறாய். எல்லாமே தாறுமாறாகக் காட்டியிருக்கின்றன. கண்ணாடி உன்னைப் பற்றிய தகவலைத் தரவில்லை, தன்னைப் பற்றிய (தராதரம் பற்றிய) தகவலைத் தந்திருக்கின்றன.

உன்னை உயரமாகக் காட்டும் கண்ணாடியில் பார்த்திருப்பாய், சில உன்னைக் குண்டாகக் காட்டும். உன்னை அழகாய் காட்டும்

கண்ணாடி, குரூபியாகக் காட்டும் கண்ணாடி - அஷ்டாவக்கிரரைப் போல கோணல்மாணலான அங்கங்களுடன் காட்டும் கண்ணாடி - எனப் பலவற்றில் உன் பிரதி பிம்பத்தைக் கண்டிருப்பாய்! கண்ணாடி காட்டும் காட்சி உன்னுடையதல்ல. கண்ணாடியின் அமைப்பின் பிரதிபலிப்பு. தாறுமாறான விசயங்கள் சேகரிக்கப்படுகின்றன. இவற்றின் தொகுப்பை நீ உன் உருவாகக் கருதுகிறாய். இதனால்தான் நீ எப்போதும் அஞ்சி நடுங்கிக் கொண்டிருக்கிறாய்.

ஊரார் கருத்திற்குப் பயப்பட வேண்டியிருக்கிறது. பிறர் தவறாக நினைத்து விடக்கூடாது என்கிற பயமும் ஏற்படுகிறது. நான் மூடன், போக்கிரி, உதவாக்கரை என்றெல்லாம் ஊரார் எண்ணிவிடக் கூடாது என்கிற அச்சம். காரணம், பிறர் மூலமாகத் தான் நமது ஆத்மாவை உருவாக்கியிருக்கிறோம்.

குர்ஜியேப் சீடர்களிடம் சொன்னார், "உனக்கு உன் ஆத்மாவை அறிந்து கொள்ள வேண்டுமானால் சனங்களை (மற்றவர்களை) விட்டுவிட வேண்டும்." சரியாகத்தான் சொன்னார். நூற்றாண்டுகளாக சத்குருமார்கள் இதைத்தான் சொல்லி வந்திருக்கிறார்கள். உன்னை நீ அறிந்து கொள்ள வேண்டுமானால், பிறர் கண்களால் பார்ப்பதை நிறுத்திக் கொள், விட்டுவிடு.

நான் பார்த்த வரையில், பல ஆய்வாளர்கள், சத்தியத்தைத் தேடுபவர்கள் சமூகத்தை விட்டு விலகிப் போனவர்கள்தாம். சமூகத்துடன் இணைந்து வாழ்ந்தால் சத்தியத்தை அறிவது அசாத்தியம் - இயலாது என்பதற்காக அல்ல. அதன் காரணம் இதுதான் - சமூகத்துள் இருந்து கொண்டு சுய ஆளுமையை - சுய சொரூபத்தை அறிந்து கொள்ளுவது மிகக்கடினம் - அசாத்தியம். சமூகத்தில் பிறர் 'நீ யார்' என்ற செய்தியை அவரவர் இயல்புக்கு ஏற்ப தெரிவித்து விட்டுப் போகிறார்கள். நீ கேட்டாலும் கேட்காவிட்டாலும் எல்லாத் தரப்பிலிருந்தும் கருத்துச் செய்திகள் வந்து கொண்டிருக்கும் - 'நீ யார்?' எனும் செய்தி. நாம் பொதுவாக அந்தச் செய்திகளுக்காக வாழ்ந்து வருகிறோம்.

ஓர் அரசியல் தலைவன் செத்துப் போனான். அவன் மனைவி இரு ஆண்டுகளுக்கு முன்பே காலமாகி விட்டாள். மரித்த கணவனை

அந்த அம்மணி மேலுலகத்தின் தலைவாசலில் நின்று வரவேற்றாள். அப்போது அரசியல்வாதி சொன்னான், "இப்போது நான் உள்ளே வரமாட்டேன்; சவக்கட்டிலோடு ராஜ்காட் (தில்லி, காந்தி சமாதி) வரை நான் போய் வரவேண்டும்.

"அங்கே போய் பிரயோசனம்? அங்கு மக்கி மண்ணாகிப் போகும் சடலம் கிடக்கிறது" - மனைவி.

"வெறும் சடல மண் இல்லை. எத்தனை சனங்கள் இறுதி ஊர்வலத்துடன் வந்தார்கள் என்பதைப் பார்க்க வேண்டும்." - தலைவன்.

தலைவனும் மனைவியும் பாடையில் கிடந்தபடி (பார்ப்பவர்களுக்கு வெறும் பாடை மட்டுமே புலப்படும்) சென்றார்கள். குழுமிய கூட்டம். பத்திரிகையாளர்கள், புகைப்படக்காரர்கள் பின் தொடர்ந்தார்கள். கொடிகள் நடுக்கம்பத்தில் இறக்கப்பட்டிருந்தன. மலர்க் குவியலால் அலங்கரிப்பு. ராணுவ வண்டியில் சவக்கட்டில் கம்பீரமாக வைக்கப்பட்டிருந்தது. முன்னும் பின்னும் ராணுவ பீரங்கி வண்டிகள் தொடர்ந்தன. ராணுவ வீரர்கள் அணிவகுத்து வந்தார்கள். அரசியல் தலைவன் இதையெல்லாம் பார்த்து நெகிழ்ந்து போனான்.

"ஏன் இப்படி மகிழ்ந்து போகிறீர்கள்?" - மனைவி.

"மரித்த பின் இப்படிக் கோலாகலக் கும்பல் கூடுமென்று தெரிந்தால் நான் முன்பே செத்துப் போயிருப்பேன். இவ்வளவு காலம் எப்படிக் காத்திருந்தேன்? இவ்வளவு கூட்டம் கூடுமானால் இதற்காகவே வாழ்ந்திருக்கலாம்" - கணவன்.

கூட்டம் கூட வேண்டி மனிதர்கள் வாழ்கிறார்கள், மரிக்கிறார்கள்.

பிறர் என்ன சொல்லுகிறார்கள் என்பது முக்கியத்துவம் வாய்ந்தது. நீ யார் என்பதை மற்றவரிடம் கேட்பதில்லை. பிறர் பலவாறாகச் சொல்லுவதைக் கேட்பது காகிதத் துண்டுகளை இணைத்துக் கடிதத்தைப் படித்துப் பார்ப்பதுபோல், நீ அப்பேச்சுக்களைச் சேகரித்து உன் உருவாக்கத்தைக் காண்கிறாய். அப்படம் ஆட்டம் கண்டதுபோல் கலைகிறது. காரணம், மக்களின்

மனங்கள் மாறி வருகின்றன, மாற்றத்திற்கான காரணங்களும் மாறுகின்றன.

ஒருவன் உன்னைப் பார்த்து, "நீங்கள் பெரிய சாமியார், ஞானியார்" என்று கூறினால், அதற்குக் காரணம் இருக்கும் முகத்துதி, வஞ்சகப் புகழ்ச்சி, சுயலாபப் புகழ்ச்சி, பொய்ப் புகழ்ச்சி - இப்படி ஏதாவதொரு காரணம். சாது - சாமி என்று உன்னை எவன் மதிக்கிறான்? மதிப்பான்? எவனும் தன்னைத்தான் சாது - சாமி என்று நினைப்பானே தவிர, மறறொருவனை அப்படி மதிக்க, ஏற்க ஒப்ப மாட்டான்.

நீ உன்னைப் பற்றி நினைத்துப் பார்! நீ பிறரை உன்னைவிட நல்லவன், சாது என்று ஏற்றிருக்கிறாயா? எப்போதாவது ஒப்புக்கு அப்படிச் சொல்ல வேண்டியிருக்கலாம். தேவை, வாழ்க்கை, இடையூறு, நிர்பந்தம் காரணமாக, பொய்யை மெய்யாகக் கூற வேண்டிவரும். கெட்டவனை நல்லவன் எனச் சொல்ல வேண்டிவரும். குரூபியை அழகுசுந்தரம் எனச் சிலாகிக்க வேண்டும், துதிபாட வேண்டும்; முகத்துதிக்கு பாதிப்பு, மதிப்பு அதிகம்.

முகத்துதியின் கவர்ச்சியில் சனங்கள் ஏன் மயங்குகிறார்கள்? படுமடையனைப் பார்த்து, "நீ மேதாவி, மகாபுத்திசாலி," என்று சொல்; அவனும் மறுக்க மாட்டான். காரணம், அவனுக்கு சுயபிரக்ஞை கிடையாது. தன்னைப்பற்றி அறியாதவன். நீ சொல்லுவதை விரும்பிக் கேட்கிறான், நம்புகிறான், அப்படியே நடிப்பாக நடந்து கொள்ளுகிறான்.

முகத்துதிக்கான காரணங்கள் பல. ஒருவன் "நீ அழகன்" என்கிறான். மற்றொருவன், "நீ குரூபி" என்கிறான். ஒருவன் "நீ நல்லவன், சாது" என்றால், வேறொருவன் "நீ பொல்லாதவன், கெட்டவன்" என்பான். இக்கருத்துக்கள் கலந்து பரவுகின்றன. மாற்றுக் கருத்துக்களின் அடிப்படையில் நீ உன் ஆன்மாவை நிருமாணம் செய்து கொள்ளுகிறாய். எல்லாத் திசையிலும் மாடுகள் கட்டப்பட்டிருக்கும் விசித்திர வண்டியில் நீ சவாரி செய்கிறாய். அவை தத்தம் திசையில் வண்டியை இழுக்கின்றன. உன் உடல் எலும்புகள் நொறுங்கத் துவங்குகின்றன. நீ இழுக்கப்படுகிறாய், ஆனால்

முன்னேறவில்லை; எங்கும் போய்ச் சேரவில்லை; போய்ச் சேரவும் உன்னால் முடியாது.

இன்றைக்கு உள்ள முதல் சூத்திரம் - "நீ எல்லாவற்றுக்கும் ஒரு பார்வையாளன் மட்டுமே. மேலும், நீ எப்போதும் உண்மையில் முக்தி அடைந்தவன்."

மனிதன் காட்சிப் பொருள் இல்லை, காட்சியாளன் - கண்டு கொள்ளுபவன்.

உலகில் மூன்று வகை மனிதர்கள் உள்ளனர். காட்சியாக இருப்பவர்கள், இவர்கள் யாவரும் இருட்டில் உழலுபவர்கள். இரண்டாமவர்கள், பார்வையாளர்கள். முன்னவரைவிடச் சற்று மேலானவர். ஆனால் காட்சிப் பொருளாக இருப்பதில் அதிக வித்தியாசமில்லை. மூன்றாமவர்கள், பார்த்து உணர்பவர்கள் (த்ரஷ்டா). இவர்கள் மேற்பட்டவர்கள். மூவரையும் தனித்தனியாக அறிந்து கொள்ள வேண்டும்.

நீ காணப்படுபவனாக, பார்க்கத் தகுந்தவனாக (த்ருச்ய) ஆகும்போது ஒரு பண்டம் (வஸ்து) ஆகிவிடுகிறாய். அரசியல் தலைவனிடம் ஆத்மாவைக் காண இயலாது. அவன் காட்சிப் பொருளாகிவிட்டவன். நடிகனும் இதே ரகத்தில் - தரத்தில் உள்ளவன். காட்சிப் பொருளாக இருக்கவே இருவரும் வாழ்கிறார்கள். பொதுமக்களுக்கு எதிரில் 'நான் நல்லவனாக, மேலானவனாகத் தோற்றமளிக்க வேண்டும்' என்றே இயங்குவார்கள். நல்லவனாக முயற்சிப்பதில்லை, நல்லவனாக, சிறந்தவனாகக் காட்டிக் கொள்ள முயற்சிப்பார்கள்.

ஆக, காட்சிப் பொருளாக (கவர்ச்சிகரமாக) இருப்பவன் பித்தலாட்டக்காரனாகி விடுகிறான். அவன் முகமூடி போட்டிருப்பவன், பகட்டாகச் செயற்பாடுகளைக் காட்டுவான். ஆனால் உள்ளூர அழுகிக் கெட்டுப் போவான்.

மற்றொரு ரகம், பார்ப்பவர் அல்லது பார்வையாளர், இவர்கள் கூட்டம் அதிகம். முதல் ரக மனிதர்களுக்கு (காட்சியானவர்) இந்த ரக மனிதர்கள் (பார்ப்பவர்) சுய ஆதாயத்திற்காகத் தேவைப்படுகிறார்கள்.

இவர்கள் இல்லாவிட்டால் காட்சிப் பொருளாக எப்படி ஆக முடியும்? ஒருவன் அரசியல் தலைவனாகிறான்; கைதட்ட, வாழ்த்தொலி கூவக் கூட்டம் சேருகிறது. இவர்களுக்குள் ஒட்டுறவு ஏற்பட்டு விடுகிறது. தலைவன் இருந்தால் தொண்டர்கள் வேண்டுமே. கூத்தாடி மேடை ஏறினால் பார்வையாளர்கள் வேண்டும். பாடகன் இசைக்கத் தொடங்கினால் செவிமடுக்கும் ரசிகர்கள் தேவை.

சிலர் காட்சிப் பொருளாகிறார்கள், சிலர் காட்சியாளர் களாகிறார்கள். கூட்டம் அதிகரிக்கிறது.

மேற்கத்திய உளவியல் அறிஞர்கள் மிகக் கவலைப்படுகிறார்கள். மக்கள் பெரும்பாலும் வெறும் பார்வையாளர்களாகவே இருந்து விடுகிறார்கள். திரைப்படங்களைப் பார்க்கிறார்கள், வானொலிப் பெட்டி எதிரில் அமர்ந்து கேட்கிறார்கள். டி.வி. பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் மணிக்கணக்காக, அமெரிக்காவில் பெரும்பாலானவர்கள் ஆறுமணி நேரம் டி.வி. பார்க்கிறார்களாம். கால்பந்துப் போட்டியை ஆவல் பொங்கப் பார்க்கிறார்கள். ஆக, பெரும்பாலானவர்கள் பார்வையாளர்களாகவே வாழ்கிறார்கள். குத்துச் சண்டைப் போட்டி, மல்யுத்தப் போட்டி, கிரிக்கெட் மேச் - எதையும் விடுவதில்லை. பார்வையாளர்களாகவே வாழ்ந்து முடிக்கிறார்கள். வழிப்போக்கர்கள் கூட வீதி ஓரம் நிற்கிறார்கள் மற்றவர்களைப் பார்த்துக் கொண்டிருக்க. வாழ்க்கைப் பயணம் ஊர்வலம் போல் போகிறது. நீ பார்த்துக் கொண்டிருக்கிறாய்!

சிலர் அந்த வாழ்வுப் பயணத்தில் சேர்ந்து கொள்ளுகிறார்கள். கடினமான தொழில்தான். போட்டா போட்டி அதிகம். அப்பயண ஊர்வலத்தில் கலந்து கொள்ளுவது சிரமம்தான். போராட்டம், ஆக்கிரமிப்பு அவசியப்படும். பயண ஊர்வலத்தை வேடிக்கை பார்க்கும் அன்பர்களும் தேவைதானே? இரு மருங்கிலும் நின்று பார்க்கிறார்கள். அவர்கள் இல்லாவிட்டால் ஊர்வலம் விலகி விடைபெற வேண்டும்.

நீ சிந்தித்துப் பார்! பின் தொடரத் தொண்டர்கள், அன்பர்கள் இல்லாவிட்டால் தலைவன்கள் கதி? தனி ஆளாக நின்று கொடி பிடித்து வாழ்த்தொலி, ஆர்ப்பொலி எழுப்பினால் பைத்தியம் என்பார்கள்.

பின்தொடர, ஓரத்தில் நின்று பார்க்க ஆதரவாளர்கள் கூட்டம் தேவை. அப்போது பைத்தியமும் சிறப்பானவனாகத் தோன்றுவான். ஆர்வலர்கள் வந்து குழுமியிராது போனால் கிரிக்கெட் மேச் எடுபடுமா? உயிர்போன மாதிரி இருக்கும். மேச்சின் ஜீவன் மேச்சில் இல்லை, பல்லாயிரக் கணக்கில் கூடியிருக்கும் பார்வையாளர்களிடம் தான் உள்ளது உயிரோட்டம்.

மனிதன் ஒரு அதிசயப் பிறவி. மனிதர்கள் ரேஸ்கோர்ஸில் குதிரைப் பந்தயம் பார்க்கப் போகிறார்கள். கோரே காம் பார்க் பகுதி பூராவும் குதிரைப் பந்தயம் பார்ப்பவர்களின் குடியிருப்புகள் நிரம்பியது. கவலைப்படும் விசயம் இது. மனிதர்களின் ஓட்டப் பந்தயத்தைப் பார்க்க எந்தக் குதிரையும் ஆசைப்பட்டு வருவதில்லை. குதிரைகள் ஓடும்போது பார்த்துக் குதூகலிக்க மனிதர்கள் கூடுகிறார்கள். குதிரைகளைவிட மட்டமானவர் மனிதர்கள் எனும் நிலை ஏற்பட்டு விடுகிறது.

பார்த்துக் கொண்டிருக்கும் போதே வாழ்க்கை கடந்து விடுகிறது; பார்வையாளனாக...!

நீ சுய வாழ்வில் காதலிப்பதில்லை, ஆனால் திரைப்படத்தில் காதல் ஜோடி ஆடிப்பாடிக் காதலிப்பதைக் கண்டு களிக்கிறாய். நீ நடனமாடத் தெரியாதவன்; மற்றவன் ஆடினால் வேடிக்கை, பார்ப்பாய்! உனக்குப் பாட வராது, பிறர் பாடினால் சுகமாய் செவி சாய்ப்பாய். உன் வாழ்க்கை ஆண்மை இழந்ததாகி விட்டால்? உன் வாழ்விலிருந்து உயிர்ப்புச் சக்தி தொலைந்து போனால்? ஆச்சரியப்பட முடியாது. உன் வாழ்வில் நல்ல இயக்கம் இல்லை, மனவலிமை பெருகவில்லை. நீ சவம் போல் உட்கார்ந்திருக்கிறாய். உன் சகல வேலையும் இதுதான் - எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிரு. பிறர் காட்டுவார்கள், நீ அதைப் பார்த்துக் கொண்டிருப்பாய்!

இந்த இரு தரப்பினர்கள்தாள் உலகமெங்கும் பரவியிருக் கிறார்கள் - காட்டுபவர் - காண்பவர்; இரு சாராரும் பரஸ்பரம் பந்தப்பட்டவர்கள்.

உளவியல் அறிஞர்கள் கூறுகிறார்கள், "உலகில் ஒவ்வொரு நோய்க்கும் இருதரப்புகள் உள்ளன." அவ்வறிஞர்கள் ஒரு

வகைப்பட்ட மனிதர்களை மைஸோசிஸ்ட் (சுயதுக்கவாதிகள்) எனக் குறிப்பிடுவார்கள். அம்மனிதர்கள் தம்மையே வருத்திக் கொள்பவர்கள். மற்றொரு வகை மனிதர்கள் ஸேடிஸ்ட் (பிற துக்கவாதிகள்- பிறரை வருத்துபவர்கள்). இரு வகைப்பட்டவர்களும் சமுதாயத்திற்குத் தேவை. இரு சாராரும் சேர்ந்து கொண்டால் கொண்டாட்டம், கும்மாளம், களேபரம்!

உளவியல் அறிஞர்கள் (மனத் தத்துவ வித்தகர்கள்) கூறுவார்கள், "பிறரை வருத்தும் இயல்பு கொண்ட கணவன், தன்னையே வருத்திக் கொள்ளும் மனைவி - இருவரின் ஜோடிப் பொருத்தம் பிரமாதம்! ஒப்பற்ற இணைப்பு இது. குருடும் முடமும் இணைந்த மாதிரி, சரியான ஜோடிப் பொருத்தம்!

ஒவ்வொரு நோய்க்கும் இரு பக்கங்கள் இருக்கும். காட்சிப் பொருள் (காணத்தக்கது), காண்பவன் ஒருநோய்க்கு இரு பக்கங்கள். பெரும்பாலும் பெண்கள் காட்சிப் பொருளாக (த்ருச்ய - காணத்தக்கவர்) இருப்பதை விரும்புகிறார்கள். ஆண்கள் பார்வையாளர்களாக (தர்ஷக் - காண்பவர்) இருக்க ஆசைப்படுகிறார்கள். மனத்தத்துவ வித்தகர் பெண்களை 'எக்ஸிபிஷனிஸ்ட்' (பகட்டு விளம்பரப் பிரியர்) என்பர். பெண்களுக்குக் காட்சிப் (கவர்ச்சி) பொருளாக இருப்பதில் ஆவல் அதிகம்.

முல்லா நஸருத்தீன் ஈக்களை வேட்டையாடிக் கொண்டிருந்தார். நிறைய ஈக்கள் சேர்ந்தன. மனைவி சொன்னாள், "இவைகளை விரட்டி அடியுங்க!" பெரிய கண்ணாடி எதிரில் அமர்ந்து ஈ வேட்டை ஆடிக் கொண்டிருந்தவர் சொன்னார், "வெகு நேரமாக இரு பெண் ஈக்கள் இங்கே உட்கார்ந்திருக்கின்றன.

மனைவி சாடினாள், "எப்படித் தெரிந்தது உமக்கு இதுகள் ஆணா, பெண்ணா என்று? கதைக்கிறீரா?" முல்லா சொன்னார், "ஒரு மணி நேரமாய் இவை கண்ணாடி எதிரில் உட்காந்திருக்கின்றன் - பெண் ஈக்களாகத்தான் இருக்க வேண்டும். ஆண் ஈக்களுக்கு இங்கே என்ன வேலை?"

பெண்களின் கண்ணாடி உறவு மிக நெருக்கமானது. விரைவில் விடுபடாது. கண்ணாடி பெண்களைக் காந்தக்கல் மாதிரி தன் பக்கம்

இழுத்துக் கொள்ளும். வாழ்நாளில் பெரும் பொழுது கண்ணாடி எதிரில் கழிந்துவிடும். ஆடை அணிய, நகை அணிய, ஒப்பனை செய்து கொள்ள, அலங்கரிப்பைச் சரிபார்க்க - இப்படியே காலம் போகும். இது பெரிய சள்ளை பிடித்த விசயம்.

பெண் நிறைய நேரம் செலவிட்டு அலங்கரித்துக் கொண்டு வெளியே போகும்போது, யாராவது மேலே இடித்து விட்டால் கோபம் வரும்; அப்படி எவராது இடிக்காமல் போய்விட்டால் வருத்தம் வரும். பிறர் ஏறிட்டுப் பார்க்க, மேலேவந்து இடிக்க வேண்டித்தான் இத்தனை அலங்கரிப்பும். இடிபடா விட்டால் இதெல்லாம் வீண்தானே? இவ்வளவு மெனக்கெட்டு ஒப்பனை செய்து என்ன ஆதாயம்? மனைவிகள் கணவன்மாருக்கு எதிரில் ஆடை அணி அலங்காரத்துடன் வந்து தோன்றுவதில்லை, காளி வேடம் போடுவார்கள். அங்கு இடிப்பு, உரசல், மோதல் எல்லாம் முடிந்து போனவை. வீட்டை விட்டு வெளியே போகும்போது புதிய வாய்ப்பு, எதிர்பார்ப்பு, ஈர்ப்பு எல்லாம் கிட்டும். கண்டு மகிழும் 'தர்சகர்' (காண்போர்) இருப்பார்கள். அங்கே தானே காட்சிக் கவர்ச்சிக்கு மதிப்புக் கிட்டும்.

மனிதனை - ஆண்மகனை 'வொயூர்' என்பர் மனவியல் வித்தகர்கள். அவனது நோக்கு, பார்வை எல்லாம் காண்பதிலேயே, ரசிப்பதிலேயே ஈடுபட்டிருக்கும். பெண்களுக்குப் பொதுவாகப் பார்ப்பதில் ரசனை, ஆர்வம் இருப்பதில்லை. காட்டுவதில் - காட்சிக் கவர்ச்சியாகக் காட்டிக் கொள்வதில் தான் சுவை அவா, அக மகிழ்வு அதிகம். இதனால் தானோ என்னவோ, ஆண்-பெண் இணைப்பு அமைக்கப்பட்டுள்ளது - சரி நிகர் சமான ஜோடி! நோயின் இரு அமைப்பு நிலைகளும் ஒருங்கிணைந்து ஒன்றியுள்ளன. இரு நிலைகளுமே நோய்வயப்பட்டவை.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "மனிதனின் சுபாவம் 'த்ரஷ்டா'வினுடையது - நோக்கனுடையது. காட்சிப் பொருளாகவோ (த்ருஷ்ய), வேடிக்கை பார்ப்பவனாகவோ (த்ரஷக்) இருப்பதல்ல."

இதை நீ எக்காலத்திலும் மறக்காமல் இரு! பல முறை நான் பார்த்திருக்கிறேன் - சிலர் இந்த நிசத்தை மறந்து விடுகிறார்கள்.

அவர்கள் நினைத்துக் கொள்ளுகிறார்கள், "நாம் 'தர்ஷக்' (பார்ப்பவர்) ஆகியதால், மேலான 'த்ரஷ்டா' (நோக்கர்)வாக ஆகிவிட்டோம்" என்று. இந்த இரு சொற்களிடையே (தர்ஷக், த்ரஷ்டா) அடிப்படை பேதம் உள்ளது. சொல்லகராதியில் பேதம் குறிக்கப்படாதிருக்கலாம்; இரு சொற்களுக்கும் ஒரே பொருள் தரப்பட்டிருக்கலாம். ஆனால் வாழ்வியல் அகராதியில் இரு சொற்களுக்கும் நிறைய வேறுபாடு உள்ளது.

'தர்ஷக்' (காண்பவன்) - இவனது பார்வை பிறர்மீது இருக்கும். 'த்ரஷ்டா' (நோக்கன்) தன்னை, தன்னுள் நோக்குபவன். இவனது பார்வை பிறர்மீது படராது. தம்மையே பார்த்திருப்பான். தம் பார்வையைக் காட்சிப் பொருள்மீது படரவிடுபவன் தர்ஷக். புரட்சிகரமான பேதம் இது. அடிப்படை வித்தியாசம். உன் பார்வை பிற காணத்தக்கதில் நிலைக்கும்போது, நீ உன்னையே மறந்து விடுகிறாய், சுய பிரக்ஞையை இழக்கிறாய் - நீ தர்சகன் (காண்பவன்). எப்போது உன் நோக்கு (கூர்ந்து நோக்குதல்) புறக்காட்சிகளிலிருந்து விலகி இருக்கிறதோ, நீ நீயாகவே இருக்கிறாயோ, விழிப்புணர்வு, சுயபிரக்ஞை சஞ்சலமில்லாமல் இருக்கிறதோ, அப்போது நீ 'த்ரஷ்டா' (நோக்கன்).

ஆக, நீ உன்னையே மறந்து, துறந்து, பிறர்மீது பார்வை செலுத்தி இருக்கிறாயோ, அப்போது தர்சகனாகி (பார்வையாளன்) விடுகிறாய். திரைப்பட அரங்கில் அமர்ந்திருக்கிறாய், படம் முடிவடையும் வரை - மூன்று மணிநேரம் - தன்னையே மறந்து இலயித்திருக்கிறாய். நீ யார் என்பது நினைவு வருவதில்லை. இன்ப - துன்ப நினைவுகள், கவலை - கற்பனைகள் எதுவும் எழுவதில்லை. இதற்காகத்தான் கூட்டம் கூடுகிறது திரை அரங்குகளில்.

நடைமுறை வாழ்க்கையில் சனங்களுக்கு துக்கம், துன்பம், கவலை, தொல்லை இருக்கும்; இவைகளை மறக்க வழிகாண வேண்டியிருக்கிறது. சனங்கள் அவைகளை மறந்து மனம் ஒருமுகப்பட திரைப்படம், நாடகம், கூத்து என்று போகிறார்கள். மனம் அதில் இலயித்து விடுகிறது. கவலை - தொல்லைகள் மறந்து போகின்றன. பார்வையாளராக அதில் ஒன்றிப் போகிறார்கள். சினிமாத் திரையில் நிழல்கள் ஆடுகின்றன, மக்கள் அதில் இலயித்துப்

போகிறார்கள். நோய் நொடி மறந்து போகிறது; கவலை, முதுமை, தொல்லை எல்லாம் மறந்து போகிறது. சாவே சம்பவித்தாலும் மறந்து போகும். அங்கு நீ 'த்ரஷ்டா' இல்லை, 'தர்சகன்'. தன்னை மறந்தாய், சுயத்தன்மையை மறந்தாய், உள்ளுணர்வு, சுயபிரக்ஞை, சுயநினைவு - சகலத்தையும் மறந்திருக்கிறாய்! எதிரே தெரியும் காட்சியில் ஒன்றிப் போயிருக்கிறாய், மூழ்கிப் போயிருக்கிறாய்!

பார்வையாளனாக (தர்ஷக்) இருப்பது தன்னையே மறப்பது. நோக்கனாக (த்ரஷ்டா) இருந்தால் எதிரே காட்சிகள் தென்படாது; திரை, நிழல் தெரியாது. படம் ஓடாது. எந்த எண்ணமும், கருத்தும், உரையாடலும் உன்னை அண்டாது. சூனிய வெளிதான் இருக்கும். வெறும் வெள்ளைத்திரை மட்டுமே தெரியும். பார்ப்பதற்கு எதுவும் இராது. நோக்குபவன் மட்டுமே இருப்பான். நீ உன்னையே, உன்னுள் ஆழ்ந்து நோக்குபவனாகிறாய் - நீ அசல் 'த்ரஷ்டா'வாகியிருக்கிறாய்.

காட்சி - காண்பவர் இடையே மனித சமுதாயம் இயங்குகிறது. எப்போதாவது, எங்காவது நிஜ த்ரஷ்டா தோன்றுகிறான் - அஷ்டாவக்கிரனாக, கிருஷ்ணனாக, சமண மகாவீரராக, புத்தர் பிரானாக. விழிப்புணர்வு மாறாத நிஜ த்ரஷ்டாக்கள் இவர்கள். எப்போதாவது விழித்திருப்பவனாக, நோக்கனாக ஒருவன் இருப்பான்.

அஷ்டாவக்கிர சூத்திரம் - "நீ சகலத்திற்கும் ஒரு த்ரஷ்டா (நோக்கன்)."

இந்த சூத்திரத்தின் சிறப்பான கருத்துக்கள் இவை - நீ நோக்கனாகி விட்டால் எல்லாம் உனக்குப் புலப்படும், அறிந்து கொள்ள இயலும். உலகில் நிஜமான நோக்கன் அரிதாகத்தான் தோன்றுவான், பலர் தோன்ற மாட்டார்கள், காட்சிகள், காண்பவர்கள் ஏராளம். பன்மை பலவகை நிலைதான் காட்சிக்கும் காண்பவனுக்கும் இடையே நிலவுகிறது. இது மாயவலை, பொய்யான நிலை. இலட்சிய நோக்கன் (த்ரஷ்டா) ஒருவனாகத்தான் இருப்பான்.

கற்பனை செய்து பார், வானில் முழுமதி ஒளிர்கிறது - பௌர்ணமி சந்திரன். குளம், தடாகம், ஏரி, கடல், அருவி, நதி என எல்லா நீர்நிலைகளிலும் பூர்ணசந்திர பிம்பம் பிரதிபலிக்கிறது. நீ

உலகம் முழுவதும் சுற்றிப் பார்த்து எவ்வளவு நீர்நிலைகளில் எத்தனை சந்திரபிம்பம் புலப்படுகிறது எனக் கணக்கிட்டால், பலகோடி பிம்பங்கள் கிட்டும். ஆனால் பூரண சந்திரன் ஒரே காட்சிதான். இதை உணர்ந்து நோக்குபவன் ஒருவன்தான் இருப்பான். இங்கு பிரதி பிம்பங்கள் (காட்சிகள்) அனேகம், காண்பவர்களும் பலர். அக்காட்சிப் பொருள்கள் பிரதி பலிபலிப்புகள் நிழல்கள் மட்டுமே.

ஒருவன் காட்சி காண்பவனின் நிலைகளிலிருந்து விடுபடுகிறானோ, அப்போது பிறர் தன்னைப் பார்க்க வேண்டும் என்கிற அவா, பிறரைத் தான் பார்க்க வேண்டும் எனும் ஆவல் விலகி விடுகின்றன. பார்க்கவும், பார்க்க வைக்கவுமான மாயவலை ஒதுக்கப்பட்டு விடுகிறது. அந்த அவா, ஆவல் விடுபட்டால் வைராக்கியம் (பற்றின்மை) ஏற்படுகிறது. எவரும் தம்மைப் பார்க்க வேண்டும், 'நீங்கள் அழகர், அறிஞர், பண்பாளர், ஞானி' என்றெல்லாம் பாராட்டிப் புகழ வேண்டும் என ஆசைப்படுவதில்லை.

அப்படி ஓர் ஆசை உன் உள்மனத்தில் இருந்தால் நீ பழையபடி அந்த மாயவலையில் சிக்கித் தவிப்பாய். உலகியல் வாழ்வுப்பிணைப்பு உன்னை விட்டு விலகவில்லை. உலகம் (சமுதாயம்) புதிய உருவில், உறவில் அணுகும். வாழ்க்கைப் பயணம் முன்பு இருந்தது போல்தான் இருக்கும், தொடரும். உறவுத் தொடர்பும் பழைய பந்தம்தான்.

சரி, காட்சிகளைக் கண்டு என்ன செய்வாய்? நிறைய, மாற்மாறிப் பார்த்தாகி விட்டது. என்ன கிடைத்தது? உன்னைக் காட்டி (காட்சிப் பொருளாக்கி) என்ன சாதிக்கப் போகிறாய்? என்ன இலாபம்? மற்றதைக் காட்டி ஆதாயம் பெறத்தக்கதாக எது இருக்கிறது?

இந்த இரு சுழல்களிலிருந்தும் (காட்சி, காண்பவர்) விடுபட்டு, அவற்றின் ஆதிக்கத்திற்கு, சிக்கல்களுக்கு ஆட்படாமல் விலகி, எவன் (இலட்சிய புருஷன்) 'த்ரஷ்டா' ஆளுமைக்குள் புகுகிறானோ, அவன் தன்னை ஒருவனாக - ஒப்பற்றவனாக உணர்ந்து கொள்ளுகிறான். பௌர்ணமி சந்திரன் ஒன்றுதான். பல்வகை நீர்நிலைகளில் பலபல உருவங்களாகத் தோற்றுகிறது. பிரதிபலிக்கும் கண்ணாடிகள் பலவாறாக உள்ளன; அதனால்தான் பிரதிபலிப்பு உருவங்களும் பலப்பலவாகத் தோற்றுகின்றன.

ஓர் அரிய அரண்மனை. பேரரசர் கண்ணாடிகளாலேயே அதை நிருமாணித்தார். கண்ணாடி மாளிகை. சம்ராட்டின் வளர்ப்பு நாய் இரவில்அம்மாளிகைக்குள் அடைபட்டது. அதன் நிலைமையை உன்னால் ஊகிக்க முடிகிறதா? அந்தப் பரிதாபப் பரிதவிப்பு நிலைதான் அஞ்ஞானி மனிதனுக்கும். நாய் நாலா பக்கமும் பார்த்தது. எல்லா பக்கமும் நாய்கள், நாய்கள். ஒவ்வொரு கண்ணாடிப் பகுதியிலும் நாய். நாய் நடுங்கிப் போனது. குரைத்துக் குரைத்து அரண்டு அல்லோலப்படுத்தியது.

மனிதன் பயப்படும்போது பிறரையும் பயப்படுத்த முற்படுகிறான். பிறரும் தன்போல் பயந்தால் தன்பயம் குறையும் என நினைக்கிறான்.

நாய் குரைத்துக் கொண்டேயிருந்தது, எதிரே கண்ணாடிகள். அவற்றில் பிரதிபலிக்கும் நாய்களும் தொடர்ந்து குரைத்தன. அசல் நாய் தன் குரலின் எதிரொலிப்பைக் கேட்டு அரண்டுவிட்டது. தீனமாகக் குரைத்துக் கொண்டே இருந்தது. இதே போல் மனிதனும் பயந்து தவிக்கும்போது பிறரையும் பயந்து தவிக்க வைக்கிறான். பிறரும் தன்னைப் போல் பயந்து தவிக்க வேண்டும் என விரும்புகிறான். அப்போதுதான் தாம் படும் பயவேதனை குறையும் என நினைக்கிறான்.

அந்த நாய் குரைத்தது. எதிரே கண்ணாடிகள். அவற்றில் பிரதிபலிக்கும் நாய்களும் குரைத்தன. இது இயல்புதான். குரைக்கும் அசல் நாய்க்கே எதிரொலி வந்து சேருகிறது. அதன் எதிரொலி அது. இரவு பூராவும் குரைத்துக் கொண்டிருந்தது. அங்குமிங்கும் ஓடியது. கண்ணாடிகள்மீது மோதியது. காயப்பட்டு இரத்தம் வழிந்து வலித்தது. அங்கு வேறு எவரும் இல்லை. அது மட்டுமே தனியாக இருந்தது. காலையில் அது செத்துக் கிடந்தது. கண்ணாடி மண்டபம் முழுவதும் இரத்தக் கறைகள். மனிதனின் கதைதான் அந்த நாயின் கதையும்.

இங்கு உலகியலில் மற்றொருவன் இல்லை; அந்நியன் எவனும் இல்லை, இங்கு உள்ளது ஒன்று தான் (ஒருவன்தான்). அந்த ஒன்றை நீ அக உணர்வில் இணைத்துக் கொள்ளாது போனால், ஒருமை நினைப்பே ஏற்படாது.

'நீ எல்லாவற்றையும் உள்ளார்ந்து நோக்குபவன் (த்ரஷ்டா), எப்போதும் உண்மையாகவே முக்தன் (பந்தம் ஏதும் இல்லாத சுதந்திரன்).'

இதைத்தான் அஷ்டாவக்கிரர் உணர்த்துகிறார். "நீ நிசமாகவே முக்தி (விடுதலை) பெற்றவன்; இதைக் கற்பனை என எண்ணாதே!"

மனிதன் மிக விசித்திரமானவன், அற்புதமானவன். அவன் இவ்வாறு சிந்திக்கிறான். 'உலகம் (உலகியல் வாழ்வு) சத்தியமானது. ஆனால் இந்த சத்தியத்தின்பால் பட்ட எல்லாமே கற்பனைதான். துக்கம் ஏற்பட்டால் இது நிசம். உண்மை என நினைக்கிறான். சிறிது சுகம் ஏற்பட்டு விட்டால், 'இது கனவு. மாயம்' எனக் கருதுகிறான்.

என்னிடம் பலர் வருகிறார்கள். சத்சங்க பிரசங்கத்தில் பங்கேற்றபின், என்னிடம் கூறுகிறார்கள், "மிக்க ஆனந்த அநுபவம் ஏற்படுகிறது. கூடவே சந்தேகமும் எழுகிறது - இது பிரமையோ? ஜன்ம-ஜன்மாந்தரமாகத் துக்கம் - துன்பம் என்றே வாழ்ந்து வந்ததால், எப்போதாவது ஆனந்தம் ஏற்படும் எனும் நம்பிக்கை ஏற்படுவதில்லை; நம்பிக்கையை இழந்து விட்டோம். ஆனந்தம் ஏற்படுவது சாத்தியமில்லை எனத் தோன்றுகிறது. துக்கப்படுவதும், அழுது புலம்புவதும் வழக்கமாகி விட்டது. முட்களையே பார்த்துப் பழகியபின், மலர் தென்பட்டால் நம்ப முடியவில்லை. கனவோ? ஆகாசத் தாமரை போல் வெறும் கற்பனையோ? நிகழாது, நிகழ முடியாது!

இதனால்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "நீ உண்மையிலேயே முக்தன் - சர்வ சுதந்திரன். மனிதன் பந்தப்பட்டவனில்லை. பந்தம் (பிணைப்பு) நிகழ முடியாது. பரமாத்மா மட்டுமே உள்ளவர், அவர் ஒருவரே. கட்டுவதற்கோ, கட்டுப்படுவதற்கோ இங்கு எதுவும் இல்லை."

'நீ உண்மையிலேயே முக்தன் (பந்தமற்றவன்).'

இதனால்தான் அஷ்டாவக்கிரர் போன்றவர் கூறுவர், இந்தக் கணமே நீ விரும்பினால் முக்தனாகி விடுகிறாய். முக்திக்குத் தடை ஏதும் இல்லை. பந்தம் ஏற்படவே இல்லை. பந்த நினைப்புதான் பந்தப்பட்டதாகத் தோற்றுகிறது.

'உன் பந்தம் (பிணைப்பு) என்பது, நீ உன்னை விட்டு பிறரை 'த்ரஷ்டா' (நோக்கர்) என எண்ணுகிறாய்.'

**ஏகோ த்ரஷ்டா அஸி ஸர்வஸ்ய**
**முக்தப்ராயோ அஸி ஸர்வதா,**
**அயமேவ ஹி தே பந்தோ**
**த்ரஷ்டார்ரம் பச்யஸி இதரம்.**

நீ உன்னை விட்டுவிட்டு, பிறரை த்ரஷ்டாவாகக் கருதுகிறாயே, அதுதான் பந்தம். நீ உன்னையே த்ரஷ்டாவாக அறிந்து கொள், அதுவே முக்தி. இதைச் செயல்படுத்தத் தொடங்கு!

பார்க்கிறோமே, .... மரத்தின் அருகில் அமர்ந்திருக்கிறோம், மரம் கண்ணுக்குத் தெரிகிறது. மெள்ள மெள்ள மரத்தைப் பார்க்கிறோம் என்கிற உணர்வு திடப்படுகிறது. இதில் பரிமாற்றம் தேவை. பொதுவாக உணர்வு எனும் அம்பு மரத்தை இலக்காகக் கொண்டு செல்லுகிறது. அதைத் திரும்ப உன் பக்கம் வரச் செய். இரு பக்கமும் பயனடையட்டும் - இலக்கு, எதிர் இலக்கு. மரத்தையும், மரத்தைக் காண்பவனையும் உள்ளார்ந்து நோக்கு. பார்ப்பவனை (உன்னை) மறந்து விடாதே, விட்டு விடாதே. அடிக்கடி மறந்து போகும்; பல காலத்துப் பழக்கம் மறதி. ஆனாலும் தொடர்ந்து பார்ப்பவனைப் பிடித்துக் கொள். பார்ப்பவன் உன் பிடிக்குள் வந்து விட்டால் - சில சமயம் கணநேரம்தான் பிடிபடுவான் - அக்கண நேரத்தில் அபூர்வ சாந்தி (பேரமைதி) கிட்டும். அருளாசி பொழியும். சௌபாக்கியக் (நற்பேறு) கதிரொளி இறங்கும். அக்கணத்தில் முக்தி பெற்ற பேரானந்தம் கிட்டும். அது உன் வாழ்வின் சுவையை, போக்கை மாற்றி விடும். சொற்கள், சாத்திரங்கள் உன் வாழ்வின் போக்கை மாற்றா; அநுபூதி மாற்றும், நற்சுவை உணர்வு மாற்றும்!

இங்கு என் பிரவசனத்தை (சொற்பொழிவு)க் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இருவகையாகச் செவிசாய்க்கப்படுகிறது. என் விளக்கவுரையைக் கேட்கும் போது தன்னை மறந்து என் கருத்தில் கலந்திருப்பது முதல் வகை. இரண்டாவது வகை, என் உருவத்தைப் பார்த்துக் கொண்டு, என் பேச்சைக் கேட்டுக்கொண்டு மனம் உன்னையே நினைத்திருப்பது - எதிலும் ஒன்றிப் போகாமல் மிதப்பது.

என் உரையாடலில் உன் முழுக்கவனமும் இருக்க, உன்னையே நீ மறந்துபோக, ஒன்றியிருந்தால், நீ த்ரஷ்டா (நோக்கர்), ச்ரோதா (கவனமின்றிக் கேட்பவன்), ச்ராவக் (கவனமாய்க் கேட்பவன்), நிலைகளைக் கடந்தவன்; நீ அவர்கள் இல்லை. உன் கவனம் என்மீது நிலைத்திருந்தால் தர்சக் (பார்வையாளன்) ஆகிறாய். கண்ணால் காண்பவன் மட்டுமல்ல, காதால் கேட்பவனும் தர்சக் (பார்வையாளன்) ஆகிவிடுகிறான். உன் முழுக்கவனமும் கருப்பொருளில் ஒன்றி விடுகிறதோ, அப்போது நீ ச்ராவக் (கவனமாய்க் கேட்பவன்) ஆகிவிடுகிறாய்.

என் சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது கருத்தில் கவனமிருக்கட்டும். கூடவே கேட்கும் உன்னிடமும் (சுய ஆளுமை) கவனமும், சிந்தனையும், பிடிமானமும் இருக்க வேண்டும். நான் சொல்லுகிறேன், நீ கேட்கிறாய். சொல்பவனிடம் மட்டும் கவனம் பதிந்திருக்கலாகாது. கேட்பவனையும் (உன்னை உன் சிந்தனையை) பற்றிக் கொண்டிரு. விலக விடாதே. இதை அடிக்கடி சோதித்துப் பார். போகப் போக நீயும் நானும் - என் பேச்சும் உன் ஆழ்மனமும் - ஒன்றிப்போகும், மற்றவை வீண் என உணர்வாய். அப்போதுதான் என் பேச்சு, கருத்து மட்டும் உன்னால் உணரப்படும்; என் பேச்சு மட்டுமே உன் காதில் விழும். நீ கேட்பவனை (உன்னைப்) பற்றிக் கொள்ளாது போனால் தொடர்பில்லாத ஏதேதோ உன் காதில் வந்து விழும் - நானோ அஷ்டாவக்கிரரோ கூறாததெல்லாம் விழும். அப்போது உன் மனம் சிலந்தி வலைகளைப் போல் தாறுமாறாக எண்ண ஜாலங்களை உருவாக்கும்.

நீ மயக்கத்தில் இருக்கிறாய். மயக்க நிலையில் எப்படி நினைவு நிலை நிகழ்வுகளை, பேச்சுக்களை அறிய முடியும்? வேறொரு பின்புலத்தில் நிகழ்ந்தவை - நிஜ நிகழ்வுகள். இவற்றைத் தூக்கத்தில் கேட்டாலோ, கண்டாலோ, கனவுகளாகப் புனைந்து கொள்ளுவாய். நனவு நிலையில் அவற்றைக் கெடுத்து விடுவாய், பூசி மெழுகுவாய். உன் தரத்தில் கனவுகளுக்கு அர்த்தம், விளக்கம், வியக்கியானம் செய்து கொள்ளுவாய். உன் சுய விளக்கத்தில் அஷ்டாவக்கிரரின் அற்புதமான சொற்கள் சவம் போலாகி விடும். அவரும் சடலமாகத்தான் உனக்குக் கிட்டுவார். உயிருள்ள ஞானபிரகாசமுள்ள அஷ்டாவக்கிரரை நீ இழப்பாய். அந்த மெய்ஞான குருவை அடைய நீ உன்

'த்ரஷ்டா'வைப் பற்றிக் கொள்ள வேண்டும். அங்குதான் ஜீவித தசையில் அஷ்டாவக்கிரர் இருக்கிறார்.

இதை நினைவில் வைத்திரு!

நீ என் அறிவுரையைக் கேட்டுக் கொண்டிருக்கிறாய். கூடவே கேட்பவனை உன் மனக் குரலையும் கேள். அம்பு எய்தல் இருபக்கமும் நிகழ வேண்டும். நீ இலக்கு நோக்கி எய்ய, இலக்கு உன்னை நோக்கி எய்ய என, அம்பெய்தல் பரஸ்பரம் நிகழ வேண்டும். நான் உன்னை நோக்கியும், நீ என்னை நோக்கியும், அம்பெய்வதாக இருக்க வேண்டும். நான் இதை மறக்கலாம், நீ மறக்கலாகாது. ஒரு தருணத்தில் நாம் இருவருமே இருக்க மாட்டோம். அப்போது பரம சாந்தி (பேரமைதி) கிட்டும். இருவர் அல்லர், ஒருவனே எனும் சித்த நிலை ஏற்படும். நீயே பேசுகிறாய், நீயே கேட்கிறாய் - சொல்பவன், கேட்பவன் இருவரும் ஒருவன்தான். நீ பார்க்கிறாய், நீயே பார்க்கப்படுகிறாய். இத்தருணத்தைக் குறிப்பிடுகிறார் அஷ்டாவக்கிரர். "அவன் ஒருவன்தான் த்ரஷ்டா, எப்போதும் உண்மையாகவே முக்தன் அவன்."

பந்தம் (பிடிப்பு) கனவு போன்றது.

இன்று இரவு நீ புனா நகரில் தூங்குவாய்; தூக்கத்தில் நீ கல்கத்தாவில் இருப்பதாக உணரலாம், தில்லியில் இருக்கலாம், நேபாளத்துக் காத்மந்துவில்கூட இருக்கலாம். எங்கு வேணுமானாலும் நீ இருக்கலாம். காலையில் தூங்கி எழுந்ததும் நீ புனாவில் இருப்பதை அறிவாய். தூக்கத்தில் (கனவில்) காத்மந்து போயிருந்தால், திரும்பி புனா வர நீ விமானப் பயணம் செய்ய வேண்டாம், ரயிலில் வரவேண்டாம். பயணமே செய்ய வேண்டியிராது. காலையில் எழுந்ததும் புனாவில் இருப்பதையும் எங்கும் வெளியூர் போகவில்லை ஏன்பதையும் உணர்ந்து கொள்ளுகிறாய். கனவில் பயணிப்பது பயணமாகுமா? வேறு இடத்தில் இருந்தது நிசமா?

"பந்தம் ஒன்றுதான். அது உன்னைவிட்டுப் பிறரை 'த்ரஷ்டா' (நோக்கர்) எனப் பார்ப்பதுதான்."

ஒரே பந்தம் தன்னைப் பற்றியும் உணராமல் நான் த்ரஷ்டா என்கிற சுயபிரக்ஞையும் இல்லாதிருப்பதுதான் அஷ்டாவக்கிரர்

சூத்திரத்திற்கு இதோர் அர்த்தம். மற்றொரு அர்த்தமும் உள்ளது. அதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

பொதுவாக, அஷ்டாவக்கிரரைப் பற்றி விளக்க உரை எழுதியிருப்பவர்கள் வேறு விதமாகப் பொருள் உரைத்திருக்கிறார்கள். அதையும் நாம் அறிந்து கொள்ள வேண்டும். அதுவும் சரியான பொருளுரைதான்.

"உனக்குள்ள பந்தம் (கட்டுப்பாடு) நீ உன்னைத் தவிர்த்து வேறொருவரை 'த்ரஷ்டா'வாகக் கருதுகிறாய்.

என் பிரசங்கத்தை நீ கேட்டுக் கொண்டிருக்கிறாய். உன் காது கேட்பதாக நினைக்கிறாய். நீ என்னைப் பார்க்கிறாய். உன் கண் பார்ப்பதாக நினைக்கிறாய். கண் எப்படி சுயமாகப் பார்க்கும்? கண்ணை 'த்ரஷ்டா' (நோக்கன்) எனக் கருதுகிறாய். இது தவறு. கண்ணுக்கும் காதுக்கும் பின்னால் செயலாளனாக, பயனாளியாக நீ இருக்கிறாய்.

நீ என் கையைத் தொடுகிறாய். உன் கை என் கையைத் தீண்டுவதாக நினைக்கிறாய். இது தவறு. தொடுபவன் (நீ) கைக்குப் பின்னால் இருக்கிறான். வெறுங்கை தொடுமா? நாளைக்கே நீ மரிக்கலாம். உன் சவம் கிடத்தப்பட்டிருக்கும். சனங்கள் கையைக் கட்டிக் கொண்டு எதிரே உட்கார்ந்திருப்பார்கள். உன் கையைத் தொட்டாலும் தொடு உணர்ச்சி உனக்கு (சவத்திற்கு) ஏற்படுமா? கண்கள் திறந்தபடி சவம் கிடக்கும். எதிரே எல்லாம் புலப்படும். உன் விழிகளுக்கு எதுவும் புலப்படாது. சடலம் கிடக்கும்; ஒப்பாரிப் பாடல்கள் முழங்கும், செவிப் பறை அதிர பேண்டு வாத்தியம், தாரை தப்பட்டை ஒலிக்கும். சவத்திற்கு எதுவும் கேட்காது. கேட்பவன், பார்ப்பவன், உணர்வு உள்ளவன் போய் விட்டான்.

புலன்கள் சுயமாக உணர்வதில்லை. உணர வைக்க பின்புலத்தில் ஒருவன் இருக்கிறான். அவன் உறுதுணையாக உடன் இருக்கும் வரையில் புலன்கள் இயங்கும்.

இந்த சூத்திரத்திற்கு இரண்டாவது பொருள் - நீ உன்னை 'த்ரஷ்டா'வாக அறிந்துகொள். உன் சரீரத்தை, அங்கங்களை த்ரஷ்டாவாக எண்ணாதே. அகத்துள் இயங்கும் சைதன்யத்தை 'த்ரஷ்டா'வாகக் கருது.

“நான் ‘கர்த்தா’ (செயலன்)’ என நினைக்கும் அகங்கார சர்ப்பத்தால் கடிபட்டவன் நீ. ‘நான் செயலாளி (கர்த்தா) இல்லை’ எனும் நம்பிக்கை அமுதத்தைப் பருகி சுகமாய் இரு! இதைத்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார். “நான் கர்த்தா எனக் கர்வப்படும் கருநாகத்தால் தீண்டப்பட்டவன் நீ...”

நம் கோட்பாடு, நம்பிக்கைதான் எல்லாம். அவற்றின் கனவுகளில் நாம் உழல்கிறோம். நாம் எப்படி எண்ணுகிறோமோ, அப்படியே ஆகிவிடுகிறோம். இது தீவிரமாகச் சிந்திக்க வேண்டிய விசயம். இது கீழை நாட்டு சுய அனுபவத்தின் சாரம். நாம் நம்மை எப்படி மதிக்கிறோமோ, கருதுகிறோமோ, அப்படியே ஆகிவிடுகிறோம்.

நீ எப்போதாவது அறிதுயில் மனவசிய நிபுணரை (ஹிப்னாடிஸ்ட்) செயல்படும்போது பார்த்திருக்கிறாயா? பார்த்திருந்தால் திகைத்துப் போயிருப்பாய். அந்த நிபுணர் ஓர் ஆளை மயங்க வைத்து, “நீ பெண், எழுந்து நட!” என்று சொன்னால், அந்த ஆண் பெண் மாதிரி நடந்து போகிறான். ஆண், பெண் போல் நடை போடுவது கஷ்டம். அதற்கு வேண்டிய உடலமைப்பு தனி. வயிற்றில் கருப்பை இருக்க வேண்டும். அப்போதுதான் பெண்ணாக நடந்து செல்ல முடியும். இதற்காக நிறையப் பயிற்சி எடுத்துக் கொண்டால், ஓரளவு நடக்க முடியும். மனவசிய நிபுணர் ஒரு மனிதனைப் படுக்க வைத்து உறங்க வைத்து, மயங்க வைத்து உரையாடுவார். அவர் உத்தரவிடுவார். “எழுந்திரு! நீ பெண், பெண்ணாகி விட்டாய். நடந்து போ!” உடனே அவன் பெண் போல நடக்கத் தொடங்குவான்.

அந்த நிபுணர் அம்மனிதனிடம் அறிதுயில் நிலையில் பெரிய வெங்காயத்தைக் கொடுத்து, “இது ஆப்பிள், நாஷ்தாவாகச் சாப்பிடு!” என்பார். அவன் கடித்துத் தின்பான். “எப்படி இருக்கிறது?” எனக் கேட்பார். “ரொம்ப இனிப்பாய், சுவையாய் இருக்கிறது” என்பான். அவனுக்கு அது வெங்காயம் என்ற உணர்வே இராது. வெங்காய நெடி நாற்றமும் தோன்றாது.

மனவசிய நிபுணர்கள் பல இடங்களிலும் அநேகம் நபர்களிடம் சோதனை செய்து பார்த்திருக்கிறார்கள். செய்தும் வருகிறார்கள். விஞ்ஞான முறையில் சோதிக்கப்பட்டுள்ளது. இதுபற்றிப் பல

ஆராய்ச்சிகள் நடந்துள்ளன. மனவசியம் மூலம் மயங்க வைத்திருக்கும் நபரின் உள்ளங்கையில் கூழாங்கல்லை வைத்து, 'இது தீத்தணல்' என்பார். உடனே அவன் சூடு தாங்காமல் அலறியபடி அதை வீசி எறிவான். "கை வெந்து விட்டது" எனக் கத்துவான். இது பேச்சோடு நிற்காது. அவன் உள்ளங்கை நிசமாகவே வெந்து புண்ணாகிக் கொப்பளித்திருக்கும்!

நீ கேள்விப்பட்டிருப்பாய், தீமிதி கொண்டாடுவார்கள். தீத்தணல்கள் பரப்பிய குழியில் நேர்த்திக்கடனாக நடந்து போவார்கள். இதுவும் மனவசியத்தின் ஆழ்ந்த நிலைப்பாடு. நீ உள்மனத்துள் 'தீ என்னைச் சுடாது' என்று நம்பினால் உன்னைச் சுடாது. நம்பிக்கை முக்கியம். கொஞ்சம் சந்தேகம் இருந்தாலும் சங்கடம்தான். தீத்தணல் சுட்டுவிடும். இப்படிப் பலமுறை நிகழ்ந்திருக்கிறது. சிலர் தைரியமாக, தன்னம்பிக்கையுடன் தீமிதியில் நடந்து போகிறார்கள். 'இவர்கள் போகும்போது நானும் போய்ப் பார்க்கிறேன்' என்று தீக்குண்டத்தில் இறங்கியவர் உள்ளத்தில் சந்தேகப் பூச்சி குடைந்ததால் கால்கள் தீப்புண் பட்டு எரிச்சலடைந்தன. பரிதவித்துப் போனார்.

**ஆ**க்ஸ்போர்டு யுனிவர்சிட்டியில் தீமிதி பற்றி ஆராய்ந்தார்கள். ஸ்ரீலங்காவிலிருந்து சில புத்த பிட்சுகள் வரவழைக்கப்பட்டார்கள். அவர்கள் புத்த பூர்ணிமா திருநாளில் வருடந்தோறும் தீமிதியில் ஈடுபடுவார்கள். புத்தர்பிரானுக்கு நினைவஞ்ஜலியாக இதை விரதமாக மேற்கொள்வது வழக்கம். பொருத்தமான பூசனைச் செயல் இது. புத்தரின் கோட்பாடு, "நீ உடல் அல்ல, உடலைக் கடந்த உள்ளுறை ஜீவன் நீ" என்பதுதான். நாம் பௌதிக தேகம் இல்லை எனும்போது, நம்மை நெருப்பு எப்படிச் சுடும்?

பரமாத்மா கிருஷ்ணன் கீதையில் கூறியிருக்கிறார். "நெருப்பு உன்னைச் சுடாது, ஆயுதம் உன்னைத் துண்டிக்காது – **"நைனம் ச்சிந்தந்தி சஸ்த்ராணி, நைனம் தஹதி பாவக:!"** இப்படியாக, புத்த பூர்ணிமா தினத்தில் ஸ்ரீலங்காவில் பல புத்த பிக்குகள் தீக்குண்டத்தில் நடந்து போகிறார்கள் தீமிதி நோன்பாக. அவர்களை ஆக்ஸ்போர்டுக்கு வரவழைத்தார்கள். அங்கும் தீமிதி நிகழ்த்தப்பட்டது. இருபது பிட்சுக்கள் தீக்குண்டத்தின் மீது நடந்து போனார்கள். ஒரு பிட்சு தீக்காயம் பட்டு தவித்துப் போனார். இருபது பேர்கள் பக்திப்

பரவசத்துடன் வெப்பம் தீண்டாமல் நடந்து போயிருக்கிறார்கள். ஒருவருக்கு மட்டும் தீக்காயம் பட்டிருக்கிறது. ஆய்வு செய்தார்கள். அந்த பிட்சு இங்கிலாந்து சுற்றுப்பயணத் திட்டத்துடன் வந்தவர். அந்த ஆர்வத்தில் மூழ்கியிருந்தார். தீமிதிக்கான பக்தி பரவசம் ஈடுபாடு குறைந்தது. சந்தேகம், தயக்கம் இருந்தது. அதனால்தான் தீக்காயம் பட்டு விட்டது.

அன்று இரவு வேறொரு நிகழ்ச்சி. ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒருவர் அந்தத் தீமிதி நிகழ்ச்சியை முதல் முறையாக அன்றுதான் பார்த்தார். இதற்கு முன்பு இதுபற்றிக் கேள்விப்பட்டதும் இல்லை. அதைப் பார்த்ததும் அவருக்கு அதில் சிரத்தை, ஈடுபாடு, நம்பிக்கை பிறந்து விட்டது. உடனே எழுந்து எதிரிலிருந்த தீக்குழியில் இயல்பாக நடக்கத் துவங்கி விட்டார். நடந்தே தீக்குழியைக் கடந்து எதிரே போய் நின்றார். எந்தப் பாதிப்பும் இல்லை. தணல் சுடவில்லை, வெப்பம் தாக்கவில்லை.

அந்தப் பேராசிரியர் பௌத்தர் இல்லை; எந்த மதச் சார்பும் இல்லாதவர். தீமிதியின் நோக்கம், நெறிமுறை தெரியாதவர். பிக்குகள் தீமிதிக் குண்டத்தில் நடப்பதைக் கண்டு, அதில் சிரத்தை, ஈடுபாடு கொண்டார். உடனே எழுந்து நடந்து விட்டார். ஆனந்தக் கூத்தாடினார். பார்த்துக் கொண்டிருந்த பிட்சுகள் திகைத்துப் போனார்கள். புத்தர்பிரானின் அருளாசி இருந்தால் தீமிதியில் நடக்க முடியும் என்று நம்பினார்கள். இந்த மனிதர் பௌத்தர் இல்லை, ஆங்கிலேயர், எம்மதச் சார்பும் இல்லாதவர். சர்ச்சுக்குப் போவதில்லை. கிறிஸ்து காப்பாற்ற மாட்டார். புத்தரின் பாதுகாப்பும் இல்லை. தீமிதி மீது சிரத்தை, ஈடுபாடு மட்டுமே உறுதுணை.

நாம் சிரத்தை ஈடுபாட்டுடன் நம்பும்போது அப்படியே ஆகிவிடுகிறோம்.

“நான் ‘கர்த்தா’ எனக் கருதுகிறாய். இது செருக்கு. அகங்கார சர்ப்பம் உன்னைக் கடித்திருக்கிறது. நான் ‘கர்த்தா’ இல்லை - எனும் நம்பிக்கை அமுதம் போன்றது. இதைப்பருகி சுகமாயிரு!”

அஷ்டாவக்கிரரின் இந்த அறிவுரையை மறக்காதே. அவர் திரும்பத் திரும்பச் சொல்லுகிறார். ‘நீ சுகித்து ஆனந்தமாய் இருக்கிறாய்’ உடனடியாக நிகழும் நிலை இது.

'அஹம் கர்த்தா இதி' (நான் கர்த்தா எனும்) எண்ணம் கொண்டிருப்பதால் செருக்கு ஏற்படுகிறது. 'கர்த்தா' என்பது நமது கருத்துரு. இதனைச் சார்ந்து இதன் அளவிற்குச் செருக்கு உருவாகிறது. உன்னிடம் சிறப்பான செயல்பாடு இராது போனால் கர்வம் எப்படி எழும்? நீ பெரிய கட்டடத்தை உருவாக்குகிறாய், அதற்கேற்ப உனக்குக் கர்வம் ஏற்படும். நீ ஒரு சாம்ராஜ்யத்தையே உருவாக்கினால், அதற்கு ஏற்ப மகா கர்வம் ஏற்படும்.

அதனால்தான் உலகம் முழுவதையும் வெல்ல சில பைத்தியக்காரர்கள் முற்படுகிறார்கள். உலகை வெல்லவா போகிறார்கள்? எவன் ஜெயித்திருக்கிறான்? ஜெயித்த பகுதிகளைத் தக்க வைத்திருக்கிறானா? மாவீரர்கள் தோன்றுகிறார்கள், மறைகிறார்கள். எவனால் உலகம் முழுவதையும் வெல்ல முடிந்திருக்கிறது? உலகை வெல்லப் போவதாக சூளுரை விடுத்துப் புறப்படுகிறார்கள் - தன் அகந்தையைப் பிரகடனப்படுத்த. சூளுரையில், ''உலகை என் கைக்குள் அடக்குவேன்; சூழ்ந்து கொண்டு என் வசப்படுத்துவேன்; எல்லைகளை நிர்ணயிப்பேன், உலகமனைத்துக்கும் குழுமொழி (பரிபாஷை) சூட்டுவேன்'' எனக் கோஷமிடுகிறார்கள், கொக்கரிக்கிறார்கள்.

சிக்கெந்தர், நெப்போலியன், தைமூர், நாதிர்ஷாஹ் முதலான கிறுக்கர்கள் போர் வெறியோடு உலகம் ஆளப் புறப்பட்டார்கள். அவர்களிடம் எழுந்த ஆசை அகங்காரத்தின் அவல அவா.

உயர் பதவி பெற்ற எவனையாவது பார்த்திருக்கிறாயா? மந்திரி ஆனான், முதலமைச்சர் ஆனான். அப்போது அவன் நடவடிக்கையைக் கவனித்திருக்கிறாயா? பதவி பறிபோனபின் அவன் நிலையைப் பார்த்திருக்கிறாயா? பதவி நீக்கம் ஆனதும் அவனது பரிதாப நிலை படுமோசமாகி விடுகிறது. அதே ஆசாமிதான். ஏற்றம் இறக்கமானதற்குக் காரணம் அவனது கர்வம், நஞ்சுவெனச் செருக்கு. இதுதான் அவனைத் தூண்டி விட்டது. பதவிப் போதைக் கிறக்கம் நடவடிக்கைகளைத் தாறுமாறாக்கியது. திமிர் அடங்கியது. எல்லாம் பறிபோயிற்று. 'எப்படி இருந்தவன் எப்படி ஆகிவிட்டான், பார்!' என இளக்காரமாகப் பேச வைத்தவனும் அவனே.

அரசியல் ஜீவிகள் பதவி பறிபோனபின் அதிக நாட்கள் வாழ்வதில்லை. ஆட்சி அதிகாரத்தில் இருக்கிறவரை பலசாலிகளாக

இருப்பர். பதவி பறிபோனதும் வலிமை, வல்லமை எல்லாம் தொலைந்து போகும்.

உளவியல் நிபுணர்கள் கூறுகிறர்கள் - மனிதர்கள் பணி ஒய்வு பெற்றபின் கொஞ்ச காலத்தில் மரிக்கிறார்கள். அதிகபட்சம் பத்தாண்டுகள் ஜீவித்திருக்கலாம். எண்பது வயது வரை வாழக்கூடியவன் அறுபதாவது வயதில் ரிடையராகி விடுகிறான், எழுபதாவது வயதில் சாகிறான். எண்பது ஆண்டு வரை வாழ வேண்டியவன் முன்னதாகக் காலமாகக் காரணம் இல்லை. ஆனால் ஒரு காரணம் இருக்கும். அவன் வகித்த பதவி மோகம், நீ கலெக்டராக இருந்தாய், கமிஷனராக, போலீஸ் இன்ஸ்பெக்டராக, கான்ஸ்டபிளாக, பள்ளி ஆசிரியராக - இப்படி எவராகவும் இருந்திருக்கலாம். பள்ளி வாத்தியாருக்கும் மிடுக்கு மெதப்பு உண்டு. அவருக்கென ஓர் உலகம். முப்பது - நாற்பது மாணவர்களுக்கும் சட்டாம் பிள்ளையாக இருக்கிறாரில்லையா? அங்கு அவர் அடக்கி ஆளும் சாம்ராட்டாக இருக்கிறாராம்.

வரலாறு கூறுகிறது. ஔரங்கசீப் தந்தையைச் சிறையில் அடைத்து வைத்தான். தந்தை மகனிடம் சொன்னார், "இங்கே எனக்கு நிம்மதி இல்லை. ஒரு உதவி செய், முப்பது-நாற்பது சிறார்களை இங்கு அனுப்பு. அவர்களுக்குக் கல்வி கற்பிக்க இங்கு மதர்ஸா (பள்ளி) அமைத்துக் கொள்ளுகிறேன்." ஔரங்கசீப் நினைத்தான், 'இவருக்கு நாடாளும் உரிமை பறிக்கப்பட்டது. இங்கு மதர்ஸா துவங்கி நாற்பது பிள்ளைகளையாவது ஆட்டிப் படைக்க விரும்புகிறார் போலும். நடத்தட்டும்' சிறைச்சாலைக்குள். பிள்ளைகளை அனுப்பி வைத்தான்.

சிறு பள்ளிக்கூட வாத்தியார் கூட தன்னை மகாராஜர்வாக நினைக்கிறார். முப்பது-நர்பது பிள்ளைகள் மீது ஆட்சி செலுத்துகிறாரில்லையா? பெரிய ராஜாக்களுக்குக்கூட இந்த அதிகார தோரணை கிடைப்பதில்லை. அவ்வளவு பிள்ளைகளும் வாத்தியார் "எழுந்திரு!" என்றால் எழுந்திருப்பார்கள். "உட்கார்!" என்றால் உட்கார்வார்கள். எல்லாம் அவர் அதிகாரத்தில் இருக்கும்.

பள்ளி ஆசிரியர் மட்டுமல்ல, கலெக்டர், டெபுடி கலெக்டர், மந்திரி - எவரானாலும் ரிட்டையர் ஆனதும் வலுவிழந்து.

மதிப்பிழந்து போகிறார்கள். வழியில் சந்திப்பவர் வணக்கம் கூறுவதில்லை. எவரும் உதவி நாடி வருவதில்லை. எதற்கும் இலாயக்கில்லாத வெற்று ஆசாமி என எண்ணுகிறார்கள். தன்னைக் குப்பைத் தொட்டியில் தூக்கிப் போட்டுவிட்டதாகக் கருதிக் கொள்ளுகிறார்கள். இனி அவர்களால் எந்த உபயோகமும் இல்லை. எதிரே சந்திப்பவர்கள்கூட கண்டுகொள்ளாமல் போகிறார்கள். முன்பு பின்னால் சுற்றி வந்தவர்கள், இப்போது கண்டதும் ஒளிந்து கொள்ளுகிறார்கள். மெதப்பும் செருக்கும் விலகிப் போய்விட்டன. 'இனி வாழ்வதில் பயனில்லை. செத்துத் தொலையலாம்' என்கிற எண்ணம் எழுகிறது.

ரிட்டயர் ஆனதும் மனிதர்கள் சீக்கிரம் இறந்து விடுகிறார்கள். வாழ்ந்த காலத்தில் அவர்களுடைய சக்தி, செல்வாக்கு எல்லாம் பதவி அதிகாரத்தில் கிடைத்தவை, தொடர்ந்து இருந்தவை. பதவி போனதும் சக்தி, செல்வாக்கு போய்விடும். ஒருவன் ஹெட்கிளார்க்காக இருந்தான். ஏழெட்டு கிளர்க்குகளை ஆட்டிப் படைத்து வந்தான். எந்த வேலை, பதவி என்பது முக்கியமில்லை. நீ சப்ராசியாக, பியூனாக இருந்திருக்கலாம். அவனுக்கும் மிடுக்கு இருக்கும். ஆபீசுக்குள் நுழையும்போது அவன்தான் முதலில் தென்படுவான். வாசலில் ஸ்டூலில் மிடுக்காக அமர்ந்திருப்பான். நம்மைப் பார்த்ததும் அதட்டலாகக் கேட்பான், "நில்லுங்க, யாரைப் பார்க்கணும்? என்ன சோலி?"

**மு**ல்லா நஸ்ருத்தீன் போலீஸ் கான்ஸ்டபிளாக இருந்தான். ஒரு மங்கை வேகமாகக் கார் ஓட்டி வந்தாள். அக்காரை நிறுத்தி, பெண்மணிக்கு எதிராகக் கேஸ் புக் செய்தான். கேஸ் புக்கில் அவள் பெயர், கார் லைசென்ஸ், நம்பர், முகவரி எல்லாம் குறிக்கத் தொடங்கினான். அப்பெண், "கொஞ்சம் இரு! இப்போ கேஸ் புக் பண்ணி நேரத்தை வீணாக்காதே. இம்மாநகர மேயர் எனக்கு வேண்டியவர்" என்றாள்.

முல்லா காதில் போட்டுக் கொள்ளவில்லை. வழக்கு பதிவு செய்துகொண்டிருந்தான். அப்பெண்மணி தொடர்ந்து, "காதில் விழல்லியா? சீஃப் மினிஸ்டருக்கு நான் வேண்டப்பட்டவள்" என்றாள். முல்லா தொடர்ந்து எழுதிக் கொண்டிருந்தான். அம்மங்கை

கடைசி ஆயுதத்தைச் செலுத்தினாள். “நல்லாக் கேட்டுக்கோ! இந்திரா காந்திக்கு நெருக்கமானவள் நர்ன்.”

முல்லா சொன்னான். “பிதற்றலை நிறுத்திக்கொள்! முல்லா நஸ்ருத்தீனுக்கு உன்னைத் தெரியுமா?”

“யார் முல்லா நஸ்ருத்தீன்? அவனுக்கு ஏன் என்னைத் தெரியணும்?” மங்கை.

“நான்தான் முல்லா நஸ்ருத்தீன். எனக்குத் தெரிந்தவராக இருந்தால் விட்டுவிடுவேன். மத்தவங்களுக்கு ஏன்? அந்த ஆண்டவனுக்கே தெரிஞ்சவங்களாக இருந்தாலும் எனக்கு அனாவசியம். நான் கேஸ் புக் பண்ணுவேன். கோர்ட்டிலே விசாரணை நடக்கும். தண்டனை கிடைக்கும்; வாங்கிக்கொள்!”

ஒவ்வொரு மனிதனுக்கும் ஒருவகையில் மிடுக்கு, மெதப்பு இருக்கும். போலீஸ்காரனுக்கும் இருக்கும். அவன் ஆதிக்கம், அதிகாரம், பதவி அவனுக்கு. அந்த அளவுக்கு உருட்டல் மிரட்டல் இருக்கும்.

நீ செயல்படும் அளவுக்கு உன் அகங்காரம் இருக்கும். அகங்காரி ஆசாமி “ஆம், சரி!” என்று இலேசில் சொல்லிவிட மாட்டான்.

நீ உன்னையே கண்காணித்துக் கொள். பிறரைப் பரீட்சித்துப் பார்க்க உனக்கு அளவுகோல் எதுவும் தரமாட்டேன். நீ உன்னையே உள்ளார்ந்து மதிப்பீடு செய்துகொள். ‘இல்லை’ என்று கூறுவதில் மகிழ்வு ஏற்படுகிறது. வலிமை இருப்பதாகத் தோன்றுகிறது. பாலகன் தாயிடம் கேட்கிறான். “அம்மா! தெருவில் போய் விளையாடிவிட்டு வருகிறேனே.”

தாய், “இல்லை, போகக் கூடாது” என்கிறாள். வெளியே போய் மகன் விளையாடுவதால் எந்தப் பிரச்சினையும் இல்லை. வேறு எங்கு விளையாடுவான்? யாரோடு விளையாடுவான்? அம்மாவிற்கும் இது தெரியும். மகன் எப்படியும் 'விளையாடத் தெருவிற்குப் போய்விடுவான். அடம் பிடித்து, அழுது ஆகாத்தியம் செய்து தெருவிற்குப் போகத்தான் செய்வான். அவனும் தன் பலத்தைக்

காட்டுவான். தாய்-மகன் இடையே பலப்பரீட்சை நடக்கும். வாக்குவாதம், குடும்ப அரசியல் குறுக்கிடும். கடைசியாய் தாய், "சரி, போய் விளையாடு!" என்பாள். அவள் உத்தரவில் பிள்ளை விளையாடப் போகிறான். "இல்லே, ஆமாம்" என்பதற்குள்ள அதிகாரம், அகந்தை இங்கு இயங்குகிறது.

முல்லா நஸ்ருத்தீன் மகன் உபத்திரவம் செய்து கொண்டிருந்தான். முல்லா பலமுறை சொல்லிப் பார்த்தான். "மகனே! பேசாமல் உட்கார்ந்திரு! தொல்லை கொடுக்காதே. என் பேச்சைக் கேள்! அமைதியாய் இரு!"

மகன் அடங்கவில்லை. எந்தப் பிள்ளைதான் அடங்கி இருக்கும்? முல்லா ஆத்திரத்துடன், "சரி, உன் இஷ்டத்துக்கு உபத்திரவம் செய்து கொண்டிரு! நாள்பூராவும் லூட்டி அடி!" என் உத்தரவு. இதை எப்படி மீறுவாய், பார்க்கிறேன்"என்று கத்தினான்.

"இல்லை, மாட்டேன், முடியாது" என்கிற பதில் உடனடியாக வந்துவிடும். நாக்கு நுனியில் இருக்கும் சொல் அது.

நீ கொஞ்சம் சிந்தித்துப் பார்! நூற்றுக்குத் தொண்ணூறு சந்தர்ப்பங்களில், 'இல்லை' என மறுக்க வேண்டிய அவசியம் இல்லாதிருந்தும் நீ மறுதலிக்கிறாய். 'இல்லை' எனச் சொல்லும் வாய்ப்பை நீ நழுவ விடுவதில்லை. அப்படிச் சொல்ல வேண்டிய தருணம் வாய்க்கும்போது உடனடியாகப் பற்றிக் கொள்ளுகிறாய். 'ஆம், சரி' என்று கூறச் சங்கடமாக இருக்கிறது. கட்டாயத்தின் பேரில் சொல்ல வேண்டியிருக்கிறது. வேண்டாவெறுப்பாக உன் பலமே போய்விட்ட ஏக்கம் உன்னை வருத்துகிறது.

ஆகையால், செருக்கு, மமதை கொண்டவன் நாத்திகனாகிறான். நாத்திகன் என்பதன் அர்த்தம் 'இறுதியாக இல்லை' என்று கூறிவிட்டவன். 'கடவுள் இல்லை' என மறுப்பவன், மற்றவற்றை மறுக்கக் கேட்பானேன்?

நாத்திகன் தன் இறுதி மறுப்பை - இல்லை எனும் தீர்மானத்தைக் கூறிவிட்டான். ஆத்திகன் இதற்கு நேர் எதிரிடை. தன் இறுதி ஒப்புதலை "ஆமாம், சரி!" எனக் கூறிவிட்டான். 'கடவுளை இருப்பதாக ஒப்புக்

கொள்ளுபவன்' - இதன் பொருள் - 'நான் இல்லை' என்பதுதான். 'கடவுள் இல்லை' என்பதன் பொருள் 'நான்தான் எல்லாம்' என்பதாகும். 'எனக்குமேல், என்னைவிட மேம்பட்டது எதுவும் இல்லை. என் எல்லையைக் கட்டுப்படுத்த எவரும் இல்லை' எனக் கருதுவதுதான்.

நமது செயல்பாடு நம் அகந்தையை நிரப்புகிறது. இத்தருணத்தில் அஷ்டாவக்கிரரின் இந்த சூத்திரத்தைக் கவனிக்க வேண்டும் - "அஹம் கர்த்தா - நான் செய்கிறேன், செயல்படுகிறேன் - எனும் அகங்காரக் கருநாகத்தால் கடிக்கப்பட்டவன் நீ. வீணுக்கு வேதனைப்பட்டுத் தவிக்கிறாய்."

இந்த வேதனைத் தவிப்பு வெளியிலிருந்து வரவில்லை. நாமே சம்பாதித்துக் கொண்டது. உருவாக்கிக் கொண்டது. அகந்தை அதிகமாக வேதனைத் துன்பமும் அதிகரிக்கும். அகந்தை கடும் ரணப் புண். காற்று பட்டாலும் எரிச்சல் எழும்.

அகங்காரமில்லாதவன் துன்பப்படுவதில்லை. அகங்காரியை சுகமாக வாழ வைக்க முடியாது. 'நான் சுகமாக வாழ வேண்டாம்' என்று அவன் தீர்மானித்து விட்டவன். சுகம் - சௌக்கியம் ஒப்புதலால் ('ஆம் என்பதால்) கிட்டுகிறது. 'நான் யார்?' என்பதை உணர்ந்தால் சுகம், நலம் கிட்டும். 'நான் கடலில் ஒரு ஜலத்திவலை' என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும். விரி கடல் பரந்திருக்கும்போது எனக்கு என்ன இருக்கிறது? கடலில் கலந்துள்ள தன்னிலை எனக்கு.

எந்தப் பகுத்தறிவாளி தன் இருப்பை அறியாமல் இருக்கிறானோ, அதனால் பரம சுகத்தைப் பெறுகிறான். சுகம் - மகிழ்வு அவன்மீது அம்பாரமாய்ப் பொழியப்படும். அழிந்துபோனது நிரப்பப்படும். அறியாமை, அகந்தை கொண்டவன் அழிந்தே போகிறான்.

".....நான் கர்த்தா இல்லை எனும் உணர்வு அமுதத்தைப் பருகி நீ பரம சுகத்துடன் வாழ்வாய்!

'நான் கர்த்தா இல்லை' எனும் உணர்வை தேவாமிருதம் என்கிறார் அஷ்டாவக்கிரர். இதற்குள்ள வேறொரு அர்த்தத்தையும்

அறிந்து கொள்ள வேண்டும். அகங்காரம் மட்டுமே அழியும். நீ அழிவதில்லை. ஆகையால் அகங்காரம் சாவுக்குச் சமம், விஷம் போன்றது. என்றைக்கு நீ 'என்னுள் அகந்தை இல்லை, பரமாத்மா பரந்து உள்ளார்; பரமாத்மாவின் ஒளிக்கதிர், அமுதத்துளி என்னுள் இருக்கிறது' என உணர்கிறாயோ, அன்று முதல் உனக்கு மரணம் இல்லை, அழியா நிலையில் அமுதமாகி விடுகிறாய்!

பரமாத்மாவுடன் இணைந்துள்ள போது நீயும் அமிருதமாகி விடுகிறாய்; உன்னுடன் மட்டும் சேர்ந்திருக்கும் போது சாகப் பிறந்தவன் ஆகிறாய். தன்னுடன் தனித்திருக்கும் போதும், உலகாயத வாழ்விற்கு எதிராக இருக்கும் போதும், தோல்வியுறும் போராட்டத்தில் சிக்கியிருக்கும் போதும் உன் அழிவு நிச்சயம். பரமாத்மாவுடன் ஒட்டுறவு கொண்டிருந்தால் வெற்றி (அமர நிலை) நிச்சயம். எல்லாவற்றையும் சேர்த்துக் கொண்டு முன்னேறு. ஒத்துழைப்பால், ஒருங்கிணைப்பால் சாதித்துக் கொள்ள முடியும் என்கிறபோது போராட்டம் எதற்கு? பணிந்து போய் காரியத்தைச் சாதித்துக் கொள்ள இயலும் போது, போராட முற்படுவானேன்? எளிதாக, பணிவு மூலம் காரிய சித்தி நிகழுமானால், வீணுக்குப் போராட்டம், ஆர்ப்பாட்டம் எதற்கு?

"நான் கர்த்தா இல்லை - எனும் நம்பிக்கைத் தீர்மானமாகிற அமுதத்தைப் பருகி சுகமாயிரு!" அஷ்டாவக்கிரர் இப்படிக் கூறியது ஜனகருடைய கேள்விக்கு நேரிய விடையாக, "எப்படி நான் சுகமாக (நிம்மதியாக) இருப்பேன்? சுகம் எப்படிக் கிட்டும்? முக்தி பெறுவது எப்படி?" ஜனகரின் கேள்வி.

அஷ்டாவக்கிரர் இதற்கு விதிமுறை கூறவில்லை. இவ்வழியே சாதனை செய் என்றும் சொல்லவில்லை. அவர் கூறியது, "நோக்கத்துடன் நோக்கு!" பார்வை சரியாக இருக்க வேண்டும். பார்வைக் கோளாறினால்தான் எல்லா உபத்திரவமும் ஏற்படுகிறது. நீ துன்பப்பட்டால் தவறான பார்வை காரணம்; சுகப்பட்டால் சரியான பார்வை காரணம். நம்பிக்கை எனும் அமிருதத்தைப் பருகிச் சுகமாக இரு!"

இதில் 'நம்பிக்கை' (விசுவாசம்) என்பதன் விளக்கத்தை அறிந்து கொள்ள வேண்டும். அவிசுவாசம் (நம்பிக்கையின்மை) என்பதன்

பொருள், 'நீ உன்னை முழுமையுள் ஒன்று எனக் கருதவில்லை. இங்கிருந்து சந்தேகம் எழுகிறது. அவநம்பிக்கை காரணமாக. அது சரியான வாழ்வு நிலைக்கு உன்னை இட்டுச் சென்றால் நலம், சுபம்.

நாம் விரும்பி இங்கு பிறக்கவில்லை, இறப்பதுமில்லை. நமது பிறவி பற்றி நமக்கே தெரியாது. ஏன் பிறந்தோம்? அறியோம். மரணம் பற்றியும் தெரியாது. ஏன் மரிக்கிறோம்? அறியோம். நாம் பிறப்பதற்கு முன்பு "பிறக்க விரும்புகிறாயா?" என்று எவரும் நம்மிடம் கேட்டதில்லை. மரிப்பதற்கு முன்பும், "சாகப் போகிறாயா? சாக விரும்புகிறாயா?" என எவரும் கேட்டதில்லை. எல்லாமே இங்கு நிகழ்கிறது. நம்மிடம் யார் கேட்கிறார்? வீணாக இதில் நம்மை நாமே ஏன் புகுத்திக் கொள்ள வேண்டும்?

எங்கிருந்து வாழ்வு வெளிப்பட்டதோ, அங்கே நாம் விடப்படுவோம். நமக்கு வாழ்வு கொடுத்தவன் மீது அவநம்பிக்கை ஏற்படலாமா? எங்கிருந்து இந்த இனிய வாழ்வு வந்ததோ, அந்த ஆதாரம் பற்றி அவநம்பிக்கை ஏன்? எங்கிருந்து மலர்கள் விகசித்தனவோ, எங்கு சந்திரனும் தாரகைகளும் உதிக்கின்றனவோ, எங்கிருந்து மனிதன் முதலான பிராணிகள் வெளிப்பட்டனவோ, எங்கு இன்னிசை ஒலிக்கிறதோ, எங்கு பேரன்பு பரவியுள்ளதோ, அந்த மூலத்தானத்தின் மீது அவநம்பிக்கை கொள்வானேன்?

நம்பிக்கை, விசுவாசம் - இதன் அர்த்தம் (பொருள்) தன்னை அந்நியமாகக் கருதாது இருத்தல், மூலாதாரத்தோடு இணைந்திருத்தல். இதை உரத்த சிந்தனையாகக் கொண்டால் இக வாழ்க்கையில் சுகம் பொழியும்.

"இத்தகைய விசுவாசமாகிற அமுதத்தைப் பருகி வெகு சுகமாய் வாழ்ந்திரு!" - **விச்வாஸாம்ருதம் பீத்வா ஸுகீ பவ!"**

இப்போதே சுகவாசி ஆகிவிடு! பீத்வா ஸுகீ பவ! (குடித்து சுகீ ஆகு)

"நான் பரிசுத்த பகுத்தறிவாளன் - இத்தீர்மானக் கருத்து எனும் அக்னியால் அஞ்ஞானம் (அறியாமை) எனும் காட்டை எரித்தழித்து, துன்பம் துயரமின்றி சுகவாசி ஆகுவாயாக." இப்போதே துன்பத்திலிருந்து விடுபடு! இந்த எளிய போதனையை நினைவில்

வைத்துக் கொள்ளுங்கள். "நான் பரிசுத்த பகுத்தறிவாளன், நானே பகுத்தறிவு; நான் சாட்சி. நான் சாட்சியம்; நான் காண்பவன், பார்வையாளன் மட்டுமே."

உங்கள் துன்பமெல்லாம் விலகிவிடும். அகங்காரம் (மமதைச் செருக்கு) கடும் நோய்.

நான் கேள்விப்பட்டேன்; தில்லியில் நிகழ்ந்த ஒரு கவியரங்கத்தில் முல்லா நஸ்ருத்தீனும் பங்கேற்றார். கவி பாடல்கள் முடிந்ததும், அமைப்பாளர் கவிஞர்களுக்கு வெகுமதித் தொகையை அளித்தார். முல்லாவிற்கு அதிருப்தி. எதிர்பார்த்த தொகை கிட்டவில்லை. கோபித்தார். "நான் யார் தெரியுமா? புனா மாநகரத்து மகாகவி காளிதாசன். எனக்கு இவ்வளவுதானா சம்மானம்?"

அமைப்பாளர் கேட்டார்: "சரி, புனா நகரத்தில் எந்தப் பேட்டைவாசி காளிதாசன் நீங்கள்?"

பேட்டைதோறும் காளிதாசரும், டாகூரும் இருக்கிறார்கள். ஒவ்வொருவனும் தான் மேதாவி, மகாகவி, பேரறிஞன் என மெதப்பில் இருக்கிறான்.

அரேபியாவில் ஒரு சொலவடை வழங்கும். ஆண்டவன் ஒரு மனிதனைப் பிறப்பிக்கும் போது அவன் காதில் குசுகுசுப்பாராம். "உன்னைவிடச் சிறந்த, மேலான மனிதனை நான் இதுவரை பார்த்ததில்லை!" இப்படியே எல்லா மனிதர்களிடம் ஆண்டவன் சொல்லுவதுண்டாம். இது ஆழமான கிண்டல். அங்குள்ள ஒவ்வொருவனும் ஆண்டவனின் பேச்சை நம்பி கர்வப்படுகிறான், "நான்தான் சர்வோத்தமன். மற்றவர் நம்பாததைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. நான் மட்டுமே தலைசிறந்த மனிதப் பிறவி."

இப்படிச் செருக்குடன் வாழ்பவன் அதிகம் துன்பப்படுகிறான். அந்த டம்பகர்வி சுகபோகங்களை நிறைய எதிர்பார்க்கிறான், அவை நிறைவேறுவதில்லை. எண்ணற்ற ஆசைகள், வாழ்வு சிறியது. அவன் பேராசையால் அவதிப்படுவான்.

இந்தப் பௌதிக வாழ்வை வேறொரு விதமாகவும் வாழலாம். வாழும் கலை உதவியுடன் ஆசை, சுயேட்சை ஏதும் இல்லாமல்

எதையும் கோராமல், தேடாமல் இருக்க வேண்டும். கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைய வேண்டும். நன்றியுடன் ஏற்று மகிழ வேண்டும். இதுதான் ஆத்திகப் பண்பு, மானுட வாழ்வு நெறி.

உனக்கு இவ்வளவுதான் கிடைத்திருக்கிறது. நீ அதை உணர்வதில்லை.

ஒரு மனிதன் ஆற்று வெள்ளத்தில் குதித்து சாகத் துணிந்தான். இரவில் ஆற்றங்கரைக்குப் போய் நதியில் விழத் தயாரானான். அங்கே ஒரு சூஃபி பக்கிரி உட்கார்ந்திருந்தார். அவனைப் பார்த்ததும், "நில்! என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார்.

"என்னைத் தடுக்காதீர்கள். இந்த வாழ்வே வீண். நான் விரும்பியது கிட்டவில்லை, விரும்பாததுதான் கிடைத்தது. ஆண்டவன் எனக்கு எதிராக இருக்கிறபோது அவர் தந்த வாழ்க்கை மட்டும் எதற்கு? அழிக்கத் துணிந்து விட்டேன்."

பக்கிரியார் சொன்னார். "ஒருநாள் பொறுத்திரு. பிறகு சாகலாம். அப்படி என்ன அவசரம்? சரி, உன்னிடம் எதுவும் இல்லை என்று சொன்னாய் இல்லையா?"

"ஆமாம், அதனால்தான் சாக வந்தேன்."

"என்னோடு வா! இந்த வட்டாரத்து அரசன் என் சினேகிதன்" - பக்கிரி அந்த ஆசாமியை அரசனிடம் அழைத்துச் சென்றார். எதிரே நிற்க வைத்து, அரசனிடம் போய் ரகசியமாக ஏதோ சொன்னார். "அரசன், "சரி, ஒரு இலட்சம் ரூபாய் தருகிறேன்" என்றான். சாக முனைந்த மனிதன் காதில் இது விழுந்தது. பக்கிரியார் அரசன் காதில் கூறியது அவனுக்குத் தெரியாது.

பக்கிரி அவனிடம் வந்து, "ராஜா உன் இரு கண்களையும் ஒரு இலட்சம் ரூபாய் கொடுத்து வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கிறார், சம்மதமா?" என்றார்.

அந்த ஆசாமி சினந்தான். "என் கண்களை விற்கிறதா? முடியாது. பத்து இலட்சம் கொடுத்தாலும் விற்க மாட்டேன்" என்றான்.

பக்கிரி அரசனிடம் சென்று ஏதோ சொல்ல, உடனே அரசன், "பதினோறு இலட்சம் கொடுக்கிறேன்" என்றான். பக்கிரி இதை ஆசாமியிடம் வந்து சொன்னார். "அதெல்லாம் முடியாது. நான் விற்பனை செய்ய வரவில்லை. ஆளை விடுங்கள்" என்றான்.

பக்கிரி பின்வாங்கவில்லை. "சரி, உன் காதுகளை விற்கிறாயா? மூக்கை? நல்ல விலை கொடுக்க ராசா தயார். நீ கேட்கிற விலையைக் கொடுப்பார். நீ தயாரா?"

"என்னால் எதையும் விற்க முடியாது. இந்த பேரம் தேவை இல்லை" - வந்தவன்.

"அப்போ ஏன் நேற்று இரவு நதியில் விழுந்து மரிக்க முனைந்தாய்? என்னிடம் எதுவும் இல்லை என்கிறாய். பதினோறு இலட்சம் ரூபாய்க்கு உன் கண்களை விற்றுச் சம்பாதிக்கவும் மறுக்கிறாயே, ஏன்?" - பக்கிரி.

நமக்குக் கிடைத்திருப்பது தென்படுவதில்லை. உன் கண்களைப் பற்றி யோசி. அற்புத அதிசயம். தோல், சதையால் உருவாகியது கண். தேகத்தின் ஓர் உறுப்பு. கண்ணால் பார்க்கலாம், காதால் கேட்கலாம். இதுவும் தோல், சதை, நரம்புகளால் உருவானதுதான். இது எவ்வளவு பெரிய, மதிப்புமிக்க அற்புத அதிசயம். இவை எவ்வளவு பெரிய செல்வம். இந்தத் தோல், சதை, குருதி, நிணம், நாடி, நரம்பு, எலும்பு கலந்த உடம்பில் அறிவு, உணர்வு, சிந்தனை எனும் சைதன்னியம் குடிகொண்டிருக்கிறதே, இதைவிட மேலான அதிசயம் வேறு உண்டா? இவ்வளவு இருந்தும் 'என்னிடம் எதுவும் இல்லை' என்று வருந்துகிறாயே? சாகக் கிளம்பினாயே, இது முறையா?

இல்லை; உனக்கு இவற்றின் மதிப்பு, மகத்துவம் தெரியவில்லை. அதிசயத்தை உணரும் நோக்கும் உன்னிடம் இல்லை. உன் அறிவு வெளி வசதிகளைச் சுற்றித் திரிகிறது. 'நூறு ரூபாய் வேலைக்கு ஆசைப்பட்டேன். தொண்ணூறு ரூபாய் வேலைதான் கிடைத்தது. ஆகையால் வாழப் பிடிக்கவில்லை, சாகப் போகிறேன்" என்று கிளம்பி விட்டாய்!

'மினிஸ்டராக ஆசைப்பட்டேன், டெப்புடி மினிஸ்டர் பதவிதான் கிடைத்தது. ஆதலால் தற்கொலை செய்து கொள்ளுவேன். பெரிய

பங்களாவிற்கு ஆசைப்பட்டேன். சின்ன வீடுதான் கிடைத்தது. வாழ மாட்டேன். ஆசைப்பட்டபடி புருசன் கிட்டவில்லை, பெண்டாட்டி கிடைக்கவில்லை, ஆகையாலே வாழப் பிடிக்கவில்லை, சாகப் போகிறேன்...' இப்படிப் போகிறது மனித மனப்போக்கு.

நீ ஆசைப்பட ஆசைப்பட உனக்குத் துன்பம் வளரும். விரும்பாமலே கிடைத்ததைக் கவனித்துப் பார். அபூர்வ நன்மைகள் ஏற்படும். நீ சுயமாக என்ன சம்பாதித்திருக்கிறாய்? இந்த மானுட வாழ்வு கிடைத்திருப்பது உன் சம்பாதனை காரணமாகவா? என்ன சம்பாத்தியம் அது? உன் மூல பலம் என்ன? நீ அகம் மகிழ்ந்து வாழ்கிறாயே. சூரிய, சந்திரர்களுடன் குலாவி ஆனந்திக்கிறாயே, அதெல்லாம் எங்கிருந்து, எப்படி, எதன் மூலம் கிட்டியது? நீ தியானத்தில் இலயிக்கிறாயே, எப்படி? உன் வல்லமைக்கு சாட்சியம் ஏது? இதற்கெல்லாம் நீ என்ன முயற்சி செய்தாய்?

உனக்கு வாழ்வாதாரமாக, சுகசாதனங்களாகக் கிடைத்ததெல்லாம் அருள்பிரசாதம். அப்படியும் நீ மனக்குறையுடன் பரிதவிக்கிறாய், கவலைப்படுகிறாய், குறை கூறுகிறாய். உன்னை செருக்கு நோய் வாட்டுகிறது. அது எல்லாத் துன்பங்களுக்கும் காரணம்.

நான் கேள்விப்பட்ட தகவல் இது - ஒரு குடும்பத்தில் எல்லாரும் திரைப்படத் துறையில் வேலை பார்ப்பவர்கள். குடும்பத் தலைவன் ஒருநாள் பதட்டத்துடன் டாக்டரிடம் போய் சொன்னான், "டாக்டர், என் மகனுக்கு ஒரு தொற்று நோய் வந்திருக்கிறது, கவலையாக இருக்கிறது."

"என்ன நோய்?"

"ஸ்கார்லிட் ஃபீவர். எம் வீட்டு வேலைக்காரியை முத்தமிட்டானாம். அதனால்தான் இந்த நோயாம்."

"கவலைப்படாதீங்க. இளம் வயசு, வாலிபக் கோளாறு, சரியாகி விடும்."

"சார், நீ புரிஞ்சுக்கில்லை, நடந்த கோளாறு, நானும் அந்த வேலைக்காரியை முத்தமிட்டு விட்டேன்."

"அப்போ கவலைப்பட வேண்டியதுதான்; வந்து...."

"அது மட்டுமில்லை; என் பெண்சாதியை அதுக்கப்புறம் இரண்டு தரம் முத்தமிட்டிருக்கிறேன்."

இதைக் கேட்டதும் டாக்டர் பதறி எழுந்தார்.

"செத்தோம், இப்போது அந்தத் தொத்து நோய் என்னையும் பிடிச்சுத் தொலைச்சிருக்கும். கடவுளே....!" அலறினார். டாக்டர் வந்தவரின் மனைவியை முத்தமிட்டிருக்கிறார். இப்படித்தான் நோய் ஒட்டுவாரொட்டியாகப் பரவுகிறது.

அகங்காரமும் (கர்வம், செருக்கு, மமதை) ஒரு தொற்று நோய்தான்.

குழந்தைக்கு பிறந்தபோது அகங்காரம் இராது. எந்தக் குணக்கேடும் இருக்காது. திறந்த புத்தகம் போல் விளங்கும். எழுத்து, சொல் ஏதும் இராது. பிறகுதான் போகப்போக எழுத்துகள் வரையப்படுகின்றன. மெள்ள மெள்ள அகந்தை உருவாக்கப்படுகிறது. தாய், தந்தை, உறவினர், சமூகம், பள்ளிக்கூடம், பல்கலைக்கழகம் எல்லாரும் தொடர்ந்து அதன் அகந்தையை வளர்த்து வலுப்படுத்துகிறார்கள். இதன் எதிர்வினை நமது கல்விமுறை, கலாச்சாரம், பண்பாடு, நாகரிகம் மூலமாக உருவாக்கிப் பரப்பப்படுகிறது. அவை அகங்காரத்தைத் தோற்றுவிக்கின்றன, வளர்க்கின்றன. வாழ்நாள் முழுவதும் அகங்காரம் நம்மைப் பிசாசு பிடித்த மாதிரி பாடாய்ப் படுத்துகிறது.

'தர்மம்' அறம் (நீதிநெறி) - இதன் பொருளைச் சரியாக அறிந்துகொள்ள வேண்டுமா? கவனி, நாகரிகம், பண்பாடு, சமூகம் உனக்கு அகங்காரம் எனும் வியாதியைக் கொடுக்கின்றன. அந்த வியாதியைப் போக்கும் ஔடதம்தான் தர்மம் (அறம்). இது சமூகம், நாகரிகம், பண்பாடு, கலாச்சாரம் இவற்றுக்கெல்லாம் எதிர்ப்புச் சக்தி. தர்மம் புரட்சிகரமானது. 'பிறர் உனக்கு அளித்ததை நீ துறந்து விட வேண்டும்'. இதைப் போதிப்பதுதான் தார்மிகப் புரட்சி. பிறர் போதனை அகந்தை, அதை உதறித் தள்ளிவிடு. அதைப் பற்றிக்கொண்டு செல்லாதே. அது கொடிய பீடை, நரகம், பெரும் சுமை. அகங்காரம், உன் வாழ்வை முடக்கும் விலங்குச் சங்கிலி.

"நான் ஒரு பரிசுத்த விவேகம் – இத்தீர்மானமாகிற நெருப்பால் அஞ்ஞான வனத்தை எரித்து அழித்துவிடு! பிறகு துன்பம், துயரம் நீங்கி, அகமகிழ்வுடன் சுகவாசியாகு!"

அகங்காரம் என்பது சுயபிரக்ஞையை, சுயஅறிவை வேறொரு பொருளுடன் இணைப்பது. ஒருவன் தன்னை அறிவாளி எனச் சொல்லுகிறான். அப்போது அவன் தன் அறிவுடைமையுடன் அகந்தையை இணைக்கிறான். அவனது பகுத்தறிவு, சுய உணர்வு மாசுபட்டுப் போகிறது.

பாலில் நீரைக் கலந்தால், பால் கெட்டுவிட்டதாகச் சொல்லுகிறாய். கலப்பவன் 'நான் தூய நீரைத்தான் கலந்தேன்' என்று வாதிட்டாலும் பால் கெட்டுப் போய்விட்டது என்றே நீ கூறுவாய். கலந்த நீர் சுத்தமா, அசுத்தமா – எதுவானாலும் கலப்படம்தானே? இதில் கவனிக்க வேண்டியது. பால் மட்டும் கெடவில்லை, கலந்த நீரும் கெட்டு விட்டது. தனித்தனியாக இருந்த வரையில் பாலும் நீரும் சுத்தமாக இருந்தன; கலந்தபின் அசுத்தமாகி விட்டது இரண்டுமே.

எதிரிடையான வேறு இனத்து, வேறுபட்ட ஒன்றுடன் சேர்ந்தால் உபத்திரவம்தான். சைதன்யம் (பரிசுத்த புத்தி) மற்றதுடன் சேரும்போது ஏற்படும் உபத்திரவம், சீர்கேடு போன்றதுதான் அதுவும். நீ சொன்னாய். "நான் புத்திமான்", உபத்திரவம் தொடங்கிவிட்டது. புத்தி ஓர் இயந்திரம். அதைச் செவ்வையாகப் பயன்படுத்து. புத்திமானாக (அறிவாளி) ஆகாதே. இதுதான் புத்திசாலித்தனம். 'நான் புத்திசாலி' என நீ கூறியதுமே பரிசுத்த பாலில் நீர் கலக்கப்பட்டு விட்டது. உன் புத்தி பரிசுத்தமானாலும், அகந்தை கலந்தால் கெட்டுவிடும். தூய்மை, அழுக்கு இரண்டுக்கும் அகந்தை உடன்படும்.

**ஒ**ரு பழங்கதை நினைவுக்கு வருகிறது. ருஷ்யாவில் ஜார் மன்னன் ஆண்டு வந்த காலத்தில், சைபீரியா பாலைவனத்தில் மூன்று கைதிகள் வைக்கப்பட்டிருந்தார்கள். மூவருக்குள்ளும் கடுங்குற்றவாளி யார், அதிக காலம் சிறைவாசம் இருந்தது யார்? என்பதில் ஓயாத வாக்குவாதம், சச்சரவு. சிறைச்சாலைகளில் இது தொடர் நிகழ்வு. குற்றவாளிகள் மிகைப்படுத்திப் பேசுவார்கள்.

ஆனால் அவர்கள் பேச்சு இப்படி இருக்காது; “நீ உன் வங்கி பேலன்சை மிகைப்படுத்திக் கூறுகிறாய்''. “என் வீட்டுக்கு விருந்தாளிகள் நிறைய வருவார்கள். அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்து சேர், நாற்காலிகளை வாங்கி வந்து சமாளிப்பேன்,'' “நீ பெரிய எத்தன், ஏமாற்றிப் பிழைக்கிறதில் நீ படா கில்லாடி''. “நீ கூழைக் கும்பிடு போடுவதில் பார்க்கிறவனுக்கெல்லாம் சலாம் போடுவதில் எத்தன்'', “வசதியான ஆள்வந்தால் கோயிலுக்குக் கூட்டிப்போய் தடபுடலாய் பூசை ஆராதனை எல்லாம் செய்து ஐஸ் வைக்கிற தந்திரசாலி நீ'', “முக்கியப் பட்டவங்கள் வந்தாலும் பாசாங்கு பண்ணி தட்டிக்கழிக்கிற பேமானி நீ'', “நீதான் எல்லாம் தெரிஞ்சவன், எல்லாம் செய்யத் தெரிஞ்சவன் என்கிற மமதை உனக்கு'', “யார் வந்து தேடினாலும், கோயிலுக்குப் போயிருக்கிறாரு, சாமி கும்பிடறதுதான் அவருக்கு முக்கியம்'னு சொல்லவைத்து, உன்னை மகா பக்த சிகாமணியாய் காட்டிக் கொள்கிற கபட வேடதாரி நீ.''

சிறைச்சாலைக் கைதிகள் வேறுவிதமாகப் பீற்றிக் கொள்ளுவார்கள்.

அந்த மூன்று ருஷ்யக் கைதிகளும் பேசிக் கொண்டார்கள். முதல் கைதி சொன்னான். “நான் இந்த சைபீரியா ஜெயிலுக்கு வந்தபோது சைபீரியா வட்டாரத்தில் பஸ், கார், மோட்டார் போக்குவரத்து கிடையாது.

இரண்டாவது கைதி சொன்னான். “எலே, இதென்ன பெரிய விசயம்? நான் இங்கே அடைக்கப்பட்டபோது மாட்டு வண்டிகூடக் கிடையாதுங்கிறேன்.''

மூணாவது கைதி கேட்டான், “ஏண்டா, மாட்டு வண்டின்னா என்னடா?''

அம்மூன்று கைதிகளுக்கும் தான் எவ்வளவு காலத்திற்கு முன்பு இங்கு வந்த பழைய கேடி ஆசாமி என்று பீத்திக் கொள்ளுவதில் போட்டி. அகங்காரம் காரணம்.

மற்றொரு தகவல். ஒரு சிறைச்சாலையில் புதிதாக ஒரு குற்றவாளி அடைக்கப்பட்டான். அந்த அறையில் பழைய கேடி

இருந்தான். அந்தக் கேடி கேட்டான். "எத்தனை நாளைக்கு இங்கே இருப்பாய்?"

"இருபது வருசத்துக்குத் தண்டனை."

"அப்போ, நீ கதவுப்பக்கம் கிட! உன் படுக்கையை அங்கியே விரிச்சுக்க. நீ முந்தி வெளியே போக வேண்டியவன்."

குற்றவாளிக் கைதிக்கும் அகந்தை இருக்கும். நல்லவனிடமும் கெட்டவனிடமும் கர்வி தன் அகங்காரத்தைக் காட்டுகிறான். அந்நிலையில் பட்டறிவான மெய்ஞான அகஉணர்வு (சைதன்யம்) அசுத்தமாக்கப்பட்டு விடுகிறது.

அஷ்டாவக்கிரர் அறிவிக்கிறார், "நான் ஒரு பரிசுத்த அக உணர்வு." அவர், "நான் புத்திசாலியோ, நன்னெறியாளனோ, நெறிகெட்டவனோ, அழகானவனோ, குரூபியோ, வாலிபனோ, கிழவனோ, சிவந்தவனோ, கருப்பனோ, இந்துவோ, முஸல்மானோ, பிராமணனோ, சூத்திரனோ இல்லை. எனக்கு எந்த வேறுபாடும் இல்லை; உயர்வு-தாழ்வு இல்லை. நான் வேறுபாடு - மாறுபாடுகளைக் காண்பவன், பார்த்துக் கொண்டிருப்பவன்" எனக் கருதுகிறார்.

நீ உன் வீட்டில் விளக்கு ஏற்றுகிறாய். அந்த விளக்கின் ஒளி அந்தக் கூடத்தில் இருக்கும் எல்லாப் பொருள்களிலும், பகுதிகளிலும் படுகிறது. எதிலே அமர்ந்திருக்கும் உன் மீதும் படுகிறது. ஆனாலும் அந்த ஒளி படர்ந்துள்ள சுவரோ, மேசையோ, நாற்காலியோ, தரையோ ஒளி அல்ல. ஒளி தனிப்பட்டது.

சுத்த சைதன்யம் (மெய்ஞானம்) உனது ஒளி, உன் போதம் (உள்ளுணர்வு). இது உன் புத்தி மீதும் படரும், மேனியிலும் படும். உன் செயலிலும் பிரகாசிக்கும். ஆனால் இவைகளுள் எதுவும் நீ இல்லை. நீ உன்னை (உன் சைதன்யத்தை) மற்றதுடன் சேர்த்துப் பார்க்கும்போது எழும் அகங்காரத்திற்கு ஆட்பட்டு விடுகிறாய். நீ எல்லாத் தொடர்புகளையும் துறந்து விட்டால் நீ சுத்த போதம் (மெய்ஞானம்) ஆகிவிடுகிறாய். இதே உள்ளுணர்வுடன் நீ வீடு திரும்பும்போது முக்தி உன்னை எதிர் கொள்ளுகிறது. விரைவில் நீ 'முக்தன்' ஆகிறாய்.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார்: "நான் பரிசுத்த போதம் - இந்தத் திடமான தீர்மானம்..." - **அஹம் ஏகோ விசுத்தபோத: இதி...**

"இத்தீர்மானமாகிற தீயினால்..."

இதென்ன தீர்மானம்? காதால் கேட்டு ஏற்படுவதல்ல இது. புத்திபூர்வமாக ஆராய்ந்தும் இத்தீர்மானம் ஏற்படாது. இப்படிப் பலமுறை அறிந்திருப்பாய். எல்லாம் தவறு. அநுபவித்து உணர வேண்டியது இத்தீர்மானம். கொஞ்சம் செயல்பட்டால் பெறப்படும். முதலில் அனுபவ ஞானம் எழும். தொடர்ந்து தீர்மானம் பதியும். தீர்மானம் மூலம் புரட்சி ஏற்படும்.

"...அஞானம் எனும் காட்டை அழித்து, சோகம், துக்கம் நீங்கி சுகம் பெறுவாய். தேர்ந்த சுகவாசியாகுவாய்."

"கற்பிதமான இகவாழ்வில் கயிற்றரவுத்தோற்றம் ஏற்பட்டாலும், அதைக் கடந்த நீ பரமானந்த போதம் (மெய்ஞானம்) ஆகிவிடுவதால் சுகமாயிரு!"

இங்கு துன்பத்திற்கு ஏதும் காரணம் இல்லை. நீ வீணுக்குத் துக்கம், துயரம் சூழ்ந்த கனவில் ஆழ்ந்து அமைதியன்றி சங்கடப்படுகிறாய்.

துன்பக்கனவு நீ கண்டதுண்டா? மனிதன் மார்பு மீது கையை வைத்துப் படுக்கிறான். தூங்கிப் போகிறான். தூக்கத்தில் தன் மார்பு மீது ஏதோ பேய் குந்தியிருப்பதாகத் தோன்றுகிறது. கை பாரமாக அழுத்துகிறது. உறக்கத்தில் பேய், பிசாசு வந்து அழுத்துவதாக பிரமை ஏற்படுகிறது. மார்பு மேல் தலையணையை அணைத்துக் கொண்டு உறங்கும்போது, மலைப்பாறை அழுத்துவதாகப் பிரமை. இதே நினைப்பில் அலறுகிறான்.

அலறல் வெளிப்படுவதில்லை. கை-கால்களை அசைக்க முடியவில்லை. பயம் பீடிக்கிறது. தூக்கம் போகிறது. பிறகும் உடம்பு பதறி, வியர்வை வழியத் தவிக்கிறான். உறக்கக் கலக்கம் நீங்கிக் கண்விழித்துப் பார்க்கும்போது பிரமை புரிகிறது. பாறை ஏதும் அழுத்தவில்லை. எதிரி தாக்கவில்லை. 'தான் வைத்துக் கொண்ட தலையணையால் ஏற்பட்ட பிரமை இது' என உணர்கிறான்.

அப்படியும் மூச்சு வாங்குகிறது. ஓடி வந்து சோர்ந்து களைத்தவன் மாதிரி ஆகிறான். கனவு, தூக்கம் கலைந்தாலும் விளைவு தொடர்கிறது.

எதையெல்லாம் பௌதிக வாழ்வின் துக்கம், துன்பம் என்கிறோமோ, அவை நம் உள்ளுணர்வின்பால் பிராந்தி, பிரமை, பேதைமை.

"கற்பிதமான பௌதிக வாழ்வில் இவ்வுலகம் கயிற்றரவு (பழுதையைப் பாம்பு என மயங்குதல்) போல் தோன்றுகிறது."

இருட்டில் நடந்து போகும்போது தரையில் கிடக்கும் கயிறு அல்லது வைக்கோல்புரி (பழுதை) பாம்பு போல் தோன்றுகிறது. இந்த எண்ணம் ஏற்பட்டதுமே கயிற்றில் பாம்பு ஏறிடப் படுகிறது. பதறி ஓடுவாய், அலறுவாய், தடுமாறி விழுவாய், கைகாலில் காயம் படும். வலிக்கும், வேதனையில் அரற்றுவாய். பிறகு தெரிய வரும், அது பாம்பு அல்ல, கயிறு என்று. வீணுக்கு அலறி ஓடிக் காயம்பட்டுக் கொள்ளுவானேன்? கழிவிரக்கம் எழும்.

உன்னிடம் சிறிதளவாவது மெய்யறிவு (போதம்) எனும் விளக்கு இருந்தால், வெளிச்சம் பரவினால் நிஜம் தெரியும் - இது கயிறு, சர்ப்பமில்லை. இப்போதத்தின் ஞானத்திலிருந்துதான் ஆனந்தம், பரமானந்தம் பிறக்கிறது.

"...ஆகையாலே நீ சுகமாக சஞ்சரிப்பாயாக!"

உன்னிடம் 'சூத்திரம்' (கடிவாளக் கயிறு, அறிவுத் துணை) இருக்கிறது, சோதி இருக்கிறது. நீதான் அறியாமையால் சோதியைத் திரையிட்டு மறைக்கிறாய். திரையை விலக்கு. நேரிடையாய் பார். கருத்து, சிந்தனை, பழக்கம், எதிர்பார்ப்பு, கற்பனை, கனவு என்னும் படுதாக்களை அகற்று. அவை யாவும் உன் மெய்ஞான போதத்திற்குப் போடப்படும் திரை, முட்டாக்கு. இதை விலக்கு. கண் திறந்து பார்.

சனங்கள் முட்டாக்குப் போட்டுக்கொண்டு முடங்கிக் கிடக்கிறார்கள். எதுவும் தெரிவதில்லை. தள்ளுமுள்ளுக்கு ஆளாகிறார்கள், பள்ளத்தில் விழுகிறார்கள்.

"......அதுதான் ஆனந்தம், பரமானந்தம், மெய்ஞான போதம். அதை அடைந்த நீ சுகமாகப் போய் வா!"

**யத்ர விச்வமிதம் பாதி கல்பிதம் ரஜ்ஜுஸர்பவத்**
**ஆனந்த: பரமானந்த: ஸ போத: த்வம் ஸுகம் சர!**

**"ஆனந்த பரமானந்த: ஸ போதஸ்த்வம் ஸுகம் சர!"**

இந்தப் போத ஞானத்தை உணர்ந்து கொள்! பற்றிக்கொள். புரிந்து கொள்! பிறகு வாழ்வில் சுகமாக உழன்று கொண்டிரு. இந்த நிலைப்பாடுதான் பரமானந்தம். இந்த நிலை துக்கத்தை அறியாதது. துக்கம் உன்மீது சுமத்தப்பட்டது. உருவாக்கப்பட்டது.

இதைப் புரிந்து கொள்ளுவது கடினம். நாம் பற்பல துன்பம், துயர்களில் உழலும்போது, துக்கம் என்பது இல்லை என்று எப்படி எண்ண முடியும்? இருளில் கயிற்றைக் கண்டு பாம்பு எனப் பயந்து ஓடுபவன் நிஜத்தை உணர மாட்டான். மார்பில் கை வைத்துப் படுத்தவன் தன்மீது மலைப் பாறை விழுந்ததாக நினைப்பான்; பிறகு தெளிவு ஏற்பட்டதும் நிஜம் தெரியவரும். பாறையும் இல்லை, கல்லும் இல்லை, வெறுங்கைதான் என்பதைப் புரிந்து கொள்ளுவான். நம் நிலைமையும் இப்படித்தான் இருக்கிறது.

என்ன செய்யலாம்?

இக்காட்சிகளைக் கடந்து 'காண்பவன்' (த்ரஷ்டா) பக்கம் செல்வோம். எல்லாவற்றையும் பார்க்கலாம். ஆனால் காண்பவனை மறக்கக்கூடாது. எல்லாவற்றையும் காதில் போட்டுக் கொள்ளுவோம். ஆனால் கேட்பவனை மறக்கலாகாது. எல்லாக் காரியங்களையும் செய்வோம். ஆனால் 'கர்த்தா' (செய்பவன்) நான் இல்லை என்பதை மறக்கலாகாது.

புத்தர் சொன்னார்: "நீ உன் வழியில் போ. கூடவே 'உன்னுள் எதுவும் உடன் வரவில்லை' என்பதை நினைவில் வைத்திரு. உள்ளே இருப்பதெல்லாம் அசையாப் பொருள். இப்படித்தான் இருக்கிறது."

வண்டி செல்லும்போது சக்கரத்தை ஆரக்கால்களுடன் சேர்த்துப் பார்த்திருக்கிறாயா? கடையாணி அப்படியே நகராமல் இருக்கும். வண்டிச்சக்கரம் சுழன்று செல்லும். இப்படித்தான் நம் வாழ்க்கைச் சக்கரமும் சுழன்று செல்லுகிறது. அச்சாணி நகராது. நீ வாழ்க்கைச் சகடத்தின் அச்சாணி.

"முக்தியை (விடுதலை) விரும்புபவன் 'முக்தன்'; பந்தத்தை (ஒட்டுறவு) விரும்புபவன் 'பத்தன்' (கட்டுண்டவன்). உலகளாவிய இப்பழமொழி உண்மை - 'மதியைப் போல் கதி' (அறிவைப் போல் அமையும் போக்கு). இந்த சூத்திரம் (வாய்பாடு) பொருட்செறிவு உள்ளது - முக்தி விரும்புபவன் முக்தன்."

'நான் முக்தன்' என உணர்பவன் முக்தனாகிறான். 'நான் பத்தன் (கட்டுப்பட்டவன்)' என நினைப்பவன் அப்படியே ஆகிறான்.

நீ முயன்று பார். ஒருநாள் முழுவதும் நீ முக்தன் என எண்ணியிரு; முக்தனாகி விடுவாய். உனக்கே வியப்பாக இருக்கும். நம்ப முடியாத அளவுக்கு நீ முக்தனாக மாறியிருப்பாய். எதிராக, நான் பந்தப்பட்டவன் என நினைத்திரு. அற்பப் பொருள்கூட உன்னைக் கட்டிப் போட்டுவிடும். கட்டுண்டு இருப்பாய்.

'என் நண்பர் ஒருவர் இருந்தார். சக பேராசிரியர். சாது சுவபாவம். அவர் ஹோலிப் பண்டிகையின் போது சகாக்களுடன் சேர்த்து 'பாங்க்' (நறவச்சாறு) குடித்தார். போதை ஏறியது. வீதியில் நடந்து போகும்போது கூச்சல், கும்மாளம். எளிமையான இயல்புள்ளவர். இவர்களிடம் ஓர் ஆபத்து. இவர்களுக்குள் அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருக்கும் போக்கிரித்தனம் குடி போதையில் வெளிப்பட்டு விடும். இவர்கள் போதைப் பொருளைத் தீண்டக்கூடாது. 'பாங்க்' அவரைப் புரட்டிப் போட்டு விட்டது. வீதியில் எதிர்ப்பட்டவர்களிடமெல்லாம் வம்பு செய்தார். ஒரு பெண்ணை வழிமறித்துச் சீண்டினார். முறைக்கேடு தொடரவே போலீஸ் அப்பேராசிரியரைப் பிடித்துச் சிறையில் அடைத்தது. ஆங்கிலப் பேராசிரியர் அவர். பெயர் போலாராம். நாங்கள் ஒரே வீட்டில் குடியிருந்தோம்.

இரவு இரண்டு மணி. எங்கள் தெருவாசி அன்பர் ஒருவர் என்னை எழுப்பி தகவல் சொன்னார். "உங்கள் நண்பர் புரொபசர் ஜெயிலில் அடைக்கப்பட்டிருக்கிறார். உங்களை உடனே வந்து அவரை விடுவிக்க வேண்டுகிறார். இப்போதே கிளம்புங்கள். நானும் உடன் வருகிறேன். காலைவரை காத்திருக்க மாட்டாராம்.

போலீஸ் அதிகாரியிடம் கெஞ்சிக் கேட்டு நண்பரை சிறையிலிருந்து விடுவித்து அறைக்கு அழைத்து வந்தேன். நல்ல மனிதர், அடக்கம், கூச்சம் கொண்டவர். சிறையிலிருந்ததன் பாதிப்பு அவரை ஆட்டிப் படைத்தது. ரொம்பவும் பயந்து தவித்தார். மூன்று மாத காலம் இதே பதைப்பு, பரிதவிப்பு, என் நிம்மதியையும் குலைத்தார். தெருவிலே போலீஸ்காரன் போனால் தன்னைப் பிடித்துப் போகத்தான் தேடுகிறான் என்று அரற்றுவார். நாங்கள் இருவரும் ஒரே அறையில் தங்குவோம். இரவில் ரோந்து வரும் போலீஸ் விசில் அடித்தால் இங்கு இவர் அலறுவார். "என்னைப் பிடித்துப் போகத்தான் வருகிறது போலீஸ். ஐயோ, காப்பாத்துங்க, என்னைக் காப்பாத்துங்க!" உடனே கட்டிலுக்கு அடியில் முடங்கிக் கொள்ளுவார்.

"போலாராம்! என்ன செய்யுறீங்க?"

"போலீஸ்காரங்க என்னைப் பிடித்துப் போக வர்றாங்க, புரொபஸர்! காப்பாத்துங்க."

தானும் தூங்க மாட்டார். என்னையும் தூங்க விடமாட்டார். "என்னைத்தான் தேடுறாங்க; போலாராம்! போலாராம்!'னு. அவங்க குரல் கேட்குதே. டிவி.யிலே அறிக்கை விட்டிருக்கிறாங்க, பாருங்க. என்னை எப்படியும் வந்து பிடிச்சிட்டுப் போயிடுவாங்க."

"போலாராம்! தயவு செய்து நீ தூங்கப்பா!"

"எப்படி புரொபஸர் தூங்க முடியும்? என் வாழ்வே ஆபத்திலே சிக்கியிருக்குது. என்னைப் பிடித்துக் கொண்டு போய் ஜெயிலிலே அடைச்சிடுவாங்க. நிச்சயம் என்னைப் பிடிப்பாங்க."

எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அவர் கல்லூரிக்கும் வருவதில்லை. நீண்ட விடுப்பு எடுத்து வீட்டிலேயே முடங்கியிருந்தார். மனநோய் மருத்துவர்கள் இந்த வியாதியை பேராநாய்டு என்பர். நல்ல மனிதருக்கு இந்த நிலைமையா? எல்லாரிடமும் எல்லா இடங்களிலும் அவருக்குப் பயப்பிராந்தி; தன்னைத்தான் குறி வைக்கிறார்கள் என்று. மனிதன் எப்படியெல்லாம் கற்பனை செய்து கொண்டு தவிக்கிறான்! சுவருக்கும் காதுகள் உண்டாம். குரல் ஓங்கிப் பேசக்கூடாதாம். எல்லாரும் இவர்

பேசுவதைத்தான் கவனிக்கிறார்களாம். தெருவிலே போகிறவர் வருகிறவர்கள் இவரைத்தான் கண்காணிக்கிறார்களாம். எவராவது முச்சந்தியில் பேசிச் சிரித்தால் போலாராமைப் பார்த்துத்தான் நக்கல் செய்கிறார்களாம். இருவர் மெள்ள பேசிக் கொண்டிருந்தால், இவருக்கு எதிராகச் சதி செய்யத் திட்டமிடுகிறார்களாம். ஊர்பூராவும் இந்தப் பேராசிரியருக்கு எதிராகவே இருக்கிறதாம்.

எனக்கு ஒரு வழி தோன்றியது. எனக்குப் பழக்கமான போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் போய், "நீங்கள் புரொபசர் போலாராம் சம்பந்தப் பட்ட ஃபைலை எடுத்துக்கொண்டு என் வீட்டுக்கு வாருங்கள்" என்றேன்.

"அப்படி எந்த ஃபைலும் எங்களிடம் இல்லையே. வழக்குப் பதிவும் இல்லை. அந்த மனிதர் எந்தக் குற்றமும் செய்யவில்லையே. பண்டிகைக் கொண்டாட்டத்தில் கொஞ்சம் 'பாங்க்' குடித்தார். போதை ஏறி ஆர்ப்பாட்டம் செய்திருக்கிறார். முன்னெச்சரிக்கையாக ஓர் இரவு சிறைக்குள் வைத்திருந்தோம். இதில் குற்றம் காண ஏதும் இல்லையே" - இன்ஸ்பெக்டர்.

நான் சொன்னேன், "ஒப்புக்கு ஏதாவது ஒரு ஃபைலை எடுத்து வாருங்கள். வெத்துத் தாள்களை வைத்துக்கொண்டு வந்தாலும் பரவாயில்லை. மேலே பெரிய எழுத்தில் போலாராம் என்று எழுதியிருக்க வேண்டும். வந்ததும் மிரட்டி மூணு நாலு அடி கொடுத்து கையில் விலங்கைப் பூட்ட வேண்டும். நான் பேரம் பேசி பத்தாயிரம் ரூபாய் நோட்டுக்கட்டை உம் கையில் வைத்த பிறகுதான் போலாராமின் கை விலங்கைக் கழற்ற வேண்டும். அதுவரை மிடுக்கு, மிரட்டு தொடரணும். புரிந்ததா? இந்த ஷாக் ட்ரீட்மெண்ட் அவருக்குத் தேவை, அவரைச் சரிப்படுத்த."

எல்லாம் நான் சொன்னபடியே நடந்தது. போலீஸ் இன்ஸ்பெக்டர் போலி ஆத்திரத்துடன் போலாராமை அடித்து கைவிலங்கு இட்டபோது, மனிதர் மகிழ்ந்து போனார். என்னைப் பார்த்து, "புரொபசர் சார், நான் சொன்னது சரியாயிடுச்சா? இப்போ போலீஸ் பிடிச்சு அடிச்சு விலங்கு மாட்டிட்டாங்க. இல்லியா? உங்க புத்திசாலிப் போதனை என்ன ஆச்சு?" என்றார். உடனே அழுதார்.

மனிதனின் விசித்திர சுபாவம். தான் சொன்னது சரியாகி விட்டதில் மகிழ்ச்சி. தண்டனை அனுபவிப்பதில் துக்கம். அவரது மகிழ்வுக்கும் இகழ்வுக்கும் அவருடைய அகங்காரம்தான் காரணம். அவருடைய மனப்பாங்கு, மற்றவர் புத்திசாலி இல்லை. நான்தான் புத்திசாலி. நான் சொன்னது நிகழ்ந்திருக்கிறது. பிறர் போதனை பொய்த்தது.'

நானும் இன்ஸ்பெக்டரும் நாடகமாடி போலாராமை வழக்கு, சிறை, தண்டனைகளிலிருந்து விடுவித்தோம். அவர் அகம் மகிழ்ந்து இயல்பு நிலைக்குத் திரும்பினார். தொந்தரவு தீர்ந்தது.

இதுதான் இன்றைய வெகுஜன நிலைமை.

**"மு**க்தியை விரும்புகிறவன் 'முக்தன்' பந்தப்பிணைப்பை விரும்புகிறவன் 'பத்தன்'. இந்தப் பழமொழி உண்மை. 'மதியைப் போல் கதி இருக்கும்' (புத்தி போகிறபடியே பாதை அமையும்)

நீ சிந்திக்கிறபடிதான் நிகழ்கிறது. உன் நினைப்பு உன் உலகியலை உருவாக்குகிறது. சிந்தனையை மாற்று; விழித்தெழு. சரியாகப் பார்.

எல்லாமே இயல்பாக அமைந்திருக்கும். உன் பார்வை, சிந்தனை, அறிவு முறைகள் மாறிவிடும். சிந்தனையை, கருத்தை மாற்றிக்கொள். விழித்தெழு. இயல்பாக முறையாகப் பார், கவனி!

**முக்தாபிமானீ முக்தோ ஹி பத்தோ பத்தாபிமானீ அபி,**
**கிம் வதந்தி இஹ ஸத்யேயம் யா மதி: ஸ கதிர் பவேத்.**

எப்படி நினைக்கிறாயோ, எப்படி உன் அறிவு போகிறதோ அப்படியே உன் போக்கும் பாதையும் அமையும்.

ஆத்மா சாட்சி. பரந்து விரிந்தது. பூரணமானது. அது ஒன்றே. முக்தன், ஜீவன் (சேதனன்). செயல் இல்லாதது, எதிலும் ஒட்டாதது. பற்றற்றது, அமைதியானது (சாந்தம்). அது மதி மயக்கத்தால் (பிரமை) பௌதிக உலகமாகத் தோன்றுகிறது.

"சாட்சி, பரந்து விரிந்தது (வியாபகம்), பூரணம்" இச் சொற்களைக் கவனி, கேள்!

அஷ்டாவக்கிரர் கூறுகிறார். ''நீ பூரணன், பூரணனாக வேண்டியன் இல்லை. உன்மீது எதையும் ஏறிட, சுமத்த, இணைக்க முடியாது. நீ இருக்கிற நிலையிலேயே பரிபூரணன் (முழுமையானவன்). உன்னிடம் எதையும் வளர்க்க வேண்டாம். நீ மேலே ஏறப் படிகளைக் கடக்க வேண்டாம். உன் எதிரே (எதிர்கொள்ள) எதுவும் இல்லை. நீ பூரணன், பரமாத்மா, வியாபகன் (எங்கும் பரந்துளன்), சாட்சி, ஒப்பற்றவன் (ஒருவன்), முக்தன், சேதனன் (நிஜ ஜீவன்), கிரியை (செயல்) இல்லாதவன், இணை - பிணை அற்றவன், எவரும்,எதுவும் உன்னைக் கட்டுப்படுத்தவில்லை. உனக்கு உற்றம் சுற்றம் இல்லை. நீ தனியன், முற்றிலும் தனிமையில் (பரம ஏகாந்தம்) உள்ளாய், பற்று அற்றவன் நீ.''

'இப்படி அமைய வேண்டும்' என்பது உனக்கு இல்லை. இதுதான் வித்தியாசம் அஷ்டாவக்கிரரின் வாக்கிற்கு. இதையே மகாவீரரிடம் கேட்டால், "நீ இப்படி ஆக வேண்டும், மாற வேண்டும்" என்பார் அஷ்டாவக்கிரர். "நீ அப்படியே இயல்பாக இருக்கிறாய்" என்பார்.

இரண்டிற்கும் பெரிய வித்தியாசம். மகாவீரர் சொல்லுகிறார். "எந்த ஒட்டுறவும், ஆசையும் இல்லாது இருக்க வேண்டும். பூர்ணமாகவும் (முழு நிறைவு), எங்கும் வியாபித்தும், சாட்சியாகவும் இருக்க வேண்டும். அஷ்டாவக்கிரர் கூறுகிறார். "நீ அப்படியே (மகாவீரர் சொன்ன ஆளுமைகளுடன்) நிறைவாக இருக்கிறாய். இதை உணர அகக் கண்கள் விழித்தெழ வேண்டும்."

அஷ்டாவக்கிரர் காட்டுவது இயல்பான யோகம் (ஈடுபாடு). இதிலே இலயித்து சமாதி சித்தி பெறலாம்.

"நான் உருமாயம் சார்ந்த அகங்காரம் கொண்டவன். இத்தகு பிரமையை, உள்ளும் புறமும் உள்ள உருவத்தை (உருவெளியை) துறந்து நடுநிலையில் நிலைத்திரு. இரண்டறக் கலந்துள்ள அத்வைத ஆத்மாவையே சிந்தித்திரு."

**"அஹம் ஆபாஸ: இதி** - நான் உருமாயம் எனும் அகந்தை கொண்ட ஜீவன்."

நீ இதுவரை உணர்ந்திருப்பது வெறும் உருமாயம். நீ நம்பியிருப்பது, கொள்கையாகக் கொண்டிருப்பது உன் மதி (அறிவு) சார்ந்தது. அக்கம் புக்கத்தில் உன் போன்றவர்களே வளைய வருகிறார்கள். அவர்களைப் பார்த்து உன் மதிக்கு (அறிவுக்கு) வலு கிடைக்கிறது. பொதுவாக மனிதன் தன் அறிவைப் பிறரிடமிருந்து பெறுகிறான், கற்றுக் கொள்கிறான். பிறரைப் பின்பற்றுகிறான். இங்கு எல்லாருமே துன்பத்தில் சிக்கியிருக்கிறார்கள். நீயும் துன்பத்தில் உழலுகிறாய்.

**ஜ**ப்பானில் ஓர் அற்புதமான மெய்யடியார் ஞானியார் இருந்தார். பெயர் ஹோதேயி. அவருக்கு ஞானோதயம் ஏற்பட்டதும், அதாவது விழித்தெழுந்ததும் வாய்விட்டுச் சிரித்தார். பிறகு எப்போதும் சிரித்துக் கொண்டே இருந்தார். கிராமம் கிராமமாகச் சென்று சிரித்தே மக்களுக்கு நல்வழி காட்டினார். சனங்கள் அவரைச் 'சிரித்து மகிழும் புத்தர்' எனப் போற்றின்ார்கள். கடைத்தெருவுக்குப் போவார், வீதி நடுவில் நின்று கொண்டு மனம் விட்டுச் சிரிப்பார். இப்படியே அவர் பிரபலமானார். பல இடங்களிலும், ஊர்களிலும் அவர் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள். அழைப்பு விடுத்துக் காத்திருந்தார்கள். அவர் ஏதும் உபதேசிப்பதில்லை. அருளாசி வழங்குவதில்லை. சிரிப்பு மட்டுமே அவரின் வெளிப்பாடு. கூட்டம் கூடும் கூட்டத்தாரும் சேர்ந்து சிரிப்பார்கள்.

ஹோதேயியை வணங்கி, சிலர் கேட்டார்கள். "பெரியவரே! ஏதாவது சொல்லுங்களேன். உங்கள் பேச்சைக் கேட்க ஆவல்"

"நான் என்ன பேச இருக்கிறது? நீங்கள் எல்லாரும் அழுது கொண்டிருக்கிறீர்கள். உங்கள் அழுகையை நிறுத்தி, சிரிக்க வைக்க ஒருவன் தேவை. சிரி, மனம் விட்டு சிரி!" இதுதான் என் பேச்சு, உபதேசம், அருளாசி எல்லாமே. நீ வீணுக்கு அழுது கொண்டிருக்கிறாய். உன் அழுகை உனக்கே சொந்தம். ஜீவராசிகள் சிரித்து வாழ்கின்றன. சந்திரன், நட்சத்திரங்கள், மலர்கள், பறவைகள் எல்லாமே சிரித்துக் கொண்டிருக்கின்றன. நீ வீணுக்கு அழுது கொண்டிருக்கிறாய். கண் திறந்து பார்! ஆனந்தமாகச் சிரி! இதைத்தவிர வேறு செய்தி என்னிடம் இல்லை."

ஹோதேயி சிரித்தார். கிராமம் கிராமமாகச் சென்று நாற்சந்தியில் நின்றுகொண்டு சிரித்தார். ஜப்பான் நாடு முழுவதையும் சிரிக்க வைத்தாராம். மக்களும் சிரித்தார்கள். அதைக் கண்டு ஞானியார் அகம் மகிழ்ந்தார். தியானம், தவம், சமாதி லயம் எல்லாமே சிரிப்புதான். மக்கள் 'நாம் சிரித்து மகிழ்ந்து நன்கு வாழ்கிறோம்' என உணர்ந்தார்கள்.

காரணத்தைத் தேடுவது தவறு. காரணத்தைக் கண்டுபிடித்து, பிறகு சிரிக்கலாம் என நினைத்தால் உன்னால் காலம் பூராவும் சிரிக்க முடியாது. காரணம் அறிந்த பிறகுதான் நான் சுகமாக இருப்பேன் என்று நினைத்தால், நீ சுகமாக இருக்கவே முடியாது. காரணத்தைத் தேடுபவன் துக்கப்படுவான். துக்கம் காரணமாக உள்ளது, சுகம் இயல்பானது, காரணத்தை உருவாக்க வேண்டி வரும். துக்கமும் அப்படியே. சுகம் இயல்பாகவே உள்ளது. சுகத்தை வெளிப்படுத்து. இதைத்தான் அஷ்டாவக்கிரர் அடிக்கடி கூறுகிறார் -

**"போதஸ் த்வம் ஸுகம் சர!"**

**"வீதசோக: ஸுகீ பவ!"**

**"விச்வாஸாம்ருதம் பீத்வா ஸுகீ பவ!"**

அமுதத்தைப் பருகி, சுகமாய் வாழ்க!

மானுடன் பூரணன், ஒட்டுறவில்லாத் தனியன் (ஒருவன்), தளைகளற்றவன் (முக்தன்). உலகியல் உருமாயம்தான் தடை, தடங்கல் போடுகிறது.

"நான் உருமாயம் பாதித்த அகங்காரம் கொண்ட ஜீவன் - இந்தப் பிரமையை, உள்ளும் புறமும் உள்ள உணர்ச்சி - உணர்வை அகற்றிவிட்டு மேம்பட்ட உணர்வாகிய அத்வைத ஆத்மா பற்றிச் சிந்தித்திரு!"

**அஹம் ஆபாஸ: இதி பாஹ்யம் அந்தரம் முக்த்வா...**

"புறத்திலும் அகத்திலும் உள்ள உணர்ச்சி உணர்வுகளிலிருந்து விலகி இரு!"

"ஆத்மா வெளியேயும் இல்லை, உள்ளேயும் இல்லை. மனபேதங்கள் (உள் உணர்வுகள்)தான் அங்கு உள்ளன. ஆத்மா

உள்ளே-வெளியே எங்கும் வியாபித்திருக்கிறது. ஆத்மாவிற்குள் சகலமும் அடங்கியுள்ளது. எல்லாமே ஆத்மாதான். உள்ளே வெளியே உள்ள உணர்ச்சிகளைத் துறந்து மேலான உணர்வுடன் இணையற்ற (அத்வைத) ஆத்மாவைச் சிந்தித்திரு.

இந்த விளக்கம் போதாது. மூல சூத்திரத்தைக் கவனி -

**"பாஹ்யம் அந்தரம் பாவம் முக்த்வா**
**த்வம் கூடஸ்த போதம் அத்வைத ஆத்மானம் பரிபாவய!**

உள்ளும் புறமும் விடுபட்டு உன்றிச் சிந்திப்பாய்! மேம்பட்ட ஆத்மாவை சூழ்ந்து சிந்தித்திரு! இந்த உணர்வில் வாழ்ந்திரு! விழித்தெழு! சாதாரண சிந்தனை போதாது. ஆழ்மனத்து உள் உணர்வோடு ஊன்றிச் சிந்தித்திரு! இந்த ஆழ்மன உணர்வு பிரேமை போன்றது. கணிதம் போல் அல்ல, தருக்கவாதமல்ல. இதய கீதம் போன்றது. இதன் இனிய முணுமுணுப்பு இதயத்துள் ஊடுருவி ஒலித்துக் கொண்டிருக்கும், எதிரொலிக்கும். ஆட்டுவிக்கும்.

'நான் மேம்பட்ட ஆத்மா' என்று ஆழ்ந்து சிந்தித்திரு. 'சுழலும் வண்டிச் சக்கரமில்லை, இணைத்துக் கொண்டு விலகாதிருக்கும் கடையாணி போன்றவன் நான்' என உணர்ந்திரு!

நீ பூவுலகில் இருப்பதாக நினைத்தால் பூவுலகில் வாழ்பவன். நீ முயன்று முனையத் துவங்கியதும், துணிவு பெற்றதும் நீ ஞானபோத வானில் பறந்து செல்லுவது துவங்கி விடுகிறது. எம் கவிச்சொல் வரிசை-

**மண்ணகம் மீது உலாவும் முகில் படலங்கள்**
**மேகக் குழுமங்கள் மேல் பறந்து போகிறேன்**
**என்னெதிரில் ஓர் அதிசய உலகம் பரந்துளது**
**மாபெருங் கனவு என் உறக்கத்தினூடே எழவேண்டும்**
**காலக்கடல் வீடுவீடாய் எதை நாடி அலை பாய்கிறது?**
**இருள் மண்டிய பனி மூடிய கணவாயில் ஒரு வண்டி**
**அலைமோதும் வெள்ளப் பெருக்கில் ஒளிரும் ஒரு மீன்,**
**இருண்ட கடலடியில் நுரைமூட்டத்துள் புதைந்து போகிறேன்,**
**வெகு தொலைவுக்கு செங்கதிர் வட்டம் சூரியனைச் சூழும்**
**என் இறக்கைகள் மீது வானவில் தீட்டிய வண்ண ஜாலம்**

**சுற்றிலும் பொழிகிறது பலவண்ணப் புனல் பெருக்கு**
**தேங்கி நிற்கும் நதியின் பாலங்கள் வானில் பறக்க**
**பெருகிவரும் நீர்த்தாரைகள் தவித்து நிற்க,**
**வானவெளியில் மிதக்கும் பெருமலைகள் கரைந்து போக**
**கிராமங்களில் நாணல் மண்டிய காடுகள் எழ**
**நெடுவீர்ப்பென வளர்ந்தோங்கிய பெரிய மரங்கள்!**
**பிறிதொரு பூமியைப் படைத்தது வானம்**
**பூமிமேல் மிதந்து தவழ்கின்றன மேகங்கள்,**
**மேகக்குழுமங்கள் மேல் பறந்து போகிறேன்**
**அதிசய உலகம் ஒன்று பரந்துள்ளது என்னெதிரில்!**
**என் உறக்கத்தினூடே எழவேண்டும்**
**மாபெரும் உன்னதக் கனவு!**

எழுமின்! நிறையக் கனவு கண்டாயிற்று. இப்போது விழித்தெழு! விழிப்புணர்வுதான் திறவுகோல். வேறெதுவும் செய்ய வேண்டாம் - சாதகம், சாதனை தேவை இல்லை. யோகாசனம் தேவை இல்லை, விழித்தெழு, போதும்.

ஹரி ஓம் தத்ஸத்!



## முதல் கேள்வி:

**தியானத்திற்கும் சாட்சியத்திற்கும் உள்ள தொடர்பு என்ன? அவை மூலமாக மனப்போக்குகளும், அகங்காரமும் எப்படி விடுபடுகின்றன? விலக்கப்படுகின்றன? முற்றிலும் அகங்காரமின்மையைப் பெறாமல் அர்ப்பணிப்பு சம்பவிக்குமா? துவராடை, காவி வஸ்திரம், ஜபமாலை, தியானம், சாட்சி, சாதனை - இவைகளுள் ஒத்துழைப்பு எதுவரை ஏற்படும்? தயவு செய்து இக்கருத்தையும் விளக்குங்கள். சாட்சியம், விழிப்புணர்வு, நேரிய நினைவு இவைகளுக்குள்ள வித்தியாசம் (வேறுபாடு) என்ன?**

மனித வாழ்வை நாலு வகையாய் பிரிக்கலாம். முதல் வகை கர்மா சார்ந்தது. செயல் (கர்மா) களம் எல்லாவற்றுக்கும் வெளியே உள்ளது. கொஞ்சம் உள்பக்கம் வந்தால் சிந்தனைக்களம். இதற்கும் உட்புறம் வந்தால் உணர்வுத்தளம். பக்தி, பிரேமைக்கு உரிய தளமும் இதுதான். மேலும் உள்ளே வந்தால் கேந்திர இலாக்கா சாட்சியத்தின் களம்.

சாட்சியாக இருப்பது நமது சுவபாவம் (பிறப்பியல்பு). அதைக் கடந்து செல்ல வழிவகை (உபாயம்) இல்லை. எவரும் கடந்ததில்லை. கடக்கவும் இயலாது. சாட்சிக்குச் சாட்சி இருக்க முடியாது. சாட்சி சுதந்திரமானது. அதைப் பின்தள்ள முடியாது. நம் அத்திவாரமே அதுதான். சாட்சி எனும் ஆதார அடித்தளத்தில் நம் உணர்வு, உணர்ச்சிகளின் மாளிகை எழுப்பப்பட்டிருக்கிறது. நம் எண்ணம், சிந்தனை, செயல்களின் மாளிகைகளும் அதே ஆதார அத்திவாரத்தின் மேல் எழும்பியவைதான்.

ஆகையால் கர்மயோகம், ஞானயோகம் பக்தியோகம் எனும் மூன்று யோகங்கள் (சிறந்த செயல்கள்) உள்ளன. இம்மூன்றும் தியான யோகத்தின் வழிமுறைகள். இம்மூன்று யோகங்கள் மூலமாக சாட்சி நிலையை அடைய வேண்டியுள்ளது. கர்மயோகம் என்பது கர்மம்+தியானம். செயல்பாடு வழியே சாட்சியை எட்டும் சாதனை கர்மயோகம்.

ஆக, தியானம் வழிமுறை, சாட்சியாவது இலட்சியம்.

கேள்வி, "தியானம் சாட்சியம் இரண்டிற்கும் என்ன சம்பந்தம்?"

தியானம் மார்க்கம், சாட்சியம் சேருமிடம். தியானத்தின் பரிபூரண நிலை சாட்சியம். சாட்சியத்தின் ஆரம்பம் தியானம்.

எந்த சாதகன் கருமத்தின் (செயல், பணி) மீது தியானத்தை ஏற்றுகிறானோ, கர்மா முறையுடன் (செயல் களம்) தியானத்தை இணைக்கிறானோ - கர்மா+தியானம் - அவன் கர்மயோகி.

பிறகு வருபவன் ஞானயோகி. இவன் தன் சிந்தனை, கருத்து மீது தியானத்தை ஏற்றுகிறான். சிந்தனைத் தளத்துடன் (வழிமுறை) தியானத்தை இணைக்கிறான். தியான யோகத்துடன் சிந்திக்கிறான். புதிய வழிமுறையை உருவாக்குகிறான். சுயபிரக்ஞையுடன் செயலாற்றுகிறான்.

சிந்தனையும் தியானமும் இணைந்து இயங்கும்போது சாட்சியை நோக்கிப் பயணம் தொடங்குகிறது.

தியானம் திசைமாற்றம். எந்தப் பொருளுடன் நீ தியானத்தை இணைத்துக் கொண்டாலும், அப்பொருள் சாட்சியிடம் கொண்டு செல்லும் ஊர்தி (வாகனம்) ஆகிறது.

மூன்றாவது மார்க்கம் பக்தியோகம். உணர்வுடன் தியானத்தைச் சேர்ப்பது, தியானத்தின் ஒட்டுறவு. உணர்வோடு சேர்ந்த தியானத்தின் சுழல். உணர்வு - உணர்ச்சிப்பூர்வமாக தியானத்தில் ஆழ்ந்து நிறைவு பெறு!

மேற்சொன்ன மூன்று வழிகளாலும் மனிதன் சாட்சிக்கு அருகில் வந்துசேர முடியும். அழைத்து வரும் வழிகாட்டி தியானம், மூலதத்துவம் தியானம்தான்.

மருத்துவர் உனக்கு நோய் தீர மருந்து கொடுக்கிறார். "இதைத் தேனில் குழைத்துச் சாப்பிடு" என்கிறார். நீ சொல்லுகிறாய், "ஐயா, நான் சமண சமயத்தவன் - ஜைனன். தேன் இமிசையால் சேகரிப்பது. நான் அருந்தமாட்டேன். வைத்தியர், "சரி, பாலில் கலந்து சாப்பிடு!" என்கிறார். நீ, "ஐயா, பால் இரத்தத்திலிருந்து கிடைப்பது. நான் க்வேக்கர் கிறித்துவன். பால் கூடாது" என்பாய். பிறகு மருத்துவர், "சரி, தண்ணீரில் கலந்து குடி" என்பார். ஆக, மருந்து ஒன்றுதான். தேன், பால், நீர் மூன்றும் துணைப்பொருள். மருந்தை உட்கொள்ள உதவுவது. தொண்டை வழியே உட்செல்ல அது தேவை. மருந்து தனியாக உட்செல்லாது.

தியானம் ஔடதம் (மருந்து).

மூன்று ரக மனிதர்கள் உலகில் இருக்கிறார்கள். சிலர் வேலை செய்யாமல் இருக்க மாட்டார்கள். வாழ்நாள் முழுவதும் ஏதாவது பணி செய்து கொண்டிருப்பார்கள். சோம்பி உட்கார்ந்திருக்க முடியாது. செயல்திறன் சிறப்பாற்றலாக அவர்களை இயக்கிக் கொண்டிருக்கும். இது ஏற்புடைத்து.

சத்குரு கூறுகிறார்:"நீ கர்மயோகத்தில் ஈடுபட்டிருக்கும் போது தியானம் எனும் மருந்தை உட்கொள். நல்லதாகும். உன்னால் பணி புரியாமல் வெறுமனே இருக்க இயலாது. செயலாற்றுவதுடன் தியானத்தைச் சேர்த்துக் கொள். நீ சொல்லுவாய், "வேலை செய்யாமல் வீணாக என்னால் உட்கார்ந்திருக்க இயலாது. இது என் இயல்பும் அல்ல."

மனத்தத்துவ நிபுணர்கள் இத்தகு செயல்வீரர்களை 'எக்ஸ்ட்ரோவர்ட்' என்பர். பன்முனைச் செயலூக்கம் கொண்டவர்கள், எப்போதும் செயல் ஈடுபாடு உள்ளவர்கள். ஏதாவது செய்து கொண்டே இருப்பார்கள். களைத்துப் போய் உறங்குவது வரையில் பணி செய்து கொண்டிருப்பார்கள். அது அவர்களது சுபாவம். உடன் பிறந்த இயல்பு.

சத்குரு கூறுகிறார். "சரி, கர்மாவை நீ குதிரையாகப் பாவித்து அதன்மீது அமர்ந்து சவாரி செய். இதில் ஔடதத்தைக் கலந்து கொள். மடக்கெனக் குடித்து விடு. அசல் பிரச்சினை ஔடதம் பற்றி. நீ தியான லயிப்புடன் கர்மாவைச் செய். எது செய்தாலும் அப்படியே

ஈடுபாட்டுடன் செய். மதிமயக்கத்தில், பிரமையில், கனவுலகில் செய்யாதே. விழிப்புணர்வுடன் செயல் புரி.

வேறு சிலர் இருக்கிறார்கள். "கர்மாவின் பாதிப்பு, செல்வாக்கு எம்மிடம் இல்லை. சிந்தனை, கருத்துக்கள் அலைமோதுகின்றன. நாங்கள் தேர்ந்த சிந்தனையாளர்கள்" என்பார்கள். கர்மாவில் (செயற்பாடு) அவர்களுக்கு நாட்டம் இல்லை. வெளி நிகழ்வுகளிலும், பொருள்களிலும் அவர்களுக்கு ஈடுபாடு இல்லை. உள்ளத்துள் பெரும் அலைகள் எழும்புகின்றன. அல்லோல கல்லோலம். ஆழ்மனத்திலும் கணநேரம்கூட சிந்தனை, யோசனை இல்லாமல் அவர்களால் இருக்க முடியாது. அவர்கள் கூறுவர். "நாங்கள்அமைதியாக அமர்ந்திருந்தாலும் எண்ணங்கள் அதிகமாக எழும்புகின்றன. பூஜை, பிரார்த்தனை, வழிபாடு, தியானம் எனத் தொடங்கினாலும் எண்ணங்கள் போர்க்களப் படைகள் மாதிரி வலுத்தாக்குதல் புரிகின்றன. குலைத்து விடுகின்றன. என்ன செய்வோம்?" சத்குரு கூறுவார். "நீஎண்ணம், சிந்தனையோடு கலந்து தியானத்தை விழுங்கிவிடு. சிந்தனையைத் தடுக்காதே. கவனி, அதில் மூழ்கி விடாதே. சற்று விலகி ஒதுங்கி நில். அமைதியாக (சாந்தி) பார்த்துக்கொண்டே இரு. உன் சிந்தனை சாட்சியாக மாறுவதை உணர்வாய். சிந்தனையோடு தியானத்தை இணைத்து விடு."

மற்றும் சிலர் உள்ளனர். அவர்கள் கூறுவர், "எங்களுக்குச் சிந்தனையாலோ, செயலாலோ (கர்மா) எந்தத் தொந்தரவும் இல்லை. உணர்ச்சி எழுச்சி பெறுகிறது. கண்ணீர் சொரிகிறது. இதயம் – மனம் தழுக்கிறது. பிரேமை, அன்பு, நட்பு, சிரத்தை, பக்தி இவைகளுள் மூழ்கி விடுகிறோம். சத்குரு கூறுவார். "இதையே (இந்த மூழ்கலையே) ஔடதமாக்கிக் கொள். இத்துடன் தியானத்தை இணைத்துக் கொள். கண்ணீர் பெருகட்டும், தியான யோகத்தில் பெருகட்டும். மெய் சிலிர்க்கட்டும், தியான பூர்வமாய் மயிர்க் கூச்செறிதல் நிகழட்டும். ஆக, சகலத்திற்கும் சாரசூத்திரம் தியானம்தான்."

அந்த பக்தி, கர்மா, ஞானம் சார்ந்த பேதங்கள் ஔடதத்தின் பேதங்கள் அல்ல. ஔடதம் ஒன்றுதான் இந்தக் கட்டத்தில்தான், நீ அஷ்டாவக்கிரரை அணுகி அறிந்துகொள்ள வேண்டும்.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார். ''நேரிடையாகத் தாவித் தாண்டிச் செல்! ஔடதத்தை அப்படியே விழுங்கி விடலாம். சேர்க்கைச் சாதனங்கள் (தேன், பால், நீர்) தேவை இல்லை.''

ஆகையால் அஷ்டாவக்கிரர் ஞானயோகியோ, பக்தி யோகியோ, கர்மயோகியோ அல்லர். அவர் கூறுகிறார். "நேரிடையாக சாட்சியுள் புகுந்து விடு. இதர சாதனங்களுக்கு அவசியம் இல்லை. ஔடதத்தை அப்படியே விழுங்கலாம். வாகனம், சாதனம் தேவை இல்லை. விட்டுவிடு. நேரிடையாய் முன்னேறி சாட்சியாகி விடுவாய், புறப்படு!''

அஷ்டாவக்கிரரைப் பொறுத்த வரையில் சாட்சி - தியானம் பேதமில்லை; வழிமுறை அணுகுமுறைத் தொடர்பு நிலையில் இரண்டிற்கும் வித்தியாசம் உண்டு. தியானம் விதிமுறை, சாட்சி சேருமிடம் (இலக்கு.)

அஷ்டாவக்கிரருக்கு மார்க்கமும் இலக்கும் ஒன்றே. அதனால்தான் அவர் கூறுகிறார். "இப்போதே ஆனந்தமாயிரு!" இலக்கும் வழியும் வெவ்வேறாகக் கருதுபவரால் அப்படிக் கூற முடியாது. அவர் கூறுவார். "புறப்படு, நீண்ட பயணம், மேலே மேலே ஏறிச் செல். அப்போதுதான் மலைச்சிகரத்தை எட்ட முடியும்... கண் விழித்துப் பார்! மலை முகடு மீது அமர்ந்திருக்கிறாய். எங்கே போக வேண்டும்? எப்படிப் போக வேண்டும்? அறிவாயா?"

இதனால்தான் அஷ்டாவக்கிரரின் சூத்திரங்கள் (சூட்சும உத்தி) மிகப் புரட்சிகரமானவை. சுத்த சாட்சியாக மாற ஞானம், பக்தி, கர்மாக்களின் உதவி வேண்டாம். அவை சுத்த சாட்சி எனும் சிகரத்தை எட்ட இயலாதவை. மருந்தை உட்கொள்ள வேண்டாம். உளமார உணர்ந்தால் போதும். 'போதம்' (உணர்வு) போதும். ஒட்டு-முட்டு தேவை இல்லை. நீ அங்கேதான் இருக்கிறாய் - உன் இலக்கு, இலட்சியம் அருகிலேயே இருக்கிறாய். ஆனால் சிலர் இதை உணர இயலாமல் இருக்கிறார்கள்.

**ஒ**ரு சூஃபி ஞானிக் கதை. ஒரு பக்கிரி (துறவி) சத்தியத்தைத் தேடிச் சென்றார். கிராமத்து எல்லையில் ஒரு மரத்தடியில்

அமர்ந்திருந்த ஞானியாரைப் பார்த்தார். "ஞானியாரே! சத்குருவைத் தேடி வந்தேன். சத்குரு எப்படி இருப்பார்? அடையாளம் காட்டுங்கள்.

ஞானியார் அடையாளம் சொன்னார். சுலபமான இனம் காணல், அவர் கூறினார். "இந்த மாதிரி மரத்தடியில், பத்மாசனமிட்டு, உபதேச முத்திரை காட்டிக் கொண்டிருப்பார். அவரே சத்குரு. அவரிடம் அடைக்கலம் புகுவாய்."

துறவி சாதனை புரிய சத்குருவை நாடிப் புறப்பட்டார். ஊர் ஊராகச் சென்று தோப்பு, தோட்டமெல்லாம் தேடி அலைந்தார். குருமார்கள் கிடைத்தார்கள். ஆனால் சத்குரு கிட்டவில்லை. முப்பது வருட காலம் தேடித் திரிந்து, ஏமாற்றத்துடன் மனச்சோர்வுடன் சொந்த கிராமத்திற்குத் திரும்பி வந்தார். கிராம எல்லையில் முதலில் பார்த்த அதே ஞானியார், அதே மரத்தடியில், அதே ஆசன இருக்கை, ஞான முத்திரையோடு அமர்ந்திருப்பதைப் பார்த்தார், பிரமித்தார். முன்பு அவர் சொன்ன இலட்சணத்துடன் முப்பது ஆண்டுகளுக்குப் பிறகும் அதே யோக முத்திரை, ஆசன அமர்வுடன் அமர்ந்திருந்தார். 'நான் மூடனாக, குருடனாக இருந்திருக்கிறேன்' என்று கழிவிரக்கம் கொண்டார். முதிய ஞானியாரை விவரங் கேட்டார். "குருதேவா! நீங்கள் ஏன் முன்பே எனக்குச் சொல்லவில்லை - நான்தான் நீ தேடி வந்த சத்குரு என்று?"

முதியவர் சொன்னார். "நான்தான் அடையாளம் கூறினேன். நீ கவனிக்கவில்லை. காதில் வாங்கிக் கொள்ளவில்லை. சுற்றித் திரிந்து அலைந்துதான் நீ வீடு திரும்ப வேண்டும். இதற்குள் ஆயிரம் வீடுகளை எட்டிப் பார்த்த பிறகுதான் சொந்த வீட்டுக்கு வருவாய் என்பதை அறிவேன். நான் சொன்ன இலட்சணங்களோடு என்னைப் பார்த்திருந்தால் உன் தேடல் பலிதமாகியிருக்கும். நீ அவசரப்பட்டுக் கிளம்பிப் போய்விட்டாய். முப்பது ஆண்டுக்காலம் அலைந்து திரிய வேண்டிய நிலையில் நீ இருந்திருக்கிறாய். நான் உனக்காக இவ்வளவு காலம் இதே ஆசனம், யோக முத்திரையுடன் காத்திருக்கிறேன். நீ திரும்பி வருவாய் என எதிர்பார்த்திருக்கிறேன். நான்தான் நீ தேடிக் கொண்டிருக்கும் சத்குரு. வா இங்கே."

பலமுறை வாழ்க்கையில் இப்படி நிகழ்கிறது. எதிரே இருப்பது தெரிவதில்லை. தொலைவில் இருப்பது கவர்ச்சிகரமாக இருக்கிறது. கனவுகள் நம்மை வெகு தொலைவுக்கு இட்டுச் செல்லுகின்றன.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "நீ எதை எங்கே தேடி அலைகிறாயோ, அது உன்னிடம், நீயாகவே இருக்கிறாய். இப்போதே இங்கேயே நீ அதுவாக அமைந்திருக்கிறாய்."

ஜெ. கிருஷ்ணமூர்த்தி கூறுவார், "அது சுத்தமான அஷ்டாவக்கிரர் உபதேசம்." பொதுவாக அஷ்டாவக்கிரரையும் கிருஷ்ணமூர்த்தியையும் சரியாக அறிந்தவர் இல்லை. பிரபல சமயக் குருமார்கள், ஆச்சாரியார்கள், உபதேசிகள், கிருஷ்ணமூர்த்தியிடம் மனக்கசப்பு கொண்டிருக்கிறார்கள். காரணம், கிருஷ்ணமூர்த்தி கூறுவார், "தியானம் தேவை இல்லை." அவர் சரியாகத்தான் கூறுகிறார். பக்தி, கர்மா, ஞானம் எதுவும் தேவை இல்லை. பொதுவாக மதகுருமார்கள் வெகுண்டெழுகிறார்கள். "எதுவும் தேவை இல்லையா? சனங்களை ஏமாற்றித் திசை திருப்புகிறாயா?"

அந்த குருஜிகள், சுவாமிஜிகள்தான் சனங்களை ஏமாற்று கிறார்கள். கிருஷ்ணமூர்த்தி நேரிடையாகவே அஷ்டாவக்கிரரின் செய்தியை அறிவுரையைத் தெரிவிக்கிறார். அவர் தெளிவாகக் கூறுவது இதுதான். "எதுவும் தேவையில்லை. தேவை ஏற்படுவது நீ எதையாவது இழந்தால்தான். தூசி தட்டி எழுந்திரு. கண்களுக்குத் தண்ணீர் தெளித்து அயர்வை நீக்கு. வேறென்ன தேவை?"

அஷ்டாவக்கிரரின் கொள்கைப்படி சாட்சியும் தியானமும் ஒன்றே. மார்கமும் இலக்கும் ஒன்றுதான். ஆனால் மற்ற எல்லாச் சமய மார்க்கங்களிலும் நெறிமுறைகளிலும் தியானம் சட்டவிதி, சாட்சி அதன் இறுதிப்பயன்.

"அவை மூலமாக மனப்போக்குகளும், அகந்தையும் எப்படி விலக்கப்படுகின்றன?"

சாட்சி உணர்வால் மனப்போக்குகளும் அகந்தையும் விலக்கப்படுவதில்லை. சாட்சி உணர்வால் அறியப்படும் உண்மை இதுதான் - அவை என்றுமே இருந்ததில்லை. இருந்தால்தானே விலக்கப்படுவதற்கு?

நீ ஓர் இருட்டறையில் குந்தியிருக்கிறாய். அங்கே பிசாசு இருப்பதாக நினைக்கிறாய். சுவரில் உன் சட்டை தொங்குகிறது. அது

அசைகிறது. நீ பிசாசு ஆடுவதாக நினைத்துப பயப்படுகிறாய். மனப்பிராந்தி உன்னை ஆட்டுவிக்கிறது. சட்டைக்குக் கால் கைகளை நீயே ஏறிட்டு உருவெளியை உருவாக்கி விடுகிறாய். அது உன்னை மிரட்டுகிறது. பயப்படுகிறாய். அப்போது எவராவது வந்து, "விளக்கை ஏற்றிப் பார், பிசாசு போய்விடும்" என்று சொன்னால், "விளக்கை ஏற்றினால் பிசாசு போய்விடுமா? எப்படிப் போகும்?" என்பாய்.

விளக்கேற்றிப் பார்த்தால் பிசாசு போய்விடும். பிசாசுதான் இல்லையே. வந்ததும் போவதும் மனப்பிராந்திதான். அது விலகும்.

இல்லாத நோய்களால் நீ பீடிக்கப்பட்டிருக்கிறாய், பைத்தியமாகியிருக்கிறாய். சாமியார், பண்டாரம், மந்திரவாதி எனத் தேடிப்போய், அவர் தரும் சாம்பலை (விபூதி) அருமருந்தாக நம்பி வாங்கி வருகிறாய். அதைப் பூசிக்கொண்டு நோய் நீங்கியதாக நம்புகிறாய். உன் கற்பிதமான நோய்க்கும் சாமியார் தரும் சாம்பலுக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா? பைத்தியக்காரா! சாம்பலால் நோய் தீருமா? வைத்தியம், மருந்து, ஆயுர்வேதம், மெடிகல் ஆய்வு எல்லாம் வீண்தானா? சாம்பலால் நோய் நீங்குவதில்லை. நோய் பீடித்திருப்பதாக நினைக்கும் உன் பிரமை நீங்குகிறது.

நான் ஒரு வைத்தியரைப் பற்றிக் கேள்விப்பட்டேன். அவரே என்னிடம் சொல்லியிருக்கிறார். ஆதிவாசிகள் வாழும் பஸ்தர் பகுதியில் வசித்து வந்தார். பஸ்தரிலிருந்து தொலை தூரத்துக் கிராமத்திலிருந்து ஓர் ஆதிவாசி நோயாளி அவரிடம் வந்தான். வைத்தியர் அப்போது ஒரு குக்கிராமத்தில் இருந்தார். அவரிடம் மருந்து, குறிப்பேடு, பேனா எதுவும் கைவசம் இல்லை. நோயாளியைப் பரிசோதித்துவிட்டு, கீழே கிடந்த சட்டி ஓட்டில் செங்கல் கரணையால் மருந்தை எழுதினார். நோயாளியிடம் கொடுத்து, "இந்த மருந்தை ஒரு மாத காலம் பாலில் கலந்து குடி. நோய் நீங்கிவிடும்" என்றார்.

அந்த ஆதிவாசி ஒரு மாதத்திற்குப் பிறகு வைத்தியரிடம் வந்தான். நோய் நீங்கி திடமாக இருந்தான். "மருந்து நல்லாக் குணமாக்கிடிச்சில்லே?" என்று வைத்தியர் கேட்டதும், "நல்லாக் குணமாக்கிடிச்சிங்க நீ தந்த மருந்து. அதே மாதிரி இன்னொரு சட்டி ஓட்டிலே மருந்தை எழுதிக் கொடுங்க. என் பெண்சாதிக்குக் கொடுக்கணும்" என்றான்.

"புரியல்லியே; என்ன சொல்ல வர்றே நீ?"

"நீங்க கொடுத்த மருந்து ஓடு தீர்ந்து போயிடிச்சு. பொடி பண்ணி தினமும் பாலிலே கலந்து குடிச்சேனா? நல்லா சொஸ்தமாயிடிச்சு. இப்போது என் சம்சாரத்துக்கும் அந்த மருந்து வேணுமுங்க."

வைத்தியர் திகைத்துப் போனார்.

"ஏதும் சொல்ல முடியவில்லை. சொல்லுவதும் முறையல்ல. நோயை நீக்குவதுதானே மருந்து. எப்படி இருந்தால் என்ன? அவனிடம், "பைத்தியக்காரா! நான் கொடுத்தது மருந்து இல்லை. மருந்தின் பெயரை எழுதிய குறிப்பு. அதுவே உன் நோயைத் தீர்த்து விட்டதென்றால், உனக்கு வந்தது நோயல்ல. நீ கற்பித்துக் கொண்ட பிரமை நோய். நோய் இருப்பதாக நீ நினைத்தது தவறு" என்று விளக்கம் தரமுடியுமா?" என்று கூறினார்.

மனவியல் நிபுணர்கள் கூறுவர். "நமக்கு ஏற்படும் நூறு நோய்களில் தொண்ணூறு மனப்பிரமை, கற்பனை." அறிவு வளர வளர இந்தப் பிரமை, கற்பனை அதிகரிக்கும். நமக்கு ஏற்படும் (ஏற்பட்ட தாகப் பாவிக்கும்) நோய்கள் எல்லாமே மனப்பிராந்திதான்.

இதனால்தான் உலகில் இவ்வளவு வைத்திய சாத்திரங்கள் உருவாகி, பிரபலமாகியுள்ளன. அலோபதி, ஆயுர்வேதம், ஹோமியோபதி, யுனானி, நேச்சரோபதி, சித்த வைத்தியம், நாட்டு மருத்துவம் - இவை மூலமாக நோய்கள் நீங்கி, நோயாளிகள் சொஸ்தமாகிறார்கள். போதாக்குறைக்கு மாந்திரிகம், ரட்சைக் கயிறு, தாயத்து, மணிமாலை எல்லாம் பிரபலமாகியிருக்கின்றன.

ஆச்சரியமாக இருக்கிறது. நிசமாகவே நோய்நொடி இருக்குமானால், அதைப் போக்கக் குறிப்பிட்ட உபாயம் (வைத்தியம், மருந்து) இருக்கத்தான் செய்யும். பல உபாயங்கள் எதற்கு? இவை பயனளிக்காது. நோய் உண்மையில் உள்ளதா இல்லையா என்பதுதான் பிரச்சினை. உனக்கு எந்த மருத்துவத் துறையில் நம்பிக்கை இருக்கிறதோ - அலோபதியோ, ஆயுர்வேதமோ, ஹோமியோபதியோ - ஏதானும் ஒன்றை நம்பி அதே முறையை மேற்கொள்ள வேண்டும். குணம் பெறலாம். நோயை விட டாக்டரின் பெயர்தான் (ராசியான பெயர்) நல்ல பயன் தரும்.

உனக்கே அனுபவம் ஏற்பட்டிருக்குமே? பிரபல பெரிய டாக்டரிடம் நீ போய் வைத்தியம் பார்த்து, நிறைய பணம் கொடுத்து விட்டு சேர்ந்து வந்திருப்பாயே? பாதி நோய் அப்போதே போயிருக்குமே? அதே டாக்டர் இனாமாக மருந்துச் சீட்டை எழுதிக் கொடுத்திருந்தாலும் உன் நோய் நீங்கியிருக்காது. டாக்டர் கொடுக்கும் மருந்தைவிட அவர் வாங்கின ஃபீஸ்தான் நோய் நீங்க அதிக வேலை செய்யும். அந்த டாக்டர் மிகப்பிரபலம், அனுபவசாலி, பெரியவர் என்று நினைத்துக் கொண்டாலே போதும், அது அருமருந்தாகும்.

உன் கேள்வி, "அகங்காரமும் மனப்போக்குகளும் சாட்சிய உணர்வில் (சாக்ஷீபாவம்) எப்படி விடப்படுகின்றன?"

அவை விடப்படுவதில்லை. தாமாகவே போய்ச் சேர்கின்றன. சாட்சி உணர்வு தெரிவிக்கும் கருத்து, "பைத்தியக்காரா! வீணுக்கு அலைந்து திரிந்தாய். உன் கற்பனை வலையை விரித்து கானல்நீரை உருவாக்கிக் கொண்டாய். எல்லாம் கற்பனையின் விளைவு. சாட்சி உணர்வு பெற்றபின் புரிந்துவிடும். விடுவதற்கு எதுவுமே இல்லை என்பது."

"பூரண அகங்காரமின்மையைப் பெறாமல் ஆத்ம சமர்ப்பணம் சம்பவிக்குமா?"

இது மிக முக்கியமான கேள்வி. வினவுபவன் கூறுகிறான், "பூரண செருக்கின்மையைப் பெறாமல் சுய சமர்ப்பணம் சாத்தியமாகுமா?" கேட்பவனின் உள்ளம் சாலாக்கு செய்கிறது அவன் அறியாமலே. நிரஹங்காரம் (அகந்தையின்மை) எனும் சொல்லுடன் 'பூரண' (முழு) அடைமொழியைச் சேர்த்தவன், சமர்ப்பணத்துடன் 'பூரண' சேர்க்கவில்லை. பூரண நிரஹங்காரம் இன்றி பூரண ஸமர்ப்பணம் சம்பவிக்காது. எவ்வளவு அகங்காரத்தை விடுகிறாயோ, அந்த அளவுக்கு சமர்ப்பணம் சம்பவிக்கும். ஐம்பது விழுக்காடு அகந்தையை விட்டால், அதே அளவுக்கு சமர்ப்பணம் லபிக்கும். அகங்கார விடுவிப்பு, சமர்ப்பண சம்பவம் இரண்டும் வெவ்வேறல்ல, சொல்லும் முறையில்தான் வேறுபாடு.

அகந்தையை முழுவதுமாக விட்டு விட்டால் சமர்ப்பணம் தேவைப்படாது. (அந்நிலை இயல்பாகவே ஏற்பட்டு விடும்) அகங்காரம் (மமதை) எப்போது விலகும்? எப்படி விலகும்?

எந்த அளவுக்கு அகங்காரம் விடுபடுமோ, அந்த அளவுக்கு சமர்ப்பணம் சித்திக்கும். முழுவதும் விடுபடுவது பற்றிக் காத்திருக்க வேண்டாம். இயன்றவரை முயற்சி செய், பிறகு முன்னேறலாம்; இலக்கை எட்டலாம்.

உதாரணமாக, ஒரு மனிதன் இரவில் பயணிக்கிறான். இருள் சூழ்ந்துள்ளது. அவன் கையில் சிறு விளக்கு உளளது. நாலைந்து அடி தூரம் வெளிச்சம் தெரியும். "இதைக் கொண்டு பத்து மைல் தொலைவு போக வேண்டுமே, முடியுமா? வழி தவறிப் போவோம். நாலடி தூர வெளிச்சத்தில் சரியான பாதை புலப்படாது" என்று சொல்லுவான். அவனுக்கு நமது அறிவுரை இது. "பயப்படாதே! நாலடி நட, வெளிச்சம் தொடர்ந்து நாலடி முன்னால் தெரியும். பத்து மைல் தொலைவுக்கு வெளிச்சம் எதற்கு? போகப் போக வெளிச்சம் முன்செல்லும், தொடர்ந்து வழிகாட்டும், புறப்படு!"

அவன் முன்னேறுவான், தொடர்ந்து செல்வான். இதேபோல் எந்த அளவு இயலுமோ, அவ்வளவுக்கு அகங்காரத்தை விட்டுவிடு. பிறகு அளவு நீளும் - நாடி தூரம் வெளிச்சம் தொடர்ந்து தெரிவதைப் போல..

அகங்காரம் முழுவதும் நீங்கிய பிறகுதான் சமர்ப்பணம் சம்பவிக்கும் என்று காத்திருக்க வேண்டாம். முழுவதும் நீக்க முயல வேண்டாம். அது உன்னால் ஒருபோதும் சாத்தியமாகாது. நீ தப்பித்துக் கொள்ள, பின்வாங்க மேற்கொள்ளும் தந்திரம் அது. இயன்றவரை அகங்காரத்தை விலக்கு, அந்த அளவு சமர்ப்பணம் பெறு. தொடர்ந்து செய், தொடரும் விளக்கொளி போல் உன் செயல் பயன்பெறும். சொற்ப இலாபமே பெரும் இலாபத்தைப் பெற இட்டுச் செல்லும். துணிவுடன் செயல்படு! இதனால் ஏற்படும் மகிழ்ச்சி உனக்குத் துணிவைத் தரும்.

நன்றாக நீந்தத் தெரிந்த பிறகுதான் தண்ணீரில் இறங்குவேன் என்று ஒருவன் சொன்னால், அது ஒரு வாயாடல், கணக்கு அந்த அளவுக்கு சரிதான். நீந்தத் தெரியாதவன் குளத்தில், ஆற்றில் இறங்கினால் மூழ்கிப் போவான். இந்த விபத்தைத் தவிர்க்க அவனது வாதம் சரிதான். நன்றாக நீந்தக் கற்பது எப்படி? சோஃபாவிலோ, கட்டிலிலேகா உட்கார்ந்தா நீந்தக் கற்க முடியும்? தண்ணீரில்

இறங்கினால்தானே நீச்சல் கற்க இயலும். தண்ணீரில் இறங்கத்தான் வேண்டும். உன்னை எவரும் கடலில் அலைகளுக்கு இடையில் புகுந்து நீந்தக் கற்றுக்கொள்ளச் சொல்லவில்லை. ஏதாவதொரு நீர்நிலையில் கழுத்தளவு, மார்பளவு தண்ணீரில் இறங்கி கை கால்களை அடித்து நீந்தத் துவங்கு. மெள்ள மெள்ளக் கற்றுக் கொள்ளுவாய். எதிர்நீச்சல் போடுமளவுக்குத் தேர்ச்சி பெறுவாய். துணிச்சல் வளரும். பிறகு கடலில் குதித்தாலும் கவலை இல்லை. நீந்திக் கரை சேருவாய். ஆக, நீந்தக் கற்றக்கொள்ளத் தண்ணீரில் இறங்கத்தான் வேண்டும். தண்ணீருடன் நட்பு, நேசம் ஏற்படுத்திக் கொள். தண்ணீரை அறிந்து கொள். கை கால்களை உதைத்து எழும்பி முன்னேறு. நீச்சல் சுலபம்.

நீச்சல் என்பது என்ன? கை கால்களை அடித்துக் கொள்ளுவது. இது எல்லாருக்கும் இயல்பாக வரும். நீச்சல் தெரியாதவனைத் தண்ணீரில் தள்ளிவிடு. அங்கே கை கால்களை அடித்துக் கொள்ளுவான். நீச்சல் அடிப்பவன் இலாகவமாகச் செய்வான், அறியாதவன் தாறுமாறாய் செய்வான். செயல் ஒன்றுதான். பிறகு அதிலிருந்தே கற்றுக் கொண்டு விடுவான். கற்றுக்குட்டிக்குத் தன் மீதும், தண்ணீர் மீதும் நம்பிக்கை இல்லை. பயப்படுகிறான். அந்தப் பயமே அவனை மூழ்கடித்து விடும். தண்ணீர் எவனையும் சுயமாய் மூழ்கடிப்பதில்லை.

நீ ஆற்று வெள்ளத்தில் மிதந்து செல்லும் சவத்தைப் பார்த்திருப்பாய். அதனிடம் கேட்டுப் பார். "உயிரோடு இருந்தபோது நீச்சல் தெரியாமல் மூழ்கினாய், செத்துச் சவமானதும் மிதக்கிறாயே, எப்படி?" சவம் பயப்படுவதில்லை. நதி அதை எப்படி மூழ்கடிக்கும்? தண்ணீரின் இயல்பு மூழ்கடிப்பதல்ல, உயர்த்துவது. அதனால்தான் தண்ணீரில் பாரம் குறைகிறது. தண்ணீருக்குள் நீ உன்னைவிட அதிகப் பளுவான ஆசாமியைத் தூக்க முடியும். பெரிய பாறாங்கல்லைக் கூட தண்ணீருக்குள் தூக்கி விடலாம். நிலத்திற்கு உள்ள ஈர்ப்பு சக்தி நீருக்கும் உண்டு. நிலம் கீழே இழுக்கும், நீர் மேலே தூக்கி விடும். மேலே தள்ளுவது தண்ணீரின் இயல்பு. நீருக்குள் நீ மூழ்கிப் போனால் அதற்கு நீதான் காரணம். தண்ணீர் எதையும் உள்ளே இழுத்து மூழ்கடிக்காது. மறந்தும் தண்ணீரைக் குறை கூறாதே. தண்ணீர் இதுவரை எவரையும் மூழ்கடித்ததில்லை.

விஞ்ஞானியிடம் கேட்டுப்பார். அவர் கூறுவார், "அதிசய மாயிருக்கிறது. தண்ணீர் எப்படி மனிதனை மூழ்கடிக்கும்? அது உயரே தள்ளி விடும். கீழே இழுக்காது. நீ உன் களேபரத்தால், பதற்றத்தால் மூழ்கிப் போகிறாய். அலறுகிறாய், வாய் திறந்து தண்ணீர் குடிக்கிறாய். உன் உடல் பலம் அதிகமாகிறது, மூழ்கிப் போகிறாய். உன் சாவுக்கு நீதான் காரணம்.

நீச்சலடிப்பவனை தண்ணீர் உயர்த்தும், கீழே இழுக்காது. அழுத்தாது, என்பதைக் கற்றுக் கொள்ளுகிறான். தண்ணீரிடம் மதிப்பு மரியாதை அதிகரிக்கிறது. தண்ணீர் நம் பளுவைக் குறைக்கிறது. தரையில் (பூமியில்) இருப்பதைவிட நம் பளு தண்ணீரில் குறைந்து போகிறது.

கிணற்றுக்குள் தண்ணீர் மொள்ள வாளியை முக்கி மேலே இழுக்கும்போது, நீருக்குள் இருக்கும் வரையில் பாரம் தெரியாது. மேலே இழுக்கும் போது பாரமாக இருக்கும். பாரமில்லாமல் ஆக்கும் தண்ணீர் எப்படி மூழ்கடிக்கும்? மனிதன் இதை அனுபவத்தால் கற்கிறான். தண்ணீரிடம் மதிப்பு மரியாதை ஏற்படுகிறது. தண்ணீர் நம் நண்பன் எனக் கருதுகிறான்.

தேர்ந்த நீச்சலாளி கை கால்களை இயக்காமல், விரிக்காமல், நீர்மேல் மிதக்கிறான். தாமரை மலர்போல் கிடக்கிறான். அத்தகைய மனிதன்தான் நீயும். சிரத்தை (ஈடுபாடு) தன்னம்பிக்கை ஏற்பட்டிருக்கும். தண்ணீர் மீதும் நம்பகம் வந்திருக்கும். நட்புணர்வு வளரும்.

இதேபோலத்தான் சமர்ப்பணம் விஷயத்திலும் ஏற்படுகிறது. நீந்தத் தெரியாதவன் ஆழமான தண்ணீரில் இறங்கினால் மூழ்கி விடுவேன் என அஞ்சி கரைப்பக்கம், முழங்கால் அளவுத் தண்ணீரில் நின்று நீந்தக் கற்பதைப் போல இருக்கிறது. சமர்ப்பணத்தை ஆரம்பத்தில் கரையோரம் தண்ணீரில் நீந்தக் கற்பதைப் போல சிறிதளவு சாதித்தால் போதும். தொடக்கத்திலேயே முழு அளவு சமர்ப்பணம் அடைய எவரும் வற்புறுத்தவில்லை. கொஞ்சம் கொஞ்சமாக, போகப் போக ஆர்வமும் திறனும் வளரும். இலக்கை எட்டுவது எளிதாகும். ஈடுபாடு (சிரத்தை), தன்னம்பிக்கை மிக அவசியம். சமர்ப்பணம் செய்து கொண்டே முன்னேறு. ஒருநாள்

முழுமையாக (பூரண) சமர்ப்பணம் சாத்தியமாகும். தன்னைப் பாதுகாக்கவே 'தன்னை' (சுயத்தன்மையை) இழக்க வேண்டும். பிறகு புரியும். உலகியலில் மூழ்கினாலும் மேலெழுந்து காப்பாற்றிக் கொள்ள முடியும்.

அகங்காரம், சமர்ப்பணம் சார்ந்த விஷயத்தில் ஒரு கருத்தைக் கவனத்தில் கொள்ள வேண்டும். மனம் மிகத் தந்திரசாலி. அது நெளிவு சுளிவுகளைத் தேடும். மனம் வாதம் புரியும். "முதலில் விட வேண்டியது எது? அகங்காரமா, சமர்ப்பணமா? முதலிலே சமர்ப்பணம் செய்தால் அகங்காரம் தானாகவே விலகிவிடுமா? அல்லது அகங்காரத்தை விட்டுவிட்டால் சமர்ப்பணம் சித்திக்குமா?"

எடுத்துக்காட்டாக, ஒரு சங்கதி - கடைக்குப் போய் ஒரு முட்டை வாங்குகிறாய். அப்போது கடைக்காரரிடம், "முட்டை முதலில் வந்ததா அல்லது கோழி முதலில் தோன்றியதா?" என்று கேள்வி கேட்பாயா? அப்படிக் கேட்டால் நீ முட்டை வாங்கவே முடியாது. கேள்வி கேட்காமல் முட்டையை வாங்கிக் கொண்டு வீடு போய்ச் சேருவாய். 'முட்டை முதலா? கோழி முதலா?' என்கிற பிரச்சினை எழாது.

இது குறித்துப் பலரும் விவாதித்திருக்கிறார்கள். கோழி-முட்டை விவகாரம், விவாதம் பழைமையானது. பதில் கூறுவது கடினம். 'நீ முட்டைதான் முதலில் வந்தது' என்று சொன்னால், 'கோழி இல்லாமல் முட்டை எப்படி வெளி வரும்?' என எதிர்க்கேள்வி வரும். 'கோழிதான் முதல்' என்றாலும் அதே கேள்வி எழும். இது வினா-விடை வட்டம், சுழலம்; தீர்வு வராது.

கேள்வியே தவறு. கோழியும் முட்டையும் வெவ்வேறு அல்ல; ஒரு பொருளின் இருநிலைகள். முன்பின் வைப்பதால், இரு பொருள்கள் என்பதால்தான் தீராத தருக்கம், கோழி முட்டையின் வெளிப்படை உருவம். முட்டை கோழியின் வெளிப்படாத உருவம்; விதையும் மரமும் போல. இதே போன்றது அகங்காரமின்மையும் சமர்ப்பணமும். 'எது முதலில்?' எனும் விவாதத்தில் இறங்கிக் காலத்தை விணாக்காதே. கோழியை நீ கொண்டு வந்தால், முட்டையையும் கொணர்ந்திருக்கிறாய் என்று அர்த்தம். இதே

பொருள்தான் நீ முட்டையைக் கொண்டு வந்தாலும், ஒன்று வந்தால் மற்றதும் கூடவே வரும். எதிலிருந்து ஆரம்பித்தாலும் சரிதான். அகங்காரத்தை விட முடியுமானால் அங்கிருந்து தொடங்கு. அது முடியாவிட்டால் சமர்ப்பணத்திலிருந்து ஆரம்பி. சமர்ப்பணம் செய்தாயானால் அகந்தை தானே விலகிவிடும். முழுவதும் விலகிவிடும் என்று சொல்ல மாட்டேன். எவ்வளவு சமர்ப்பணம் செய்கிறாயோ, அந்த அளவுக்கு அகந்தை நீங்கும். சமர்ப்பணம் செய்ய இயலாது போனால் அகங்காரத்தைத் துறக்க முற்படு. அந்த அளவுக்கு சமர்ப்பணம் சாத்தியமாகும்.

உலகில் இரு மதங்கள் பிரபலம். ஒன்று அகங்காரமின்மையை வலியுறுத்தும் மதம், மற்றது சமர்ப்பணத்தை வலியுறுத்துவது. உதாரணமாக, ஒன்று கோழிக் கட்சி, மற்றது முட்டைக் கட்சி. இரண்டுமே சரியானவை. ஒன்று வந்தால் மற்றது தானே வரும் என்பதால். எடுத்துக்காட்டாக, மகாவீரரின் ஜைன மதம், கௌதம புத்தரின் பௌத்த மதம். இவைகளிடம் சமர்ப்பணத்திற்கு இடமில்லை. 'அகங்காரத்தைத் துறந்துவிடு!' இதுதான் அவற்றின் கோட்பாடு. சமர்ப்பணம் எவரிடம் செய்வாய்? பரமாத்மா, பரம்பொருள், சர்வேசுவரன் என எவரும் இல்லை. புத்தர், மகாவீரர் இருவருக்கும் இதுதான் சித்தாந்தம்.

இந்து வைதிக சனாதன மதம், இஸ்லாம், கிறித்துவம் - இவை சமர்ப்பணம் சார்ந்தவை. அகங்காரத்தைத் துறப்பது பற்றி அவை வற்புறுத்துவதில்லை. "பரமாத்மாவிடம் சரணாகதி (புகல் பெறல்) செய்!" என விதிக்கின்றன. ஆண்டவன் திருவடிகளில் சரணடைவாயாக! சென்னி சாய்த்து வணங்கிச் சரணடைய வேண்டும். அகங்காரம் (நான் - எனது எனும் மமதை) தானாகவே விலகிப் போகும்.

இருசாராரும் சரியானவர்களே. இரு நிகழ்வுகளும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள். தலையா, பூவா பார்க்கும் பக்கங்கள். உள்ளங்கையில் எப்படி வைத்துப் போனாலும், காசு வீடு போய்ச் சேர்வது ஒன்றுதான். எப்பக்கத்திலிருந்தாவது தொடங்க வேண்டுமில்லையா? சோம்பி உட்கார்ந்து கணக்குப் போட வேண்டாம்.

மற்றொரு கேள்வி:

"காவி ஆடை, ஜபமாலைகள், தியான யோகத்திற்கும் சாட்சி சாதனைக்கும் எவ்விதம் துணை புரியும்? பயன்படும்?"

எல்லாப் பொருளும் உதவிகரம்தான். அற்ப சொற்பமான பொருள்களானாலும் பயன்படுத்திக் கொள்ளுவது உபயோகமாக இருக்கும்.

ராமாயணக் கதை தெரியுமே; இராமர் இலங்கை செல்லக் கடலில் சேது (பாலம்) அமைத்த போது பெரிய வானரங்களோடு அணில்களும் பணிபுரிந்தன. அணில்கள் சிறு கல் தூள்களையும் மணல்களையும் உடலில் ஒற்றி எடுத்துக் கொண்டு வந்து போட்டனவாம். சேது உருவாக அவையும் உதவியிருக்கின்றன.

துவராடை, வெண்ணிற வத்திரம் என உடுத்துவதால் மட்டும் சாதிக்க முடியாது. ஜபமாலையை கழுத்தில் அணிந்து கொண்டால் பெரும் பயன், புரட்சி ஏற்படும் என நினைக்க வேண்டாம். புரட்சி அவ்வளவு சல்லிசானதல்ல. அதற்காக எளிய சாதனம், உதவிகளை அற்பமாகக் கணிக்க வேண்டாம். அணிலின் உதவி போல் அமையும். இராமர் அணில்களுக்கும் நன்றி கூறினார்.

எளிய, சிறு சாதனங்கள்கூட பயனளிப்பவைதான். எடுத்துக்காட்டாக, திடீரென நீ சொந்த கிராமத்திற்குத் திரும்பி வருகிறாய், காவியுடை உடுத்தியிருக்கிறாய். கிராமம் முழுவதும் உன்னை ஆச்சரியத்துடன் பார்க்கும். நீ முன்பு அங்கு வசித்த மாதிரி இப்போது வசிக்கவோ, வளைய வரவோ இயலாது. நீ முன்பு அங்கு ஒளிந்து விளையாடின மாதிரி இப்போது ஒளிய முடியாது. நீ மாறுபட்டு அந்நியத்தன்மையோடு கிராமத்திற்கு வந்திருக்கிறாய். பார்ப்பவர்கள் 'உனக்கு என்ன ஆயிற்று?' என்று கேட்பார்கள். சந்திக்கும் ஒவ்வொருவரும் உன் பழைய நிலை - நினைவுகளை ஞாபகப்படுத்துவார். கேள்வி மேல் கேள்வி கேட்பார். நீ மறுபடியும் பழைய நினைவுகளைப் பெற, சாட்சியாக இருக்க வாய்ப்புக் கொடுப்பார்கள்; தொடர்ந்து நினைவுபடுத்துவார்கள்.

பழைய நண்பன் என்னிடம் வந்து சன்னியாச (துறவு) தீட்சை பெற வேண்டினான். கொடுக்கத் தொடங்கினேன். அப்போது அவன்

அழுதான். சாது சுபாவம். காரணம் கேட்டேன். "ஓர் இடைஞ்சல் எனக்கு. நான் குடிப்பழக்கம் உள்ளவன். நீங்கள் குடிப்பதை அறவே விட்டுவிடச் சொல்லுவீர்கள். என்னால் இயலுமா?" என்றான். "நான் எவரையும் எதையும் விட்டுவிடச் சொல்லுவதில்லை. குடிக்க விரும்பினால் குடித்துக்கொள்" என்றேன்.

"என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள்? துறவியான பிறகும் குடிக்க முடியுமா?"

"உன் இஷ்டம். நான் சன்னியாசம் (துறவறம்) கொடுத்து விட்டேன். பிறகு உன் பாடு."

ஒரு மாதம் கழித்து அந்த நண்பன் என்னிடம் வந்தான். "குருஜி! நீங்கள் மகா தந்திரசாலி. குடிப்பழக்கம் ஒழிய சாலாக்கு செய்து விட்டீர்கள். சன்னியாசி ஆனதும் மறுநாள் வழக்கம் போல் மதுபானக் கடைக்குப் போனேன். தெரிந்த ஓர் ஆள் ஓடிவந்து என் காலில் விழுந்தான். "சாமி! இங்கே எப்படி வந்தீங்க?" என்று கேட்டான். பதில் சொல்லாமல் ஓடிவந்தேன். மறு நாளும் இதே அனுபவம். வேறொருவன் வந்து வணங்கிவிட்டு, "நீங்க இந்த இடத்துக்கு வரலாமா?" என்றான். தலைகுனிந்து திரும்பி வந்தேன். பிறகு மதுக்கடைப் பக்கம் போவதில்லை என முடிவெடுத்தேன். இதைச் சொல்லத்தான் இங்கு வந்திருக்கிறேன்.

ஒரு நினைவு நிலைத்தது. பழைய ஞாபகம் விலகியது.

ஆக, நீ இந்தக் காவி உடை மீது பழையபடியே கோபம் கொள்ளாமல் மரியாதை செலுத்துவாய். எதுவும் அற்ப விஷயமில்லை. ஒரு பண்டம் உன்னைப் பாதிக்கும், காயப்படுத்தும். மற்றொன்று, 'என்னை விட்டுத் தொலை!" என்று சாடும். "நீ இந்தக் காவி உடையில் பொருத்தமில்லாமல் விகாரமாயிருக்கிறாய்" என மற்றொன்று ஏளனம் செய்யும்.

நான் உனக்கு இந்தக் காவி உடைகளைக் கொடுத்துச் சங்கடப்படுத்துகிறேன். உன் பழைய பிடிமானம் குறையும், விலகும். நீ திருடனாயிருந்தால் (காவி உடை தரித்தபின்) திருட மனம் வராது. நீ பணத்தாசை பிடித்தவனாய் இருந்தாலோ, உலோபியாக இருந்தாலோ

உன் குணக்கேடு வலுவிழக்கும், மாறும். நீ அரசியலில் சாலாக்குகள் செய்து பிரபலமானால், பதவி மோகத்தில் மோசமாய் முனைந்திருந்தால், துறவு மேற்கொண்டதும் பழைய மோகம் மறையும், சலிப்பு, விரக்தி ஏற்படும்.

சாதாரண சின்னத் துணி சிறந்த அடையாளமாக அமையும். உன்னோடு சேர்ந்தபின் அதன் மதிப்பு உயரும், உன் சிறப்பும் அதிகரிக்கும். சின்னஞ்சிறிய விதை பெரிய மரமாக வளர்ந்தோங்குவதைப் போல உன் ஆளுமை பெருமை மேம்படும். சிறு காவித்துணி எல்லாவற்றையும் மாற்றிவிடும். உன் செயல், இயல்பு, நடையுடை பாவனை சகலமும் மாறுபடும். இது உன் ஜீவிதத்தில் புதிய அருள்பிரசாதம். உன்னிடமிருந்து மக்களின் எதிர்பார்ப்புகள் மாறும். உன்பால் மற்றவர்களின் கண்ணோட்டம், கருத்துரு மாறும்.

நாமம் மாறும், பழைய பெயரின் தொடர்பு விலகும். ஆடை மாறும், பழைய உடை அணிதல் விலகும். கழுத்தில் அணியும் ஜபமாலை தீட்சை அளித்த என்னை நினைவு படுத்தும். நம் இருவருக்கும் இடையே பாலமாக அமையும். என்னை உன்னால் மறக்க இயலாது. மக்கள் உன்னைத் தனிமைப்படுத்துவார்கள். அது உனக்கு சாட்சியாக நீ மாற உதவும்.

இவையெல்லாம் உனக்கு முழுப் பயனை அளித்துவிடும் என்று சொல்ல மாட்டேன். துவராடை அணிந்து மாலை போட்டுக் கொண்டு விட்டால் பயணம் இலக்கை எட்டிவிட்டது என எண்ணாதே. இலக்கை எட்டுவது உன் பணி. அவை அறிகுறிகள். சாலைப்போக்கில் மைல் கற்கள் அமைக்கப்படுவது போல, பயணம் முன்னேற முன்னேற மைல்கல் மாறும் - பன்னிரண்டாவது மைல் எனக் காட்டும். 'இங்கிருந்து தில்லி 100 மைல்' என எழுதியிருக்கும். இது பயணிக்குச் சற்று இளைப்பாற, களைப்பு நீங்க உதவும். மைல்கல்லின் குறிப்பு இருந்தாலும் இல்லா விட்டாலும் தில்லி தூரம் நூறு மைல்தான். நீ பயணித்து வந்த பாதையின் அளவைக் காட்டி உற்சாகமூட்ட உதவும்.

சுவிட்சர்லாந்தில் மைல்கல்களில் நேரக்கணக்கு நிமிடங்களைக் குறிப்பிட்டு அறிவிக்கப்படும். நெடுஞ்சாலையில் நீ பயணிக்கையில் நடு வழியில் மலைப்பாதையில் உன் வண்டி நின்றுவிட்டால், எதிரே

அறிவிப்பு இருக்கும். 'கடந்து வந்த ஸ்டேஷன் முப்பது நிமிட தூரம், அடுத்த ஸ்டேஷன் பதினைந்து நிமிட தூரம்' இது மிகச் சிறப்பான உதவி, அடையாளம்.

சுவிட்சர்லாந்து நிபுணர்கள் சிறப்பான கடிகாரங்கள் தயாரிப்பில் புகழ் பெற்றவர்கள். அவர்கள் காலக்கணக்கைத் துல்லியமாக அளவெடுத்து அறிவதில், அறிவிப்பதில் ஆர்வம் கொண்டவர்கள்.

நீ காவி வத்திரம் அணிந்து கொண்டால் அதிலிருந்து உனக்கு ஒரு செய்தி கிடைக்கிறது. ஒவ்வொரு பொருளும் செய்தி அளிக்கிறது. நீ எப்படி உட்காருகிறாய், எழுந்திருக்கிறாய், பார்க்கிறாய் என்பதைச் செய்தியாகத் தெரிவிக்கும் பொருள்கள் உள்ளன.

ராணுவ வீரர்களுக்குத் தொளதொளப்பான உடுப்பு அணிய அனுமதிப்பதில்லை. உலகில் எந்த இனத்தவரும் ராணுவ உடையைத் தொளதொளப்பாக அணிவதில்லை. அணிந்தால் தோற்றுப் போவார்கள் என்கிற நம்பிக்கை நிலவுகிறது. அது ஆபத்தானது என நிரூபிக்கப்பட்டுள்ளது. சோல்ஜர்கள் இறுக்கமான உடை அணிகிறார்கள். சிக்கென அணியும் உடுப்பு போர் புரியும் முனைப்பை வளர்க்கிறது, சண்டை போடும் ஆர்வத்தை வளர்க்கிறது. தொளதொளப்பான ஆடை இளைப்பாற, ஓய்வெடுக்க உதவுகிறது. அரசர்களும், துறவிகளும், பக்கிரிகளும் தளர்ந்த ஆடைகளை அணிவார்கள்.

நீ தளர்ச்சியான ஆடை அணிந்து மாடிப்படி ஏறினால் ஒவ்வொரு படியாகத்தான் ஏற முடியும். சிக்கென இறுக்க ஆடை அணிந்தால் இரண்டு படிகளைக் கடந்து ஏறிச் செல்லலாம். இறுக்க ஆடை அணிபவனுக்கு எரிச்சல், கோபம் விரைவில் வரும்; தளர் ஆடை உடுத்தினால் நீ ஓய்வாக அமைதியாக இருப்பாய்.

சிறு பொருள்கூட வித்தியாசம் ஏற்படுத்துகிறது. வாழ்க்கை சிறு பொருள்களால் இயங்குகிறது. அணில்கள் சேர்ந்து சேது பந்தனத்திற்கு உதவியது மாதிரி, நீ சாப்பிடுவது, உடுப்பது, செயல்படுவது எல்லா வற்றுக்கும் இறுதி விளைவு உண்டு. எல்லாம் கலந்த சேர்க்கை நீ.

ஒரு மனிதன் பகட்டாக, பளபளக்கும் உடைகள் உடுத்தியிருக்கிறான். அந்த உடுப்பு ஒரு செய்தி சொல்லும். ஒரு பெண் அரைகுறையாக ஆடை உடுத்தி மேனி மதர்ப்பைக் காட்டியவாறு

போகிறாள். அவள் அந்த நிலையில் ஒரு செய்தியை வெளிப்படுத்துகிறாள். மற்றொரு நபர் சாதா துணியில் தொளதொள ஆடை அணிந்து நிதானமாய் நிம்மதியாய் அமர்ந்திருக்கிறார். அந்த ஆடை மூலமாக அந்த மனிதர் பற்றிய செய்தி கிடைக்கிறது.

மனத்தத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள். "நீ ஒரு நபரை அரை மணி நேரம் கவனித்துப் பார். என்ன ஆடை உடுத்தியிருக்கிறார்? நடவடிக்கை எப்படி இருக்கிறது? அவர் பார்வை எப்படி? இதையெல்லாம் கவனித்த பிறகு நம்ப முடியாத அளவுக்கு நீ அவரது தன்மைகளைப் புரிந்து கொள்ளுவாய்."

நம்முடைய நடை, உடை, பாவனை, செயற்பாடு எல்லாமே நம்முடையவை. அவை மாறும்போது நாம் மாறுகிறோம். நாம் மாறும்போதும் அவை மாறும். இதெல்லாம் சிறு அடையாளம். ஜாடைமாடையாக இயங்கும். நீ விழிப்புணர்வுடன் இருக்க உதவும்.

உன் கேள்வி, "சாட்சியம், விழிப்புணர்வு, தெளிந்த நினைவு இவைகளுக்கிடையே உள்ள வேறுபாடு என்ன?"

எந்த மாறுபாடும் இல்லை. இவை ஒரு பொருள் கொண்ட சொற்கள் - பரியாயங்கள். பல்வேறு பாரம்பரியங்கள் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டன. விழிப்புணர்வை ஜே. கிருஷ்ணமூர்த்தி பயன்படுத்துகிறார். தெளிந்த நினைவு (மைண்ட் ஃபுல்நஸ்) புத்தர் பயன்படுத்துவது. சாட்சித்துவம் (சாட்சியம்) அஷ்டாவக்கிரர் உபநிடதங்கள், பகவத் கீதை பயன்படுத்துவது. தனித்தனி பரம்பரைகள் வழிமுறைகள் என்பதுதான் வேறுபாடு. இவை யாவுமே குறிப்பிடுவது ஒன்றை மட்டுமே.

**இரண்டாவது கேள்வி:**

**அஷ்டாவக்கிர மகா கீதை பற்றிய உங்களுடைய முதல் சொற்பொழிவைக் கேட்ட பல அன்பர்கள் கண்ணீர் வழிய அழுதார்கள். இதற்கு என்ன அர்த்தம்? அழுதவர்கள் பலவீன மனம் படைத்த மனிதர்களா? அல்லது உங்கள் பிரசங்கம் அதிசய சக்தி வாய்ந்ததா? தயவு செய்து விளக்கம் அளிக்க வேண்டுகிறோம்.**

ஒரு விசயம் நிச்சயம்; கேள்வி கேட்டவர் கடும் மனப்பாங்கு உள்ளவர். கண்ணீர்ப் பெருக்கில் அவர் பலவீனத்தைப் பார்க்கிறார். அவர் கண்களில் கண்ணீர் வற்றிப் போயிருக்கும்; கண்கள் பாலைவனம் போல் வறண்டு போயிருக்கும். அவைகளில் பூ மலராது. கண்ணீர்ப்பூக்கள் கண்களிலிருந்து மலரும். கேள்வி கேட்பவரின் உள்ளுணர்வு, உணர்ச்சி மரித்து விட்டது. இதயம் தடைபட்டுப் போனது. புத்தி பலத்தில் ஜீவிக்கிறார். உணர்ச்சியை ஒதுக்கி விட்டார். சிந்தனைத் துணையுடன் உயிர் வாழ்கிறார். பிரேமை, கருணை, வாழ்க்கைப்பற்று, ஆனந்தம் - இவற்றை ஒதுக்கி விட்டார்போலும். சுவையான, ஆர்வமுள்ள உணர்வுப் பெருக்கு தடைபட்டுப் போயிருக்கும். பாலைவனம் போல் மனம் வறண்டு போயுள்ளது. அதனால் முதல் முறையாக எண்ணம் தோன்றியிருக்கிறது. 'கண்ணீர் வழிய அழுபவர்கள் பலவீன மனம் கொண்டவர்கள்!'

அழுவது பலவீனத்தின் அடையாளம் என்று எவன் உனக்குச் சொல்லிக் கொடுத்தான்?

பக்தை மீராபாய் நெக்குருகி அழுதிருக்கிறாள். சைதன்ய மகா பிரபுவின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகியிருக்கிறது. கண்ணீர் பலவீனத்தின் அடையாளமில்லை. உணர்ச்சிகளுக்கு உரிய அடையாளம், உணர்ச்சியின் வலிமைக்கு இலக்கணம். கவனமிருக்கட்டும் - உணர்ச்சி கருத்தைவிட திட்ப நுட்பம், திடம் உள்ளது.

நான் கூறினேன், "முதலில் கர்மாவின் ரேகை, பிறகு கருத்து ரேகை, அடுத்தது உணர்ச்சி ரேகை, இதன்பிறகு சாட்சிக் கேந்திரம். உணர்ச்சி சாட்சிக்கு மிக அருகில் உள்ளது. கர்மா மிகத் தொலைவில் உள்ளது. கர்மாவிலிருந்து தொடங்கும் யாத்திரை நீண்ட நெடிய பயணம். எண்ணமும் தொலைவில்தான் உள்ளது. பக்தி சாட்சிக்கு அருகில் உள்ளது."

கவனமிருக்கட்டும், கண்ணீர் துன்பம்-துயரத்திற்குக் காரணமில்லை. பொதுவாக, மக்கள் துக்கப்பட்டு கண்ணீர் வடிப்பதைத்தான் பெரும்பாலும் பார்த்திருக்கிறார்கள். கருணையிலும், ஆனந்தத்திலும் கண்ணீர் வடியும். பெரு வியப்பிலும் கண்ணீர் மல்கும்.

நன்றியுணர்விலும் கண்ணீர் ததும்பும். கண்ணீர் ஓர் அடையாளம். உள்ளத்துள் தோன்றும் நிகழ்வுகளின் நெகிழ்ச்சியால் - சுகம், துக்கம் இரண்டினாலும் ஏற்படும் மிகை உணர்வால் - கண்ணீர் பொங்கி வரும். கண்ணீர் வடிகால். ஆனந்தமோ, துக்கமோ அதிக அழுத்தம் தரும்போது கண்ணீர் வடியும்.

கண்ணீர் சுகதுக்கங்களோடு இணைந்ததல்ல. அவற்றின் ஆதிக்கத்துடன், அதிகரிப்புடன் இணைந்தது. எந்த விசயம் அனுபவம் அதிகரித்தாலும் கண்ணீர் ததும்பும்.

ஆகையால், மனம் உருகி அழுதவரின் உள்ளத்துள் ஏதோ ஓர் அனுபவம் அதிகரித்திருக்கும். இதயத்தைப் பாதித்திருக்கும். ஏதோவொரு அரவ ஒலிப்பைக் கேட்டிருக்கலாம். தொலைவிலுள்ள ஏதோ ஒன்றின் ஒளிக்கீற்று அவரது இதயத்தில் பட்டிருக்கலாம். இருளில் அவரை ஏதாவது தீண்டியிருக்கலாம். உள்ளத்தை துன்பமோ, இன்பமோ நிரப்பியிருக்கலாம்; தாள முடியாமல் கண்ணீர் விட்டிருக்கலாம். அடக்க முடியாமல் பொங்கி வழியும் கண்ணீர் அது.

என் பிரசங்கப் பேச்சுத் திறனுக்கும் அவருடைய பொங்கும் கண்ணீருக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. நீயும்தான் (மற்றவர்) கேட்டுக் கொண்டிருந்தாய். என் பிரசங்க பிரபாவம் பலமாக இருந்தால் நீயும் அழுதிருப்பாய். கேட்பவர் எல்லாரும் அழுதிருப்பார்கள். இல்லையே? என் பேச்சுத் திறனைவிட கேட்பவரின் உளவியல் ஈடுபாடுதான் முக்கியம். அழக்கூடியவர்கள் அழுதார்கள்.

அழுகை பெரும் சக்தி. மிகச்சிறந்த சக்தியை மனிதர்கள் இழந்து விட்டார்கள்; பெரும்பாலும் ஆண்கள். பெண்கள் கொஞ்சம் வைத்திருக்கிறார்கள். பாக்கியசாலிகள். மனிதர்களிடம் பொதுவாக கண்ணீர்க் கோளங்கள் உள்ளன. ஆண்-பெண் இருபாலர்களுக்கும். இயற்கை பாரபட்சம் காட்டவில்லை. இருபாலருக்கும் கண்கள் கண்ணீர் விடக் காத்திருக்கின்றன.

ஆண்கள் அகங்காரச் செருக்கால் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். போகப்போக ஆண்களிடம் ஓர் எண்ணம் குடிகொண்டு விட்டது; அதாவது அழுவது பெண்களின் சுபாவம். பெண்கள்தாம் பெரும்பாலும் அழுகிறார்கள். இதனால் அதிக இழப்பு

ஆண்களுக்குத்தான். பக்தியை, உணர்ச்சியை இழந்திருக்கிறார்கள். இதனால் மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் இழந்திருக்கிறார்கள். இதனால் ஆண்கள் துக்கத்தின் மகத்துவத்தை இழந்திருக்கிறார்கள். துக்கமும் மனித வாழ்வை மேம்படுத்துகிறது. சுத்தப்படுத்துகிறது. இதன் காரணமாக ஆணின் வாழ்க்கையில் பெரிய விபத்து நிகழ்ந்திருக்கிறது.

உலகில் பெண்களைவிட இரு மடங்கு ஆண்கள் பைத்தியம் பிடித்தவர்கள். ஆச்சரியமாக இருக்கிறதா? போர்கள் நிகழாதிருந்தால் ஆண் பைத்தியங்களின் விழுக்காடு வளர்ந்து விடும். போர்கள் ஆண்களின் பித்துப் பிடிப்பை வெகுவாக நீக்கிவிடுகின்றன. யுத்தமே நிகழாதிருந்தால் நூறு ஆண்டுக்குள் பித்துப் பிடித்த ஆண்களின் சதவீதம் தொண்ணூறு ஆகியிருக்கும். எல்லாரும் பைத்தியங்களாகித் திரிவார்கள்.

பெண்களை விட ஆண்கள் இருமடங்கு தற்கொலை செய்து கொள்ளுகிறார்களாம். பொதுவாக உன் கணிப்பு வேறுவிதமாக இருக்கலாம். பெண்கள்தாம் அதிக அளவில் தற்கொலை செய்து கொள்வதாக நீ நினைக்கலாம். 'செத்துத் தொலைகிறேன்; குளத்திலோ கிணத்திலோ விழுந்து சாகிறேன். தூக்கிலே தொங்குவேன்...' என்றெல்லாம் பேசுவார்கள் மங்கைகள். ஆனால் சாக மாட்டார்கள். தூக்க மாத்திரைகளைக் கணக்காக விழுங்கிவிட்டுக் கட்டிலில் கிடப்பார்கள், மயக்கம் வரும், மரணம் வராது. இப்படியாகத் தற்கொலை முயற்சிகளைப் பெண்கள் அதிகமாக மேற் கொள்ளுவதுண்டு. தற்கொலை செய்து கொள்ளப் பெரும்பாலும் பெண்கள் விரும்புவதில்லை. மிரட்டவும் குற்றஞ்சாட்டவும் அதைப் பயன்படுத்துவார்கள். சில பெண்கள் தற்கொலைக்கு முயற்சி செய்வார்கள். நிறைவேறாது. பெண்கள் சொல்லுவதுண்டு, "வாழவே பிடிக்கவில்லை, இந்த வாழ்வு வேண்டாம். நான் விரும்புவது வேறுவித வாழ்வு." அவர்கள் உன்னை எச்சரிக்கிறார்கள். "நீ கல் மனசுக்காரன். போக்கிரி' என்று குத்திக் காட்டுகிறார்கள்.

இது மோசமான செயல். உன்னை எச்சரிக்க, அச்சுறுத்த தான் தற்கொலை செய்து கொள்ளப் போவதாகப் பயமுறுத்துவது மட்டமான காரியம். ஆண் கல்நெஞ்சக்காரனாக, கொடூரனாக மாறியிருக்கலாம். அதற்காக இப்படியொரு அச்சுறுத்தல் கூடாது.

பொதுவாகப் பெண்கள் வாழ விரும்புபவர்கள், மரிக்க உடன்பட மாட்டார்கள். வாழ்க்கையில் அதிக அளவு அனுபவிக்கும்போது, அதற்குத் தீர்வு கிட்டாதபோது, கடமைப்பட்டவன் புறக்கணிக்கும் போது தற்கொலை செய்து கொள்ள முற்படக்கூடும்.

ஆனால் ஆண்கள் தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித்து முற்படும்போது தவறுவதில்லை, மரித்து விடுவர். பெரும்பாலும் பைத்தியமாகி ஆத்மஹத்தி செய்து கொள்ளுகிறார்கள். உளவியல் சார்ந்த நோயாளிகள். அவர்கள் மனோவியாதி பீடித்தவர்கள். காரணம் பல இருக்கலாம். ஒரு காரணம் கண்ணீர். உளவியல் நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆண்கள் மறுபடியும் வாய் விட்டுக் கதறி அழக் கற்றுக் கொள்ள வேண்டும். அழுகையை அடக்குவது வலிமை அல்ல, கடுமை, கடூரம். வலிமை மென்மையானது.

மலைக்குன்றிலிருந்து அருவி கொட்டுவதைப் பார்த்திருப்பாய், நீர்வீழ்ச்சி நீர் மென்மையானது. மலைப்பாறைகள் கடினமானவை. 'நாம் மிகத் திடமானவை, நீர்த்தாரை பலவீனமானது; என அவை நினைக்கலாம். ஆனால் இறுதியில் ஜலதாரை ஜெயிக்கிறது; பாறைகள் தூள் தூளாகிச் சரிகின்றன, பிரவாகத்தில் கரைந்து போகின்றன.

பரமாத்மா மென்மையானவருடன் இணைந்திருப்பார். 'நிர்பல் கே பல் ராம்' (பலவீனர்களுக்குப் பக்கபலமாக ராமர் இருப்பார்) என்பது முதுமொழி.

ஒரு பூ மலர்ந்தது. பக்கத்தில் பாறை வலுவாக இருக்கிறது. பெரிதாய் புலப்படுகிறது. மலர் மென்மையானது, வலுவற்றது. நீ எப்போதாவது மலரின் சக்தியைக் கண்டதுண்டா? அதன் ஜீவசக்தியை? பாறையை எவனும் வணங்குவதில்லை. பாறைக் கற்களைக் கொண்டு போய் பகவானுக்கு நைவேத்தியம் படைப்பதில்லை. பாறைக் கற்களைக் காதலிக்கு அன்பளிப்பாக எவனும் தரமாட்டான். பூக்களைப் பறித்துக் கொண்டுபோய் அன்பளிப்பாகக் கொடுக்கிறாய். இதுதான் பூவின் பலம், சக்தி, மகிமை. பூவின் மென்மை அதற்கு வலிமை. பூவின் மலர்ச்சி அதன் வல்லமை. மலரின் சோபை, சுகந்தம் அதன் ஆற்றல். பூவின் மென்மையே அதன் சக்தி. காலையில் மலர்ந்து மாலையில் வாடிப்போகிறது. இதுவும் அதன்

வலிமை. மலர்ந்ததே வாழ்வின் அறிகுறி. பாறை மலர்வதில்லை. பாறை சவம், பூ ஜீவிதம், பூ வாழ்ந்து மரிக்கும். பாறை மரிப்பதில்லை; சவத்திற்கு வாழ்வு - சாவு ஏது?

நீ கோமளனாக (மென்மையாக) இரு! கண்ணீரை மறுபடியும் அழைத்துக்கொள். உன் கண்களை இசையால், கவிதையால் நிரப்பிக் கொள். இல்லையேல், பல நலன்களைப் பெறாது ஏமாந்து போவாய். பிறகு உன் பரமாத்மாவும் தர்க்கம்-குதர்க்கம் எனும் வலைப்பின்னலாகி விடும். இதயத்துள் புகும் அனுபூதியாக இராது. பரமாத்மா வெறும் சித்தாந்தக் கோட்பாடாகி விடும். ஒரு நித்திய சத்தியத்தின் சுவை, உள்ளுணர்வு கிட்டாமல் போகும்.

கண்ணீர் பொங்கி வழிய அழுபவர்கள் பெரும் பாக்கியசாலிகள், பலசாலிகள். பிறர் என்ன சொல்லுவர், நினைப்பர் எனக் கவலையில்லை. சிலருக்கு இந்தக் கவலை இருக்கலாம். இதைப் பொருட்படுத்தாமல் மனம் விட்டு அழப் பழக வேண்டும்.

குழந்தையைப்போல், சிறாரைப் போல் ஒருவர் வாய்விட்டு அழுதால், அவரது வலிமையை எண்ணிப் பார்! அவர் பிறரைப் பொருட்படுத்தவில்லை. பார்க்கிறவர்கள், "இவர் புரொபசர், இப்படி அழுகிறாரே! மாணவர்கள் பார்த்தால் இளக்காரமாகும்" என்று சொல்லுவார்களே எனக் கவலைப்படவில்லை. "நான் பெரிய கடை முதலாளி, இப்போது அழுகிறேன். வாடிக்கையாளர் எவராவது பார்த்து விட்டால்?... நான் பெரிய பயில்வான்; அழுகிறேன்; பக்கத்தில் மனைவி உட்கார்ந்திருக்கிறாள். வீட்டுக்குப் போனதும் ரகளை செய்வாளே?... நான் குடும்பத் தலைவன், நான் அப்பாவாகியும் அழுவதை என் பிள்ளை பார்த்தால்?..." இதையெல்லாம் சமாளிக்கத்தான் வேண்டும்.

அகந்தை சமாளிக்கும். அகந்தை இல்லாதவன் அழுகிறான். அகந்தை கட்டுப்படுத்தும். அகந்தையில்லாதவன் நெகிழ்ந்து போகிறான்.

இந்திக் கவிஞர் ரஹீம் பாடியிருக்கிறார். "கொழுந்து விட்டு எரிவது அணைந்து போகும். பிறகு ஒளிராது. அன்பு எனும் நெருப்பு அணைந்து பிறகு எரியும். எரிதலும் அணைதலும் மாறி மாறி நிகழும்."

தீத்தணல்கள் கனலும், பிறகு அணைந்து போகும். மறுபடியும் கனலாது. சாம்பலைத் தணலாக ஜொலிக்க வைக்க முடியுமா? ரஹீம் கூறுகிறாரே, 'எரிவதும் அணைவதும் மாறி மாறி நிகழும்' என்று? ஆம், உள்ளத்துள் கனலும் அன்பு எனும் அக்கினிக் கங்கு அணைவதும் கனல்வதும் உண்டு. பிரேமை சாசுவதமான நெருப்பு, சனாதன பிரகிருதி.

என் பேச்சை உள்ளார்ந்த பிரேமையுடன் கேட்கிற அன்பர்கள் அழுது விடுவார்கள். புத்திபூர்வமாகக் கேட்பவர்கள் போதனையையும் நிர்ணயத்தையும் மேலோட்டமாக எடுத்துச் செல்லுவார்கள். அவர்கள் சாம்பலைக் கொண்டு போகிறவர்கள். பிரேமைக் கனலை அல்ல. சாம்பல் ஒருபோதும் கனலாது. அது அணைந்து போன நீறு. நான் சொன்ன போதே அது அணைந்து போயிற்று. நீ புத்தியுள் ஏற்றுக்கொண்டால் சாம்பல், நீ இதயத்துள் கிரகித்தால் தீத்தணல்.

அன்பு எனும் தீத்தணல் உள்ளத்துள் உதித்தால் அது தொடர் நிகழ்வாகக் கனலும், அணையும். அது உன்னைத் துடிதுடிக்க வைக்கும். உன்னைப் புடம் போட்டு ஒளிர வைக்கும். உன் வாழ்வில் பல உருமாற்றங்களை ஏற்படுத்தும். நீ மனம் விட்டு அழுதால் அத்தீத்தணல் உன் உள்ளத்துள் புகுந்தது என அர்த்தம்.

ஒரு சூசகம். நீ அழமுடியாமல், புத்தியில் ஏற்றிக் கொண்டாய் என்றால் கொஞ்சம் சாம்பல் கிட்டும். சிறிதளவு அறிவு பெறுவாய். பிறர்க்குப் போதிக்கவும் திறன் பெறுவாய். வாதம்-விவாதம், தருக்கம், வாய்ச்சொல் வீரம் செய்ய நிபுணனாகி இருப்பாய். மூல தத்துவம் நழுவிப் போகும். அக்கினிக் கங்குகளைக் கொணர வேண்டிய நீ வெறும் சாம்பலை எடுத்து வந்திருக்கிறாய். அதை நீ விபூதி என்று போற்றலாம். ஆனால் அது சாம்பல் என்பதே நிஜம்.

**தீப்பற்றியது. உள்ளத்திலிருந்து வேதனை விருப்பம் எழுந்தது. வேதனையில் அக்கினி சாட்சி ஆனோம்.**

**புத்தி போதனை காரணமாக நடுவழியில் பயணிகள் குழாமில் கலந்து வழி தவறிப் போனோம். பயணிகள் குழாம் முன்னேறிச்**

**செல்ல, பின்னர் தூசுப்படலம் எழுந்தது. நாம் தூசுப் புழுதியாகினோம். தீ எழுந்தது. உள்ளத்திலிருந்து வேதனை விருப்பம் வழிந்தது, கண்ணீராக. அக்கண்ணீர் தீ மூட்டும், தீயினில் கரையும்.**

அழுது கொண்டிருக்கும் நபரைப் பார்த்ததும் அவர் பக்கலில் பரிவுடன் உட்கார். அது சத்சங்கம், தவிர்க்கவே கூடாது. நீயும் சேர்ந்து அழுதால் நல்லது; இல்லாது போனால் அழுபவரின் அருகில் உட்கார்ந்திரு. அவர் கையை உன் கைக்குள் வைத்துக்கொள். அவரது நெகிழ்ச்சி உன்னையும் பற்றிக் கொள்ளும்.

'தீப்பற்றியது, உள்ளத்திலிருந்து வேதனை விருப்பம் எழுந்தது.'

தீ பற்றட்டும். காவி ஆடை நெருப்பின் இடுகுறி. அன்பு எனும் அக்னிக்கு அடையாளம்.

உன் மன வேதனைக்கு அக்கினி சாட்சியாக ஆனோம்.

உன் இதயத்துள் வேதனை எழும்போது பிரிவுத்துன்பம் எழும்போது, உன் சுவாச கதியில் - உயிர் மூச்சில் அக்கினி எழும் போது அக்கினி சாட்சியாக இருப்போம்.

'உன் மன வேதனையில் அக்கினி சாட்சி ஆனோம். புத்தி போதனை காரணமாக நடுவழியில், பயணிகள் குழாமில் கலந்து வழிதவறிப் போனோம். பயணிகள் குழாம் முன் செல்ல, பின்னால் தூசுப்படலம் எழுந்தது. நாம் தூசுப் புழுதியாகிப் போனோம்.

தூசியைத் தவிர புத்திக்கு வேறு ஏதும் கிட்டவில்லை.

கிருஷ்ண மோகன்! எம் மனம் ஒளி பெற்றது. எல்லைகள் தகர்ந்தன. நாம் சர்வ வியாபியாக ஆனோம். கிருஷ்ணமோகன்! எம் மனம் ஒளி வீசுகிறது. அன்பு காயப்படுத்தினாலும், இதயம் காயப்பட்டாலும் தீக்கனல்கள் ஒளிரும். என் மனம் பிரகாசம் பெற்றது

கிருஷ்ண மோகன்! எல்லைகள் தகர்ந்தன. எல்லை கடந்தவராக ஆனோம்.

அக்கணத்தில் எல்லைகள் மறுபடியும் தகர்ந்து போயின. நாம் எல்லையற்றவராகிறோம். எல்லையற்ற நிலையை எட்ட முதல் படி உன் கண்ணீர். நீ இளகிப் போனாய், உன் கடின எல்லைகள் கொஞ்சம் சரிந்தன. நீ மென்மை பெற்றாய். உன் மந்த புத்தி சற்று விலகியது. தீ மூண்டது. வெப்பம் பரவியது - இதையெல்லாம் தெரிவிப்பது உன் கண்ணீர். இது குளிர்ச்சியாக இருப்பதில்லை, சூடு பிடித்தது. நீ கரைந்துபோவதைப் போல்.

உன்னுள் நிமிர்ந்திருக்கும் ஆளுமை கரைந்து வழிகிறது கண்ணீர் வழியாக.

கொடும் ஆசை பற்றி எரியக் காமுகன் ஆனோம்.

காமம் காதலாக மாறியதும் பேச்சிழந்தோம்.

புத்தியும் தீவிர ஆசையும் எண்ணங்களும் நிரம்பியிருந்த போது பேசிப் பேசி அலுக்கவில்லை, நாத்தினவு வெகுவாக இயங்கியது.

"கொடும் ஆசை பற்றி எரியக் காமுகன் ஆனோம். காமம் காதலாக மாறியதும் பேச்சு இழந்தோம்."

அந்தக் கண்ணீர் பேச்சிழந்த நிலைக்கு அடையாளம், அறிவிப்பு. அந்நிலையில் அழாமல் என்ன செய்வாய்? நாவு பேசத் திராணி இழந்தபோது கண்கள் கண்ணீரால் பேசுகிறது, தெரிவிக்கிறது. புத்தி கருத்தை வெளிப்படுத்த இயலாதபோது, மனிதன் நடனமாடத் தொடங்குகிறான். ஜதி, கதி, லய பாவத்துடன் தன் கருத்தைப் புலப்படுத்துகிறான்.

பக்த மீரா நர்த்தனம் ஆடினாள். சொல்ல சொற்கள் கிட்டவில்லை. பாதங்களில் சிலம்புச் சலங்கை அணிந்து பாவனை புலப்பட அபிநயித்து ஆடினாள், கண்ணீர் மல்க நெக்குருகி அழுதாள். சொற்களால் தம் உள்ளுணர்வை வெளிப்படுத்த இயலவில்லை. சொற்கள் குழப்பம் செய்பவை என அவளுக்குத் தோன்றியது.

கண்ணீர்தான் சரியாகக் கருத்துரைக்க வல்லது. கண்ணீரால் கூறினாள் மீரா.

மீரா போன்றவர்களை பலவீன மனம் படைத்தவர்கள் என்று எண்ணி விடாதே. பெருந்தவறு. அவர்கள் மிக்க வல்லவர்கள். மென்மை வல்லமை கொண்டவர்கள். போராட்டம் புரிய வல்லவர்கள், அகிம்சையாளர்கள் அல்லர். அவர்களது சக்தி இதயபூர்வமானது. நேசபாசம் உள்ளது. இத்தகையவர்களைப் பலவீனமானவர்கள் என நீ எண்ணினால், மனநெகிழ்வுடன் உன்னால் அழக்கூட முடியாது. இதனால்தான் மாறி மாறி வற்புறுத்தி அறிவுறுத்துகிறேன் - "அவர்களை நீ பலவீனர்களாக எண்ணி விடாதே. அவர்களைப் பார்த்துப் பொறாமைப்படு. நான் ஏன் அழமுடியவில்லை என்பது பற்றித் தொடர்ந்து சிந்தனை செய், யோசித்துப் பார்."

நெகிழ்ச்சிக் குணம் உள்ளவன் தன்னையே ஒருமுகப்படுத்துவதை எளிதில் எட்டுகிறான். சுயகேந்திரத்திற்கு அருகில் இருக்கிறான். வேதனை அனுபவிக்கிறான். நீ உன் வீட்டை விட்டு வெகு தொலைவில் இருந்தால் வீட்டு நினைவு மறந்து போகும். அருகில் இருந்தால் வீட்டு நினைவு அதிகமிருக்கும். நீ பரமாத்மாவை மறந்து வாழ்கிறாய். 'பரமாத்மா' எனும் சொல் உன் காதில் விழும்போது உன்னுள் கிளர்ச்சிக் கொந்தளிப்பு ஏற்படக் காணோம். அச்சொல் காதில் விழுகிறது, சம்பந்தமில்லாத ஏதோ ஒரு சொல் கேட்டதாக ஒதுக்குகிறாய்.

பரமாத்மா வெறும் சொல் அல்ல. அதைக் கேட்டது பெரிதல்ல. ஜீவசக்தி எவனுள்ளத்துள் உள்ளதோ, அவன் அச்சொல்லைக் கேட்டதும் உலுக்கி எடுக்கப்படுவான். அவனுள் கனலும் தீ மேலெழும். 'பரமாத்மா' எனும் சப்தத்திற்கே அந்த ஜீவ சக்தி உண்டு.

**என்னை உளமார நீ விரும்புகிறாயானால் பிறகு ஏன் என்னை அழ வைக்கிறாய்? பக்தர்கள் பரமாத்மாவிடம் கூறுவர், நீ என்னை உளமார விரும்புகிறாயானால் பிறகு என்னை ஏன் அழ வைக்கிறாய்? வெளிச்சத்துள் சூழ்ந்திருக்கும் காரிருளில் ஏன் என்னைக் கண்டு கொள்ளாமல் இருக்கிறாய்? என் அருகில் வந்திருந்தும் நீ ஏன் உன்னருகில் என்னை அழைக்கவில்லை? ஏன்**

**எம் அருகே வசிக்கிறாய்? ஏன் எம் பக்கலில் இருக்கிறாய்?**

நீ என் அறிவுரையைச் சரிவரச் செவிமடுத்திருந்தால் பரமாத்மா பலமுறை உன் அருகில் இருப்பதை உணர்ந்திருப்பாய்.

**எதற்காக எம் அக்கம்பக்கத்தே இருக்கிறாய்? எதற்காக அணுக்கத்தில் இருக்கிறாய்? என் அருகில் வந்திருந்தும் நீ ஏன் என்னை உன்னருகே அழைக்கவில்லை? என்னை உளமாற நீ விரும்பினால் பிறகு ஏன் என்னை அழ வைக்கிறாய்? வெளிச்சத்துள் சூழ்ந்திருக்கும் காரிருளில் என்னைக் கண்டு கொள்ளாமல் ஏன் இருக்கிறாய்?**

எவன் உணர்வில் கலந்திருக்கிறானோ, அவன் பரமாத்மாவிற்கு அருகில் இருப்பதை உணர்வான், பரமாத்ம பிரதாபம் அவனை ஆட்கொள்ளும், நேருக்கு நேர் தரிசனம் கிட்டும். எல்லைகள் சரியும், தாண்டிச் செல்ல முடியும்.

இங்கு சொல்லப்படுவது வெறும் பேச்சு இல்லை. உன்னை மாற்றி அமைப்பது. கேட்டு அறிந்து கொள்ளும் வெறும் உபதேசம் இல்லை, உன்னைப் பரிபூரணமாக வேரடி மண்ணோடு மாற்றி அமைக்கும் அருள்பாலிப்பு.

**மூன்றாவது கேள்வி :**

**தார்மிக ஈடுபாடு (அறநெறிப் பற்று) அல்லது பக்தி தர்மம் பண்பாட்டை உருவாக்குகிறது. பண்பாட்டினால் சமுதாயமும் அதன் பாரம்பரியமும் உருவாகின்றன. பூஜ்யபாதர் அருளுரைப்படி தர்மம் எல்லாவற்றுக்கும் எதிரானது. அப்படி இருந்தால் எவ்வித அராஜகமும் (கேடு) ஏற்படாமல் இருக்குமா? தயவு செய்து எமக்குப் போதிக்க (அறிவுறுத்த) வேண்டுகிறேன்.**

தர்மம் என்பதற்குப் பொதுவாக நீ கருதும் அர்த்தம் – 'தர்மம் தலைகாக்கும்' – என்பது இல்லை. உன் கருத்துருவான கான்செப்ட்

தர்மம் அல்ல. அது 'தர்ம' எனும் சொல்லின் வேர் 'தரிப்பது' எனப் பொருள்படும் (தாரயதி இதி தர்ம:) எது சகலத்தையும் தரிக்கிறதோ - தாங்குகிறதோ - பாதுகாக்கிறதோ அது தர்மம்.. உலகமனைத்தையும், அசைபொருள், அசையாப் பொருள், ஜீவராசிகள், சூரியன், சந்திரன் என எல்லாவற்றையும் தாங்கி நிற்பது தர்மம்

'தாரணா' (கருத்து, நம்பிக்கை) எனும் சொல்லுக்கும் தர்மத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. உனக்கு இந்து எனும் 'தாரணா' இருக்கலாம். முஸ்லிம், கிறித்துவன் எனும் 'தாரணா'க்களும் இருக்கலாம். இவை அறிவு சார்ந்த கருத்துகள், நம்பிக்கைகள். இதில் தர்மத்திற்குத் தொடர்பு இல்லை. தர்மம் மூல சத்தியத்தின், மூலாதார தத்துவத்தின் பெயர், குறியீடு. இதுதான் சகலத்தையும் தாங்குகிறது, இணைக்கிறது, பாதுகாக்கிறது. தர்மம் இல்லாது போனால் சகலமும் சீர்குலைந்து போகும். எல்லாவற்றுக்கும் பாலமாக, முழுமையாக இருப்பது தர்மம்.

பூக்களைத் தொடுத்து மாலை கட்டுகிறோம். பூக்குப்பல் ஒருபக்கமும், தொடுத்த மாலை மறுபக்கமும் உள்ளன. இரண்டிற்கும் என்ன வித்தியாசம்? பூக்குப்பல் அராஜகம். ஒரு மலருக்கும் மற்றதுக்கும் சம்பந்தம் (இணைப்பு) இல்லை. ஒட்டுறவு இல்லை. ஒரு நூலைக் கொண்டு பூக்களைச் சேர்த்துத் தொடுத்தால் மாலையாகும். இணைப்பு நூல் வெளியே தெரியாது. பூக்களுள் மறைந்திருக்கும். சிதறிக் கிடந்த பூக்கள் சேர்த்து இணைந்து மாலையாகிறது.

பௌதிக உலகின் நிலைப்பாட்டின் ஊடே இணைக்கும் நூல் போல் இருப்பதுதான் தர்மம். நம்மை மரம், செடி, கொடிகளோடும், சந்திர, சூரிய, நட்சத்திரங்களோடும், பஞ்ச பூதங்களோடும் இணைத்திருப்பது தர்மம். இணைப்பு தர்மத்தின் தன்மை, ஆளுமை.

தர்மத்தின் மூலமாக கலாச்சாரம் (ஸம்ஸ்கிருதி) உருவாக்கப் படுவதில்லை. அது பண்புகள் (ஸம்ஸ்காரம்) மூலம் உருவாகிறது. நாம் எல்லாப் பண்புகளையும் ஒதுக்கி வைத்த பிறகுதான் தர்மம் புலப்படும்.

சன்னியாசம் என்பதன் பொருள் ஸம்ஸ்காரங்களைத் துறத்தல்.

இந்துக்களின் கலாச்சாரம் தனிச்சிறப்புள்ளது. இதேபோல் முஸ்லிம்கள், பௌத்தர்கள், ஜைனர்கள் ஆகியோரின் கலாச்சாரங்கள்

தனித்தன்மை வாய்ந்தவை. வெவ்வேறானவை. உலகில் ஆயிரம் கலாச்சாரங்கள் நிலவுகின்றன. காரணம், பல்வேறு அனுட்டானங்கள், வழிபாடுகள் பரவியுள்ளன. சிலர் கிழக்கு நோக்கி அமர்ந்து பிரார்த்தனை செய்கிறார்கள். வேறு சிலர் மேற்கு நோக்கி வழிபடுகிறார்கள். இதுதான் ஸம்ஸ்காரம் (பண்பாடு). நடை உடை பாவனைகள் மாறியிருக்கும். உணவுப் பழக்கங்களும் மாறும். இவை யாவும் பண்பாடுகள்தாம்.

உலகில் பல்வகைக் கலாச்சாரங்கள் பரவியிருக்கும், இருக்க வேண்டும். வேறுபாடுகள் இருந்தால்தான் உலகம் அழகாக இருக்கும். உலகம் பூராவும் ஒரே கலாச்சாரம், பண்பாடு நிலவ வேண்டும் என்று நான் சொல்ல மாட்டேன். அப்படி இருந்தால் உலகியல் வாழ்வு தாறுமாறாகும், சலிப்பூட்டும், அழகாயிராது. உலகில் எல்லா மதத்தினரின் கலாச்சாரங்களும் இருக்க வேண்டும். இந்து, முஸல்மான், கிறித்துவர், பௌத்தர், சமணர், சீனத்தவர், ரஷியர்கள் - எல்லாருடைய கலாச்சாரங்களும் நிலவியிருக்க வேண்டும். வாழ்க்கையை அழகுபடுத்துவதே வேறுபாடுதான். பூங்காவில் பல்வகை மலர்கள் பூத்திருக்க வேண்டும். ஒரே வகைப் பூ பூங்காவில் நிரம்பியிருந்தால் சலிப்புதான் ஏற்படும்.

கலாச்சாரங்கள் பற்பல நிலவ வேண்டும், நிலவுகின்றன. வருங்காலத்திலும் நிலவும். ஆனால் தர்மம் (அறம்) ஒன்றுதான் இருக்க வேண்டும். தர்மம் தனித்திருக்கும் தன்மை உள்ளது. ஆக, தர்மம் ஒன்றுதான். வேறு உபாயம் இல்லை.

நான் இந்து, முஸ்லிம் ஆகியோரை கலாச்சாரச் சின்னங்களாகக் கருதுகிறேன். தர்மம் (அறம்) சின்னம் எனக் கருதுவதில்லை. கலாச்சாரங்கள் அழகானவை, வண்ணமிகு வனப்பு கொண்டவை. உன் விருப்பம், கற்பனை, ரசனைக்கேற்ப மசூதியோ, ஆலயமோ நிர்மாணித்துக் கொள். தேவாலயம், மாதா கோயில், பள்ளிவாசல், ஜினாலயம், பௌத்த மந்திரம், குருத்துவாரா எல்லாமே அழகானவை. உலகம் முழுவதிலும் இந்து தேவாலயங்கள் மட்டும் இருக்கட்டும், மற்றதெல்லாம் அழிந்து போகட்டும் என்று சொல்ல மாட்டேன். இதேபோல் மசூதிகளோ, சர்ச்சுகளோ மாத்திரம் இருக்கட்டும், மற்றவை மறைந்து போகட்டும் எனவும் சொல்ல மாட்டேன். எழில் காட்சிகள் குறைந்து போகும்.

உலகில் சம்ஸ்கிருதம் மட்டும் இருக்கட்டும், அரபு மொழி அழிந்து போகட்டும் என்று சொல்ல மாட்டேன். செஞ்சொல் கவியின்பம் இல்லாது போய்விடும். உலகில் அல்லாவின் அருள் மறை குரான் மட்டும் இருக்கட்டும், சம்ஸ்கிருத வேதம், உபநிடதம், பகவத் கீதை எல்லாம் மறைந்து போகட்டும் என்று சொல்ல மாட்டேன். உலகமே பேரிழிப்புடன் வறுமையில் வாடும்.

குரான் அழகிய இலக்கியப் படைப்பு. காவியச் சுவையின் திட்பமும் மேன்மையும் கொண்ட தொகை இலக்கியம் அது. அதற்கு மதம், சமயம், தர்மம் சார்ந்த சொந்தபந்தம் கிடையாது. ரிக், யஜுர், சாமம் முதலான வேதங்கள் மிக்கப் பிரியமானவை. பல மேம்பட்ட பிரகடனங்களைக் கொண்டவை. வானத்தைத் தொட்டுவிடும் ஆசை அபிலாஷைகள் பௌதிக உலகிற்கு உள்ளத்தை வெளிப்படுத்தும் மகோன்னத இலக்கியம் வேதம். உபநிடதங்கள் மிக மதுரமானவை, இன்பமளிப்பவை. அவற்றைவிட இனிய கருத்துரைகள் இதற்கு முன்பு எங்கும் வழங்கப்படவில்லை. அவற்றை இழந்து விடலாகாது. மேற்கூறிய எல்லாமே நமக்கு வேண்டும். அவை யாவும் தொடர்ந்து இருக்க வேண்டும் கலாச்சாரங்களைப் போல.

தர்மம் ஒன்றுதான். எல்லாவற்றையும் தாங்குவது. பேணுவதுதான் தர்மம். அது இந்து, முஸ்லிம், கிறித்துவர் எல்லாரையும் பராமரிக்கிறது. மேலும் மனிதர்களோடு மிருகங்களையும், மற்ற பிராணிகளையும், மரம், செடி கொடிகளையும் பாதுகாக்கிறது. மனிதருள் இரத்த ஓட்டம் போல் ஊடாடுகிறது. சுவாச கதியாக இயங்குகிறது. உள்ளுறைச் சாட்சியாக விளங்குகிறது. தர்மம் சகலத்தையும் தாங்கிக்கொண்டு வாழவைக்கிறது.

ஆகையால் தர்மத்தை (மதம்) கலாச்சாரத்தின் மறுபெயராகக் கருதாதே. இரண்டிற்கும் எந்தப் பிடிப்பும் இல்லை. ருஷ்யாவின் கலாச்சாரம் இருக்கும்; மதம், தர்மம் (தேசிய சமயம்) இராது. நாத்திகருக்கும் ஆத்திகருக்கும் கலாச்சாரம் இருக்கலாம். தர்மத்திற்கும் கலாச்சாரத்திற்கும் எந்தக் கடப்பாடும் இல்லை. தர்மம் உன் வாழ்க்கை வழிமுறையோடு தொடர்பு கொண்டதல்ல; உன் ஜீவித வாழ்வோடு உறவு கொண்டது. தர்மம் உன் சுத்த சொரூபம்; சுபாவம். கலாச்சாரம் உன் வெளித்திரை, செயற்பாடு, பழக்க வழக்கம் ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டது. எப்படி நடந்து கொள்ளுவது, பேசுவது,

பழகுவது, எப்படிச் சொல்ல வேண்டும், எப்படிச் சொல்லக்கூடாது - இவற்றைக் கற்றுத்தருவது கலாச்சாரம்.

தர்மத்திற்குப் பாரம்பரியம் இல்லை. அது பரம்பரையும் இல்லை. தர்மம் சனாதனம், சாசுவதம் (கால எல்லை இல்லாதது, எப்போதும் இருப்பது) சார்ந்த சத்தியம். பரம்பரைகளை மனிதன் உருவாக்குகிறான். தர்மத்தை அல்ல, தர்மம் மனிதனுக்கும் முற்பட்டது. தர்மத்தின் மூலமாக மனிதன் சீராக்கப்பட்டான். இந்த மாறுபாட்டை மனத்தில் இறுத்திக் கொள்ள வேண்டும்.

ஆகையால் பரம்பரையை அல்லது பாரம்பரியத்தை ஒருபோதும் தர்மம் (மதம், சமயம்) எனக் கருத வேண்டாம். மதாபிமானி பரம்பரைப் பித்தனாக (டிரடிஷனலாக) இருக்க மாட்டான். இதனால்தான் ஏசு கழுவில் ஏற்றப்பட்டார். மன்சூர் கொலை செய்யப்பட்டார். சாக்ரடீஸ் விஷம் குடிக்க வேண்டியதாயிற்று. மதப்பற்று உள்ளவர் பரம்பரை பற்றாளராக மாறுவதில்லை. தர்மநெறியாளன் பெரும் புரட்சியாக இயங்குபவன். அவன் தொடர்ந்து திடமாக "சனாதனம், சாசுவதம்" (அழிவற்றது, எக்காலத்திலும் வாழ்வது) என்று ஆர்ப்பரிப்பான். இதைக் கேட்டு பரம்பரைவாதிகள் கலக்கமடைகிறார்கள். சங்கடப்படுகிறார்கள். அராஜகம், களேபரம் பரவும் என்று சாடுகிறார்கள்.

அராஜகம் இப்போதும் இருந்து வருகிறது. ராஜரீகம், சமுதாய நலன், நீதிநெறி என்று கூறிக் கொண்ருக்கிறாயே, அவை ஒழுங்கு முறையாகவா இருக்கின்றன? பொது வாழ்வு கலகம், களேபரம் நிரம்பியிருக்கிறது. குற்றங்கள் கொடுமைகள் நிகழ்ந்து வருகின்றன! கூடவே பலரும் சுகமாக வாழ்ந்து வருகிறார்கள். நீ எதற்குப் பயப்படுகிறாய்? அராஜகம் பரவும் என்றா?

தார்மிக மனிதன் புரட்சிக்காரனாக இருப்பான், அராஜகம் செய்பவனாக இருக்க மாட்டான். இதை அறிந்து கொள்.

அறநெறியாளன் (தார்மிகன்) உண்மையில் ராஜகம் (நல்வாழ்வு) நிலவ உதவுபவன். அவன் அனந்த தத்துவத்துடன் உறவு கொண்டவன். பழைமையிலிருந்து விலகி புதுமையுடன் இணைந்திருப்பவன். புதுமை மாறாத நிலையில் வாழ்பவன், வாழ்விப்பவன்.

உன்னுடைய கலாச்சாரமும், பண்பாடும் பிளாஸ்டிக் பூக்களைப் போன்றவை. தார்மிக மனிதனின் வாழ்க்கை நிஜ நறுமலரைப் போன்றது. பிளாஸ்டிக் பூக்கள் தொலைவிலிருந்து பார்க்கும் போது அசல் மலர்களைப் போலத் தோற்றமளிக்கும். அசல் மலர்களாகி விடாது. மதிமயக்கம், ஏமாற்று மோசடி.

நீ உண்மை பேசினால், அது உனக்கு அளிக்கப்பட்ட பண்பாடு (ஸம்ஸ்காரம்). உண்மை பேசு என உனக்குப் போதிக்கப்பட்டதால் நீ பேசுகிறாய். உன் உண்மைக்கு எந்த மதிப்பும் கிடையாது.

நீ புலால் உண்ணுவதில்லை என்றால் நீ பிறந்த மதாசாரக் குடும்பத்தில் அப்படி போதிக்கப்பட்டு, பண்பாக உன் இயல்பில் ஒன்றியிருக்கிறது. உன்னிடம் ஆழ்ந்துள்ள இப்பண்பால், பல வருடங்களுக்குப் பிறகும் எதிரில் இறைச்சியைக் கண்டால் உனக்குக் குமட்டும், வாந்தி வரும். இதனால் நீ தர்மவானாகி விட்டதாகக் கருதாதே. புலால் மறுப்பு ஓர் ஆசாரம். ஜைனர் குடும்பத்தில் பிறந்தவன் அசைவ உணவைக் கண்டு பயப்படுகிறான், குமட்டுகிறது. அதன் பெயரைக் கேட்டாலே பதட்டம். மாமிச உணவு போன்ற வெறும் பொருளைப் பார்த்தாலும் வாந்தி வருகிறது. தக்காளிப் பழத்தைப் பார்த்துப் பயப்படுகிறான். இது பண்புப் பழக்கம். அசைவ உணவு உட்கொள்ளும் குடும்பத்தில் பிறந்தவனுக்கு புலால் உண்ணும் பண்புப்பழக்கம் ஏற்பட்டு விடுகிறது.

ஸம்ஸ்கார் (பண்புப் பழக்கம்) கட்டுப்படுத்துவது உனக்கேற்பட்ட பந்தம். நீ புலால் உண்ணலாம் என்று நான் சொல்லவில்லை. சமண குரு மகாவீரருக்கு உள்ளத்துள் மெய்யுணர்வு (சைதன்யம்) ஏற்பட்டதைப் போல் உனக்குள்ளும் ஏற்பட வேண்டும். அது ஸம்ஸ்காரம் இல்லை, சுய அனுபவம். 'பிறருக்குத் துன்பம் தருவது தனக்குத் துன்பம் கொடுப்பதாகும்' எனும் சுய அனுபவம் மகாவீரருக்கு ஏற்பட்டது. மனித சமுதாயம் முழுவதும் ஒரே உயிரினம் என்கிற உணர்வு அவருக்கு ஏற்பட்டிருந்தது. 'நீ பிறர் கன்னத்தில் அறைவது உன் கன்னத்தில் நீயே அறைந்து கொள்வதாகும்' என அவர் உணர்ந்திருந்தார். 'நாம் பிறர்க்குச் செய்தது சில காலத்திற்குப் பிறகாவது நமக்குத் திரும்பி வந்து சேரும். 'இந்த மெய்ஞானம் மகாவீரருக்கு ஆழமாக, திடமாகப் பதிந்ததால்தான், அவர் பிறர்க்குத்

துன்பம் தருவதை அறவே துறந்து விட்டார். மாமிச ஆகாரம் விடுபட்டது அவருக்குப் பாலியப்பருவத்தில் போதிக்கப்பட்டதால் இல்லை, சாட்சி உணர்வால் அது விடுபட்டது. இது தர்மம் (அறநெறி).

நீ ஜைனர் குடும்பத்தில் பிறந்திருந்தால் இறைச்சி உணவு சாப்பிட மாட்டாய். இது பண்பியல்பு, பிளாஸ்டிக் பூ மாதிரி. அசல் மலர் ஆகாது. இதே ஜைன நபரை அமெரிக்காவிற்கு அனுப்பி வை. மூணு நாலு ஆண்டுகளில் மாமிச பதார்த்தங்களைப் புசிக்கத் துவங்கி விடுவார். அங்கு நாலா பக்கமும் நான்வெஜ் தீனி. தின்பண்டங்கள்தாம். முதலில் பயப்படுவான். மூக்கைப் பொத்திக் கொள்ளுவான். முகத்தைத் திருப்பிக் கொள்ளுவான். பிறகு மெள்ள மெள்ள வழிக்கு வருவான். ஒரே டேபிளில் மற்றவர்கள் மாமிசப் பண்டங்களை ரசித்துப் புசிக்கும் போது அந்த ஜைன ஆசாமியின் மூக்கும் நுகர்ச்சியும் ஈர்க்கப்பட்டுப் பழகி விடும். அப்பண்டங்களின் மணம், குணம் கவர்ந்திழுக்கும். பிறகு அவற்றைப் புசிப்பது பழகிவிடும், இயல்பாகி விடும். இது வேறொரு பண்பியல்பின் செல்வாக்கு.

அமெரிக்காவில் வசிப்பவன் குறிப்பாக அமெரிக்கன் கூறுவான், "புலால் உணவு புசிக்காவிட்டால் நீ நோஞ்சானாக வேண்டியதுதான். ஒலிம்பிக் போட்டிகளில் உன் நிலைமையைப் பார்! புலால் உண்ணாததால் ஏற்பட்ட துர்க்கதி இது. தங்கப்பதக்கத்தை விடு, ஒரு வெண்கலப் பதக்கமாவது வென்றிருக்கிறாயா? உன் பரிதாப நிலைமையைப் பார்! ஆயிரம் ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்தீர்கள். வலிமை வல்லமை எப்படி, எங்கிருந்து கிடைக்கும்? இந்தியனின் சராசரி ஆயுட்காலம் எவ்வளவு? எத்தனை விதமான நோய்நொடிகள் உங்களை வாட்டி வதைக்கின்றன, பார்!"

நிச்சயமாக, புலால் உணவுப் பழக்கமுள்ள நாடுகளின் மக்களுடைய சராசரி ஆயுள் எண்பது வயது. இங்கே நாம் (இந்தியாவில் சைவ உணவாளர்கள்) முப்பத்தைந்து வயது ஆயுள் காலத்தில் முடங்கிக் கிடக்கிறோம்.

எவ்வளவு நோபல் பரிசுகள் உங்களுக்குக் கிடைத்திருக்கின்றன? சுத்த சைவ உணவுப் பழக்கத்தால் புத்தி சுத்திகரிக்கப்படுகிறது, வளருகிறது என்றால் அதிக நோபல் பரிசுகள் உங்களுக்குத்தானே

கிடைத்திருக்க வேண்டும்? உங்கள் புத்தி வளர்ந்து வளம் பெற்றதாகத் தெரியவில்லை. வங்காளி ரவீந்திரநாத் டாகூருக்கு நோபல் பரிசு கிடைத்தது; அவர் சைவ உணவாளர் இல்லை. ஜைன மேதைகளுக்கு நோபல் பரிசு கிட்டியதா? நீங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளாக சைவ உணவாளர்கள். இதுவரையில் உங்கள் புத்தி சக்தி வளரவில்லையா?

ஆக, மாமிசம் தின்னிகளிடம் குறிக்கோள் இருக்கிறது. அவர்கள் கூறுவர், "உன் புத்தி பலவீனமாகிறது. சரிவர புரதச்சத்து, வைட்டமின், வலுவூட்டும் சத்துணவு உனக்குக் கிட்டுவதில்லை. உன் உடல் பலவீனமாகியிருக்கிறது. உன் ஆயுள் காலம் குறுகியது. உள்ளும் புறமும் உனக்குப் பலவீனம், நோய் நொடிகள்."

அமெரிக்காவில் தொண்ணூறு வயதுக்காரன் இளம் பெண்ணை மணந்து கொள்ளுவதாகப் பத்திரிகைகள் பிரபலப்படுத்துகின்றன. உனக்குத் திகைப்பாயிருக்கிறது. "இதென்ன பித்துக்குளித்தனம்?" என்று சொல்லுகிறாய். ஆனால், அங்கே தொண்ணூறு வயதுக் கிழவன் தாம்பத்திய வாழ்வில் சிறப்பாக ஈடுபடும் வலிமை கொண்டிருக்கிறான். சந்ததி உற்பத்தித் திறன் அவனுக்கு இருக்கிறது. வீரிய சக்திக்கு இது அடையாளம்.

நம்மில் ஒருவன் மேலை நாட்டிற்குச் சென்று அந்நாட்டுக் கலாச்சாரத்துடன் வாழ்கிறான். அந்நாட்டவரின் சாடல்களைக் கேட்கிறான், அவர்களுடைய பரந்த பிரபலமான கலாச்சாரத்தின் சிறப்பைக் காண்கிறான் என்று வைத்துக் கொள். அவன் தனது பாரம்பரியக் கலாச்சாரத்தைக் காலப்போக்கில் மறந்து விடுகிறான்.

மகாவீரர் மேலைநாட்டுக்குச் சென்றிருந்தாலும் தம் பண்பு இயல்பை இழக்க மாட்டார்; புலால் உணவை ஏற்க மாட்டார். அவர் நிசமான பூ. அவர் அங்கு சொல்லுவார், "சரி, கொஞ்ச காலம்தான் வாழ முடியும். போதுமே, இதிலே தடை என்ன? அதிக காலம் நீ வாழ்ந்து என்ன இலாபம்? நீ பல பிராணிகளைத் தின்றிருப்பாய். நீ நூறு ஆண்டுகள் வாழ்ந்திருந்தால் எத்தனை மிருகங்களை, பறவைகளை, பிராணிகளைத் தின்று தீர்த்திருப்பாய். நினைத்துப் பார்! ஒரு மயானம் அளவுக்கு நீ தின்றிருக்கிறாய், எவ்வளவு ஜீவன்கள் உன் பொருட்டு மடிந்திருக்கின்றன. எண்ணிப்பார்! எதற்காக? நீ உயிர்வாழ; நீ வாழ்வது எதற்காக? பிராணிகளைக் கொல்லுவதற்காக."

மகாவீரரிடம் எவனாவது, "நீங்கள் வலுவிழந்த பலவீனராக இருக்கிறீர்கள்" என்று சொன்னால், அவர் கூறுவார். "பலசாலியாக இருந்து நான் என்ன செய்யப் போகிறேன்? பிறரை இம்சிக்கவா? எவரையாவது கொல்லவா? எங்காவது போர் புரிய வேண்டுமா?"

எவனாவது மகாவீரரைப் பார்த்து, "நீங்கள் ஆயிரம் ஆண்டுகள் அடிமைப்பட்டுக் கிடந்தீர்கள்" என்று சொன்னால், அவர் கூறுவா - "உலகில் இரு நிலைகள் உள்ளன. ஒன்று பிறருக்கு எசமானனாக இரு, அல்லது அடிமையாக இரு. எசமானனாக இருப்பதைவிட அடிமையாக இருப்பது மேல். நீ எவரையும் துன்புறுத்த மாட்டாய் இல்லையா? நீ துன்புறுத்தப்பட்டிருப்பாய். கயவாளியாய் இருப்பதைவிட பிறர் தீமையைச் சகித்துக் கொள்ளுவது மேல். நீ எவரையும் வஞ்சித்து மோசம் செய்யவில்லை. திருடனாய் இருப்பதைவிட திருட்டுக்கு இலக்காவது மேல்."

மகாவீரரிடம் எவராவது, "உங்களுக்கு நோபல் பரிசு கிட்டவில்லையே" என்று குறைகூறினால், அவரது பதில் இதுவாக இருக்கும்."நோபல் பரிசை வைத்துக் கொண்டு என்ன செய்வது? அது ஒரு விளையாட்டுப் பொம்மை. குழந்தைகள் அதை வைத்து விளையாடலாம். அவ்வளவுதான் அதன் மதிப்பு. நாம் வேறொரு. சிறந்த பரிசைப் பெற விரும்புகிறோம். அப்பரிசு பரமாத்மாவிட மிருந்து கிடைக்கிறது. வேறு எவரிடமிருந்தும் பெற முடியாது. அத்திவ்விய பரிசு சாட்சி போதத்தின் ஆனந்தம் சார்ந்தது. ஸச்சிதானந்த சொரூபம். நோபல் பரிசை நீயே வாங்கி வைத்துக்கொள். குழந்தைகளிடம் கொடு; விளையாடட்டும்; உடைக்கட்டும். அது வெறும் பொம்மை,

"இந்த உலகிலுள்ள எந்தப் பரிசும் அந்தத் திவ்விய பரிசிற்கு இணையாகாது. அது ஆத்மானந்தம் மேனி முடங்கட்டும், வயது போகட்டும், செல்வம் விலகட்டும் - எல்லாமே தொலையட்டும். உள்ளார்ந்த சத்தியஞான போதம் விஞ்சி நிற்கட்டும். எல்லாமே கிட்டும். அந்த உள் இருப்பைத் தொலைத்தவன் சகலத்தையும் இழந்து விடுவான். அதைக் காப்பாற்றிக் கொள்ளுபவன் எல்லாவற்றையும் காப்பாற்றிக் கொள்ளுவான்."

ஆனால், ஜைன மதத்தவன் வெளிநாடு சென்றால் பிரஷ்டனாகித் திரும்புவான். காரணம்? அவன் இயல்பாகவே பிரஷ்டன் (இழந்தவன்). காகிதப்பூ, பொய்த்தோற்றம், அவனது பண்புநிலை.

கலாச்சாரம், தர்மம் (மதம்) இரண்டிற்கும் பேதம் தெரிய வேண்டும். தர்மம் உன் சுபாவம் - இயற்கையான இயல்பு. கலாச்சாரம் (ஸம்ஸ்கிருதி) பிறரால் உனக்குப் போதிக்கப்பட்டது. அது உன்னை அடிமைப்படுத்துகிறது. முக்தி அளிப்பதில்லை.

தார்மிக மனிதன் நெறிகெட்டவனாக இருக்கமாட்டான். அவனே அராஜகம் செய்தால் வேறு யார் ஒழுங்குமுறையைக் கொணர முடியும்? தார்மிகன் கட்டுப்பாடு, நெறிமுறை உள்ளவன். அவனுடைய நெறிமுறை மாறுபட்டது. அது உள்ளத்திலிருந்து வெளிப்படுகிறது. எவ்ராலும் சுமத்தப்பட்டதல்ல. தானே தோன்றி வெளிப்பட்டது. மலைப்பாறைகளிலிருந்து ஜல வலிமையால் வெளிப்படுகிற அருவி போன்றது. நதி பிரவகிக்கிறது. நீரின் சக்தியால். எவரும் நீரை உந்தித் தள்ளவில்லை.

நீ பிறரால் உந்தப்படுகிறாய். உன் கழுத்தில் எவனோ கயிறு கட்டி முன்னால் இழுத்துப் போகிறான்; பின்பக்கம் மற்றவன் சவுக்கால் அடிக்கிறான். நீ அவன் இழுப்புக்குப் போக வேண்டியிருக்கிறது.

பழக்க வழக்கத்துடன் வாழ்கிறவன் பிறரால் இழுத்துச் செல்லப்படுகிறான். அவன் விரும்பாத நிலையில் இழுத்தபடி போக வேண்டியிருக்கிறது. தார்மிகன் (அறநெறியாளன்) சுயமாக மகிழ்ச்சி யுடன் போகிறான். மரணம் நோக்கிச் சென்றாலும் அதே போக்கு. நீ வாழ்வில் இழுத்துச் செல்லப்படுகிறாய். கட்டாயப்படுத்துவதை நீ உணர்கிறாய். 'நாம் ஏதேதோ இழக்கிறோம். பிறர் இதனால் மகிழ்ச்சி அடைகிறார்கள். சுகம் அனுபவிக்கிறார்கள்' என அறிகிறாய்.

என்னிடம் வருபவர்கள் கூறுகிறார்கள், "நாங்கள் சாதுக்கள், மெய்யடியார்கள், சாமியார்கள், எளிய மனிதர்கள். இந்த உலகியல் வாழ்க்கையைப் பார்க்கும்போது வேதனை, வருத்தம்தான் மேலோங்குகிறது. நிரம்ப அநியாயங்கள், பொல்லாமை, தீமைகள்

நடக்கின்றன. வஞ்சகர்கள், திருடர்கள், போக்கிரிகள் வசதியாக ஆனந்தமாக வாழ்கிறார்கள்.''

நான் அவர்களிடம் கூறுகிறேன். ''அவர்கள் ஆனந்தமாக வாழ்கிறார்கள் என்றால் உங்கள் தகுதி, மதிப்பு, வல்லமை மிகத் தாழ்ந்தது என்று அர்த்தம். நீங்களும் அந்த வஞ்சகர், திருடர்கள் போல் வசதியாக வாழ விரும்புகிறீர்கள். உங்களுக்குத் தைரியம், தன்னம்பிக்கை இல்லை. அப்படி வசதி மகிழ்வோடு வாழக் கொடுக்க வேண்டிய விலையை நீங்கள் கொடுக்கவில்லை. கொடுக்க அஞ்சுகிறீர்கள். நீங்களும் ஒருவகையில் வஞ்சகர், திருடர்கள்தான். திருடவும் வஞ்சிக்கவும் துணிச்சல் வேண்டும். அதை நீ இழந்து நிற்கிறாய். வஞ்சக வழியில் செல்வம் சேர்க்க உனக்கும் ஆசைதான்; எங்காவது சிக்கி விடுவோமோ, தோற்றுப் போவோமோ என்கிற கிலி உனக்கு. அதனால்தான் தயங்குகிறாய், ஒதுங்குகிறாய். 'நீ சிக்க மாட்டாய், தோற்க மாட்டாய்' என்று எவராவது உனக்கு வாக்குறுதி அளித்தால், நிச்சயம் நீ திருடனாகி விடுவாய்.''

தார்மிகன் தன்னை வஞ்சிப்பவர்களைக் கண்டு இரக்கப் படுகிறான். மனம் வருந்துகிறான். இந்த அப்பாவிகள் காசு, பணம் சேகரிப்பதில் எல்லா நல்லியல்புகளையும் இழந்து இழிந்து போகிறார்கள் என்று அங்கலாய்க்கிறான். இவர்கள் மண், கல், காரைகளைக் கொணர்ந்து பாழாகும் வீடுகளைக் கட்டி நல்வாழ்வைத் தொலைக்கிறார்கள். அமுதமயமான அனுபவத்தைப் பெறாமல் வேறெங்கோ அலைந்து அல்லல் படுகிறார்கள். இவர்களைப் பார்த்து பரிதாபப்படுகிறார்கள். கருணை உள்ளத்துடன் 'இவர்கள் பிறர் பொறாமைப்படத் தக்கவாறு வாழக்கூடாதா?...' என்று ஏங்குகிறார்கள். தார்மிக மனிதரிடம் எங்கும் வியாபித்துள்ள பரம்பொருளின் அருள் உள்ளது. அதனால் அவர் வாழ்வில் ஒழுங்குமுறை, கட்டுப்பாடு உள்ளது. இதற்கும் மேற்பட்ட நெறிமுறை வேறு கிடையாது.

தார்மிக மனிதர் புரட்சிக்காரர். ஆனால் ஒழுங்குமுறையற்றவர் இல்லை. அவருடைய ஒழுங்குமுறை ஆத்மார்த்தமானது. உள்ளார்ந்தது. சுயக்கட்டுப்பாடுள்ள ஒழுங்குமுறை அது.

எதை நீ நல்ல ஆட்சிமுறை என்கிறாயோ, சீரிய நிருவாக அமைப்பு என்கிறாயோ, அது உனக்கு என்ன செய்தது? எதைக் கொடுத்தது? சண்டை சச்சரவு, போராட்டம், வன்செயல், பாவச்செயல், பொறாமை, வெறுப்பு, பகைமை - இவற்றைத்தான் கொடுத்தது. வேறென்ன கொடுத்தது?

**ஒரு நிலம் பற்றி எரிந்தது மேகங்களுக்காக துடிப்புகளுக்காக வேண்டி அன்பு பிறந்தது.**

**நண்பர்கள் நம் உயிரைக் கேட்டாலும் எமக்கு வருத்தமில்லை,**

**பகைவர்களுக்கும் எம் உயிரைக் கொடுத்தோம்**

**எப்போதும் பாவிகள் நம்மைக் காப்பாற்றினர்**

**நல்லோர்களுக்காகப் பாவங்களைச் செய்தோம்,**

**பிரச்சினைகள் வந்தபோதெல்லாம் அவை முகமூடிகளாகின**

**எம் ஆயுள்காலம் சிக்கல்களில் உழலவே கிட்டியது.**

**காலமெல்லாம் பலப்பல கனவுகள் விளைவித் தோம்**

**பாழ்நில நகரங்களில் வாழ்வாரில்லை,**

**எந்தக் கொள்ளையர் உலகில் நாம் பிறந்தோம்?**

**வளையல்களுக்காக கைகளை வெட்டும் இடம்,**

**வாழ்க்கை எம்மைக் கசக்கிப் பிழிந்து போட்டதால்**

**தரிசனம் செய்ய சுயநலன்களையே விற்றோம்.**

இங்கு என்ன இருக்கிறது? எப்போதாவது திவ்விய தரிசனம் கிடைக்கும் எனும் நம்பிக்கையில் கண்களையே விற்றாகி விட்டது. பரமாத்மா கிட்டுவார் எனும் நம்பிக்கையில் ஆத்மாவும் விற்கப்பட்டது. கிட்டியது என்ன? இங்கே ஒழுங்குமுறை நிருவாகம்

இருக்கிறதா? இங்கிருப்பதைவிட மோசமான நிருவாகக்கேடு வேறு உண்டா? எல்லாத் தரப்பிலும் வெறுப்பு, விரோதம், போட்டி, பொறாமை, எரிச்சல் தாண்டவமாடுகிறது. எவரிடமும் நட்புணர்வு இல்லை; எங்கும் பகை, விரோதம். இங்கே எந்த நலனும் கிட்டுவதில்லை. இந்நிலையையா நெறிமுறை நிருவாகம் என்கிறாய்?

வாழ்வில் ஆனந்தம் நிலவினால்தான் நல்ல நெறி நிருவாகம் அமையும். ஆனந்தம் அதைக் கொணரும். ஆனந்தத்திற்குப் பின்னால் நிழல் போல் நல்ல நிருவாகம் வருகிறது.

நினைவு இருக்கட்டும். துக்கப்படும் மனிதன் அராஜகத்தில் ஈடுபடுகிறான். சுகப்படும் மனிதன் அப்படி இருப்பதில்லை. விரும்பியது கிட்டாததால் துக்கப்பட்டவன் அராஜகத்தில் இறங்கி சீர்குலைப்பில் ஈடுபடுகிறான். வாழ்க்கையில் நலன்களைப் பெற்றவன் பாக்கியசாலி; உடைப்பது, இடிப்பது, அழிப்பது என்று இறங்க மாட்டான்.

இன்று நிலவும் அமைப்பு, நிருவாகம் ஏமாற்று வித்தை, மோசடி அமைப்பு. அரசியல் எத்தர்களின் நயவஞ்சகம் இது. நீ மதிக்கும் நம்பி ஆதரிக்கும் தலைவர்கள், பாதுகாவலர்கள், துணைவர்கள் யாவரும் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள். உன்னைப் பலவிதத்திலும் அபகரிக்கிறார்கள்.

**வேறு நல்ல வழியில் நேரிய துணையுடன் பயணியுங்கள் மகாஜனங்களே!**

**இருமருங்கிலும் சுயநலக் கொள்ளையர் காத்திருக்கிறார்கள் எம் மக்களே!**

**வாழ்க்கை வெள்ளப்பெருக்கில் இரு கரைகளையும் இனி நம்ப இயலாது.**

**வேறு நல்ல வல்லவர் துணையுடன் பயணம் செய் கிளம்பு!**

**இரு கரைகளும் சுயநலக்கயமை கொண் டுள்ளன**

**பாதுகாக்கும் தடுப்புச்சுவர்கள் என நீ நம்பி ஒண்டியதும்**

**அவை இடிந்து சரிந்து விழுந்து விடும்,**

**இன்று ஏதோ ஓர் அதிசயம் நிகழ்ந்துள்ளது**

**இடிபாடுகளிலிருந்து இன்னொலிகள் எழுகின்றன,**

**நம்பிக்கை வேலிகள் சரிந்து வீழலாம், வியப்பில்லை.**

**மகாஜனங்களே! உறைகளிலிருந்து வெளியேறின வாள்கள்,**

**மரக்கலங்கள் என்ன ஆகுமோ தெரியாது,**

**சுக்கான் கம்பங்கள் புயலோடு கூடிக் குலாவுகின்றன,**

**மரக்கலங்கள் என்ன ஆகுமோ தெரியவில்லை,**

**சுக்கான் கம்பங்கள் புயலோடு இணைந்தன,**

**ஆயிரமாயிரம் அப்பாவிகளின் சோகக் குரல்கள் இங்கே புதைந்திருக்கின்றன,**

**வெறும் கற்குவியல்கள் அல்ல இவை,**

**மகாஜனங்களே! புனிதக் கல்லறைகள்!**

இங்கே கப்பல்களின் சுக்கான்கள் புயலோடு சேர்ந்துள்ளன. நீ இந்தச் சமுதாயத்தில் எவர்களைத் துணைவர்கள், புரவலர்கள் என்று நம்பி இருக்கிறாயோ, அவர்கள் உன்னைச் சுரண்டி வஞ்சித்து வாழ்பவர்கள். அவர்கள் உன் சமுதாயத்து அமைப்பாளர்கள், நிருவாகிகள் அல்லர். உங்களை எல்லாம் சீர்குலைக்க முயலுபவர்கள்.

நீ எப்போதமாவது கவனித்திருக்கிறாயா? பதவிப் பொறுப்பில் இருப்பவன் நெறிமுறை நிருவாகம் பற்றிப் பேசுவான். பதவியை விட்டு அரசியலில் சேர்ந்தவன் புரட்சி, போராட்டம் பற்றிப் பேசுவான். பதவியில் இருக்கும்போது ஒழுங்குமுறை தேவை, பதவி போய் அரசியலுக்கு வந்ததும் புரட்சி தேவை. இதெல்லாம் தவறு. மாற்ற

வேண்டும். நிருவாக நெறி பதவிக்கு; புரட்சி, போராட்டம் அரசியலுக்கு - இந்த அமைப்பை மாற்றுவது ஆபத்தானதுதான். எனினும், மாற்றியாக வேண்டும். கட்டுப்பாடு, ஒழுங்குமுறை மிக அவசியம்.

உலகம் முழுவதிலும் இந்த நிலைமை நீடித்து வருகிறது. அரசியல்வாதிக்கு ஆட்சி அதிகாரத்தில் உள்ளவருக்கு பதவி மோகம் மட்டுமே இலக்கு. நெறிமுறை நிருவாகம், நிர்வாகச் சீர்கேடு - இரண்டுமே அநாவசியம். நிருவாகப் பொறுப்பில் ஆட்சி அதிகாரத்தில் இல்லாது போனால், "எல்லாம் மோசம், எல்லாமே சீர்கெட்டுப் பாழாகி விட்டது. புரட்சி ஏற்பட வேண்டும்" என்பார்கள். அவர்கள் ஆட்சிப்பீடத்தில் அமர்ந்து விட்டால், "புரட்சி, போராட்டம் எதுவும் கூடாது. அராஜகம் பரவும். ஒழுங்குமுறை நிருவாகத்திற்கு அவர்கள் எதிரிகள்" என்பார்கள்.

புரட்சி, போராட்டம் பற்றிப் பேசுபவர்களும் போலி ஆசாமிகள். புரட்சி செய்ய மாட்டார்கள். பேச்சோடு சரி. உலகம் முழுவதிலும் இப்படிப்பட்ட போலி புரட்சிக்காரர்கள்தான் மண்டிக் கிடக்கிறார்கள்.

பதவி கிடைத்ததும் புரட்சிக்காரர்கள் புரட்சிக்கு விரோதியாகி விடுகிறார்கள். பதவி இழந்தவர்கள் புரட்சி கோஷம், எதிர்ப்புச் சூளுரை எழுப்புவார்கள். பதவி மாயாஜாலம் செய்ய வல்லது. பதவியில் அமர்ந்ததும் சட்டம், ஒழுக்கம், ஒழுங்குமுறை, நீதி நிருவாகம் - இவை இலாபகரமானவை. பதவி பறிபோனதும், புரட்சி போராட்டம் - இப்போது இவை இலாபகரமானவை.

தார்மிகன் (அறவோன்) ஒழுங்குமுறை நிருவாகத்தையோ, புரட்சிப் போராட்டத்தையோ மதிக்கமாட்டான். நாடமாட்டான். சுயக்கட்டுப்பாட்டில் அக்கறை கொண்டவன். தார்மிகன் விரும்புவது வெளி அமைப்பு, நிறுவனம் நல்ல நிருவாகத்தைத் தராது. விழிப்புணர்வு வளர வேண்டும். சுயச்சார்பான உறுதுணையை நாடவேண்டும், தேட வேண்டும், உருவாக்கிக் கொள்ள வேண்டும். உள்ளத்துள் பகுத்தறிவுச் சோதியை ஒளிர வைக்க வேண்டும். வெளி விளக்குகள், அறிவுரைகள் வீணுக்கு, தவறாக அலைய வைத்தன. குட்டிச்சுவர்களில் முட்டிக்கொண்டோம், பாழும் கிணற்றில் வீழ்ந்தோம். படுகாயப்பட்டு குற்றுயிராய் கிடந்தோம்.

போதும்! இனி சுயஞான ஒளி வீச, சுயச்சார்பு துணை புரிய முன்னேறுவோம்.

வெளியிலிருந்து எவரும் உனக்கு நல்ல நெறி முறை நிருவாகத்தைத் தரமுடியாது. உன் சுய நெறி முறையை உருவாக்கு! நிருவாக அமைப்பை ஏற்படுத்து! உன் வாழ்க்கை உனது உள்ளார்ந்த கட்டுப்பாடு - கட்டுக்கோப்புகளால் நிரம்பி இருக்கட்டும். நல்வாழ்வு மலர்ந்து பரவி நிலைபெறட்டும்.

ஹரி ஓம் தத்ஸத்!



அஷ்டாவக்கிரர் கூறினார் -

தேஹாபிமான பாசேன சிரம் பத்தோஅஸி புத்ரக |
போதோஅஹம் ஞானகங்கேன தந்நிஷ்கிருத்ய ஸுகீ
பவ || (14)

நிஸ்ஸங்கோ நிஷ்க்ரியோ அஸி த்வம் ஸ்வபிரகாசோ
நிரஞ்ஜன |
அயமேவ ஹி தே பந்த: ஸமாதிம் அநுதிஷ்டஸி || (15)

த்வயா வ்யாப்தமிதம் விச்வம் த்வயி ப்ரோதம் யதார்த்த |
சுத்த-புத்த சொரூபஸ்த்வம் மா கம: க்ஷுத்ரசித்ததாம் ||
(16)

நிரபேக்ஷோ நிர்விகாரோ நிர்ப்பர: சீதலாசய |
அகாத புத்தி: அக்ஷுப்தோ பவ சின்மாத்ர வாஸன || (17)

ஸாகாரம் அந்ருதம் வித்தி நிராகாரம் து நிஸ்சலம் |
ஏதத் தத்வோபதேசேன ந புனர்பவ ஸம்பவ || (18)

யதைவ ஆதர்ச மத்யஸ்த்தே ரூபேந்த: பரிதஸ்துஸ |
யதைவ அஸ்மின் சரீரே அந்த: பரித: பரமேச்வர || (19)

ஏகம் ஸர்வகதம் வ்யோம பஹி-ரந்தர் யதா க்கடே |
நித்யம் நிரந்தரம் ப்ரஹ்ம ஸர்வ பூதகணே ததா || (20)

**மு**தல் சூத்திரம் - அஷ்டாவக்கிரர் கூறினார், "பிள்ளாய்! நீ நீண்டகாலமாக சரீரப் பற்று எனும் வலைக்கயிற்றால் கட்டப்பட்டு இருந்தாய். 'நான் மெய்ஞானமயமானவன்' என்னும் அறிவுவாளைக் கொண்டு உன்னைப் பிணைத்திருக்கும் அந்த வலைக் கயிற்றை வெட்டிப் போடு! பிறகு மெய்ஞான இன்பத்துடன் சுகமாய் வாழ்வாயாக!"

அஷ்டாவக்கிரரின் நோக்கில் - அதுதான் மிகத் தூய பார்வை, உறுதுணையான பார்வை. வந்தேறிக் கருத்து, மெய்யானது இல்லை.

**ரா**மகிருஷ்ண பரமஹம்சரின் வாழ்க்கையில் ஒரு நிகழ்வு. அவர் வாழ்நாள் முழுவதும் காளிதேவிக்குப் பூஜை - ஆராதனை செய்து வந்தார். இறுதிக் காலத்தில் அவருக்குத் தோன்றியது. 'இது துவைத பாவனை (இரண்டாகக் கருதுவது). ஏக பாவனை (ஒன்றிய ஒருமைப்பாடு) ஏற்படவில்லையே. இதுதான் பேரின்பம் அளிப்பது. பரம சுகத்தைத் தருவது. ஆனால் இருமை உணர்வு நீங்கவில்லையே,' என ஏங்கினார். பிற மனிதர்கள் பெண்ணை, பொருளை, செல்வத்தை, பதவியை மிகவும் விரும்புகிறார்கள். ராமகிருஷ்ணரோ காளி மாதாவை பக்தியுடன் நேசித்தார். இதுவரை ஜகன்மாதாவும் பக்தனும் வேறாக, இரண்டாகத் தானே இருக்கிறார்கள். இரண்டறக் கலந்த அத்வைத நிலை ஏற்படவில்லையே. மிகவும் வருந்தினார், வேதனைப்பட்டார். 'அத்வைத சித்தாந்த வாதியான வேதாந்தி எவராவது குருவாகக் கிட்டினால் ஞான சித்தி ஏற்படும்" என்று எண்ணித் தேடினார்.

தோதாபுரி எனும் பரமஹம்சர் எதிர்ப்பட்டார். ராமகிருஷ்ணர் அவரிடம் வேண்டினார், "குருஜி! எனக்கு 'ஏகம்' (ஒன்றாக ஒன்றியது) ஏற்பட அருளுங்கள்."

தோதாபுரி சொன்னார், "இதென்ன கடினமான விஷயம்? நீ இரண்டாக நினைக்கிறாய். அதனால் இரண்டாகத் தோற்றுகிறது. அந்த எண்ணத்தை, நம்பிக்கையை விட்டு விடு!"

ராமகிருஷ்ணர் சொன்னார், "அந்த எண்ணத்தை விட்டு விடுவது மிகக் கடினம். காலம் பூராவும் அதை நம்பி இருக்கிறேன். கண்ணை மூடினால் காளி தேவியின் மூர்த்தம் எதிரே இருக்கிறது. பக்தி பரவசத்தில் மூழ்கி விடுகிறேன். ஒன்றாக ஒன்றிவிடும் நிலை மறந்து போகிறது. கண்ணை மூடியதும் இரு காட்சிகள் தோன்றுகின்றன- என்னையும் காளிதேவியையும் எண்ணிப் பார்க்கிறேன். தியானிக்கிறேன். அப்படியும் இருமை மாறவில்லை. என்னை மாற்றுங்கள்"

ஞானி தோதாபுரி சொன்னார், "காளிதேவி மூர்த்தம் உருவாக்கப்பட்டதும், வாள் கொண்டு அதை இரு துண்டமாக்கி விடு!"

"வாளுக்கு எங்கே போவேன்?"

அஷ்டாவக்கிரர் முன்பு கூறியதை தோதாபுரி சொன்னார், "இந்தக் காளி சிலையை எங்கிருந்து கொண்டு வந்தாயோ, அங்கிருந்தே வாளைக் கொண்டு வா! இதுவும் கற்பனைதான். காளிதேவியைக் கற்பனை மூலம் உருவாக்கி, அலங்கரித்து, ஒப்பனை செய்து வழிபடுவது வழக்கமாகிவிட்டது. காளி மூர்த்தம் எதிரே இருந்தால்தான் தென்படும். மனத்துள்ளும் பிரதிபலிக்கும். கண்களை மூடிக் கொண்டு விட்டால் காளிதரிசனம் கிட்டி விடாது."

கிறித்துவ பக்தன் கண்மூடித் தியானிக்கிறான். பல வருடங்கள் இப்படித் தியான யோகத்தில் ஈடுபட்டு வந்தால், ஒருநாள் ஏசுபிரான் பிரத்தியட்சமாகிறார். கிருஷ்ண பக்தன் கண்மூடித் தியானம் செய்தால் கிருஷ்ண பகவான் வந்து தோன்றுகிறார். பௌத்த பிக்குவிற்கும் இவ்வாறு புத்தர் தரிசனம் கிட்டி விடுகிறது. சமண மகாகுரு மகாவீரரும் ஜைன சாதுவின் தியானத்தில் காட்சி அளிக்கிறார். ஜைனருக்கு ஏசு காட்சியளிப்பதில்லை. கிறித்துவருக்கு ஜைன மகாவீரர் தரிசனம் தருவதில்லை. நீ எந்தக் கற்பனையை சாதனையாகக் கொண்டிருக்கிறாயோ அதுதான் காட்சி தரும்.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் காளிதேவியை கற்பனைச் சாதனையாக வளர்த்துக் கொண்டார். அதனால் அவருக்கு காளி எதிரிலேயே காட்சி தருகிறாள். அக்கற்பனை தீவிர நிலைப்பாடாக உருப்பெற்றது. அங்கு ராமகிருஷ்ணரும் காளிதேவியும் மட்டுமே இருக்கிறார்கள். சைதன்யம் (உள்ளுணர்வு) தனிப்பட்டது, வேறு எவரும் எதுவும் இல்லை.

தோதாபுரி சொன்னார், "வாளைக் கையில் எடு. காளி மூர்த்தத்தை வெட்டு, இரு துண்டங்களாக்கி விடு!"

ராமகிருஷ்ணர் கண்மூடி வாளை எடுக்க முயற்சிக்கிறார். தைரியம் வரவில்லை. 'காளியை வாளால் வெட்டவாவது? பக்தன் தெய்வத்தை வெட்ட வாளைத் தூக்குவானா? மெத்தக்கடினம், இயலாது.

சம்சார வாழ்க்கையைத் துறப்பது சுலபம். அதில் பற்றத்தக்கது என்ன இருக்கிறது? ஆனால் மனம் உலகியல் கற்பனையில் ஆழ்ந்திருந்தால், மனம் இனிய காவியத்தைப் படைத்திருந்தால், மனம் இலயித்த கனவு நனவாகியிருந்தால், பிறகு உலகாயத (சம்சார) வாழ்வைப் புறக்கணிக்க முடியாது. உலகமே துர்சொப்பனம்தான். பக்தி சார்ந்த கனவுகள், உணர்வு பூர்வமான சொப்பனங்கள் துன்பக் கனவுகளல்ல. இனிய இன்பக் கனவுகள். அவைகளைக் கலைக்கவோ தொலைக்கவோ இயலாது.

ராமகிருஷ்ணர் நெகிழ்ந்து நெக்குருகிப் போனார். கண்ணீர் வழிந்தது. உடல் நடுங்கியது. எதிரிலிருந்த வாளை எடுக்க முடியவில்லை. வாள் இருப்பதே மறந்து போயிற்று. இதைக் கண்டு குரு ஞானி தோதாபுரி சாடினார், "எத்தனை நாள் இங்கே வெட்டியாக உட்கார்ந்திருப்பது? இதெல்லாம் நடவாது. நீ வாளை எடு, இல்லை நான் போய் விடுகிறேன். என் காலத்தை வீணாக்காதே! இதென்ன விளையாட்டா?"

ராமகிருஷ்ணர் மன்றாடி வேண்டினார். தோதாபுரி ஒரு கண்ணாடித் துண்டை எடுத்து வந்தார். "நீ தியானத்தில் ஆழ்ந்திருக்கும் போது, இக்கண்ணாடிச் சில்லினால் உன் நெற்றியைக் கிழிப்பேன். அப்போது உனக்குத் துணிவு எழும். உடனே வாளை எடுத்து காளிப் பதுமையை வெட்டு! அவ்வளவுதான். இதுதான் உனக்குக் கடைசி வாய்ப்பு. அப்புறம் இங்கு தங்கமாட்டேன்" என எச்சரித்தார்.

'இவர் மாதிரி குரு ஞானியை எங்கே தேடுவேன்? இவர் அஷ்டாவக்கிரர் போலப் பேசுகிறார். சரி, பிரயாசைப்படுவோம்;..' ராமகிருஷ்ணர் கண்மூடித் தியானத்தில் ஆழ்ந்தார். காளிதேவியின் பிரதிமை தோன்றியது. மேலும் ஆழ்ந்து உள்ளார்ந்து போனார். கண்ணீர் சொரிந்தது. உன்மத்த எழுச்சி, ஊக்க வேகம், மயிர்க்கூச்சு துவங்கியது. அப்போது தோதாபுரி ராமகிருஷ்ணரின் நெற்றியில் கண்ணாடித் துண்டால் ஆக்ஞாசக்கிரத்தின் மேல் கோடிட்ட மாதிரிக் கிழித்தார். குருதி பொங்கி வழிந்தது. ராமகிருஷ்ணருக்கு தைரிய உத்துவேகம் எழவே, வாளை எடுத்து காளி பிரதிமையை வெட்டி இரண்டு துண்டமாக்கினார். அப்போதே 'அத்வைதம்' (ஒன்றிய ஒன்று) எனும் போதம் ஏற்பட்டது. பக்திச் சிந்தனை, அகமன அலைகள் எல்லாம் கரைந்து போயின.

இதன்பின் ராமகிருஷ்ண பரமஹம்சர் ஆறு நாட்கள் அந்தப் பரம் சூனிய (வெற்று வெளி) நிலையில் மூழ்கியிருந்தார். பசி, தாகம் இல்லை; புற-பிற நிலை- நிகழ்வுகள் தெரியவில்லை. சகலமும் மறந்து போயிற்று. ஏழாம் நாள் கண்விழித்தார். முதல் பேச்சு, "கடைசித் தடை தகர்ந்து விட்டது!... த லாஸ்ட் பேரியர் ஹேஸ் ஃபாலன்!"

அஷ்டாவக்கிரரின் முதல் சூத்திரம் போதிக்கிறது. "பிள்ளாய்! நீ காலம் காலமாகவே சுய உடல்பற்று எனும் பாசக் கயிற்றால் கட்டுண்டு கிடக்கிறாய். இந்தப் பற்றுப் பிணைப்பையே நீ உன் வாழ்வாதாரமாக, மதி மயங்கி எண்ணிக் கொண்டிருக்கிறாய்."

'நான் இந்த சரீரம்! இந்த உடல்தான் நான்! நான் என்பது என் தேகம்...' இதையே தொடர்ந்து நினைத்துக் கொண்டு இருக்கிறாய். இந்தத் தொடர் எண்ணத்தாலேயே நம் சரீர சொரூபங்களாகி விட்டோம். நாம் சரீரம் இல்லை. இது நமது மனப்பிராந்தியின் அப்பியாசம், பயிற்சி. மதிமயக்கம். நாம் மிக ஆழ்ந்து, தீர்மானமாகக் கருதி வந்த படியால் அப்படியே (நான் தேகம் எனும் நிலை) ஆகிவிட்டோம்.

ராமகிருஷ்ணருடைய வாழ்க்கையில் மற்றுமொரு நிகழ்ச்சி. அவர் எல்லா மதங்களின் நெறிமுறைகளைப் பயின்று சாதனை செய்தார். மானுட இன வரலாற்றில், அவர்தான் தனியாக இயங்கி எல்லா தர்ம மார்க்கங்களின் மூலாதார சக்தியை அணுக முயன்றிருக்கிறார். பொதுவாக ஒரு மனிதன் ஒரு தர்ம (அற) மார்க்கத்தில் தான் செல்வான். பிற தர்மங்களைப் பற்றி அக்கறை கொள்ள மாட்டான். நீ மலை உச்சிக்குப் போய் விட்டாய். நீ வந்த பாதையைத் தவிர பிற பாதைகளைப் பற்றி யாருக்குக் கவலை? நீ பொருட்படுத்துவாயா? அவை மலைச் சிகரத்திற்கு எப்படி இட்டுச் செல்லும் என்று ஆராயத் தோன்றுமா? என்ன, இலாபம்? ராமகிருஷ்ணர் பலமுறை மலைச் சிகரத்தை எட்டியிருக்கிறார், கீழே தாழ்வரைக்குத் திரும்பி வந்திருக்கிறார். ஒவ்வொரு முறையும் வெவ்வேறு பாதையில் பயணித்திருக்கிறார். அவர் ஒருவர்தான் உலகத்திலேயே, எல்லா (தர்ம) சமய நெறி முறைகளையும் பயின்று சாதித்திருக்கிறார். எல்லா மதங்களின் சிகரங்களை எட்டியிருக்கிறார் பரம தார்மிகராக.

ஒருங்கிணைந்த சமரசம் பற்றிப் பலரும் பேசி வருகிறார்கள். ராமகிருஷ்ண பரமஹம்சர்தான் முதல் முறையாக தார்மிக சமரச விஞ்ஞானத்தை உருவாக்கினார். 'எல்லா தர்மங்களும் (சமயங்கள்) சத்திய சாதனங்கள்தாம்' என்று பலரும் போதித்திருக்கிறார்கள். ஆனால் ராமகிருஷ்ணர்தான் வெளிப்படை உண்மையாக செய்து காட்டினார்; சுயாநுபவம் மூலம் வலுவாக்கினார். மதசமரசத்தைத் தாமே வாழ்ந்து காட்டினார்; ஆதரிச பிரமாணமாகத் திகழ்ந்தார்.

இஸ்லாமிய மதத்தில் ஈடுபட்ட போது, சீரிய முஸல்மான் ஃபகீர் ஆனார். "அல்லாஹு! அல்லாஹு!" என்று ஓதிக் கொண்டிருந்தார். ராமர், கிருஷ்ணர் முதலானோரை மறந்தே போனார். குரான் ஆயத்துக்களை ஓதச் சொல்லி கேட்டுக் கொண்டிருப்பார். ஒரு மசூதி வாசலில் வசித்தார். வெளியே செல்லும் போது எதிர்ப்படும் தேவி, தேவர்களின் ஆலயங்களை ஏறிட்டும் பார்க்க மாட்டார். குலதேவதை காளி மாதாவை மறந்தே போனார்.

வங்காளத்தில் சகீ சம்பிரதாயம் பிரபலம். ராமகிருஷ்ணர் அதில் ஈடுபட்டு சாதனை (வழிபாடு) புரிந்து வந்தார். சகீ சம்பிரதாயத்தின் சித்தாந்தம், 'பரமேசுவரன் கண்ணபிரான் ஒருவர்தான் புருஷன் (ஆண்மகன்), மற்ற யாவரும் பெண்கள்; கிருஷ்ண பரமாத்மாவின் சகிப்பெண்கள் (தோழிமார்கள்). சகீ சம்பிரதாயத்தில் சேர்ந்திருக்கும் ஆண்கள் தம்மைப் பெண்களாகவே கருதுவார்கள், காட்டிக் கொள்ளுவார்கள். ராமகிருஷ்ணர் சகீ சம்பிரதாயத்தில் ஈடுபட்டிருந்த காலத்தில், அவருக்கு ஏற்பட்ட அநுபவம் வேறு எவருக்கும் ஏற்பட்டதில்லை. அச்சம்பிரதாயத்து ஆண்கள் தம்மைப் பெண்ணாக வெளிப்படுத்திக் கொண்டாலும், உள்ளூர ஆண்களாகத்தான் இருப்பார்கள். 'நான் ஆண்மகன்' எனும் உணர்வு மாறாது. சகீ சம்பிரதாயத்து ஆண்கள் இரவில் படுக்கையில் கிருஷ்ண விக்கிரகத்தை அணைத்தவாறு படுத்து உறங்குவார்கள். 'கிருஷ்ணன் தான் எமக்குப் பதி, பிரேமி' எனக் கருதுவார்கள். இதனால் பெண்களாகி விட முடியுமா?

ராமகிருஷ்ணர் சகீ சம்பிரதாயத்தில் சாதனை புரிந்தபோது ஓர் அற்புத அதிசயம் நிகழ்ந்தது. விஞ்ஞானிகள் கூட பிரமித்துப் போகும் நிகழ்ச்சி அது. மூன்று மாத காலம் சாதனை செய்தபின் மாற்றம்

ஆரம்பமாகியது. பெண்மைக்கான அறிகுறிகள் தோன்றலாயின. மார்பகம் சதைப் பற்று பூரித்து கொங்கைகளாக மாறின. குரல் மென்மையாக் மாறியது. நடை உடை பாவனைகள் பெண்மையைப் புலப்படுத்தின. ஆண் உருவம் பெண்ணுருவாகியது.

மார்பக மதர்ப்பு சில ஆண்களுக்கும் ஏற்படும். அது முலையாக வளராது. ஆனால் ராமகிருஷ்ணருக்கு வளர்ந்தது. பெருத்த முலைகள். இதுவும் அரிதாகச் சில ஆண்களுக்கு ஏற்படலாம். ஆனால் ஆறுமாத காலம் ஆனதும் ஏற்பட்டது பேரதிசயம். மாதவிடாய் ஏற்பட்டது. தொடர்ந்தது. ஆண் இன உடலுக்கு ஒவ்வாத, நிகழாத அதிசய மாறுதல்! இதுவரையில் எந்த ஆணுக்கும் இப்படி ஏற்பட்டதில்லை.

ஆறு மாதங்களுக்குப் பின் எப்படி இது நிகழ்ந்தது? 'நான் பெண்' எனும் உணர்வு, நம்பக எண்ணமாக ஆழ்மனத்தில் பதிந்ததால் இந்த அதிசயம் நிகழ்ந்திருக்கும். அவருடைய புலன்களுள், உரோமக்கால்களுள், பாதாதிகேசம் பூராவும் அந்த உணர்வு பதிந்திருந்தது. நாடி நரம்பெல்லாம் 'நான் ஒரு பெண்' என்றே ஒலித்தன. ஆண் உணர்வு முற்றிலும் மறந்து போனது. இதனால்தான் அந்த அபூர்வ அதிசயம் நிகழப் பெற்றது.

அஷ்டாவக்கிரர் சொல்லிக் கொண்டிருக்கிறார், "நாம் உடல்கள் அல்ல. நமது பிரமை, உருவெளி எண்ணம் 'நாம் தேகமாக இருக்கிறோம்' என்பது. நம் எண்ணமே நம்மை அப்படி ஆக்கிவிட்டது. இப்பௌதிக உலகம் நமது நம்பக எண்ணம். இதை விலக்கி விட்டால் நாம் உரு மாறிவிடுவோம். இதற்காக நிஜ நிலையை - எதார்த்தத்தை விட்டுவிட வேண்டாம். அந்த நம்பக எண்ணத்தை விட்டால் போதும். 'நாம் சரீரம் தான்' என்று இருந்தால் உருமாற்றம் சாத்தியமில்லை. ஆனால் நாம் உண்மையில் சரீரமாக இல்லை. சரீரத்துள் மறைந்திருக்கும் உள்ளுணர்வு- சைதன்யம் நாம். அது தான் த்ரஷ்டா (காண்பவன்), சாட்சி.

**தேஹாபிமான பாசேன சிரம் பத்தோ அஸி புத்ரக |**
**போதோ அஹம் ஞான கங்கேன தந்நிஷ்கிருத்ய ஸுகீ பவ ||**

"உணர்வு எனும் வாளை எடு! 'நான் உணர்வு எனும் சைதன்ய சொரூபன்' இக்கருத்தாகிய வாளைக் கொண்டு, 'நான் சரீரம்' எனும்

கருத்து மயக்கத்தை வெட்டிவிடு. பிறகு பார், நீ ஆத்மானந்த சுகம் பெறுவாய்.''

எல்லாத் துன்பங்களும் சரீரம் சம்பந்தப்பட்டவை. பிறவி, நோய் நொடி, முதுமை, மரணம் - எல்லாமே உடல் சார்ந்தவை. தேகத்துடன் சொந்த பந்தம் கொண்டிருந்தால், அதற்கு ஏற்படும் பீடைகளுக்கும் நாம் சொந்தம் கொள்ள வேண்டும். உடல் முதுமை அடைந்தால், 'நான் கிழவனாகி விட்டேன்' என்று எண்ணுகிறாய். சாவு நெருங்கினால், 'நான் சாகப் போகிறேன்' என்று பதறுகிறாய். இதெல்லாம் மயக்கம்.

நான் கேள்விப்பட்டேன் -

**மு**ல்லா நஸருத்தீன் ஒருநாள் இரவு கர்ப்பிணி மனைவி பக்கத்தில் படுத்திருந்தான். அப்போது அவர்களுக்கு குழந்தை இல்லை. பேகத்திற்கு மகவு பெற்றுக் கொள்ள ஆவல். முல்லா தூங்க ஆரம்பிக்கும் முன் பேகம் கேட்டாள், "நமக்குக் குழந்தை பிறந்ததும் அதை எங்கே படுக்க விடுவது? இருக்கிறது இந்த ஒரே கட்டில்.''

முல்லா சிறிது நகர்ந்து படுத்தபடி, "நமக்கு நடுவில் இங்கே படுக்க வைக்கலாமே'' என்றான். "சரி, இரண்டாவது குழந்தை பிறந்தால்?'' என்று கேட்டாள். முல்லா மேலும் ஒதுங்கியபடி "அதையும் இங்கே நடுவிலே படுக்க வைப்போம்'' என்றான். கருமி; புதுக்கட்டில், தொட்டில் வாங்க மனசு வரவில்லை.

"அப்புறம், மூணாவது குழந்தை பிறந்தால்?'' என்றாள். முல்லா மேலும் கட்டில் ஓரம் நகர்ந்து, "இங்கேதான் மூணையும் படுக்க விடணும்'' என்று சொல்லிக் கொண்டே தடாலெனக் கீழே விழுந்து விட்டான்.

முழங்கால் முட்டியில் பலத்த அடி. வலி தாளாமல் கத்தினான். அக்கம் பக்கம் கூடிவிட்டது. முல்லா வலி தாளாமல் புலம்பினான். வந்தவர்கள் விசாரித்தார்கள், "என்ன ஆயிற்று, முல்லா!''

முல்லா அலறினான், "எங்க பிள்ளை பிறக்கிறதுக்கு முந்தியே என் காலை உடைத்து விட்டானே, ஐயோ! வலி தாங்க முடியல்லியே!... பிறக்காத பிள்ளையே இப்படி ரோதனை கொடுத்தால், பிறந்த பிள்ளை என்னவெல்லாம் வேதனைப் படுத்துவானோ, தெரியலியே. எனக்குப்

பிள்ளையே வேண்டாம். பட்டது போதும், அல்லாவே!...'' அரற்றல் ஓயவில்லை.

எப்போதாவது... எப்போதாவது என்ன? அடிக்கடி நாம் இப்படித்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நாமே எண்ணிக் கொள்ளுவது, எண்ணியபடி நடப்பது. நாமே நம்பிய எண்ணத்துடன் வாழும்போது, தக்க விளைவுகள் நிசமாக நிகழ்கின்றன. நம் நம்பக எண்ணம் தவறாக, பிரமையாக இருந்தாலும். முல்லாவிற்குப் பிள்ளைகள் இல்லை. இருப்பதாக நம்பக பாவனையால் கால் ஒடிந்தது நிசம். பொய்யின் விளைவு மெய்யாகும். பொய்யை, பிரமையைத் திட எண்ணமாக நம்பியிருந்தால், விளைவு நிஜ நிகழ்வாகி விடும்.

உளவியல் வித்தகர்கள் கூறுவர், ''இவ்வுலக வாழ்வில் ஏற்படும் மாறாட்டங்களில் யதார்த்தம் (நிஜமாவை) மிகக்குறைவு, நம்பக எண்ணங்கள் (பிரமைகள்) அதிகம்.

**ஹா**ர்வெர்ட் பல்கலைக் கழகத்தில் ஒரு உளவியல் பேராசிரியர் ஆய்வு செய்து வந்தார். ஒரு மூடிய குப்பியை அட்டைப் பெட்டிக்குள் வைத்துக் கட்டி, வகுப்பறைக்குக் கொண்டு வந்தார். ஐம்பது மாணவர்கள் இருந்தார்கள். பேராசிரியர் அந்தக் குப்பியை மேசைமீது வைத்தார். ''இந்த அட்டைப் பெட்டிக்குள் அமோனிய கேஸ் நிரம்பிய பாட்டில் இருக்கிறது. இதைக் கொண்டு ஓர் ஆய்வு செய்ய விரும்புகிறேன். குப்பி மூடியைத் திறப்பேன். கேஸ் (காற்று) பரவும். அதன் வாசனை உங்களை வந்தடைய எத்தனை வினாடி நேரம் ஆகும் என்பதைக் கணக்கிட வேண்டும். உங்கள் நுகர்விற்கு கேஸ் எட்டியதும் நீங்கள் கையைத் தூக்க வேண்டும். இந்த அறைக்குள் இருக்கும் ஒவ்வொரு வரிசையையும் கேஸ் எட்ட எத்தனை நேரமாகியது என்பதைக் கணக்கிடுவேன். நீங்கள் எல்லாரும் ரெடியா?''

மாணவர்கள் தயாரானார்கள். பேராசிரியர் குப்பி மூடியைத் திறந்தார். உடனடியாகத் தம் மூக்கை கைக்குட்டையால் பொத்திக் கொண்டு, பின்பக்கம் நகர்ந்து நின்று கொண்டார். அமோனியா வாயு! இரு நொடிகள், முதல் வரிசையில் இருந்த மாணவர்கள் வரிசையாகக் கையை உயர்த்தினார்கள். பிறகு இரண்டாவது வரிசை, தொடர்ந்து மூன்றாவது வரிசை மாணவர்களும் கைதூக்கினார்கள். பதினைந்து

விநாடிகளுக்குள் வகுப்பறை முழுவதும் அமோனியா கேஸ் பரவி விட்டது. ஆனால், அந்தக் குப்பியில் அமோனியா கேஸ் துளியும் இல்லை, அது காலிக்குப்பி!

நம்பக எண்ணத்தால் நிஜ விளைவு ஏற்பட்டு விடுகிறது. எல்லாரும் நம்பினார்கள் கேஸ் இருப்பதாக. பிறகு பேராசிரியர், "இது காலி பாட்டில், இதில் கேஸ் இல்லை" என்று சொன்ன போது, மாணவர்கள் கூறினார்கள், "கேஸ் இருந்ததோ இல்லையோ, ஆனால் எங்களுக்கு கேஸ் நெடி அடித்தது.," நம்பக எண்ணத்தால் நுகர்ந்த உணர்வு ஏற்பட்டது. உள்ளத்திலிருந்து எழுந்த உணர்வு அது.' எண்ணியவாறு எழுந்த நுகர்வு.

நான் கேள்வியுற்ற மற்றொரு நிகழ்ச்சி -

ஆஸ்பத்திரியில் ஒரு நோயாளி. அவன் பருக வேண்டி நர்ஸ் ஆரஞ்சுப் பழச்சாறு கொண்டு வந்தாள். அவளுக்கு முன்பு, வேறொரு நர்ஸ் மருத்துவப் பரிசோதனைக்கு வேண்டி அவனிடம் சிறுநீர் கழிக்க ஒரு பாட்டிலைக் கொடுத்திருந்தாள். அவன் ஒரு வேடிக்கையான மனிதன், ஆரஞ்சுப் பழச்சாறைப் பாட்டிலில் ஊற்றி வைத்தான். யூரின் டெஸ்ட் எடுக்க வந்த நர்ஸ் அந்தப் பாட்டிலைப் பார்த்ததும் திகைத்துப் போனாள் 'சிறுநீர் நிறம் இப்படி இருக்காதே...'

நோயாளி "உங்களுக்கும் இந்த நிறத்தைக் கண்டதும் திகைப்பாய் இருக்கிறதில்லையா? சரி, இதை இப்போதே குடித்து விடுகிறேன். பிறகு நிறம் மாறி சரியாகி விடும்," என்று சொல்லி, பாட்டிலில் இருந்ததைக் குடித்து விட்டான். இதைப் பார்த்த நர்ஸ் அதிர்ச்சியில் மயங்கி விழுந்தாள். அவள் நினைத்தது, 'இந்த மனிசன் தன் மூத்திரத்தையே இப்படிக் குடிக்கிறானே!... பிறகு நிறம் சரியாக இருக்கும் என்கிறானே! என்ன மனிசன் இவன்?...!'

ஆனால் அவன் குடித்தது பழச்சாறு. இது தெரிந்தால் நர்ஸ் மயக்கம் போட்டு விழமாட்டாள். இந்த மயக்கம் நிஜம், நம்பக எண்ணத்தின் விளைவு.

நீ வாழ்க்கையில் இது மாதிரி நிகழ்வுகளைப் பலவாறு பார்க்கலாம், கேட்கலாம். நம்பக .எண்ணம் செயல்படுகிறது, நிசமாகி விடுகிறது.

'நான் இந்த உடல்' இந்த எண்ணம் நெடுங்காலமாக ஆழ்மனத்தில் குடிகொண்டிருக்கிறது. இதனால் சரீரமாகவே நாம் ஆகிவிட்டோம். உயர்வு, தாழ்வு, சரிசமம் என எல்லாமே நம் எண்ணத்தால் ஏற்படும் சுய உணர்வுகள்.

அஷ்டாவக்கிரரின் மூலாதாரம் 'ஆத்ம ஸம்மோஹனம்' (சுய மயக்கம் அல்லது சுயப்பிரமை) ஆடோ ஹிப்னோஸிஸ். நீ சரீரமாகி விடவில்லை, நீ சரீரமாக ஆக மாட்டாய். இதற்கு எந்த வழிமுறை சாதனமும் (உபாயம்) இல்லை. நீ எதுவாக இல்லையோ, எப்படி நீ அதுவாக ஆக முடியும்? நீ உள்ளபடியே, பழையபடியே இருக்கிறாய். பொய்யான நம்பக எண்ணத்தை (கருத்தை) அகற்றிவிட வேண்டும்.

"அந்த வலையை 'நான் மெய்யறிவு' எனும் ஞான உணர்வோடு, அந்த ஞானத்தையே வாளாகக் கொண்டு வெட்டிப் போடு! உடனே நீ சுகாநுபவம் பெறுவாய்."

**"ஞான கட்கேன தத் நிஷ்க்ருத்ய த்வம் ஸுகீ பவ!"**

இப்போதே சுகாநுபவத்தை எழுப்பு. ஏனெனில் எல்லா துக்கங்களும் நமது பழகிப் போன 'நான் தேகம்' எனும் நம்பக எண்ணத்தின் வழித்தோன்றல்கள்.

**பு**த்தர் பிரான் மரிக்கிறார்; ஆனால் மரண பயம், வேதனை அவருக்கு ஏற்படவில்லை. ராமகிருஷ்ண பரமஹம்சர் மரிக்கிறார்; அவருக்கும் மரண வேதனை ஏற்படவில்லை. ரமண மகரிஷி மரிக்கிறார்; மரண வேதனை கிடையாது.

ரமணர் இயற்கை எய்தியபோது அவருக்கு கொடிய கேன்சர் நோய். மருத்துவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். மிக்க வேதனை தரும் புற்றுநோய் அது. ரமணர் சிறிதும் பாதிக்கப் படாமல் இருந்தார். வலிவேதனை அவரை வருத்தவில்லை. வியாதி பீடிக்காதவர் போல் இருந்தார். டாக்டர்கள் கலக்கமடைந்தார்கள். இது எப்படி சாத்தியம்? வலி வேதனையைத் தாள முடியால் துடித்துப் போவதுதான் இயல்பு. இந்த மனிதர் கொஞ்சமும் வருந்தவில்லையே! சாவு நெருங்கிக் கொண்டிருக்கிறது. துளியும் சஞ்சலம், பாதிப்பு இல்லாமல் இயல்பாக இருக்கிறாரே! டாக்டர்களின் பரிதவிப்பு நமக்குப் புரிகிறது. நமக்கு நம்

உடம்புதான் முக்கியம். ஆனால் ரமணருக்கு ஞானம் பிறந்தது. "நான் சரீரமல்ல, உடலுக்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை."

ரமணர் உணர்ந்து கொண்டார். 'மரணம் எனக்கு இல்லை, இந்த உடலுக்கு ஏற்பட இருக்கிறது. வலிவேதனை எனக்கு இல்லை, இந்த உடலுக்குத்தான். அகவுணர்வு (சைதன்னியம்) மேலோங்கி, விலகி இருந்து சரீர உபாதைகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. என் சைதன்னியத்திற்கும் சரீரத்திற்கும் உள்ள இடைவெளி பூமிக்கும் வானத்திற்கும் உள்ளது போன்றது. இதைவிட தொலை தூரத்து இடைவெளி வேறு எதற்கும் இராது. உன் அகவாழ்விற்கு வெகு தூரத்திலுள்ளவை கூட எளிதில் கிட்டுகின்றன. நீ தொடுவானம், மண்ணகமும் விண்ணகமும் சேரும் அடிவானம்!'

**ஜாயதே, அஸ்தி, வர்த்ததே, விபரிணமதே,**
**அபக்ஷீயதே, விநச்யதி.**

– "எது உற்பத்தியாகிறதோ, அது நிலை பெறுகிறது; பிறகு வளர்ச்சி அடைகிறது; மாறுதலடைகிறது; உருக்குலைந்து போகிறது; இறுதியில் அழிந்து போகிறது. அது நீ இல்லை."

நீ எல்லாவற்றையும் பார்க்கிறாய் – சாட்சியாக. பாலியப் பருவத்தைக் கண்டாய், பிறகு அது விலகியதையும் கண்டாய். நீ பாலியப் பருவம் என்று இருந்தால் உன்னை இப்போது எவர் நினைவு வைத்திருப்பர்? நீயும் பாலியத்தோடு போய்ச் சேர்ந்திருப்பாய். இளமையைப் பார்த்தாய், அது மாறி விலகியதையும் கண்டாய். நீ வாலிபம் மட்டுமே என்றிருந்தால் நீயும் அத்துடன் விலகிப் போயிருப்பாய். எவரும் உன்னை நினைவு வைத்திருக்க மாட்டார். நீ இளமை, வாலிபம் கடந்து வேறுபட்டவன்.

இது தெளிவான, நேரிய விஷயம். நீ துன்பம், வலி, வேதனை சூழ்ந்து பாதிப்பதைக் கண்டாய். அவை விலகிப் போனதையும் கண்டிருக்கிறாய். நீ சுகம், துக்கம் இரண்டையும் அநுபவத்திருக்கிறாய். முள் குத்தி வலித்ததை உணர்ந்த நீ, பிறகு முள் எடுக்கப்பட்டு வலி நிவாரணம் பெற்றதையும் அறிந்தவன் நீ. ஆக, நீ நடுநிலைப் பார்வையாளன். கரையில் நின்று கொண்டு எல்லாவற்றையும் வேடிக்கை பார்ப்பவன். எதுவும் உன்னைப் பாதிக்காது, தீண்டாது. தண்ணீரில் மிதக்கும் தாமரை போன்றவன் நீ.

“நீ பற்று அற்றவன், செயல்படாதவன், சுவயம் பிரகாசன் (அக ஒளியால் துலங்குபவன்), குற்றம் குறை அற்றவன். உனக்கு உள்ள பந்தனம் (தடைக்கட்டு) சமாதி (யோக சித்தி) பெற நீ செய்யும் அநுட்டானம்”

இது புரட்சிகரமான வசனம். இதைப் போல் உலகில் எவரும், எந்த சாத்திரத்திலும் கூறியதில்லை. இதன் முழுக் கருத்தையும் அறிந்தால் ஆழ்ந்த வியப்பும் மதிப்பும் ஏற்படும்.

**ப**தஞ்சலி மகரிஷி ‘மனப்போக்கைக் கட்டுப்படுத்துவது யோகம்’ என்றார். இந்த யோகப் பயிற்சி மூலம் மனப்போக்குகளைக் கட்டுப் படுத்தாது போனால், மனிதன் தன்னை (தன்மையை) அறிந்து கொள்ள முடியாது. மனப்போக்குகள் அடங்கி விட்டால் மனிதன் தன்னை அறிந்து கொள்ளுகிறான்.

அஷ்டாவக்கிரர் பதஞ்சலியின் இக்கருத்தை மறுத்து, மாற்றுக் கருத்தைக் கூறுகிறார், “நீ பற்று அற்றவன், செயல்படாதவன், சுயம்பிரகாசன், குற்றமற்றவன். உனக்குள்ள தடைக்கட்டு, சமாதி (யோக சித்தி) பெற நீ செய்யும் அநுட்டானம்.”

சமாதிக்கான அநுட்டானம் (பயிற்சி) எதுவும் இல்லை. அதற்கான முயற்சியும் தேவை இல்லை. சமாதி (யோக சித்தி) உன் சுவபாவம். மனப்போக்கு ஜடமான நிலைகளைக் கொண்டது. மனப்போக்குகளை அடக்குவது. இருட்டில் இருட்டோடு சண்டை போடுவது போன்றது.

இந்தக் கருத்தை நன்கு உணர வேண்டும். வாள், வேல், கைத்தடிகளுடன் சண்டியர்களைத் துணை சேர்த்துக் கொண்டு ஒருவன் இருட்டோடு மோத முற்பட்டால்? அவன் ஜெயிப்பானா? இந்தப் பரிபாஷை (குறியீடு) - ‘இருள் இல்லாமல் போவது ஒளி வெளிச்சம்’ சரிதான். இதே போல், ‘மனப்போக்கு சூன்யமாவது யோகம்’ என்பதும் சரியே. ஆனால் இதை மாற்றி யோசித்தலாகாது. இருள் இல்லாமல் போவது பிரகாசம் என்பதற்காக, தனியாக இருளை அகற்ற முற்படக் கூடாது. நிகழ்நிலை வேறு; ஒளி வெளிச்சம் ஏற்படுவது இருளை அகற்றுவது. நீ ஒளியை ஏற்றி விடு, இருட்டு தானே விலகிவிடும். இருள் தனித்து இருப்பதில்லை; ஒளியின்மைதான் இருள்.

பதஞ்சலி போதிக்கிறார், "மனப்போக்குகளை அடக்கினால் நீ ஆத்மாவை அறிந்து கொள்ளுவாய்." அஷ்டாவக்கிரர் கூறுகிறார். "ஆத்மாவைப் புரிந்து கொள். மனப்போக்குகள் தாமே அடங்கிப் போகும். ஆத்மாவை அறிந்து கொள்ளாமல் உன்னால் மனச்சள்ளைகளை சமனப்படுத்த முடியாது. ஆத்மாவை அறிந்து கொள்ளாததால்தான் மனப்போக்குகள் எழுகின்றன. தன்னைச் சரீரம் என எண்ணிக் கொண்டிருந்தால், சரீரத்திற்கு உரிய விளைவுகள் ஆசாபாசங்கள் எழுகின்றன. 'நான் மனசு' என எண்ணினால், அதற்குரிய உணர்வுகள், விருப்பு வெறுப்புகள் வெளிப்படுகின்றன. நீ எதைச் சார்ந்து, சேர்ந்து இருக்கிறாயோ, அதன் விளைவு - வெளிப்பாடுகள் உன்னிடம் பிரதிபலிக்கின்றன. நீ எதன் அருகில் அமர்ந்திருக்கிறாயோ, அதனுடைய தன்மை உன்னைப் பற்றிக் கொண்டுவிடும்.

ஒரு ஸ்படிக இரத்தினத்தை நிறமேறிய கல்லுக்கு அருகில் வைத்துப் பார்; அக்கல்லின் நிறம் படிகத்தில் படியும். சிவப்புக்கல் பக்கத்தில் இருந்தால் படிகம் சிவப்பாகத் தெரியும். நீலக்கல் பக்கத்தில் வை. நீலநிறத்தில் இருக்கும். இது சகவாச தோஷம். ஸ்படிகமணி நீலமோ, சிவப்போ ஆவதில்லை, அப்படித் தோற்றும்.

இருட்டு தோற்றமளிப்பது, நிசத்தில் இல்லை. ஒளி இல்லாத நிலை இருள். இருளுக்கு சொந்த இருப்பு இல்லை, நிசமான நிலைப்பாடு இல்லை. ஆகையால் நீ இருளோடு சண்டையிடாதே!

யோகாசனம், தியானயோகம் பற்றி அஷ்டாவக்கிரரின் கருத்து மாறுபட்டது. நான் வலியுறுத்துவது இதுதான்- அஷ்டாவக்கிரரை அறிந்து கொள்ள ஜெ.கிருஷ்ணமூர்த்தியை அறிந்து கொள்ள முயற்சி செய்! கிருஷ்ணமூர்த்தி அஷ்டாவக்கிரரின் இக்காலத்திய பதிப்பு, வார்ப்பு. இக்காலத்திய நவீன மொழியில் கிருஷ்ணமூர்த்தி அஷ்டாவக்கிரரின் தத்துவ போதனைகளைக் கூறுகிறார். அது சுத்த அஷ்டாவக்கிர சாரம். கிருஷ்ணமூர்த்தியின் அன்பர்கள் அவர் புதிதாகத் தத்துவ போதனை புரிவதாக நினைக்கிறார்கள். புதிதாகச் சொல்லுவதற்கு எதுவும் இல்லை. எதையெல்லாம் சொல்ல வேண்டுமோ, சொல்ல முடியுமோ அவை சொல்லப்பட்டு விட்டன. வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளும் நிலைகளும் ஆராயப்பட்டு விட்டன.

காலம் காலமாக மனிதன் வாழ்வை ஆராய்ந்து கொண்டு வருகிறான். புதிதாகச் சொல்லுவதற்கு எதுவும் இல்லை. சொல்லும் மொழி மாறுகிறது. மேலும் கீழும் ஆடைகளைப் போல் மாறுகின்றன. காலத்திற்கு ஏற்ப புதிய கருத்துக்களின் செயல்பாடு மாறுகிறது. ஆனால் சொல்லப்படுவது முந்தைய போதனைதான்.

அஷ்டாவக்கிரரின் பாஷை பழமையானது. கிருஷ்ண மூர்த்தியின் மொழி நவீனம். இரண்டையும் ஆழ்ந்து பயின்றால் புலப்படும் - முன்பு கூறியதும், பின்பு சொன்னதும் ஒரே கருத்துதான்.

கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார், "யோகம், தியானம், ஜபம், தவம் எதுவும் தேவை இல்லை. இவை வெறும் சடங்குச் செயல்கள் (அநுட்டானங்கள்). நம் இயல்புக்குப் புறம்பானதை எட்டவே அநுட்டானம் தேவை. நம் இயல்பை, நம்மிடம் இருப்பதைப் பெற அநுட்டானம் எதற்கு? யோகம், தியானம் எதையும் மேற்கொள்ளாமல் நீ உன்னுள், உன் அகச்சூழலுள் எட்டிப்பார்! உன் சுவபாவம் (இயல்பு) வெளிப்படும். அஷ்டாவக்கிரர் அறிவிக்கிறார், "நீ பற்றில்லாதவன், செயல்படாதவன், சுயம்பிரகாசன், குற்றமற்றவன்."

நீ குற்றமற்றவனாதலால், 'நான் பாவம் செய்தவன்' எனும் குற்ற உணர்வு கொள்ளாதே. சாமியார்கள், குருமார்கள், ஞானியார்கள் உன்னைப் பார்த்து, "நீ பாவங்கள் செய்திருக்கிறாய். கழுவாய் செய்! கழிவிரக்கம் கொள்! தீமையிலிருந்து விடுபடு!" என்று அச்சுறுத்தும் போது, நீ அஷ்டாவக்கிரரின் போதனையை நினைவுபடுத்திக் கொள், "நீ கிரியா சூன்யன் (செயல் இல்லாதவன்)" பிறகு, நீ எதற்கு, என்ன காரியம் (பரிகாரம்) செய்ய வேண்டும்?

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "மனித வாழ்க்கையில் ஆறு அலைவீச்சுகள் உள்ளன. பசி, தாகம், சோகம், மோகம், பிறப்பு, இறப்பு என ஆறு அலைகள். பசியும் தாகமும் சரீரம் சார்ந்த அலைகள், சரீரம் இல்லாது போனால் பசி, தாகம் ஏற்படாது. இவை சரீரத்தின் தேவைகள். உடல்நலமாக இருந்தால் பசி எடுக்கும், நோய் வாய்ப்பட்டால் பசிக்காது. வெயிலில் காய்ந்தால் தாகம் அதிகம் எடுக்கம். கோடைப் பருவத்தில் தாகம் அதிகரிக்கும், வியர்வை அதிகம் வெளியேறுவதால். குளிர்காலத்தில் தாகமெடுப்பது குறைவு. இவை உடல் சார்ந்த

அலைகள், தேவைகள். பசி, தாகம் உடல் சார்ந்தவை; சோகம், மோகம், மனம் சார்ந்தவை.

ஏதாவது பொருள், பிராணி தொலைந்து போனால் துயரம் ஏற்படுகிறது; மனம் பாதிக்கிறது. சுகம், துக்கம் மனம் சார்ந்தவை. பிரியப்பட்டவர் பிரிந்தால் துக்கம், வேண்டாதவர் வந்து விட்டால் வருத்தம். அவர் விலகிப் போனால் மகிழ்ச்சி (சுகம்). இதெல்லாம் மனத்தின் லீலைகள். எந்த மனிதனுக்குள் மனம் இல்லையோ, அவனுக்கு சுகம், சோகம், மோகம் எதுவும் எழாது. இவை மனத்தின் அலைகள்.

மேலும், பிறப்பு, சிறப்பு உயிரின் அலைகள். பிறவி உயிர்மூச்சோடு (சுவாசம்) உதிக்கிறது. மரணம் சுவாசம் விலகியதால் ஏற்படும். குழந்தை பிறந்தவுடன், அது சுவாசிக்க வேண்டும், அழவேண்டும் என்று மருத்துவர் கவலைப்படுவார். அழுதால் சிசு சுவாசிக்கும், அழுகை அசைவால் சுவாசத் துவாரம் திறக்கும், சுவாசப்பை (நுரைஈரல்) இயங்கத் துவங்கும். பிறந்ததும் சிசு அழாதிருந்தால் டாக்டர் அதைத் தலைகீழாகத் தூக்குவார், இலேசாகத் தட்டுவார். இதனால் சிசுவின் மூச்சு இழுப்பு - விடுப்பு தொடங்கி விடும், உள்மூச்சு - வெளிமூச்சு இயங்கும். மூச்சு ஜன்மம் (பிறப்பு). சுவாசம் உயிர் இயக்கம். மனிதன் மரிக்கும்போது உயிர் மூச்சு நின்று விடும். உயிரோட்டம் முடிவு பெறும். கணம் தோறும் இதுதான் நிகழ்ந்து வருகிறது. சுவாசம் உட்புகும்போது பிராணன் (உயிர்) உள்ளே செல்லுகிறது. சுவாசம் வெளியேறும்போது வாழ்வு (உயிர்) வெளிப்படுகிறது.

கணம் தோறும் பிறப்பும் இறப்பும் (ஜன்மம், மரணம்) நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. உள்ளே வரும் மூச்சு ஜீவனம், வெளியேறும் மூச்சு மிருத்யு. ஜனன- மரணம் கணந்தோறும் நிகழ்கின்றன. இவை பிராண அலைகள்.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "இவை ஆறுவகை அலைகள். நீ இவைகளைக் கடந்தவன். இவைகளைக் கண்டு கொண்டிருக்கும் த்ரஷ்டா- (காண்பவன்)."

இதனால்தான் புத்தர் சுவாசத்தைக் கொண்டே (உள்மூச்சு) எல்லா சாதனைகளையும் செய்து கொள்ளும் யோக முறையை அமைத்தார். புத்தர் போதித்தார், "ஒரு காரியம் போதும். நீ சுவாசத்தின் போக்குவரத்தைக் கவனி. உள்மூச்சு, வெளிமூச்சுகளின் இயக்கத்தை உணர்ந்து கொள். இதனால் என்ன ஆகும்? மூச்சை வெளியே விடும்போது கவனி; உள்ளே இழுக்கும் போதும் கவனி. உள்ளே சுவாசம் புகுந்தபின் ஒருகணம் நிலைத்திருக்கும். உள்ளே போகாது, வெளியே வராது. பிறகு உள்ளே செல்லும். இதே போல் சுவாசத்தை வெளியே விடும் போதும் ஒரு கணம் அசையாது நிலைத்திருக்கும். பிறகு வெளியேறும். இந்த நிலைபெறும் இடைவெளியில் உன் கவனத்தைச் செலுத்து. சுவாசம் நிலைத்திருக்கும் கணங்களில் நீ உன் உயிர்ப்பு இருப்பை அறிந்து கொள்ளுவாய்; உன் வாழ்வு நிலையைப் புரிந்து கொள்ளுவாய்."

சுவாச கதி - புகுதலும் வெளிப்படுதலும் - பிராணனின் (உயிரின்) லீலைகள். நீ சுவாசத்தை உணர்ந்து கொண்டால், நீ சுவாசத்திலிருந்து வேறுபட்டவன் என்பதை அறிந்து கொள்ளுவாய். சுவாசம் தனித்திருப்பது.

உடல் நம் வெளி மண்டலம் (சூழ்நிலை). மனம் சரீரத்தின் உள்மண்டலம். பிராணன் (உயிர்). ஆழ்மனத்தின் மண்டலம். சரீரம் முடமானாலும், சிதிலமானாலும் மனிதன் உயிர் வாழ்கிறான். மனம் பேதலித்தாலும், மரத்துப் போனாலும் மனிதனால் வாழமுடியும். சுவாசம் (மூச்சு) இல்லாமல் மனிதனால் வாழ முடியாது. மூளையை எடுத்துவிட்டாலும் மனிதன் உயிர் வாழ்வான்; கட்டையாகக் கிடப்பான், உயிரோட்டம் நீடிக்கும். எல்லா அங்கங்களும் செவ்வையாக இயங்கி வந்தாலும் சுவாசம் நின்று விட்டால் செத்து விடுவான், சவம்தான். மேற்சொன்ன ஆறு அலைகளையும் கடந்து கவனித்து வரும் மனிதன் காண்பவன் (த்ரஷ்டா) ஆகிறான்.

"நீ அஸங்கன் (பற்று அற்றவன்)."

உனக்குத் துணைவன், தோழன் இல்லை. சரீரமும் உனக்குத் துணை இல்லை. சுவாசமும் (மூச்சு), எண்ணங்களும் உனக்குத் துணை இல்லை. நீ துணை-இணை இல்லாதவன் (அஸங்கன்). உள்ளும்

புறமும் உனக்கு உறுதுணை எதுவும் இல்லை. கணவன், மனைவி, குடும்பம், நண்பர், அன்பர் எவரும் உனக்குத் துணைவராக இல்லை. அவர்கள் துணையாக இணைந்திருப்பது வெளிப்புற நிகழ்வு. அகத்துள் எவருடனுடன் எதனுடனும் ஒட்டுறவு, துணை பிணை உனக்குக் கிடையாது.

"நீ அஸங்கன், கிரியா சூன்யன் (செய்வதற்கு எதுவும் இல்லாதவன், செயல் அற்றவன்)."

ஆகையால் கருமங்களின் வலைச்சிக்கல் பற்றிப் பேசாதே! அஷ்டாவக்கிரரிடம் நீ இப்படிக் கேட்டால், "இப்போதே முக்தி கிட்டிவிடும் என்றால், செய்த கர்மாக்களுக்கு என்ன கதி? ஜன்ம ஜன்மாந்தரங்களாகக் கர்மாக்களைச் செய்து சேகரித்து வைத்திருக்கிறேனே. அவை என்ன ஆகும்? அவற்றிலிருந்து விடுபடுவது எப்படி?"

அஷ்டாவக்கிரரின் பதில் இப்படி இருக்கும். "நீ எப்போதும் எதுவும் செய்யவில்லையே. பசி, தாகம் காரணமாக சரீரம் ஏதாவது செய்திருக்கும். உயிர்வாழ பிராணன் ஏதாவது செய்திருக்கும். மனம் அதன் போக்கில் ஏதாவது செய்திருக்கும். நீ எப்போதும் எதுவும் செய்யவில்லை. நீ எப்போதுமே பற்று, செயல் இல்லாதவன். நீ எதிலும் ஒட்டாதவன், எதுவும் செய்யாதவன். எல்லாக் காரியங்களுக்கும் பார்வையாளனாக (தர்சக்), காண்பவனாக இருந்து வருகிறாய்- நீ த்ரஷ்டா! ஆகையால் இக்கணமே உனக்கு முக்தி சித்திக்கும்."

கவனமிருக்கட்டும், நாம் செய்து சேமித்திருக்கும் கர்மாக்களின் வலையை அறுத்தெறிய முற்பட்டால் முக்தி ஒருபோதும் கிட்டாது. சாத்தியமே இல்லை. காலம் காலமாக நாம் எத்தனையோ கர்மாக்களை செய்து வந்திருக்கிறோம், அதை எல்லாம் கணக்கெடுத்துப் பார். அக்கர்மாக்களிலிருந்து விடுபட எல்லையற்ற காலம் ஆகும். இக்கால கட்டத்தில் நீ முடங்கி இருப்பாயா? ஏதாவது செய்து கொண்டிருப்பாய். கர்ம பந்தம் வளரும். இச்சங்கிலித் தொடர் முடிவற்றது. இதனால் உனக்கு விடிவு ஏற்படாது.

அஷ்டாவக்கிரர் போதிக்கிறார், "கர்மாக்களிலிருந்து நீ விடுபட்டால்; உனக்கு முக்தி கிட்டினால், அது முக்தியாக இராது.

ஆனால் ஒரு நிலையில் முக்தி கிட்டுகிறது. அந்நிலை 'ஆத்மா எந்தக் கர்மாவையும் செய்யவில்லை' என உணரும் முக்தி ஞான நிலை. நீ (ஆத்மா) செயல் புரியாதவன், செயல் அற்றவன்.''

ஆகையால் நீ பாவி (குற்றவாளி) இல்லை, புண்யசாலியும் (குற்றமற்றவன்) இல்லை. நீ நல்லவனும் இல்லை, கெட்டவனும் இல்லை; நீ ஞானியும் இல்லை அஞ்ஞானியும் இல்லை. நரகம், சுவர்க்கம் என எதுவும் உனக்கு இல்லை.

நீ எதுவும் எக்காலத்திலும் செய்ததில்லை. நீ கனவுகள் கண்டிருக்கிறாய். நீ அப்படி நினைத்திருக்கிறாய். நீ ஆழ்நிலை அகத்துள் உறங்கிக் கொண்டிருந்தாய். செய்ததெல்லாம் உன் சரீரம் தான். கர்மாக்களைச் செய்த உன் சரீரங்கள் அழிந்து போயின. அவை செய்ததற்கு நீ எப்படிப் பொறுப்பாக முடியும்? அவற்றின் விளைவுகள், பலாபலன்கள் உன்னை எப்படிச் சாரும்? நீதான் உள்ளகத்தில் உறங்கிக் கொண்டிருந்தாயே. உன் மனம் செயற்பட்டது. மனச்செயல்கள் விலகிப் போகும்.

**நா**ன் கேள்விப்பட்ட கதை. ஒரு முன்னாள் மகாராஜா. அவருடைய படுக்கை அறை சுத்தமாக இல்லை. வேலைக்காரனைக் கூப்பிட்டு கடிந்தார். "இந்த அளவு குப்பையாக இருக்கிறது. சிலந்தி வலை மூலையில் தொங்குகிறது. நீ நாள் பூராவும் என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

"ஐயா! சிலந்திகள்தான் வலை கட்டியிருக்கும். நான் அரண்மனை வேலைகளிலே முனைஞ்சிருந்தேன். எனக்கென்ன தெரியும்?'' - வேலைக்காரன்.

"நீ வேலை செஞ்சியோ, தூங்கிக் கிட்டிருந்தியோ, யார் கண்டது? சிலந்தி குஷாலாய் வலை பின்னி குடித்தனம் நடத்திக்கிட்டிருக்கும்'' - மகாராஜா.

உடல், உள்ளம், உயிர் எல்லாம் வலை பின்னின. நீ தூங்கிக் கொண்டிருந்தாய். விழித்தெழு! விழிப்பு வந்ததும், 'நீ எதுவும் செய்யவில்லை, செயல்படுவது உன் இயல்பல்ல' என்பதைப் புரிந்து கொண்டிருப்பாய். நீ ஏதாவது செய்ய விரும்பினாலும் உன்னால்

எதுவும் செய்ய முடியாது. செயல்படாதிருத்தல் உன் சுவபாவம். செயலாற்றாமை உனது இயல்புநிலை.

"நீ பற்று அற்றவன் (இணை-துணை இல்லாதவன்), செயல்படாதவன், சுயம்பிரகாசன், குற்றம் குறை இல்லாதவன்."

இந்த போதனையைக் கவனித்தாயா? நீ குற்றமற்றவன். பண்டிதர்களும், ஆசாரியர்களும், புலவர்களும் உனக்கு அறிவுறுத்தியதை (நீ பாவம், குற்றம் செய்தவன். கழுவாய் தேடிக்கொள்! எனப் போதித்ததை) தூக்கி எறி. நீ குற்றமற்றவன். அவர்களுடைய போதனைகள்தான் உன்னைக் குற்றவாளியாக்கியது. 'நீ கெட்டவன், தவறு இழைப்பவன்' என்று பல வகையில் போதித்திருக்கிறார்கள். உன்னுள் குற்ற உணர்வை, தாழ்வு மனப்பான்மையை நிரப்பியிருக்கிறார்கள். உண்மையில் நீ குற்றமற்றவன், எந்தத் தீங்கும் செய்யாதவன்.

"உனக்கு உள்ள பிணைப்பு (கட்டு) நீ சமாதி (தியான சித்தி) பெற மேற்கொள்ளும் அநுட்டானம் (பயிற்சி) தான்."

இந்தப் போதனையில் உள்ள புரட்சியைக் கவனி. உனக்கு ஏற்பட்டுள்ள பந்தம் (கட்டு) நீ சமாதி சித்தி பெற மேற்கொள்ளும் செயல்பாடுதான் அநுட்டானம். நீ முற்படுகிறாய், 'சமாதி எப்படி சித்திக்கும்? தியான யோகம் எப்படி மலரும்? எவ்வாறு முக்தி கிட்டும்?' என்ற நோக்கில் செயல்படுகிறாய்.

**"தே பந்த: ஹி ஸமாதிம் அநுதிஷ்டஸி!"**

உனக்குள் பந்தம் (கட்டு) இதுதான். மெய்யறிவு எனும் வாளை எடுத்து இப்பந்தத்தை வெட்டிப் போடு!

இங்கு உனக்கு இரு விஷயங்கள் தெளிவாகியிருக்கும். யோகத்தின் வழியும், மெய்யறிவின் (போதம்) வழியும் வெவ்வேறானவை. போத மார்க்கத்தின் பழைய பெயர் ஸாங்கியம். ஸாங்கியம் என்பதற்குப் பொருள் மெய்யறிவாகிய போதம். யோகத்திற்கு சாதனம் என்று பொருள். ஸாங்கியம் புலப்படுத்தும் கருத்து, 'விழிப்புடன் இருப்பதைத் தவிர வேறெதுவும் செய்ய வேண்டாம்,' என்பதுதான். யோகம் என்றால் நிறையச் செயல்புரிய

வேண்டும். அப்போதுதான் விழிப்பு ஏற்படும். யோகம் சாதனம், ஸாங்கியம் சாத்தியம் (இலக்கு). இது மார்க்கமல்ல. போய்ச் சேரும் முடிவிடம். நீ இம் முடிவிடத்தைக் கடந்து எங்கும் செல்லவில்லை. நீ உன்னுள் இருக்கும் ஆலயத்துள் முடங்கிக் குந்தியிருக்கிறாய். திரும்பி வரவேண்டாம். நீ தெரிந்து கொள்ள வேண்டியது இதுதான். 'நான் எங்கும் போகவில்லை.'

**"நிஸ்ஸங்கோ நிஷ்க்ரியோ (அ)ஸி த்வம்**
**ஸ்வப்ரகாசோ நிரஞ்ஜன:,**
**அயமேவ ஹி தே பந்த: ஸமாதிம் அநுதிஷ்டஸி."**

உனக்குள் உள்ள பந்தம் நீ மோட்சத்தைத் தேடிக் கொண்டிருக்கிறாய் என்பதுதான். இதனால் புதிய தளை - தடைகள் (பந்தங்கள்) உருவாக்கப்படுகின்றன.

ஒரு மனிதன் பௌதிக வாழ்வில் (சம்சாரம்) கட்டப்பட்டுள்ளான். பிறகு பதறுகிறான். பரிதவிக்கிறான். மோட்சத்தை (விடுதலை) தேடிப் போகிறான். வீடுவாசல், குடும்பம், செல்வம்; நிறுவனம் என எல்லாவற்றையும் துறந்து போகிறான்; புதிய தளை-தடைகளில் சிக்கிக் கொள்ளுகிறான். துறவியாகிறான். நடை உடை பாவனை உணவுமுறை எல்லாமே மாறி, புதிய பந்தங்களாகச் சூழ்ந்து கொள்ளுகின்றன.

நீ பார்த்திருப்பாயே, துறவிகள் நிலைமை சிறைக் கைதிகளுக்குச் சமம். துறவி சுதந்திரமானவர் இல்லை. துறவியின் எண்ணம், 'முக்தி பெற பந்தப்பட்டிருப்பது அவசியம்' இது விசித்திரமாக இல்லை? முக்தி (விடுதலை) பெற முதலில் பந்தங்களுள் சிக்க வேண்டுமாம்! முக்தி அடைய எந்தப் பந்தமும் (கட்டுப்பாடு) தேவை இல்லை.

ஜெ.கிருஷ்ணமூர்த்தியின் ஒரு அரிய நூல், 'த ஃபர்ஸட் அண்ட் த லாஸ்ட் ஃப்ரீடம்' (முதலும் முடிவுமான முக்தி). இது அஷ்டாவக்கிரரின் இக்காலத்து நவீன வெளிப்பாடு.

நீ முக்தனாக வேண்டுமானால் முதல் தடவையில் முக்தன் (முக்தி பெற்றவன், சுதந்திரன்) ஆகிவிடு. 'அடுத்த அடுத்த முறைகளைக் கடந்து கடைசியாக முக்தன் ஆகிவிடலாம்' என்று எண்ணாதே. முதல் முறைத் தொடக்கத்திலேயே முக்தனாகி விடு. அடுத்து, அடுத்து எனத் தொடராதே. முதல் தொடக்க முறையில், முக்தி பெற

முன்னேற்பாடுகளைச் செய்து கொள்ளுவோம் என்று எண்ணினால் புதிய பந்தங்கள் வந்து சேரும். இவைகளிலிருந்து விடுபட ஏற்பாடு செய்யவேண்டும். இந்த ஏற்பாட்டின்போது வேறு புதிய பந்தங்கள் வந்து சேரும். நீ ஒரு பந்தத்திலிருந்து விடுபட்டு மற்றொரு பந்தத்தில் சிக்கிக் கொள்ளுவாய். கிணற்றிலிருந்து தப்பித்தவன் மடுவில் விழுந்த கதைதான்.

நீ கவனி, சம்சாரியும் பந்தப்பட்டிருக்கிறான், சன்னியாசியும் பந்தப்பட்டிருக்கிறார். இருவரின் பந்தங்களும் வெவ்வேறு. ஆனாலும் பந்தம் பந்தம்தானே? அடிப்படை மதிமயக்கம் விலக்கப்படாத வரைக்கும், நீ என்ன செய்தாலும் அது பந்தமாகத்தான் அமையும்.

**நா**ன் கேள்விப்பட்ட தகவல்- ஒரு ஆசாமியின் மனைவி வீட்டை விட்டுப் போய் விட்டாள். அவளைத் தேடிக் கொண்டு அந்த ஆசாமி அலைந்தான். மனைவியைத் தேடிக் கொண்டு காட்டுப் பாதையில் சென்றான். அங்கே ஒரு மரத்தடியில் சாமியார் ஒருவர் இருந்தார். அவர் அருகில் நின்று, "சாமீ! என் பெண்சாதியைப் பார்த்தீங்களா? வீட்டை வீட்டு ஓடிப்போயிட்டாள், ரொம்பச் சங்கடப்படுறேன்." என்றான்.

சாமியார் கேட்டார், "உன் பெண்சாதி பெயர் என்ன?"

"பஜீதி (தொல்லைக்காரி)"

"நல்ல பேர்தான் வெச்சிருக்கிறே! பார்க்கப் போனால் எல்லாப் பொம்பளைங்களும் பஜீதிங்கதான். சரி, உன் பேர் என்ன?" - சாமியார்.

"முட்டாளு."

சாமியார் சிரித்துக் கொண்டார். அவர் சொன்னார், "அப்பாவி மனிசா! நீ கவலையை விடு! வீட்டுக்குத் திரும்பிப் போ! நீ தேடி அலைய வேண்டாம். நீ இருக்கிற இடத்திற்கு பஜீதி வந்துவிடுவாள். எல்லா பஜீதிகளும் அப்படிதான். உன் பெயரே அவர்களுக்குப் போதும். உன் போன்ற ஆசாமிகளைக் கைவிட மாட்டார்கள்"

உலகாயத வாழ்க்கையை விட்டு மனிதன் ஓடிப் போகிறான். ஓடி ஒதுங்குவதால் அவனது முட்டாள்தனம் விலகுவதில்லை. மதி மயக்கம்

போவதில்லை. அதை வைத்துக் கொண்டே கோவிலில் போய் சாமியாராக உட்கார்ந்து விடுகிறான். புதிய பந்தத்தைச் சேர்த்துக் கொள்ளுகிறான். அவனது மதிமயக்கம் புதிய சிக்கல் வலையைப் பின்னுகிறது. முதலில் சம்சார (உலக வாழ்வு) பந்தம், பிறகு சன்னியாச பந்தம். ஆக, பந்தப் பிணைப்பு இல்லாமல் மனிதனால் வாழ முடியாது.

முதல் நிலையிலேயே முக்தி கிட்டும். அதற்காக முன்னேற்பாடு தேவை இல்லை. முன்னேற்பாடு தொடங்கப்பட்டால் அதுவே பந்தமாகி விடும். முயற்சி துவங்கினால் அதுவும் பந்தமாகி விடும். அந்தத் தளையிலிருந்து விடுபடப் பாடுபடவேண்டும். இது முடிவில்லாத சுழல். இதில் சிக்காதே!

ஒரு பயந்தாங்கொள்ளி மனிதன் சுடுகாட்டைக் கடந்து செல்லும்போது நடுங்குவான். அந்த வழியாகத்தான் அவன் வீட்டுக்குப் போக வேண்டும். மாலைப் பொழுதுக்குள் வீடு திரும்பி விடுவான். இரவில் வெளியே தலைகாட்ட மாட்டான்.

அவன் நிலைமைய அறிந்த ஒரு சாமியார் அநுதாபப்பட்டார். அவர் அவன் கையில் ஒரு தாயத்து கொடுத்து ஆறுதலளித்தார். “இதை உன் கையில் கட்டிக் கொள். தைரியமாய் போய்வா. உன்னைப் பேய், பிசாசு, பூதம் எதுவும் அணுகாது. இந்தத் தாயத்து உனக்கு ரட்சை.”

கைமேல் பலன் கிட்டியது. பூதம், பிசாசு கிலி தொலைந்தது. ஆனால் புதிய பயம் புகுந்தது. இந்த மந்திரத் தாயத்து எங்காவது தொலைந்து போய் விட்டால்?... பகலில் மயானம் வழியே செல்லப் பயப்படுபவன், இப்போது நடுநிசியில்கூட பயம், கிலி இல்லாமல் அவ்வழியே போய் வருகிறான். அப்பேர்ப்பட்ட தாயத்து தொலைந்து போனால் என்ன செய்வது? இதே தவிப்பு.

வெளிவாசல் போகும் போது, குளிக்கப் போகும் போது, தூங்கும் போது எப்போதும் தாயத்தைக் கழற்றி வைக்காமல் கையிலேயே வைத்திருந்தான். இரவு தூங்கும் போதும் தாயத்து பயம் தாக்கும். தூக்கம் கலையும். தாயத்து அவனது வாழ்வாதாரமாகி விட்டது. பயம் நிரந்தரமாகியது. முதலில் பேய்- பிசாசு, இப்போது தாயத்து பயப்படுத்துகிறது. பயம்தான் பிரச்சினை.

நீ பயத்தை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றி வைக்கிறாய். பல மனிதர்களும் பயத்தை வாலிபால் விளையாட்டாக்கி விடுகிறார்கள். பந்து நெட்டு வலைக்கு இருபுறமும் நிற்கும் நபர்களால் மாறி மாறி அடித்து அனுப்பப்படுகிறது. இதனிடையே வாழ்க்கை கடந்து போகிறது.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "சமாதிக்கான முயற்சி (அநுட்டானம்) பந்தத்திற்கு (தளை, தடை) காரணம். நீ முக்தனாக (பந்தப்படாமல்) வாழ விரும்பினால் உடனே அறிவித்து விடு! முன்னேற்பாடு, முயற்சி வேண்டாம்."

இந்த அறிவிப்பிலுள்ள புரட்சிக் கருத்தைக் கவனி. இது அரிய, ஒப்பற்ற போதனை.

அவர் போதிக்கிறார், "இப்போதே, இங்கேயே 'முக்தனாகி விட்டேன்' என அறிவித்து விடு! எந்த ஏற்பாடும், செயலும் வேண்டாம். என்னைத் தயார் செய்து கொண்டு அறிவிக்கிறேன் என்று சொல்லாதே. அதுவே உனக்குப் பந்தமாகி விடும். தயாரிப்பைத் தவிர்க்க முடியாது.

ஒரு நோயிலிருந்து விடுபட்டு, மற்றொரு நோய்க்கு இரையாகிறாய். இது தோள் மாற்றுவது போல.

நீ பார்த்திருப்பாய் - சவத்தைச் சுடுகாட்டிற்கு எடுத்துப் போகிறார்கள். பாடையைத் தூக்கிச் செல்பவர்கள் தோள் மாற்றிக் கொள்ளுவார்கள். புதியவர் வந்து தோள் கொடுப்பார். இடது தோள் வலித்ததும் வலது தோள் உதவும், இரு தோள்களும் வலித்தால் புதியவர் தோள் கொடுப்பார். அப்போது முதல் தோளருக்குச் சிறிது ஆறுதல் கிடைக்கும். இப்படித்தான் நீ ஜன்ம ஜன்மாந்தரமாகச் செய்து வருகிறாய். சிறிதளவு ஓய்வு, ஆசுவாசம் கிட்டுகிறது. நீண்ட நிரம்பிய ஓய்வு கிட்டுவதில்லை.

பிணம் தூக்கும் விசயத்தை விட்டுவிடு. நீ முடிவாக அறிவித்து விடு! நீ விரும்பி, தீர்மானித்தால் ஒரு கணநேரத்தில், கணத்தின் ஒரு துளியில் அறிவிப்பு வெளிப்பட்டு விடும்.

சிலர் கேட்கிறார்கள், "ஓஷோஜி! நீங்கள் வந்து கேட்பவருக்கெல்லாம் துறவறம் அளித்து விடுகிறீர்களே, ஏன்?"

நான் சொல்லுவேன், "சன்னியாசம் பெற எல்லாருக்குமே தகுதி உள்ளது. என் பணி அறிவிக்க வேண்டியதுதான், வேறு எதுவும் தேவை இல்லை. இதன் வழியே நீ மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டியது. 'நான் துறவு மேற்கொண்டு விட்டேன், சன்னியாசம் பெற்று விட்டேன்' என்று உணர்வதுதான், நீ சன்னியாசி ஆகிவிட்டாய். 'நான் முக்தன் ஆகிவிட்டேன்' என்று உணர வேண்டும்; நீ முக்தன் ஆகிவிட்டாய். உன் அறிவிப்புதான் உனது ஜீவனம் (வாழ்வு).

அறிவிப்பை பிரகடனப்படுத்தத் துணிந்து நில். அற்ப சொற்ப அறிவிப்புகள் எதற்கு? "அஹம் ப்ரஹ்ம அஸ்மி!" என்று கோஷமிடு. நீ பிரும்மம் ஆகிவிட்டாய்!

அடுத்த சூத்திரத்தில் அஷ்டாவக்கிரர் கூறுகிறார். "இந்த உலகில் நீ வியாபித்திருக்கிறாய். உன்னுள் சகலமும் இணைத்துக் கோர்க்கப்பட்டிருக்கிறது. நீ உண்மையில் சுத்த சைதன்ய சொரூபம். ஆகையால் அற்ப சொற்ப ஆர்வ மனப்போக்கைக் கொள்ளாதே!"

ஏன் சிறு விசயங்களில் ஈடுபடுகிறாய்? 'இது என் வீடு, என் உடம்பு, என் சொத்து, என் பணம், என் கடை' எனத் தாழ்ந்த விஷயங்களில் உன் மனத்தைச் செலுத்துகிறாய்?

**"த்வயா வ்யாப்தம் இதம் விச்வம் த்வயி ப்ரோதம் யதார்த்தத:"**

உன்னிடம்தான் எல்லா சத்தியங்களும் நிரம்பியுள்ளன. பிரம்மம் முழுவதிலும் நீ நிரம்பி இருக்கிறாய்.

**"சுத்த புத்த ஸ்வரூப: த்வம் மாகம: க்ஷுத்ர-சித்ததாம்"**

ஏன் இழிந்த அற்ப விஷயங்களைப் பிரகடனம் செய்கிறாய்? மிகப்பெரிய, மேன்மையான பிரகடனத்தை அறிவிப்பாயாக! அதாவது, "நான் சுத்த சைதன்ய சொரூபன்; சுத்த புத்த சொரூபன்" என அறிவிப்பாய். அற்ப சொற்ப விஷயங்களில் ஈடுபடும் தாழ்வு மனப்போக்கைக் கொள்ளாதே.

**நா**ம் இதுவரையில் அற்ப பிரகடனங்களை அறிவித்து வந்திருக்கிறோம்; அவைகளாகவே மாறியிருக்கிறோம். பிரகடனமாக மாறிவிடுவது நமது விதி, நியதி.

இந்த வகையில் பாரதத்தின் பங்களிப்பு உலகிற்கு அரிய, பெரிய அன்பளிப்பு. பாரதம்தான் உலகில் மிகச்சிறந்த பிரகடனங்களைப் பறைசாற்றியது. மன்சூர் இஸ்லாமிய உலகிற்குப் பிரகடனம் செய்தார் - "அன்லஹக்! நான் சத்தியம்" அற்புதப் பிரகடனம். இதற்காகவே சில முரண்பட்ட முஸ்லிம்கள் அவரைக் கொன்று விட்டார்கள். "இவன் தேவைக்கு அதிகமாகப் பறைசாற்றுகிறான். 'நான் சத்தியம்' என்கிறான். பரம்பெருமான் (அல்லாதாலா) தான் இதைக் கூற வல்லவர்; மனிதன் எப்படிக் கூற முடியும்?

ஆனால், நாம் அஷ்டாவக்கிரரைக் கொல்லவில்லை; உபநிஷத்துக்களை அருளிய ரிஷிகளைக் கொல்லவில்லை. இவர்கள் "அஹம் ப்ரம்ம அஸ்மி (நான் பிரும்மம்)" என்று பிரகடனப்படுத்தியவர்கள். மனிதன் எதைப் பிரகடனப் படுத்துகிறானோ அப்படியே ஆகிறான் என்பதை அறிந்தோம். அற்ப சொற்பமான பிரகடனம் ஏன் செய்ய வேண்டும்? உன் பிரகடனப்படி உன் வாழ்வு அமையும் என ஆன பிறகு மகத்தான, மகோன்னதமான, தெய்வீகமான பிரகடனத்தை வெளிப்படுத்து! அற்ப சொற்பத்தை மேற்கொண்டால் அப்படியே ஆகிவிடுவாய்.

இழிந்ததை எண்ணினால் இழிந்தவனாகி விடுவாய்; மகத்தானதை எண்ணினால் மகத்தானவனாகி விடுவாய். உன் நம்பக எண்ணம் உன் வாழ்வாதாரம், உன் வாழ்க்கையின் வழிமுறையாகும்.

"நீ நிரபேக்ஷன் (எதிர்பார்ப்பு, தேவை இல்லாதவன்), நிர்விகாரன் (மாறுதல் அற்றவன்), ஸ்வநிர்ப்பரன் (தன்னையே சார்ந்திருப்பவன், தன்னிறைவு பெற்றவன்.) சாந்திக்கும் முக்திக்கும் நீ இருப்படம். நீ ஆழங்காண முடியாத பேரறிவாளன்; சினம், சிறுமை இல்லாதவன். ஆகையால் நீ சைதன்யத்திடம் (ஆத்மா) திட ஈடுபாடு கொண்டவன்.

ஈடுபாடு (நிஷ்ட்டா) போதும். சாதனை புரிய வேண்டாம். ஈடுபாடு, பற்று, சிரத்தை இருந்தால் போதும். 'நான் சைதன்யம் (ஆத்மா) மட்டுமே' என்பதில் ஈடுபாடு கொண்டிருந்தால் போதும். இப்பாரினில் இது ஓர் உலகமகா அதிசயம்!

மன தத்துவ அறிஞர்கள் கூறுகிறார்கள், "நீ ஒரு மனிதனிடம் 'நீ மடையன், புத்தி கெட்டவன்' என்று அடிக்கடி தொடர்ந்து சொல்லி

வா, அவன் அப்படியே ஆகிவிடுகிறான். உலகில் புத்தி கெட்டவர்களாகத் தெரிகிறவர்கள் எல்லாரும் அத்தகையவர் அல்லர். இவர்கள் மகாத்மாக்கள். அறிவிலிகள் என்று சுட்டிக்காட்டப்பட்டவர்கள். பலரும் அப்படிச் சொன்னார்கள், இவர்களும் அப்டியே சொல்லிக் கொண்டார்கள். விளைவு, அறிவிலி ஆகக்கூடியவர்கள் அறிவிலிகளாகி விட்டார்கள்.

நீ போகும்போது வழியில் தெரிந்தவர் தென்பட்டால், "என்னப்பா இது? ஏன் உன் முகம் வாட்டத்துடன் வெளிறி இருக்கிறது, உடல் சோர்ந்திருக்கிறது. காய்ச்சல் கண்டிருக்கிறதா? கால் நடுங்குவானேன்? கையைக் காட்டு... ஆமாம், உனக்குக் காய்ச்சல்தான்." என்று கூறிப்பார். நிஜமாக அவர் உடல் நலத்துடன் தான் இருப்பார்.

முதலில் அந்த மனிதன், "இல்லையே, நான் நலமாகத்தானே இருக்கிறேன். நீங்க என்னமோ சொல்றீங்க" என்பான்.

"நான் உள்ளதைத்தான் சொல்லுகிறேன். நம்புவதும் நம்பாததும் உன் இஷ்டம்."

அவன் சிறிது தூரம் போனதும், வேறொருவன் அவனைப் பார்த்து, "உடம்பு சரியில்லையா? முகம் வாடியிருக்கு. சுரம் இருக்குதா? டாக்டரிடம் காட்டு!..." என்றால், அந்த ஆசாமி மறுத்துப் பேசமாட்டான். தன்மீதே சந்தேகம் வந்துவிடும். 'காய்ச்சல் கண்டிருக்குமோ?...' என நினைப்பான்.

பிறகு அவன் தொடர்ந்து மேலே செல்லும்போது எதிர்ப்படும் மூன்றாவது நபரும் அப்படியே சொன்னால், முழுதும் நம்பி, பயந்து வீடு திரும்பி விடுவான்; டாக்டரிடம் போவான்.

**இ**தை ஒத்த செவிவழிக்கதை உண்டு. ஒரு பிராமணன் ஓர் ஆட்டை விலைக்கு வாங்கி வந்தான். நாலு எத்தர்கள் பார்த்தார்கள். பிராமணனிடமிருந்து இந்த ஆட்டை லவட்டி விடவேண்டும் என்று தீர்மானித்தார்கள். 'நேரிடையாய் தாக்கி ஆட்டை பார்ப்பானிடமிருந்து அபகரிக்க முடியாது. கூச்சலிட்டு ஊரைக் கூட்டி விடுவான். எதாவது தந்திரம் செய்து பிடுங்க வேண்டும்' என்று நினைத்து சூது செய்தார்கள். நாலு திருடர்களும் சாலையில் ஒதுங்கித் தனித்தனியாக நின்று கொண்டார்கள்.

முதல் திருடன் பிராமணனிடம், "ஐயரே! இந்த நாயை என்ன விலைக்கு வாங்கினீங்க? வீட்டுக்காவலுக்கா?" என்று கேட்டான்.

"எலே! கண் பொட்டையா? இது ஆடு. நாயில்லை. சந்தைக்குப் போய் அம்பது ரூபா கொடுத்து வாங்கி வந்திருக்கிறேன்."- பிராமணன்.

"நாயை தோளிலே தூக்கிட்டுப் போறீரு. கேட்டால், ஆட்டுக்குட்டிங்கிறீரு! பார்க்கிறவங்க ஏசுவாங்க. உம்ம இஸ்டம்." என்று சொல்லிவிட்டுப் போனான்.

சற்றுத் தொலைவு போனதும், எதிர்ப்பட்ட அடுத்த எத்தன், "சாமி! நாயைத் தோளிலே தூக்கிட்டுப் போறீகளே, அநாச்சாரம் இல்லை. இப்படியே பாப்பாரத் தெருவுக்குள் போயிறாதீங்க!" என்றான்.

பிராமணன் ஆட்டைத் தோளிலிருந்து இறக்கி ஏற இறங்கப் பார்த்தான். 'நாய் மாதிரி இல்லியே,...' என்று எண்ணினான். எத்தனுக்குப் பதில் சொல்லாமல் மேலே நடந்தான். சற்று தூரம் சென்றதும், மூன்றாவது எத்தன். "நாயைத் தோளிலே தூக்கிக்கிட்டுப் போகிற பிராமணரை நான் இப்போதான் பார்க்கிறேன். கலிகாலம். ஐயருக்கு புத்தி கெட்டுப்போச்சுங்கிறேன்!" என்றான்.

பிராமணனுக்குத் தயக்கம், ஐயம் அதிகரித்தது. ஆட்டுக் குட்டியை கீழே இறக்கி, தடவித் தடவிப் பார்த்தான். 'இது நாய் மாதிரி இல்லையே. இப்படியும் நாய் இருக்குமா, ஆடுமாதிரி?" குழப்பம் தீரவில்லை. ஆட்டை இழுத்துக் கொண்டு மேலே நடந்தான்.

நாலாவது எத்தன் எதிர்ப்பட்டான். அவனும் "ஐயரே! நாய் வளர்க்கப் போறீங்களா? வீட்டிலே, தெருவிலே சம்மதிப்பாங்களா? அப்புறம் பூசை, திதி, தெவுசம், பண்டிகைக்கெல்லாம் உங்களைக் கூப்பிடுவாங்களா? சாதியை விட்டு விலக்கிட்டால்? ஏதுக்கு இந்தத் தொந்தரை?..." என்ற சொல்லி விட்டு ஒதுங்கி நின்றான். பிராமணன் பயந்து போய் 'நாயை ஆடு என நம்பி வாங்கி வந்து விட்டேனே. கேடுகாலம்தான்' என்ற நொந்து கொண்டு, ஆட்டை பக்கத்துப் பள்ளத்தில் போட்டு விட்டு வீட்டுக்குப் போனான். அவன் தலை மறைந்ததும் எத்தன் ஆட்டைத் தூக்கிக் கொண்டு சகாக்களை நோக்கி விரைந்தான்.

இப்படித்தான் பல மனிதர்கள் வாழ்கிறார்கள். நீ எண்ணுகிறபடி மாறி விடுகிறாய். உன்னைச் சுற்றிலும் எத்தர்கள், கயவாளிகள் வலம் வருகிறார்கள். அவர்கள் பலவாறு பொய்- புனை சுருட்டுகள் பேசிப் பேசி உன்னை நம்ப வைக்கிறார்கள். அவர்களுக்கு சுயநலம் குறி. புரோகிதர்கள், பண்டாரங்கள், சாமியார்கள் உனக்கு அறிவுறுத்துவார்கள், "நீ இந்த ஜன்மத்திலும், கடந்த பிறவிகளிலும் பாவங்கள் செய்திருக்கிறாய்; பிராயச்சித்தம் செய், கர்மவினை தீரும், சௌக்கியம் கிட்டும்." நீ பூஜை, சாந்தி, தானதர்மம் செய்வாய். அவர்களுக்கு ஆதாயம். உன் ஆட்டுக்குட்டி உனக்கு நாயாகத் தோன்றுவதில் அவர்களுக்கு இலாபம்.

டாக்டரிடம் நீ போகிறாய். அவர் உன்னை பரிசோதித்து, "உனக்கு எந்த நோயும் இல்லை, உனக்கு நோயே வராது. ஆரோக்கியம் உன் சுவபாவம், இயற்கையின் அருள்பாலிப்பு." என்று சொல்லி அனுப்பி வைத்தால், அது அவர் தற்கொலை செய்து கொள்ளுவதாகும். அவரது பிழைப்பு, தொழில் என்ன ஆகும்? நீ உடல்நலத்துடன் டாக்டரைப் பரீட்சிக்க வேண்டி அவரிடம் போனால், அவர் நிஜ நிலையைச் சொன்னால், அது நேர்மை. ஆனால் இத்தகைய டாக்டரை அரிதாகத்தான் காண முடியும்.

**மு**ல்லா நசருத்தினின் மகன் டாக்டர் ஆனான். நான் ஒருநாள் அவரிடம் கேட்டேன், "உன் மகனின் டாக்டர் தொழில் எப்படி இருக்கிறது?"

"நல்லபடியாய் போய்க் கொண்டிருக்கிறது"

"எப்படித் தெரியும் உனக்கு?"

"அவனிடம் வரும் நோயாளிகளிடம், 'ஐயா! உமக்கு எந்த நோய் நொடியும் இல்லை. தைரியமாய் திரும்பிப் போங்கள்' இப்படி யார் சொல்ல முடியும்? கைதேர்ந்த, பிரபலமான பெரிய டாக்டர்தானே சொல்ல முடியும்? வீண் தொல்லை- தொந்தரவு இல்லை. நிம்மதியாய் காலம் போகிறது."

ஆதாய வியாபாரம் வளர நிறையக் கடைகள் திறக்கப் பட்டிருக்கின்றன. விற்பனை அதிகரித்திருக்கிறது. உன்னைச் சுற்றிலும்

ஏராளமான கடைகள் சூழ்ந்திருக்கின்றன. ஆசான்கள், போதகர்கள், புரோகிதர்கள், சாமியார்கள், தலைவர்கள் எனப் பலரும் கடைகளைத் திறந்திருக்கிறார்கள். நீ பாவம், குற்றம், குறைகள் செய்திருக்கிறாய். இவைகளின் விளைவுகளிலிருந்து உன்னைக் காப்பாற்ற வேண்டாமா? கடைக்காரர்கள் இதற்காகவே வியாபாரம் செய்து வருகிறார்கள்; உன்னைக் கடைத்தேற்ற, நலமாக வாழ்விக்க உனக்கு முக்தி அளிக்க குருசாமிகளும் காத்திருக்கிறார்கள்.

அஷ்டாவக்கிரரின் கருத்துப்படி இந்தக் குருமார்களும், சாமியார்களும், பூசாரிகளும் வீண். உன்னைப் பந்தங்களிலிருந்து விடுவிக்க, முக்தி பெறச் செய்ய எதுவும் தேவை இல்லை, அநாவசியம். நீ பந்தங்களில் சிக்கவில்லை. விடுபட்டு இருக்கிறாய். நீ முக்தன் (முக்தி பெற்றவன்).

அஷ்டாவக்கிரர் எந்தக் கடையும் விரிக்கவில்லை. உன்னிடம் வியாபாரம் செய்ய அவர் விரும்பவில்லை. நேர்மையுடன் நேரிடையாக உனக்கு எடுத்துக் கூறுகிறார்.

“நீ நிரபேக்ஷன் (எந்தத் தேவையும் இல்லாதவன்), நிர்விகாரன் (மாறுதல் இல்லாதவன்), ஸ்வநிர்ப்பரன் (சுயச்சார்பு உள்ளவன்); சாந்தி (அமைதி), முக்தி (விடுதலை) யாவும் நீயே! ஆழ்ந்த பகுத்தறிவாளி, குரோதமில்லாதவன் நீ; ஆகையால் நீ சைதன்யம் (ஆத்மஞானம்) மீது பற்று, நம்பகம் மிக்கவன்.”

ஒரே நம்பகப் பற்று இருக்க வேண்டும், “நான் சாட்சியாக இருப்பவன்” இது போதும். இவன் தார்மிகன் (அறவோன்). வேறு எதிலும் நிஷ்டை (நம்பகப்பற்று) தேவை இல்லை. பரமாத்மா, சுவர்க்கம், நரகம், கர்மயோகம்- எதிலும் பற்று தேவை இல்லை. ‘நான் சாட்சி, மாறுதல் இல்லாதவன்’ எனும் நம்பிக்கையில் பற்று இருந்தால் போதும். நீ எதில் நம்பகப் பற்று வைத்திருக்கிறாயோ, அதுவாகவே ஆகிவிடுகிறாய்.

ஓர் உளவியல் ஆய்வாளர் (மனோவிஞ்ஞானி) ஆய்வுப் பணியாக, தம் வகுப்பில் உள்ள முப்பது மாணவர்களை இரு பகுதியாக்கி, ஒரு சாராரைத் தம் வகுப்பறையிலும், மற்றவர்களைப் பக்கத்து அறையிலும் உட்கார வைத்தார். தம் வகுப்பறைக்

கரும்பலகையில் ஒரு கணக்கை எழுதி, "இதற்குச் சரியான முறையில் விடை எழுத வேண்டும். இது கடினமான கணக்கு. உங்களால் சரிவர விடைகாண முடியாது. முயன்று பாருங்கள். பாதி அளவு சரியாக இருந்தாலும் பாராட்டு கிடைக்கும். எத்தனை பேர்கள் தேறுகிறீர்கள், பார்க்கிறேன்." - கூறிவிட்டு அடுத்த வகுப்பறைக்குப் போனார்.

அங்கும் பிளாக் போர்டில் அதே கணக்கை எழுதி, "இது மிகச் சுலபமான கணக்கு, கீழ்வகுப்பு மாணவர்கள் கூட சரியாகப் போட்டு விட முடியும். நீங்கள் எல்லாருமே தேறி விடுவீர்கள். இருந்தாலும் கவனக்குறைவாய் எத்தனை பேர்கள் தவறுகிறார்கள் என்று பார்க்கத்தான் இந்தப் பரீட்சை" என்று சொல்லிவிட்டு, தம் வகுப்பறைக்குத் திரும்பி வந்தார்.

ஒரே கேள்வி. இரு வகுப்புகள். ரிசல்ட்டில் வேறுபாடு. முதல் அறையில் பதினைந்து மாணவர்களில் மூன்று பேர்கள் தான் சரியான விடை எழுதியிருந்தார்கள். அடுத்த வகுப்பில் பன்னிரண்டு மாணவர்கள் சரியான விடை எழுதியிருந்தார்கள். இவ்வளவு வித்தியாசம் இரு வகுப்பு மாணவர்களிடம் எப்படி ஏற்பட்டது? அந்தக் கணக்குக் கேள்வியுடன் ஆசிரியரின் போதனை தான் இந்த வேறுபாட்டிற்குக் காரணம்.

அஷ்டாவக்கிரர் "அறநெறி (தர்மம்) சாதிக்க முடியாததல்ல, வெகு சுலபம்." என்கிறார். "தர்மம் மெத்த கடினம், மிகவும் பாடுபட்டுச் செய்ய வேண்டிய காரியம்" என்ற உபதேசிப்பவர்தாம் தர்மத்தை மெத்தனக் கடினமாக ஆக்கி வைத்திருக்கிறார்கள்.

தர்ம பரிபாலனம் பற்றிப் பல வகையாய் பேசி உன்னைப் பயமுறுத்துவார்கள். "வாள்முனையில் நிற்பது, இமயமலைச் சிகரத்தை எட்ட ஏறுவது போன்றதுதான் தர்மநெறிகளைக் கடைப்பிடிப்பது. மிகச் சிலர்தான் அரிதாகக் கிடைப்பார்கள் அத்தகைய அறவோர்" என்பர்.

அந்த உபதேசியார்களிடம் சொல்லுங்கள், "சாமி! நாங்கள் சாமானியர்கள். எங்களையும் இங்கே வாழ விடுங்கள்."

அஷ்டாவக்கிரர், கூறுவார், 'தர்மநெறிகளை மேற்கொள்ளுவது மிக எளிது. நீ எதுவும் முனைய வேண்டாம். கவனத்துடன் பார்த்துக் கொண்டிரு, போதும்."

இது மனிதனின் மேதைமை தரும் இறுதி போதனை. இது மனிதனின் இறுதியான சாத்தியங்கள் குறித்து விழிப்புணர்வைக் கிளர்த்துவது. தர்மம் மனிதனின் மேதாவிலாசத்தின் உன்னதமான ஆச்சரியம். ஒப்பீடு செய்து பார்த்தால், அரசியல் மனித மேதைமையின் படுமோசமான விளைவு; தர்மம் மனிதமேதைமையின் தலைசிறந்த உத்தம, உன்னதப் பங்களிப்பு.

ஒரு அரசியல் தலைவர் நோய் வாய்ப்பட்டுக் கிடந்து, நலமாகித் தேறி வந்தார். டாக்டர் அறிவுறுத்தினார், "தலைவரே! இன்னும் மூனு மாதத்திற்கு நீங்கள் மூளைக்கு வேலை கொடுக்கலாகாது, ஓய்வு தேவை."

"டாக்டர் சார்! என்னால் முடங்கிக் கிடக்க முடியாது. கொஞ்சம் அரசியல் அடாவடி அலுவல் மேற்கொள்ளலாமா?"

"தலைவரே! தாராளமாய் அரசியல் செய்யுங்க. இதனால் மூளைக்குப் பாதிப்பு இராது."

அரசியல் செய்வதில் மூளைக்க வேலை இல்லை. அரசியலில் இமிசை, தொந்தரவு ஏற்படும். பகுத்தறிவுக்கு வேலை இல்லை. பிக்கல் பிடுங்கல், சச்சரவு, சள்ளை உண்டு. அமைதி, நிம்மதி இராது. பேராசை, பொறாமை, வலுத்தாக்குதல் இருக்கும். ஆத்மா (பண்புநெறி) இராது.

தர்மம் (அறப்பண்பு) ஆக்கிரமிப்பு, வன்வெறி, போட்டி, போராட்டம் அற்றது. அர்ப்பணிப்பு உள்ளது. பிறரிடமிருந்து எதையும் பறிக்க வேண்டாம்; உன்னிடம் உள்ளதை (நல்லதை) வெளிப்படுத்தினால் போதும். உன்னிடம் உள்ளதே உனக்குப் போதும், பிறரிடமிருந்து ஏன் அபகரிக்க வேண்டும்? சொந்த நலம் இல்லாதவன், சுயநலனை அறியாதவன்தான் பிறர் நலத்தைப் பறிக்க முனைவான்.

அற்பசொற்பங்களுக்காகச் சண்டை போடுகிறார்கள், உள்ளகத்தில் வியாபித்திருக்கும் பரமாத்மாவை உணராதவர்கள். கடலைத் தம்முள் வைத்துக் கொண்டு நீர்த்துளிகளைச் சேகரிக்கத் தவிக்கிறார்கள், ஏங்குகிறார்கள்.

தம்மை அறியாதவர்கள் அரசியலில் ஈடுபடுகிறார்கள். அரசியல் கட்சிகளைச் சார்ந்தவர்களைத் தான் இங்கு குறிப்பிடுகிறேன். ஏதோ காரண காரியத்திற்காகப் போராட்டம் நடத்துபவர்களையும் நான் அரசியல்வாதிகள் என்கிறேன். பெயர்கள் வேறுபாடு; சொத்து- செல்வம் வேண்டிப் போராட்டம் செய்தால் சொத்து அரசியல். பதவிக்காக அரசியல் செய்தால் அது பதவி அரசியல். சுயநலத்திற்காக தியாகத்தை முன் நிறுத்திச் செய்யப்படுவது போலித் தியாக அரசியல்.

தியாகிகளுக்குள் போட்டாபோட்டி, பொறாமை அதிகம். 'அவர் பெரிய தியாகி என்று பாராட்டு பெறக்கூடாது' என்று மற்றொரு தியாகி போட்டி போடுவார். ஒரு தியாகியை மகாத்மா என்று எவராவது பாராட்டி விட்டால், மற்றத் தியாகிகள் பொறுக்க மாட்டார்கள். அவரைச் சிறுமைப்படுத்தி விட்டுத் தாமே மகாத்மாவாகி விட வேண்டும் என்று போட்டா போட்டி வலுக்கும். இந்த மகாத்மாக்களை வைத்து ஒரு ஒலிம்பிக் பந்தயப் போட்டி நடத்தலாம் போலிருக்கிறது!

எந்தத் துறையில் போட்டி ஏற்பட்டாலும் அங்கு அரசியல் புகுந்துவிடும். அரசியலின் மூலக்குரல், "என்னிடம் அது இல்லை, மற்றவர்களிடம் இருக்கிறது; அதைப் பறித்துச் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும்". சரி, பிறரிடமிருந்து அபகரித்தது எப்படி உனக்குச் சொந்தமாக எதுவரையில் இருக்கும்? அது மற்றொருவரால் உன்னிடமிருந்து பறிக்கப்பட்டு விடும். அப்படி எவரும் வராவிட்டால், மரணம் நிச்சயம் பறித்து விடும்.

நீ எவரிடமிருந்தும் பிடுங்காமல், உன்னிடம் ஒன்றி இயல்பாக இருப்பதுதான் உனக்கு உரியது. அதை எங்கும் உன்னிடமிருந்து கைப்பற்றி விடமுடியாது. மரணத்தாலும் அபகரிக்க முடியாது. நீ பிறப்பதற்கு முன்பும் அது உனதாக இருந்தது. உன் மரணத்திற்குப் பிறகும் உனதாகவே இருக்கும்.

அந்த ஒன்றை (உனதை)த்தேடு. அதற்காக நீ எந்தச் சாதனத்தையும் தேட வேண்டாம். அஷ்டாவக்கிரர் போதிக்கிறார். "விழிப்புணர்வு போதும். சாட்சியாக கவனித்திரு!"

வாழ்க்கையில் பல தருணங்களில் உனக்குத் தோன்றும் 'நான் வீணுக்கு அலைந்து திரிகிறேன். ஆனால் எங்கே எப்படி நிறுத்துவது?' தெரிந்தே நீ செய்கிறாய். இந்த ஆட்டம் ஓட்டம் மிகப் பழமையானது. பழகிவிட்டது. நிற்க, நிறுத்த மறந்து போனாய். கால்களுக்கு ஓடி, ஓடிப் பழக்கமாகிவிட்டது. மனத்திற்கும் இதே கதிதான். ஓய்ந்து உட்கார முடியவில்லை. பழக்க தோஷம் விடுவதில்லை.

**"உதடு வரை வந்தது முறையீடு, வீண்!**
**எவரிடம் சொல்ல? சொல்லிப் பயன்?**
**விசனத்தைச் சகித்துச் சென்றோம்**
**சோர்ந்து, தோல்வியுற்று முடங்க மனமில்லை."**

மேலும் பலர் இப்படி யோசிக்கிறார்கள், 'சோர்ந்து உட்கார்ந்தால் தோற்றுப் போவோம்' பிறரும் நம்மைப் பார்த்து இப்படித்தான் கருதுவார்கள். தப்பி ஓடப்பார்க்கிறான் என்பார்கள். சுணங்கி, முடங்கி உட்கார்ந்திருப்பவரை அவ்வழியே பயணிப்பவர்கள் இளக்காரமாகப் பார்ப்பார்கள். நிந்திப்பார்கள்,... ஆகையால் மனிதர்கள் சென்று கொண்டிருக்கும் பயணிகள்.

மனத்துள் பல குறைபாடுகள், குற்றச்சாட்டுகள் எழுகின்றன. எல்லாம் வீண், வியர்த்தம் எனத் தோன்றுகிறது. எவரிடம் இதைச் சொல்லுவது? எவன் புரிந்து கொள்ளுவான்? இங்கு எல்லாருமே உன் போன்றவர்கள். எவனும் எவரிடமும் மனம் விட்டுப் பேசுவதில்லை. மனக்கேடுகளை மறைத்துக் கொண்டு எல்லாரும் வாழ்கிறார்கள் - அவரவர் விதி வழி அடைய நிற்பவர்கள்.

**"உதடு வரை வந்தது முறையீடு, வீண்!**
**எவரிடம் சொல்ல? சொல்லிப் பயன்?..."**

எவராவது அஷ்டாவக்கிரராகக் கிடைத்தால், புத்தர் கிடைத்தால் முறையிடலாம், பயன்படும். வேறு எவரிடம் சொல்லுவது?

**"... விசனத்தைச் சகித்துச் சென்றோம்..."**
**வேதனையை விழுங்கியபடி ஜனங்கள் சென்று கொண்டிருக்கிறார்கள்.**
**'... சோர்ந்து தோல்வியுற்று முடங்கிட மனமில்லை"**

தோல்வியை ஏற்று முடங்கியிருப்பதன் பொருள் - மூழ்கிப் போவது, மரிப்பது. சென்று கொண்டே இரு! ஏதாவது செய்து கொண்டிரு! ஏதாவது கிட்டும், பெற வேண்டும் என்ற தீர்மானத்துடன் தொடர்ந்து இயங்கு! இல்லையேல், மூழ்கி மறைந்து போவாய்.

தொடர்ந்து செயலாற்றுகையில் சில கணம் ஓய்வு பெற உட்காரும் போது இலக்கு கிட்டி விடும். செயல்படாமல் அமர்ந் திருக்கும் அக்கணத்தில் பரமாத்மா கிட்டுகிறார். பயணிக்கும்போது, ஓடும்போது கிட்டுவதில்லை, இதைத்தான் அஷ்டாவக்கிரர் போதிக்கிறார், "பரம விசிராந்தியில் (ஆழ்ந்து ஓய்வு பெறும்போது) அது கிட்டுகிறது."

எப்போதாவது சிறிது நேரம் ஓய்வுபெற உட்கார்ந்திரு. பெரும்பொழுது ஆராய்ந்து சிந்தித்திரு. வேறொன்றும் செய்ய வேண்டாம்.

**ஜே**ன் துறவிகள் ஒரு சாதனையை மேற்கொள்ளுவார்கள். அதற்கு 'ஜாஜ்ஜேன்' என்று பெயர். 'வெறுமனே உட்கார்ந்திரு, ஏதும் செய்ய வேண்டாம்' என்று அர்த்தம். இது ஆழ்ந்த தீவிர யோக சாதனை, செயல்முறை இல்லை. அமைதியாய் உட்கார்ந்திரு, வேறு எதுவும் செய்ய வேண்டாம்.

அஷ்டாவக்கிரர் கூறுவதைத்தான் இந்த ஜேன் துறவியரும் சொல்லுகிறார்கள். மனத்தை அடக்கி வை. ஆசாபாசம், ஊகம், அநுமானம், எதிர்பார்ப்பு எதுவும் வேண்டாம். சுய ஆளுமையுடன் தன்னுள் மூழ்கி இரு!

மெள்ள மெள்ள உன் அகத்துள் ஓர் ஒளி பரவத் துவங்கும். தொடக்கத்தில் காண இயலாமல் இருக்கும். உச்சி வெயிலில் நீ வெளியிலிருந்து வந்து வீட்டுக்குள் நுழைந்ததும் இருட்டாக இருக்கும். கண்கள் வெயில் வெளிச்சத்தில் பழகியிருந்ததால் இந்த நிலைமை. சிறிது நேரம் உட்கார்ந்து கண்களைக் கசக்கிக் கொண்டால் வெளிச்சம் தெரியும். அந்த அளவுக்குள் வெளிச்சம் பரவியிருக்கும்.

இதே போலத்தான் மனத்திற்குள்ளும். பல ஜன்மங்களாக வெளியே அலைந்து திரிந்து கொண்டிருந்தாய். ஆழ்மனத்துள் நுழைந்ததும் முதலில் இருட்டாகத் தான் இருக்கும். பயப்படாதே. உட்கார். விழிகள் பழைய பாதிப்பிலிருந்து விடுபடும். புதிய நிலைமைக்குப் பழக்கப்படட்டும்.

வெளிப்புறக் காட்சியால் புறக்கண்களுக்கு ஏற்படும் பாதிப்பு போல் தான் அகக்கண்ணிற்கும் ஏற்படும். இது மூன்றாவது கண். வெளியே பார்க்கும் போது விழி சிறுக்கும். வீட்டிற்குள் வந்து பார்க்கும்போது விழி அகலமாகும். இது பழக்கப்பட்ட முறை. அகக்கண்ணிற்கு இது தேவை இல்லை. புது முயற்சி செய்ய வேண்டாம். அமைதியாக உட்கார்ந்திருந்தால் போதும்.

சாமானிய ஜனங்கள் கேட்பார்கள், "வெறுமனே உட்கார்ந்து கொண்டு என்ன செய்வது? ஏதாவது செய்ய வேண்டும். "ஹரே ராமா!...." பஜனை செய்யலாமா? மந்திரம் உபதேசியுங்கள். அதை ஜபித்துக் கொண்டு உட்கார்ந்திருப்போம். ஏதாவது வேலை கொடுங்கள். பிடிமானம், ஈடுபாடு இருக்க வேண்டுமே."

ஏதாவது அநுட்டானம். (நடவடிக்கை) தொடங்கினால் பந்தம், தளைக்கட்டு வந்து சேரும். செயல் தவிர்த்து உட்கார்ந்து கொள், அல்லது நின்று கொண்டிரு, படுத்திரு; ஏதானாலும் செயல்படாமல் இருப்பதுதான் நோக்கம். எது நிகழ்ந்தாலும் பொருட்படுத்தாதே. கூச்சல், குழப்பம், கும்மாளம், புயல் வெள்ளம், ரயில் ஓட்டம், விமானப் பறப்பு, கப்பல் ஓட்டம் எதையும் பொருட்படுத்தாதே. புலன்களை ஒடுக்கித் தியான யோகம் செய்ய வேண்டாம். சலனமற்று உட்கார்ந்திரு. சமாதி நிலை உன்னுள் மெள்ளப் புகும். அஷ்டாவக்கிரரின் போதனை புரியும் - 'கருமம் அற்ற நிலை' அநுபவபூர்வமாகத் தெரிய வரும். "உருப்பெற்றதைப் பொய் (மாயை) எனத் தெரிந்து கொள். உருவற்றதை நித்தியம், அசையாதது என உணர்ந்து கொள். இந்த சத்திய தத்துவ உபதேசத்தால், மறுபடியும் உலகில் உற்பத்தி எதுவும் நிகழாது."

புத்தர்பிரான் குறிப்பிட்ட அநாகாமிந் என்பவன் பௌத்த மனிதன். இவன் மரித்தால் மறுபிறவி பெற மாட்டான்.. இறந்தவர்கள்

மறுபடியும் பிறப்பது அவரவர் ஆசைகள் காரணமாக, அரசியல் மோகம் காரணமாக, தன்னை உணர்ந்தவன் (ஆத்மஞானி) மறுபிறவி இல்லாதவன். பிறப்பு - இறப்பு எனும் சக்கிரச் சுழற்சியிலிருந்து, ஜனன-மரணப் போக்குவரத்திலிருந்து முற்றிலுமாக விடுபடுகிறான்.

**"ஸாகாரம் அந்ருதம் வித்தி, நிராகாரம் நிஸ்சலம் வித்தி!"**

- உருவெடுத்ததைப் பொய்யென அறிந்து கொள். உருவில்லாததை அசையாத நித்தியமாக அறிந்து கொள்.

எது நம்முள் உருவாகியுள்ளதோ, அது பிரமை, பொய். எது நம்முள் உருவற்றதாக உள்ளதோ, அதுதான் நிஜம், சத்தியம்.

நீர்நிலையில் சுழல் இருப்பதைப் பார்த்திருக்கிறாயா? சுழல் என்பது என்ன? தண்ணீரிலிருந்து எழும் அலைச்சுழற்சி. பிறகு அடங்கி விடும். சுழல் எங்கே மறைகிறது? சுழல் தனியாக உள்ளதல்ல; நீரினில் எழுந்த அலைவீச்சு. நீரின் ஓர் உரு. இதைப் போலத்தான் நாம் பரமாத்மாவிலிருந்து எழும் அலை உருவம். அலை மறைந்து விடும். அதன் எச்சம் ஏதும் இராது. வெந்து தணிந்தபின் எஞ்சும் சாம்பல் போல் எதுவும் எஞ்சியிராது. எந்த அடையாளமும் இராது, நீ தண்ணீர்மேல் ஏதாவது எழுதிப்பார், உடனே மறைந்து போகும். இப்படித்தான் வாழ்க்கையின் எல்லா உருவாக்க நிலைகளும் அலைவீச்சுகள் தாம். எழுந்ததுமே வீழ்ந்து மறைந்து விடும்.

"எப்படி ஒரு கண்ணாடி பிரதிபிம்பத்திற்கு உள்ளும் புறமும் உள்ளதோ, அவ்வாறே பரமாத்மா இப்பௌதிக சரீரத்திற்கு உள்ளும் புறமும் உள்ளது."

நிலைக்கண்ணாடிக்கு எதிரே நிற்கிறாய், உன் உரு அதில் பிரதிபலிக்கிறது. கண்ணாடிக்கு ஏதாவது ஆகிறதா? எதுவும் இல்லை. நீ நகர்ந்ததும் உன் பிம்பம் மறைகிறது. கண்ணாடி மாறவில்லை, உள்ளபடியே இருக்கிறது. அதில் உன் பிரதிபிம்பம் தோன்றுவதும் மறைவதும் உன்னால் ஏற்பட்டது.

அஷ்டாவக்கிரரின் சூத்திரம் கூறுகிறது, "கண்ணாடிக்கு எதிரில் நிற்கும்போது உன் பிரதிபிம்பம் அதில் தோன்றுகிறது. அது

உருவாகிறதா? உருவானதாகத் தோற்றுகிறது, உருவாக்கப்படுவதில்லை. பலரும் பிரதிபிம்பத்தைக் கண்டு ஏமாறுகிறார்கள். நீ ஏமாறாதே!"

மேலும் அவரது சூத்திரம் விவரிக்கிறது, "பிரதிபிம்பத்தின் நாலா பக்கமும் கண்ணாடி உள்ளது. உள்ளும் புறமும் அதுவே, வேறெதுவும் இல்லை. இதேபோல பரமாத்மா நம் சரீரத்திற்கு உள்ளும் புறமும், மேலும் கீழும், எல்லாத் திசைகளிலும் வியாபித்துள்ளது. அது ஒன்றுதான் எங்கும் பரந்துளது. பரமாத்மா எனும் மகா சாகரத்தில் எழும் சிறு அலை, சுழல் நாம்.

எனினும் நீ உன்னை வெறும் அலை என எண்ணி ஏமாறாதே. உன்னைப் பெருங்கடல் எனக் கருது. இந்த நம்பக எண்ணம்தான் பந்தத்தையும் முக்தியையும் தீர்மானிக்கும். உன்னை அலை என எண்ணினால் பந்தப் பிணைப்பில் சிக்குவாய், கடல் எனக் கருதினால் முக்தன் ஆகிவிடுவாய்.

"எவ்வாறு சர்வ வியாபியான ஓர் ஆகாசம் பாண்டத்தின் (உடலின்) உள்ளேயும் வெளியேயும் இருக்கிறதோ, அப்படித்தான் நித்திய நிரந்தர பிரும்மம் எல்லாப் பூத மண்டலங்களிலும் (நீர், நிலம், வானம், தீ, காற்று மண்டலங்கள்) வியாபித்திருக்கிறது."

ஒரு பானையை எடுத்து வை. அதன் உள்ளேயும் வெளியேயும் ஒரே ஆகாயம் உள்ளது. நீ பானையை உடைத்துவிடு; ஆகாசம் உடையாது. புதிய பானையை வனைந்து பார், ஆகாசம் மாறுவதில்லை. பானையை பல வடிவங்களில் - பெரிது, சிறிது, நீண்டது, குறுகியது, பெருத்தது - என வடிவமைப்பில் வனைந்து வை. அவற்றுள் உறையும் ஆகாசம் உருமாறுவதில்லை.

நாம் எல்லாருமே மண்பாண்டங்கள். உள்ளும் புறமும் பாண்டம்தான். குழைத்த மெல்லிய மண் ஓடு சட்டி, பானைகளை உருவாக்குகிறது. அதற்கு மதிப்பு அளிக்காதே. அதோடு பற்று, உறவு கொள்ளாதே. 'அந்த மேல் மண் ஓடு போன்றவன் நான்' என எண்ணினாயானால், நீ மாறி மாறிச் சட்டி-பானையாகத்தான் உருப்பெருவாய். உன் நம்பகச் சிந்தனை உன்னை அப்படியே உருவாக்கிக் கொண்டிருக்கும். சம்சார சாகரத்தில் உன்னை ஆழ்த்தும்,

நீ சட்டி-பானை இல்லை, அவற்றுள் பரந்துள்ள வெற்று வான்வெளி - சூனியம்;...

ஞானி லாவோத்சுவின் வாக்குகள் பொருள் செறிந்தவை. அவர் கூறுகிறார், "சட்டியின் ஓட்டிற்கு என்ன மதிப்பு உள்ளது? முக்கிய மதிப்பு சட்டிக்குள் இருக்கும் சூனியத்திற்குத்தான். தண்ணீர் நிரப்பப்படுவது அந்த சூனியத்தில் (வெற்று வெளி) தான். சுவர் போன்ற மேலோட்டிலா நீர் நிரம்பும்?

"நீ வீடு கட்டுகிறாய். சுவர்களை வீடு என்பாயா? சுவர்களுக்கு இடையில் உள்ள திறந்த வெளிதான் வீடு எனப்படும். அங்குதானே வசிக்கிறாய்? சுவர்கள் மீது வசிக்கவில்லையே. சுவர்கள் வெறும் எல்லைகள். உண்மையில் நாம் வசிப்பது ஆகாச வெளியில். நாம் திகம்பரர்கள் (திசைகள் சூழ்ந்த வான்வெளிக்குள் வசிப்பவர்கள்). உள்ளே வெளியே பரந்துள்ள ஆகாசத்துள் வசிக்கிறாய்; சுவர்களுக்குப் பங்கு இல்லை. சுவர் இன்று எழும்பும், நாளைக்கு இடிந்து போகும். ஆகாசம் (வான்வெளி) சாசுவதம், எப்போதும் இருக்கும்."

நீ அறியாமையால், சுவர்கள் தாம் வீடு என எண்ணினால், மண் ஓடுதான் பானை என நினைத்தால், சரீரம்தான் நான் எனக் கருதினால், நீ பந்தப்படுவாய், பாசப் பற்றினால் கட்டப்படுவாய். வாழ்க்கையின் சாத்திரத்தை (நெறி நூல்) தவறாகப் படித்துவிட்டால், எல்லாமே பிசகிவிடும். சிறு தவறு போதும், எதிர் விளைவு பேரிழப்பாகும்.

முல்லா நசருத்தீன் ஒருநாள் சிந்தனையில் மூழ்கியவாறு பேருந்தில் ஏறி அமர்ந்தார். சிகரெட் குடிக்கத் தொடங்கினார்.

"பெரிய எழுத்தில் 'இங்கே புகை பிடிக்கக் கூடாது!' என்று அறிவிப்பு இருக்கிறதே பார்க்கவில்லையா? ஏன், உமக்குப் படிக்க வராதா?" - நடத்துனர் அதட்டினார்.

"படிக்காமல் இருப்பேனா? பார்த்தேன். இந்தப் பஸ்ஸிலே பலதும் எழுதி வைச்சிருக்கீங்க. எல்லாத்தையும் கடைப்பிடிக்க முடியுமா? அதைப் பாரு! 'கைத்தறிப் புடவைகளையே அணியுங்கள்!' என்று எழுதியிருக்கிறது. அதைக் கடைப்பிடிக்க முடியுமா?" என்றார் முல்லா.

சிறு தவறுகளைத் தவிர்ப்பது நல்லது. உடல் நம்முடன் இருப்பதால், அதன் மொழியைப் புரிந்து கொள்ளுவது எளிது. உடலின் நிழல் நம் உள்ளத்துக் கண்ணாடியில் பிரதிபலிக்கிறது, பிரதிபிம்பம் தோன்றுகிறது. நீ சரீரத்துள் இருக்கிறாய், நீ சரீரம் இல்லை. சரீரம் உனது உடைமை, சரீரத்திற்கு நீ உடைமை இல்லை. அது உன் கருவி, சாதனம். சரீரத்தைப் பயன்படுத்து. உன் மேலாதிக்கத்தை விடாதே. சரீரத்திற்குள் நீ இருந்தாலும் அதற்கு அப்பாற்பட்டவன்- தண்ணீரில் இருக்கும் தாமரை மலரைப் போன்றவன் நீ.

**ஹரி ஓம் தத்ஸத்!**



**முதல் கேள்வி :**

**வேதாந்த கிரந்தம், அஷ்டாவக்கிர கீதை முதலான ஆன்மீக நூல்களைச் சுயமாகப் பயின்று அறிந்து கொண்ட தத்துவம். "பெறத்தக்கது பெறப்பட்டுள்ளது. இதற்காக முயற்சி மேற்கொள்ளுவது வீண் அலைச்சல்". இந்த ஈடுபாட்டைத் திடமாகக் கொண்டிருந்தும் எமக்கு ஆத்மஞானம் எற்படவில்லையே. ஏன்? அருள்கூர்ந்து வழிகாட்டுங்கள்.**

சாத்திர நூல்களைப் பயின்று நீ அறிந்து கொண்டிருப்பதாக நினைப்பது தவறு. அப்படி இல்லை. சொற்களை நீ புரிந்து கொண்டதும், அதன்வழியே உனக்குப் பட்டறிவு ஏற்பட்டதாக நீ கருதுவதும் பிரமைதான். அப்படி இல்லை. அஷ்டாவக்கிரரின் போதனையைக் கேட்டவர் பலரும் 'நாம் எல்லாம் அடைந்து விட்டோம்' என்றே எண்ணுவார்கள். இதனால் எதுவும் கிட்டியதாகாது.

அஷ்டாவக்கிரரைப் படித்து, கேட்டு அறிவதற்கும், எல்லாம் பெறுவதற்கும் என்ன சம்பந்தம்? அறிவுத்தோற்றம் உன்னுடையதாக இருக்க வேண்டும். இந்த அநுபவம் உன்னுடையதாக இருக்க வேண்டும். சுயபுத்தி சார்ந்த தீர்மானமாக இருக்கக்கூடாது.

புத்தி விரைவிலேயே ஒத்துப்போகும். 'இலக்கு கிட்டி விட்டது' என்று நினைப்பது மிக சுலபம். செயல்பாடு தேவையில்லை; தேடி அலைய வேண்டாம்; தியானம், யோகம், பூஜை, பிரார்த்தனை தேவை இல்லை. அதுதான் கிடைத்து விட்டதே!...

புத்தி சுலபமாக இசைந்து விடும், அது உணர்ந்து அறிந்து கொண்டதால் அல்ல. மார்க்கத்தடை விலகியது; முயற்சி, செயல்பாடு

வழிமுறை தேவை இல்லை எனக் கருதுகிறது புத்தி. நீ நாலா பக்கமும் தேடுகிறாய்; இதுவரையில் எதுவும் கிட்டவில்லையே என ஏங்குகிறாய்.

புத்திக்கு அதன் அறிவாற்றலால் இலட்சியம் கிட்டுவதனால், ஆன்மீகப் பல்கலைக்கழகங்கள் தோன்றிவிடும். ஆன்மீகத்திற்கு ஒரு பல்கலைக் கழகமும் கிடையாது. சாத்திரங்களைப் படித்து இலட்சியத்தை எட்டமுடியாது. சுயமாக எழும் பிரக்ஞை (தத்துவ ஞானம்) மூலம்தான் இலக்கு கிட்டும்.

அஷ்டாவக்கிரர் போதனையைக் கேள். உடனடியாக ஏற்றுக் கொள்ளாதே. ஆசை அப்படிச் செய்யத் தூண்டும். 'இது மிக எளிதாக இருக்கிறதே, புதையல் கண்ணெதிரே கிட்டியது மாதிரி இருக்கிறது. அலைந்து திரிய வேண்டாம்; முன் முயற்சி, உபாயம் தேவை இல்லை' என எண்ணுவாய்.

உன் வெகுநாளைய ஆசையும் இதுதானே. இலக்கை (ஆத்மஞானம்) அடைய வேண்டும் எனும் பேரவா உந்துகிறது. ஏதும் பிரயத்தனம் செய்யாமல் கிட்டிவிட வேண்டும் எனும் பேரவா. முன்பு இது பற்றிச் சிந்திப்பாய். இப்போது சிந்திக்காமலேயே கிட்டி விடவேண்டும் என விரும்புகிறாய். 'இனியும் ஏன் கிட்டவில்லை ஆத்மஞானம்?' என்பதுதான் இப்போதுள்ள பிரச்சினை.

'ஆத்ம ஞானம் எப்படியாவது போகட்டும்; இதற்காக ஏன் மெனக்கிட வேண்டும்?' எனும் எண்ணம் ஏற்பட்டிருக்கும். அஷ்டாவக்கிரரைச் சரிவர அறிந்து கொண்டு விட்டால், கேள்வி எழாது. ஆத்மஞானம் கிட்டவில்லை, இதன் காரணம்? அஷ்டாவக்கிரரை மதித்து நம்புவதோடு கூட, சிந்தனையில் இச்சிறு எதிர்பார்ப்பும் இருந்திருக்கிறது. 'இதுவரை ஆத்மஞானம் கிட்டியதா, இல்லையா?' கிடைக்க வேண்டும் என்கிற நோக்கத்தில் கவனம் இருந்தது.

என்னிடம் வருபவர்களுக்கு எடுத்துரைக்கிறேன். "நீ உன் விருப்பை, கோரிக்கையை முன் வைத்திருக்கும் வரையில் உனது தியான நிட்டையில் ஆழ்ந்திருக்க இயலாது. தியானிக்கும் போது நீ, 'ஆனந்தம், பரமாத்மா, ஆத்மா ஏதாவது கிட்ட வேண்டும்' என எண்ணியிருந்தால் தியானம் ஆழ்நிலையில் இலயிக்காது. கிட்ட

வேண்டும் என எதிர்பார்க்கும் ஆசை உன்னை நினைக்க வைக்கிறது. இது பேராசை, அரசியல். தர்மம் இல்லை. நீங்கள் சொல்லுவீர்கள்' நல்லது. ஏதும் நினைக்காமல் உட்கார்ந்திருக்கிறோம். அப்போதாவது கிட்டுமில்லையா?'

எந்த மாறுதலும் ஏற்படவில்லை. நீ ஆசையிலிருந்து விடுபடவில்லை. அஷ்டாவக்கிரரின் போதனையைக் கேட்டதும் பலரும் உடனடியாக இலக்கு கிட்டி விட்டதாகவே எண்ணுகிறார்கள். இவ்வளவு விரைவாகக் கிட்டக்கூடியதா இது? கிட்டாது போனால் தடை ஏற்பட்டிருக்குமோ? தடை உன் பேராசை, அறியாமை. கிட்டவேண்டியது மிக அருகில் இருந்தும் உன் தடையால் கிட்டாது போயிற்று.

அஷ்டாவக்கிரர் சரியாகத்தான் கூறியிருக்கிறார், "உனக்குக் கிடைத்துவிட்டது" இதன் முழுப் புரிதலுக்கு முன்பு, 'அடைய வேண்டும்' என எழும் உன் அபிபாஷை விடுபட்டிருக்க வேண்டும். அப்போதுதான் முழு ஆளுமையோடு நீ 'இலக்கு கிட்டிவிட்டது' என்று அறிவாய். இப்போதைக்கு உன் புத்தி விலாசம் விளையாடுகிறது.

அஷ்டாவக்கிரர் சிறந்த மகரிஷி, மகாஞானி. அவர் சரியாகத்தான் சொல்லியிருப்பார். நீ ஏற்க, உணர அவசரப்படுகிறாய். உன் ஈடுபாடு (சிரத்தை) வீரியமற்றது. நீ சந்தேகம் கொள்ளாமல் உடனடியாக நம்பி விடுகிறாய். சாஸ்திர வசனங்களில் சந்தேகப்படும் மரபு இந்தத் தேசத்தில் தொலைந்து போயிற்று. சாத்திரம் சொன்னால் சரியாகத்தான் இருக்கும் என்ற குருட்டு நம்பிக்கை நிலவுகிறது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் என்னிடம் வந்தான். கையில் அழகான குடை வைத்திருந்தான். "முல்லா! இந்தக் குடை ஏது? எங்கே கிடைத்தது. இது மாதிரிக் குடை நம் ஊரிலே தயாரிப்பதில்லையே?" என்று கேட்டேன்.

"சகோதரியின் அன்பளிப்பு இது" - முல்லா.

"நஸ்ருத்தீன்! உனக்கு அக்கா-தங்கை எவரும் இல்லை என்று சொல்லியிருக்கிறாயே?"

"ஆமாம். அப்படி யாரும் இல்லை."

"பின்னே? எந்த சகோதரி உனக்கு இதைக் கொடுத்தாள்?"

முல்லா சொன்னான், "நீங்க ஒப்பாது போனால் நான் என்ன செய்ய? இந்தக் குடைக் கைப்பிடியில் எழுதியிருக்கிறது பாருங்கள் - 'சகோதரனுக்கு சகோதரியின் அன்பளிப்பு' என்று. நான் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு வெளியே வந்தேன். வாசல் பக்கம் இந்தக் குடை இருந்தது. எடுத்துப் பார்த்தேன். 'சகோதரியின் அன்பளிப்பு'. சரி, எனக்கு சொந்த சகோதரி இல்லாவிட்டால் என்ன? யாரோ ஒரு சகோதரி கொடுக்கிறாள். ஏன் மறுக்க வேண்டும்? கையோடு எடுத்து வந்துவிட்டேன். சரி, ஒன்றுவிட்ட சகோதரி எவளாவது இல்லாமலா போவாள்? அத்தைபெண், மாமாபெண், சித்தப்பா-பெரியப்பா பெண் இப்படி எவளாவது இருக்கலாமே. மேலும், தர்ம குருமார்கள் உபதேசிக்கிறார்களே, 'மனைவியைத் தவிர மற்றப் பெண்டுகளைத் தாயாகவும், சகோதரியாகவும் கருது!' என்று. அதையும் மதிக்க வேண்டாமா?"

எழுதி வைக்கப்பட்ட, குறிப்பாக சாத்திரத்தில் எழுதி வைத்திருக்கும் அறிவுரைமீது ஆதரவு வரத்தானே செய்யும்? நீ எவனிடமாவது ஓர் அறிவுரையைக் கூறு, அவன் கேட்பான், "இது எந்த நீதிநூலில் எழுதப்பட்டிருக்கிறது?" நீ எடுத்துக்காட்டினால் உடனே ஏற்றுக் கொள்ளுவான். எழுதி வைக்கப்பட்டதில் ஆதரவும், நம்பகமும் ஏற்படுவது நமது பாரம்பரியம். சத்தியம் புராதனமாக இருக்க வேண்டுமா? யார் சொன்னது? அஷ்டாவக்கிரர் சொன்னாரா? புத்தரோ, மகாவீரரோ கூறினாரா? கூறியிருந்தால் சரி, ஏற்கவேண்டியதுதான்.

நீ துளிக்கூட சுயமாக விழித்தெழ முயலவில்லை. எவரோ கூறினார், நீ எற்றுக் கொண்டு விட்டாய்! மிக எளிதான வரவு; நீ ஏதும் செய்யாமல் இலகுவாய் கிடைத்தது.

ஜெ.கிருஷ்ணமூர்த்தியின் கருத்துரைகளை நாற்பது வருடங்களாகத் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருப்பவர்கள், அப்படியே இருக்கிறார்கள். அவர்களுக்கு எதுவும் கிட்டவில்லை. ஜெ.கே.யின் சீடர் எப்போதாவது என்னிடம் வருகிறார். அவர் சொல்லுவார், "ஜே.கே.யின் அறிவுரைப்படி 'எல்லாம் கிடைத்திருக்கிறது எனக்கு' என

அறிகிறேன். ஆனால் நிஜமாக ஏதும் கிட்டவில்லையே, ஏன்? ஜே.கே.யைச் செவிமடுக்கும் போது எல்லாம் எமக்குக் கிட்டிவிட்டதாக உணர்வு ஏற்படுகிறது. ஆனால்..."

இவர் பேராசை பிடித்தவர். முயற்சி, உழைப்பு வேண்டாம், இனாமாகக் கிடைக்கட்டும் ,என்று தொடக்கத்திலிருந்தே ஆசைப்படுபவர். இவர் கிருஷ்ணமூர்த்தியையும் புரிந்து கொள்ளவில்லை. அஷ்டாவக்கிரரையும் அறிந்து கொள்ளவில்லை. தன் ஆசாபாசத்தையே எண்ணியிருப்பவர். தன் விருப்பப்படி விளக்கம் செய்து கொள்ளுகிறார். இவரைப் போல் பலர் உள்ளனர்.

ஓர் அன்பர் என்னிடம் வந்து சொன்னார், "இனி தியானம் செய்வது பேத்தல், வீண். ஐந்து வகைத் தியானங்கள்! அஷ்டாவக்கிரர் பற்றிய பிரசங்கத் தொடர் - எல்லாமே அசட்டுத்தனம்!

தியானத்தைக் கைவிடுவது எளிது; செய்வது கடினம். அஷ்டாவக்கிரருக்கு ஞானசித்தி எந்த முயற்சியும் செய்யரமல் கிட்டியது - என்பது இல்லை. ஏதோ செய்துதான் கிட்டியிருக்கிறது - என்பதும் இல்லை.

இதை நீ அறிந்து கொள்! இது சிக்கலான கடினமான விசயம்.

நான் உனக்குக் கூறினேன், புத்தர் சகலத்தையும் துறந்த பிறகே அவருக்குப் போதம் (ஆத்மஞானம்) கிட்டியது. ஆனால் அதற்கு முன்பு எல்லாவற்றையும் அவர் செய்து பார்த்தார். ஆறு ஆண்டுக்காலம் கடும் பயிற்சி மேற்கொண்டார். எல்லாவற்றையும் பணயம் வைத்தார். அப்போதுதான் அவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது - இத்தகு செயல்பாடுகளால் இலக்கு கிட்டாது என்று. அஷ்டாவக்கிரரின் மகாகீதையைப் படித்ததால் ஏற்பட்ட ஞானோதயம் அல்ல; புத்தர் காலத்தில் அந்நூல் கிடைத்திருக்காது. ஒருக்கால் புத்தர் அதைப் படித்திருந்தால் ஆறு வருடகாலம் சிரமப்பட்டிருக்க வேண்டாம். ஆறு ஆண்டுக்காலம் பல அநுட்டானங்களைச் செயத பின் அவர் 'இவை பயனற்றவை' என்பதை உணர்ந்து கொண்டார். சிரமப்பட்டதற்கு லவலேசம் கூட இலாபம் இல்லை. ஜன்மாந்தர வாசனை (உணர்வு) கூட எஞ்சவில்லை உள்ளத்துள். செயல்புரிந்து

பார்த்தாகி விட்டது. பயனில்லை. மெய்யுணர்வு திடமாகியதும், கணப்பொழுதில் ஆத்மபோதம் கிட்டி விட்டது.

நான் உனக்குச் சொல்ல விரும்புவது இதுதான் - நீ எல்லா வழிமுறைச் செயல்களைச் செய்த பிறகுதான், 'எதுவும் செய்யத் தேவை இல்லை' எனும் அறிவு எற்படும். அவசரப்படாதே. அவசரப்பட்டால் கொஞ்ச நஞ்சம் தியானம், பூஜை, வழிபாடு, பிரார்த்தனை எல்லாம் விலகிவிடும். அஷ்டாவக்கிரர் எட்டாத் தொலைவில் இருப்பார்; உன் அற்பசொற்ப முயற்சியும் பயணமும் முடிவடையும்.

நின்று நிதானமாகப் பயணிக்கக் கூடாது; வேகமாக ஓடவேண்டும். அப்போதுதான் இதெல்லாம் பயனற்றவை எனும் அறிவு திடமாகும். என்றாவது ஒருநாள் இந்த முயற்சியெல்லாம் வீண் என அறிவு எண்ணினால் போதாது. உன் புலன்கள் எல்லாம், உரோமக்கால்கள் உட்பட எண்ணினால்தான், இலக்கு கிட்டும்; அக்கணத்தில் கிட்டிவிடும்.

அஷ்டாவக்கிரர் கூறுவது சரிதான், "அநுட்டானம் (நடைமுறை, முன்முயற்சி) தடைதான். "ஆனால் அநுட்டானத்தைச் செய்து வருபவனுக்குத்தான் அந்த உண்மை புலப்படும்.

நான் உனக்கு அறிவுறுத்துவதும் இதுதான். அநுட்டானங்களைச் செய்து வருகிறாய், கூடவே தடை, பிணை வந்து சேருகிறது. கூடவே எந்தச் சாதனமும் இலக்கை அடைய உதவாது என்பதை அறிந்தாய். தியானம் செய்தாய்; சமாதி (ஒடுக்கநிலை) எட்டவில்லை. சமாதி நிலையைப் பெற தியானம் யோகம் உதவாது என்பதை அறிந்தாய். இந்த உணர்வுமுதிர்ச்சி உனது தவம், தியானம், முன்முயற்சி நிறைபெற்றதையும் உணர்த்துகிறது. உன்னிடம் எதுவும் எஞ்சி இருக்கவில்லை. எல்லாவற்றையும் பணயம் வைத்து விட்டாய். அன்றைக்கே உனது உணர்வுமுதிர்ச்சியால் சித்தம் தெளிவு பெற்றது. எல்லாச் சாதனங்களும் முன்முயற்சிகளும் தீயினில் தூசாகிப் போயின. திடீரென நீ விழிப்புற்று உணர்கிறாய், "ஆஹா! என் இலக்கு கிட்டி விட்டதே! இதைத்தான் இதுகாறும் தேடிக் கொண்டிருந்தேன்".

அஷ்டாவக்கிரரின் போதனைகளைப் பயின்றதால் கிட்டியது என்றால், அது மிக எளிதான சாதனையாகிவிடும். அவர் வாக்குகள்

நேரிய, எளிய வெளிப்பாடுகள். இவைகளைப் படித்துவிட்டதால் மட்டும் இலக்கு சித்தித்து விடாது.

**க**வனமிருக்கட்டும், இந்த ஆன்மீக உலகில் நேரிய, எளிய வாக்குகளைப் படித்துப் புரிந்து, உணர்ந்து கொள்ளுவது மிகமிகக் கடினம். இக்கடினத்தனம் உன் ஆழ்மனத்திலிருந்து வருகிறது. எதுவும் செயல்பட வேண்டாம் என்றே நீ விரும்பினாய். மிகச் சிரமப்பட்டுத்தான் தியானம் செய்ய மனிதர்கள் முன் வருகிறார்கள். இந்நிலையில் அஷ்டாவக்கிர கீதை உரைகல். அஷ்டாவக்கிரரைப் பயின்று தியானம் செய்பவர்கள் தன்னை உணர்ந்தவர்கள். அஷ்டாவக்கிரரைப் பயின்று தியானத்தை விட்டுவிடுபவர்கள், அஷ்டாவக்கிரரையும் அறிந்து கொள்ளவில்லை, தியானமும் வீணாகியது.

அநுட்டானங்களைச் செய்து பார்த்த பிறகுதான், அவை தளை-பிணை (பந்தம்) என்பது உணரப்படும். அநுட்டான செயற்பாட்டின் அந்திம தசை இது. இதில் நீ அவசரப்படலாகாது.

“வேதாந்த கிரந்தங்களையும், அஷ்டாவக்கிரரின் போதனைகளையும் சுயமாகப் பயின்று (நான்) அறிந்து கொண்டது...”

தானே படித்து எவனாவது தத்துவத்தை அறிந்திருக்கிறானா? பிறர் போதித்து அறிந்திருக்கிறானா? சாத்திரங்களின் சொற்களை அறிந்து தத்துவ விளக்கம் பெற முடிந்திருக்கிறதா? அப்படி ஏதாவது அறியப்பட்டிருந்தால் அது பட்டறிவு அல்ல, வெறும் அறிமுகம் மட்டுமே. ‘பெறத்தக்கது பெறப்பட்டுள்ளது’ எனும் தத்துவம் அறிமுகமாகியிருக்கிறது, அவ்வளவுதான். தகவல் தெரிந்தது. ஆர்வம் எழுந்தது. ஆசை முளையிட்டது. ஆசை தெரிவித்தது, ‘நீ வீணுக்குச் சிரமப்பட்டிருக்கிறாய். அஷ்டாவக்கிரர் கூறுகிறார், ‘இப்போதே நிகழும்’ என்று, நீ கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய். ஐந்து விநாடிகள் ஆகியும், ஐந்து நிமிடங்கள், ஒருமணி கடந்தும் எதுவும் நிகழவில்லை.

அஷ்டாவக்கிரர் கூறுகிறாரே அக்கணமே நிகழும் என்று அவர் கூறுவது பொய் என்பாய். சிரத்தை, ஈடுபாடு விலகியது.

ஆக, நீ அறிந்து கொள்ளவில்லை. தகவல் பெற்றாய். உள்ளார்ந்து அறிந்து உணர்வதற்கும் தகவல் தெரிந்து கொள்ளுவதற்கும் வேறுபாடு உண்டு என்பதை மறவாதே. தகவல் தெரிதல் கடன் வாங்குவது போல.. வேறொருவர் அறிந்திருந்தார். அவர் கூறியதைக் கேட்டிருக்கிறாய் - தகவல் கிடைத்தது. அறிவது சுய அநுபவம். உனக்காக மற்றொருவர் அறிந்து தெளிந்திருக்க இயலாது. நான் அறிந்து கொண்டதால் உனக்கு என்ன நிகழும்? எனது அறிதல் - புரிதல் எனக்கு உரியது. நீ அறிந்து கொண்டாயானால் அது உனக்குச் சொந்தமாகும். என் கூற்றால் என் சொற்களை நீ சேகரித்துக் கொண்டாயானால் நீ பெற்றது தகவல், தெரிந்து கொண்ட செய்தி. தெரிந்து கொள்ளுவதால் நீ பண்டிதனாகலாம். பிரக்ஞாவான் (பகுத்தறிவாளன்) ஆக முடியாது. ஞானச்சுமை சேமிக்கப்படுகிறது. ஞானமுக்தி ஏற்படுவதில்லை. சப்தஜாலம் வெளிப்படும். சத்திய சௌந்தரியம் தோன்றாது. சொற்கள் உன்னைச் சூழ்ந்து கொண்டு கட்டிப்போடும். பண்டிதர்களுக்கும் இதே கதிதான். வானம் போல் பரந்து விரிந்திருப்பது எங்கே?

“அடையத்தக்கதை அடைந்திருப்பதாக அறிகிறேன்” இதன்படி நீ அறிந்திருந்தால் வினவுவதற்கு என்ன இருக்கிறது?

“அதற்காக (இலக்கை எட்ட) முயற்சிப்பது வழிதவறித் திரிவதாகும்” - இதை அறிந்து கொண்டபின் கேள்வி கேட்க என்ன இருக்கிறது?

“இந்த நிஷ்டையை (பக்தி சிரத்தை)த் திடப்படுத்திக் கொண்டான்” - இந்த நிஷ்டை ஏற்பட்டாலும் ஏற்படா விட்டாலும் திடப்படுத்த வழிவகை இல்லை. எப்படி இயலும்? தீவிர ஈடுபாடு (நிஷ்டை) ஏற்பட்டால் ஏற்பட்டதுதான், இல்லாவிட்டால் இல்லை. இதை எப்படித் தீவிரத் திடமாக்க முடியும்? இதற்கு என்ன உபாயம்? சந்தேகத்தை அகற்ற முடியுமா? சந்தேகத்தை நீ அடக்கி ஆளுவாயா? அதைப் பொய்யாக்குவாயா? வேறு என்னதான் செய்வாய்?

உள்ளத்தில் எழும் ஐயங்களைக் கவனிக்காமல் விட்டு விடுவாயா? உன் காதுகளில் ஒலிக்குமே, கேளாமல் இருந்து விடுவாயா? உன்னுள் நெளியும் சந்தேகப்பூச்சி கடிக்குமே; உன்னைக் கேட்குமே. ‘ஏதும் செயல் புரியாமல் இலக்கு கிட்டியதா?’

வாளாவிருந்தபோது ஏதாவது ஆயிற்றா? 'ஏதாவது உபாயம் செய்தால்தான் கிட்டும், முடங்கிக் கிடப்பதால் கிட்டாது' என்று கூறியதா? வெகு எளிதாய், மலிவாய் இலக்கு கிட்டிவிடுமா? ஏன் குழப்பத்தில் மூழ்கி இருக்கிறாய்? எந்த பிரமை, பேதைமை ஆட்டுவிக்கிறது? எழுந்திரு! நட! ஓடு! இல்லையேல் வாழ்வு கடந்து போய்விடும். இதுகாணும் கடந்து போய்க் கொண்டுதான் இருக்கிறது. சோம்பிச் சுணங்கிக் குந்தியிருந்து, முடமாகி, மூடனாகிக் காலத்தை வீணாக்காதே!

எழும் சந்தேகங்களை என்ன செய்வாய்? அமுக்கி வைப்பாயா? பொய், பேத்தல் எனக் கூறி ஒதுக்குவாயா? காதில் போட்டுக் கொள்ள மாட்டேன் என்பாயா? நினைவிலிருந்து அகற்றி விடுவாயா? உள் மனத்துள் மறைத்து வைப்பாயா? எதிர்கொள்ள மாட்டாயா? எப்படியாவது அடக்கி ஒடுக்குவாயா? தீவிர ஈடுபாட்டைத் திடப்படுத்த என்ன செய்யப் போகிறாய்? அந்த ஈடுபாடு பொய்யானால்? அடியில் ஐயப்பாடும் மேலே ஈடுபாடுமாக இருந்தால்? அடியில் கனலும் ஐயம் ஈடுபாட்டை எரித்து விடும். உதவாக்கரை ஈடுபாடு இது. இதைத் திடமாக்க, தீவிரமாக்க இயலாது. வந்து போகும் பலவீன நிஷ்டை (ஈடுபாடு) இது.

ஒருவன் வட்டக்கோடு வரைகிறான்; பாதி அளவுக்கு வரைந்ததும் அதை வட்டம் என்பாயா? அரைகுறைச் சுற்றை வட்டம் என்பாயா? அது வில்கோடு எனப்படும். முழுச்சுற்று வடிவைத்தான் வட்டம் என்பர்.

இதேபோல் அரைகுறைச் சிரத்தையை (ஈடுபாடு) சிரத்தை எனக்கூற மாட்டார்கள். அவநம்பிக்கை பாதி இடத்தை ஆட்கொண்டிருக்கும், மீதி இடத்தில் சிரத்தை இருக்காது. அசிரத்தை புகும். சந்தேகமும் சிரத்தையும் சேர்ந்திருக்காது.

ஒரு கால் கிழக்கே, மறு கால் மேற்கே நடந்தால் எப்படி நடப்பது? முன்னேறுவது? இக்கரை செல்லும் ஓடத்தில் ஒருகால், அக்கரைக்குப் போகும் ஓடத்தில் மற்றொரு கால் வைத்துப் பயணிப்பவன் கதி என்ன ஆகும்? எங்கே போய்ச் சேருவான்? அவன் நிலையில் நீ இருந்தால் எப்படிக் கரை சேருவாய்?

சந்தேகத்தின் பயணம், சிரத்தை (ஈடுபாடு)யின் பயணம் வெவ்வேறானவை. நீ எதிர் எதிரே செல்லும் இரு ஓடங்களில் ஏறிப் பயணிக்கிறாய். அரைகுறை சிரத்தைக்கு என்ன அர்த்தம்? பாதி அவநம்பிக்கை; பாதி சந்தேகம். முழுவதுமாக திடமான சிரத்தை ஏற்படவில்லை என்றால், சிரத்தை இல்லை என்று அர்த்தம்.

மற்றெரு சுவையான செய்தி, கவனத்தில் வைத்திரு. இந்த உலகியல் வாழ்வில் மேன்மையானதுடன் தாழ்மையானதை, சிறந்த துடன் இழிந்ததைச் சேர்த்தாயானால், தாழ்ந்ததற்கும் இழிந்ததற்கும் எவ்வித இழப்பும் ஏற்படாது. மேன்மையானதுதான் இழக்கிறது.

எடுத்துக்காட்டாக, தரமான கதம்பசாதம் அண்டா நிறைய செய்து வைத்திருக்கிறாய். பலருக்கும் பரிமாற வேண்டும். அதில் கைப்பிடி அளவு அசிங்கக் கழிவை போடுகிறாய். என்ன ஆகும். அவ்வளவு உணவும் வீணாகிவிடும். "அண்டா நிறைய உள்ள பதார்த்தத்தில் பிடியளவு அசிங்கத்தைத் தானே போட்டேன். உணவு பூராவும் எப்படி வீணாகும்?" என்று கேட்பாயா? பிடியளவு அசிங்கம் அண்டா நிரம்பிய சுத்தமான உணவைக் கெடுத்து விடும், குப்பைப் பண்டமாக்கி விடும்.

நீ ஒரு மலர்மீது கல்லைவிட்டெறி! கல்லுக்குக் கேடு இல்லை. பூ சீர் குலையும். கல் ஜடம், கழிசடை. பூ மகிமை உள்ளது, வானத்தின் பரிசு. கல் மண்ணகத்தது. பூ வாழ்க்கைக் காவியம். கல்லுக்கும் பூவிற்கும் மோதல் ஏற்பட்டால் பூ உருக்குலைந்து போகும். கல்லிற்கு ஏதும் நட்டம் இல்லை.

ஒரு துளி நஞ்சு போதும்.

ஆக, கவனமிருக்கட்டும், சந்தேகம் இழிந்தது. சிரத்தை எனும் மலர்மேல் சந்தேகக் கல் விழுமானால், மலர் நசுங்கிக் கசங்கிக் குலைந்து போகும். மலருக்கு இது மரணம்.

சிரத்தை (மலர்) கல்லை (சந்தேகத்தை) மாற்றி அமைக்கும் என்று நினைக்காதே. கல் பூவைச் சிதைத்துவிடும்.

ஈடுபாடு (நிஷ்டா, சிரத்தை) ஏற்படும், ஏற்படாமலும் போகும். ஏற்பட்டால் வாழ்க்கை முழுவதையும் அரவணைத்துக் கொள்ளும்.

எல்லா இடங்களிலும் பரவி இணைந்திருக்கும். அதன் தன்மை அத்தகையது. அத்தகைய ஈடுபாடு சாத்திரங்களைப் பயில்வதால் ஏற்பட்டு விடாது. ஏற்படவும் முடியாது. ஜீவித அனுபவத்தால்தான் ஏற்படும். வாழ்க்கை எனும் சாத்திரத்தைப் படித்த பிறகுதான் கிட்டும். அஷ்டாவக்கிரரைப் படித்ததாலும் கிட்டிவிடாது.

அஷ்டாவக்கிரரை அறிந்து கொள். இந்த அறிதலை ஞானம் (மெய்யறிவு) என எண்ணி விடாதே. அஷ்டாவக்கிரரை முறையாக அறிந்து கொண்டபின், உள்ளத்துள் பாதுகாத்து வைத்திரு. உரைகல் கிடைத்திருக்கிறது. உனக்கு ஞானோதயம் ஏற்பட்டால் அந்த அஷ்டாவக்கிர உரைகல்லில் உரசிப் பார். அது உனக்குக் கிடைத்த உதவி, வசதி.

உரைகல் தங்கமல்ல. நீ தட்டாரக் கடையில் கருப்புக் கல்லைப் பார்த்திருப்பாயே. பொற்கொல்லர் தங்கத்தை அந்தக் கருப்புக்கல்லில் தேய்த்துப் பார்ப்பார். தங்கம் அசலா, போலியா என்பதைச் சோதிப்பார்.

அஷ்டாவக்கிரரின் போதனையை அறிந்தபின், அப்பட்டறிவை உரைகல்லாக வைத்துக் கொள். உன் வாழ்க்கையில் சுய அநுபவம் ஏற்படும்போது, அதை அதில் உரைத்துப்பார். அது அஷ்டாவக்கிரர் உரைகல். எது நிகழ்ந்தது என்பதை அப்போது அறிந்து கொள்ளுவாய். அப்போது அறிவார்ந்த மொழி, உபாயம் உன்னிடம் இருக்கும். அஷ்டாவக்கிரர் அப்போது உனக்குச் சாட்சியாக இருப்பார்.

**நா**ன் சாத்திரக் கிரந்தங்களைச் சாட்சிகளாகக் கருதுகிறேன். சத்தியத்தின் மார்க்கம் புலப்படாதது, அறியப்படாதது. அத்தகைய பாதையில் பயணிக்க உனக்குச் சாட்சியங்கள் தேவை. நீ முதல்முறை சத்தியத்தை நேரிடையாய் சந்திக்க நேரும்போது, சத்தியத்தின் பாரளாவிய விராட் (மாபெரும்) சொரூபத்தைக் கண்டு நடுங்கிப் போவாய், அறிய மாட்டாய். பாதாதிகேசம் நடுநடுங்கிப் பித்தனாகி விடுவாய்.

நீயே சிந்தித்துப் பார், ஒரு மனிதன் பல பிறவிகளாக அரும்பெரும் புதையலைத் தேடி அலைகிறான். ஒருநாள் திடீரெனத் தன் காலடியில்தான் அந்தப் புதையல் புதைந்திருக்கிறது என்பதை அறிகிறான். அவன் நிலை? பைத்தியம் பிடித்து விடாதா? ‘என்

காலடியில் புதையல் இருப்பதை அறியாமலா இத்தனை காலம் தேடித் தவித்திருந்தேன். வீண் அலைச்சல், உளைச்சல்' என அலமரல் கொள்ள மாட்டானா? காலடியில் கஜானா, புதையல்!

அந்த மனிதனுக்கு இது பேரதிர்ச்சி. 'இத்தனை காலமும் வீணாகப் போனதே. இதைப் பெற ஏங்கித் தவித்து வாழ்நாள் முழுவதும் கெட்ட கனவுடன் வீணாக்கி விட்டேனே. நான் தேடிக் கொண்டிருந்தது என்னுள் இருந்திருக்கிறது' இந்தத் தாக்கத்தால் பைத்தியம் பிடிக்காமல் தப்ப முடியுமா? அத்தருணத்தில் அஷ்டாவக்கிரரின் பரிவான போதனை உன்னைக் குளிர்விக்கும். மகிழ்விக்கும். அப்போது வேதாந்தத் தத்துவங்கள், புத்தரின் வசனங்கள். உபநிஷத், பைபிள், குரான் எல்லாம் உன்னெதிரில் சாட்சிகளாக நிற்கும். உனக்கு ஒரு புதுமை நிகழும். அதை நீ அறிந்து உணர்வதில் வெற்றி பெறுவாய். அவை இல்லாது போனால் நீ தனிமையில் தவித்துப் போவாய்.

சாத்திரங்களைப் பற்றிக் குறிப்பிட்டேன். சாத்திரங்களைக் கேட்டு நீ ஞானியாகி விடுவாய் என்பதற்காக அல்ல. நீ தியான மார்க்கத்தில் செல்லுகிறாய். இன்று இல்லாவிட்டால் பிறிதொரு நாளில் அது நிகழும், நிகழ வேண்டும். அது நிகழும்போது நீ உணர்வாய். எதிரே உள்ள தங்கத்தை நீ அறியாமல் இருப்பது போல் அல்ல. உனக்கு ஓர் உரை கல்லைக் கொடுத்திருக்கிறேன். இதன்மேல் தேய்த்துப் பரீட்சை செய்து பார்.

அஷ்டாவக்கிரர் பரிசுத்த உரைகல். அவரிடம் பக்தி சிரத்தை கொள்ளத் தேவை இல்லை. அவரது உரை கல்லை சுய அநுபவத்துடன் பயன்படுத்து. அவரைச் சாட்சியாக்கிக் கொள்.

ஏசு கிறிஸ்து சீடர்களிடம் கூறினார், "நீ சென்று இலக்கை எட்டும்போது நான் சாட்சியாக இருப்பேன்" சீடர்கள் தவறாகப் புரிந்து கொண்டார்கள், "நாம் மரித்ததும் பரமபிதாவின் விண்ணுலகை அடைவோம், அங்கு ஏசுபிரான் சாட்சியம் கூறுவார், "இவர்கள் எம் சீடர்கள்" என்று. மேலும், "இவர்களை விண்ணுலகில் பிரவேசிக்க அநுமதியுங்கள். இவர்கள் நம்மவர்கள், கிறித்துவர்கள். இவர்களிடம் விசேஷக் கருணை காட்டுங்கள். அதிகமாய் அருள் பொழியுங்கள்!" எனப் பரிந்துரைப்பார்.

ஆனால் ஜீஸஸ் பிரானின் கருத்து வேறு. அவர் கூறினார், "நீ அங்கு போய்ச் சேரும்போது நான் சாட்சியாக இருப்பேன்" ஜீஸஸ் அங்கு காத்திருப்பார் என்று பொருள் இல்லை. ஜீஸஸ் சொன்னது உரைகல் போன்றது. உனக்கு அநுபவம் ஏற்பட்டதும் அந்த உரைகல்லில் உரசிப்பார். சிக்கல் தீரும். இல்லாவிடில் அசத்தியத்துள் சிக்கித் தவிப்பாய். இதுகாறும் அசத்தியத்தில் உழன்று கொண்டிருந்தாய். எதிர்பாராமல் சத்தியம் கிட்டியதும் நீ உடைந்து போவாய்; பித்துப் பிடித்துவிடும். சத்திய தரிசனம் ஏற்படுத்தும் பாதிப்பு அது.

சத்தியத்தைத் தேடி அலைந்தவர்கள் பித்துப் பிடித்து நின்றார்கள். பரமஹம்ஸர்களாக மாறத் தொடங்கினார்கள், பித்துக்குளியானார்கள். பேதலித்த புத்தியுடன் திரிந்தார்கள். அந்நிகழ்வு மகத்தானது, நம்ப முடியாதது, நம்பிக்கையை ஏற்படுத்தாதது, நம்பகம் இல்லாதது. வானம் இடிந்து உன் தலையில் விழுந்த மாதிரி இருக்கும்

உன் தன்மை, ஆளுமை மிகச் சிறியது. அதில் பிரும்மாண்டம் இறங்கியிருக்கிறது. நீ நிலைகுலைந்து போவாய்; உன்னையே உன்னால் சமாளிக்க முடியாது. உன் கண்ணெதிரில், வெகு அருகில் சூரியன் இறங்கி வந்தால்? உன் கண்கள் கூசிக்குறுகும், இருண்டு போகும். இமை மூட்டம் இறுகும். உள்ளும் புறமும் இருள் கவியும்.

அத்தருணத்தில் அஷ்டாவக்கிரரின் வாக்குகள் சூரியனை அறிந்து கொள்ள, எதிர்கொள்ள உதவும், உன் ஆழ்மனத்துள் அமிழ்ந்திருக்கும் அஷ்டாவக்கிரரின் வாக்குகள் அக்கணமே ஒலிக்கும். உபநிடத வாக்குகள், கீதை உபதேசம், குரான் ஆயத்துகள், எல்லாமே எதிரொலிக்கும். அப்போது எழும் மணம் உன்னை சுயநிலைக்குக் கொணரும்; நீ வீடு வந்து சேர்ந்த ஆசுவாசம் பெறுவாய். கலக்கம், கவலை, அச்சம் கொள்ள வேண்டாம். நீ விராட்புருஷன், மகோன்னத மாமனிதன்!

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "நீ எங்கும் பரந்துளன், நீ பிரும்மாண்டமானவன், நீ சர்வசக்திமான், நீ செயல் ஒழிந்தவன், நீ சுத்தபுத்தன் (மெய்ஞானி), நீ பிரம்ம சொரூபன்."

இந்த அறிவுரைகள் அக்கணத்தில் உனக்கு விளக்கவுரையாக அமையும். இவற்றில் தீவிரப் பற்று வைப்பதால், இவைகளை நீ பற்றிக்

கொள்ளுவதால் மட்டுமே நீ எங்கும் சென்றடைய முடியாது. ஆசை உன்னுள் உள்ளது. ஆத்மஞானம் ஏற்படவில்லையே, என்கிற ஏக்கம் கலந்த ஆசை. இனி எம் கவிச்சொல் -

**ஆசாபாசத்தைக் கட்டிப்போட**
**ஒரு மகுடி இசைவலை விரிக்கிறது,**
**அஹோ! அதனுள் எத்தகு தனித்த, கனத்த**
**ஆசாபாசம் நடுநடுங்குகிறது!**

**கவனமாய் கேள் -**

**வேட்கை விழைவைக் கட்டிவைக்க**
**மகுடி இசை இழைகளைப் பரப்புகிறது;**
**அஹோ! அதனுள் எத்தகு தனித்த கனத்த**
**வேட்கை விழைவு விதிர்க்கிறது!**

**அதனால்தான் சுருண்டு கிடக்கும்**
**சர்ப்ப குண்டலி அசையவில்லை,**
**(பிறகு) படமெடுத்து ஆடுகிறது.**

நீ ஆசாபாசத்திலிருந்து விடுபட விரும்புகிறாய். ஆனால் அதனை வலையாக விரிக்கிறாய். நீ பரம சுத்தபுத்தனாக விளங்க விரும்புகிறாய் பேராசை வழியே. அப்படியும் ஆசாபாசம் வேட்கை விழைவு நடுங்குகிறது.

**அஹோ! அதனுள் எத்தகு தனித்த கனத்த**
**ஆசாபாசம் நடுநடுங்குகிறது!**
**வேட்கை விழைவைக் கட்டி வைக்க**
**மகுடி இசை இழைகளைப் பரப்புகிறது!**

**நீ** பரமாத்மாவை அடைய விரும்புகிறாய். ஆனால் நீ அடையவிரும்பும் வழி, பணம் சம்பாதிக்க அலைகிறானே, அவனுடைய சுயநல வழி. உன்னுடைய ஆசை, வேட்கை பொருள் ஈட்ட விழைபவனுடையதுதான். உலகாயத சுகபோகங்களில் பித்துப்பிடித்துத் திரிபவனின் நிலைதான் உன்னுடையதும்.

வேட்கை விழைவு (வாஸநா) தனது இலக்கை மாற்றிக் கொள்ளும், அது மாறாது.

அஷ்டாவக்கிரரின் போதனையைக் கேட்டதும் உனது வேட்கை சொல்லுகிறது. "அடேடே! இது நல்ல சுபமான செய்தி. நமக்குத் தெரியாமலே இருந்தது. நாம் தேடிக் கொண்டிருந்தது நம்மிடமே இருக்கிறது. நமக்குக் கிடைத்திருக்கிறது. இனிமேல் ஏதும் செய்ய வேண்டாம். அமர்ந்திருப்பதே போதும்." பிறகு நீ எதிர்பார்த்துக் காத்திருக்கிறாய். 'இப்போதே கிடைத்திருக்கிறது. கிடைத்து விட்டது!..' உன் வேட்கை படபடக்கிறது. 'இப்போதே கிடைக்க வேண்டும்' இதை நீ அறிந்து கொள்ளுவதில்லை.

மறுபடியும் அஷ்டாவக்கிரரைக் கவனமாய் கேள்! அவர் கூறுகிறார், "அது கிடைத்திருக்கிறது. இதை நீ எப்படி உணர்வாய்? அறிந்து கொள்ளுவாய்? உன் வேட்கை, ஆசை ஆட்டி வைக்கிறதே."

நீ வேட்கை பின்னால் ஓடாமல், ஓடியவரை அது வீண் என உணராமல், ஓடிக்களைத்துச் சோர்ந்து, சரிந்து காயம்பட்டு விழாமல், கைகால்களை முறித்துக் கொள்ளாமல் நீ சத்தியத்தை உணர மாட்டாய். வேட்கை, அநுபவத்தால் அது வீண் எனத் தெளிவடையும் வரையில் நீ நிஜத்தை எட்ட மாட்டாய். வேட்கைப் பாதிப்பு முற்றிலும் நீங்கிய பிறகுதான், நீ தேடிக் கொண்டிருப்பது உன்னிடமே உள்ளது, உனக்கு அது கிடைத்துவிட்டது என்பதை உணர்வாய்.

அப்படி நிகழாது போனால் நீ கிளிப்பிள்ளையாகி விடுவாய். நீ எந்த மதத்துக்கிளி என்பது முக்கியமில்லை. இந்துக் கிளியா, முஸ்லிம் கிளியா, கிறித்துவக் கிளியா, சமணக் கிளியா, பௌத்தக் கிளியா என்பது முக்கியமில்லை. கிளி கிளிதான். நீ கீதையைச் சொன்னாலும், பைபிளைச் சொன்னாலும், (பொருள், கருத்து, நோக்கம் எதுவும் அறியாமல்) சொன்னதைத் திருப்பிச் சொல்லும் பச்சைக் கிளிதான்.

**ஆலயத்துள் எல்லாம் துடைத்துத் துப்புரவு,**
**கர்வத்துடன் திறந்த தொண்டையிலிருந்து**
**வெளிப்படும் உரத்த சுவரங்களில் மிடுக்குடன்**
**ராமநாம பஜனை பாடிச்சென்றனர்;**
**உள்ளத்துள் யாவரும் ஊமைகள்,**
**செவிடர்கள், வீணர்கள், அற்பர்கள்,**
**பிதற்றுபவர்கள், அறிவிலிகள், அப்பாவிகள்,**
**ஆனால் வெளியே -**

**பாலகர் சிறார்களும் வாயாடிகள்**
**ஆலயங்களுள் பார்!**
**ஆலயத்துள் எல்லாம் படுசுத்தம்!**
**வெளிப்பாடுகள் செருக்குடன்....!**

கோவிலுக்குள் பக்தஜனங்கள் குற்றமற்றவராகவே தெரிகிறார்கள். அவர்களைக் கடைவீதியில் பாருங்கள், கோவிலுக்குள் அதே நபர்களைக் கவனியுங்கள். புறத்தோற்றம் வித்தியாசப்படும்.

**திறந்த குரல் வளையிலிருந்து**
**உரத்த ஒலிப்புடன் மிகமிடுக்காக**
**பாடிச் சென்றனர் ராமநாமத்தை.**

மணிமாலையை வருடிக்கொண்டு ராமநாமத்தை ஜபிப்பவரைப் பார்த்திருக்கிறாயா? ராமநாம உத்தரீயம் போர்த்தி சந்தனத் திலகமிட்டு, பொலிவுறக் காட்சி அளிப்பதைக் கண்டிருப்பாய். இந்தப் பக்தரை பஜாரில் கூட்டத்துள் நடமாடும் போது பார். அடையாளம் தெரியாது. ஜனங்களின் முகங்கள் வெவ்வேறானவை. பஜாரில் ஒரு முகம், கோவிலுக்குள் வேறு முகம்.

**மிக்க மிடுக்குடன் பாடிச் சென்றனர்**
**ராமநாம பஜன் வரிகளை,**
**உள்ளே யாவரும் ஊமை, செவிடர், வீணர்,**
**உளறுவாயர்கள், அப்பாவிகள், மூடர்கள், அற்பர்கள்,**
**ஆனால் வெளிப்புறத்தில்**
**சிறார் பாலகர்போல் வெகுளி வாயாடிகள்!**

நீ பெறும் அறிமுகம் உன்னைக் கிளிப்பிள்ளையாக்கும். திமிர் வாயாடியாக்கும், தார்மிகப் பிரமையைக் கொடுக்கும், ஏமாற்றும். அதை நீ ஞானமாக (மெய்யறிவு) கருதாதே. அறிமுகத்தின் ஆதாரத்துடன் நீ ஈடுபாடு கொண்டிருந்தால், அது சந்தேகத்தின் மீது சவாரி செய்யும். அந்த 'நிஷ்டா' (ஈடுபாடு) உன்னை சத்தியத்தின் தோரணவாயிலுக்கு இட்டுச் செல்லாது. அதை நம்பாதே. அது உதவாக்கரை.

சுய அனுபவத்தால் ஈடுபாடு வரவேண்டும். பரிசுத்தமான திடமான, குறையற்ற, சுயசாதனையான தியான நிலையிலிருந்து ஈடுபாடு வெளிப்பட வேண்டும்.

**இரண்டாவது கேள்வி :**

**நேற்று மாலைப் பொழுதில் வெளியே உலாத்திக் கொண்டிருந்தேன். அப்போது திடீரென உங்களுடைய நேற்றுக்காலையில் நிகழ்த்திய சொற்பொழிவு (பிரவசனம்) என் மேனி முழுவதிலும், எல்லா உரோமக் கால்களிலும் வியாபித்து எதிரொலிப்பதை உணர்ந்தேன். பார்வையாளனாகி எழில் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எங்கிருந்தோ த்ரஷ்டா (காண்பவன்) நினைவு வந்தது. சிறிது நேரம் த்ரஷ்டாவின் விளையாட்டும் நிகழ்ந்தது. இதற்கிடையில் என் கால்கள் தள்ளாடின. கீழே விழுந்து விடுவேனோ? பயம் சூழ்ந்தது. சாலை ஓரத்தில் உட்கார்ந்து விட்டேன். அப்போது எல்லாம் மறைந்தது. காட்சி, காண்பவன், பார்வை யாளன் எவரும் இல்லை. எல்லாம் முடிந்து போனாலும், ஏதோ கொஞ்சம் எஞ்சியிருந்தது. இருட்டும், வெளிச்சமும் மாறி மாறி கண்ணாமூச்சி காட்டின. ஆனால் அப்போது தொடங்கி கலக்கம் - குழப்பம் அதிகரித்தது. இதெல்லாம் என்ன? எதற்காக? புரியவில்லை.**

**இ**தைத்தான் உனக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

சத்தியத்தின் சிறு பொறி தட்டினாலும் நீ நிம்மதி இழந்து அல்லல்படுவாய். என்ன நிகழ்ந்தது என்பதே புரியாது. பித்துப்பிடித்த மாதிரி ஆகும். அதனால் தான் இந்த சாத்திரங்கள் பற்றிப் பேசுகிறேன். தினமும் போதிக்கிறேன், உன் அகமனத்துள் அறிமுகம் ஏற்பட்டால், நிகழ்வுகள் தொடர்ந்தால், அவற்றைச் சரிவரப் புரிந்து கொள். நேரிய விளக்கம் பெறு. சிக்கலைப் போக்கித் தெளிவு பெறு. அப்படிச் செய்யாது போனால் தெளிவு ஏற்படாது. அதற்கான மொழி, சொற்கள், அறிந்து கொள்ள வழிவகை, அளவுகோல் எதுவும் உன்னிடம் இராது. தராசு இல்லாவிட்டால் எப்படி எடை போடுவாய்? உரைகல் இல்லாது போனால் எப்படித் தராதரம் அறிவாய்?

நீ கேள்வி கேட்டபோது கூறினாய், “என் உரோமக்கால்கள் தோறும் உங்கள் போதனை எதிரொலித்தது. மேலும் பார்வையாளனாக எல்லாக் காட்சிகளையும் உவகையுடன் கண்டு களித்தேன். அப்போது ‘த்ரஷ்டா’ (காண்பவன்) நினைவு வந்தது. த்ரஷ்டாவின் விளையாட்டும் நிகழ்ந்தது. அப்போது என் கால்கள் தடுமாறின. கீழே சரிந்து விழாமலிருக்க, சாலையோரத்தில் உட்கார்ந்து விட்டேன்.”

நிச்சயம் அப்படி நிகழ்ந்திருக்கும். முதல்முறையாக ‘த்ரஷ்டா’ அறிமுகம் சிறிதளவு ஏற்பட்டால் நீ தடுமாறிப் போவாய். உன் வாழ்வு முழுவதும் தடுமாறித் தவிக்கும். த்ரஷ்டா இல்லாமல் உன் வாழ்நாள் முழுவதும் போகிறது. புதிய நிகழ்வு வாழ்வைக் கலைத்து விடுகிறது. எடுத்துக்காட்டாக, நீண்டகாலம் குருடனாக இருந்து பழகிப் போனவனுக்கு திடீரெனக் கண்பார்வை கிடைத்துவிட்டால்? அவன் நிலைமையை நினைத்துப் பார். அவன் அலமரல் படுவான், அலங்கமலங்கத் தவிப்பான். பாதையில் நடக்க முடியாது, தடுமாறுவான். நாற்பது - ஐம்பது ஆண்டுகளாகக் குருடனாக வாழ்ந்தவன், கைத்தடி கொண்டு இருட்டிலும் தட்டித் தடுமாறி நடந்தவன், குருட்டுத்தனத்துடன் வாழப் பழகியவன், தேர்ச்சி பெற்றவன், குரலை, ஒலியைக் கேட்டு நபர்களையும் பிராணிகளையும், வழித் தடங்களையும் திருப்புமுனைகளையும் தெரிந்து கொள்ளுபவன், காதுகளால் கண்களின் செயல்பாடுகளை செய்யப் பழகியவன், திடீரெனக் கண்பார்வை பெற்று விட்டால்? அவனது கதிகலங்கிய களேபர நிலைமையை எண்ணிப் பார்!

குருடனின் வாழ்க்கை முறையை உன்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது. ஒளி இழந்தவன், நிறம் அறியாதவன், உருவம் தெரியாதவன், உடல் வகைகளை உணர முடியாதவன். குரலை, ஓசையை மட்டும் நம்பி, சார்ந்து வாழப் பழகியவன் அந்தகன். அவன் அறிந்த ஒரே மொழி ஒலி ஓசை மட்டுமே. அதனைக் கொண்டு தன் வாழ்க்கையை நன்கு அமைத்துக் கொண்டான்.

இன்று காலையில் அவன் கடை வீதியில் நடந்து போய்க் கொண்டிருந்தபோது அவனுக்குக் கண் பார்வை கிட்டிவிட்டால் என்ன ஆகும்? அதுவரை அமைத்துக் கொண்ட வாழ்க்கை, வாழ்ந்து வந்த உலகம் சரிந்து விழும். அவனுடைய ஒலி உலகம் கலைந்து போகும். கண்ஒளி பெறுவது மகத்தான அற்புத நிகழ்வு. எதிரே மக்களின்

முகங்கள் தெளிவாய் தென்படும்; வண்ணங்களைக் காண்பான். சூரிய ஒளிக்கிரணங்களைத் தரிசிப்பான். வெயில், நிழல், ஜனசந்தடி, மனிதர்கள், பேருந்து, மோட்டார், சைக்கிள் எல்லாம் எதிரே காட்சி அளிக்கும்! முதலில் அரண்டு போவான். பேரதிர்ச்சி ஏற்படும். இதுவரை ஒலிமூலம் உறவாடி வந்த உலகம் விலகிப் போகும், சிதறிப் போகும், முற்றிலும் மறைந்து போகும். அவன் நடுநடுங்கிப் போய், பிரமை பிடித்து உட்கார்ந்து விடுவான். கால்கள் தளர்ந்து தடுமாறிக் கீழே விழுவான். வீடு திரும்ப இயலாது; மயங்கி வீழ்ந்து கிடப்பான்.

இது போதிய உதாரணமே இல்லை. உன் வாழ்வில் த்ரஷ்டா (காண்பவன்) பிரவேசித்தால், ஓர் ஒளிக்கீற்று உனக்குக் கிட்டினால், அந்தகன் உதாரணம் மிக அற்பமான எடுத்துக்காட்டாகும். த்ரஷ்டா சார்ந்த நிகழ்வு மகத்தானது. உன் அகக்கண் விழிப்புற்றது. அது இல்லாமலே நீ ஓர் உலகத்தை இது காணும் உருவாக்கி வைத்திருந்தாய். அகக்கண் விழித்ததும் இதுகாறும் நீ உருவாக்கி உய்த்துவந்த உலகம் அபத்தம், தவறானது என்பதை உணர்ந்து கொள்ளுவாய். அகக்கண் விழிப்பு அதைச் செய்து விடும். நீ திக்பிரமை பிடித்து பேச்சிழந்து, செயலற்றுப் போவாய்.

என்னிடம் கேள்வி கேட்டவன், சரியாகத்தான் கேட்டிருக்கிறான்; சுய அநுபவம் உந்த அப்படிக் கேட்டிருக்கிறான். இதைக் கவனத்தில் கொள்வாயாக.

கேள்விகள் இருவகைப்பட்டவை. முதல் வகைப்பட்டவை சித்தாந்தம் (கருத்தியல்) சார்ந்தவை. இவைகளுக்கு மதிப்பு இராது. அடுத்த வகைக் கேள்விகள் அநுபவத்தால் வெளிப்படுபவை. அநுபவம் இல்லாது போனால் கேள்வி எழாது. கால்கள் நடுங்கித் தடுமாறாது போனால் அக்கேள்விக்கு மதிப்பு இராது. அனுபவம் சார்ந்த கேள்வி மதிப்பு, மகத்துவம் உள்ளது.

"எங்கிருந்தோ 'த்ரஷ்டா' (காண்பவன்) நினைவு வந்தது..."

அஷ்டாவக்கிரரின் வாக்குகள் ஒலித்திருக்கும். நான் காலையில் சொற்பொழிவில் கூறினேனே, அதன் எதிரொலிப்பு இருந்திருக்கும். அதன் நறுமணம் உன்னுள் எழும்பியிருக்கும். அதன் வரிகள் எங்காவது சிக்கி குள்றுபடியாகியிருக்கும்.

"எங்கிருந்தோ த்ரஷ்டா நினைவு வந்தது. சிறிதுநேரம் த்ரஷ்டாவின் விளையாட்டும் நிகழ்ந்தது."

அந்த 'த்ரஷ்டா விளையாட்டு' கணநேரம் நிகழ்ந்திருந்தாலும், அந்நேரம் நீண்டு நெடியதாகத் தோன்றும். த்ரஷ்டா கால எல்லையைக் கடந்தவர். நமது கடிகாரத்தில் நொடிப்போது கடப்பது தெரிகிறது. ஆனால் த்ரஷ்டா சம்பந்தப் பட்டிருக்கும்போது பல நூற்றாண்டுகள் அக்கணத்தில் கடந்துவிட்டதாகத் தோன்றும். நமது கடிகாரம் அங்கு பயன்படாது. அகக்கண்ணிற்கு அது உபயோகப்படாது.

"சிறிதுநேரம் அந்த விளையாட்டு நிகழ்ந்தது. இதற்கிடையில் என் கால்கள் தள்ளாடின. நான் கீழே விழாமலிருக்க சாலை ஓரத்தில் உட்கார்ந்து விட்டேன்."

இந்தத் தள்ளாட்டம், தடுமாற்றம் ஏதோவொரு நிகழ்வு ஏற்பட்டிருப்பதைத் தெரிவிக்கிறது. கேள்வி கேட்டவர் போதனையைச் செவிமடுத்தோ, புத்தகத்தில் படித்தோ கேள்வி கேட்கவில்லை; ஒரு நிகழ்வு தூண்டியது.

"அப்போதே எல்லாம் மறைந்தன, காட்சி, பார்வையாளன் (தர்ஷக்), காண்பவன் (த்ரஷ்டா) எவரும் இல்லை." கால்களின் நடுக்கத்தில் எல்லாம் சிதறின, மறைந்தன.

இத்தருணத்தில் பைத்தியம் பிடிக்கலாம்; மெள்ள மெள்ளப் பழக்கப்படாவிட்டால், பித்துப் பிடித்துவிடும். இந்த நிகழ்வை துளித்துளியாக ஆத்மலயப்படுத்திக் கொள்ளாவிட்டால் ஒரேயடியாக வெடித்துச் சிதறிவிடும்.

"எல்லாம் முடிந்து போனாலும் ஏதோ கொஞ்சம் எஞ்சியிருந்தது".

நிச்சயம் கொஞ்சம் எஞ்சியிருந்தது. முதல் தடவை எல்லாம் இருந்தது. உன் சொந்தபந்த நிலைகள் அகன்றன. நீ நிருமாணித்துக் கொண்ட சிறுகுடில் சரிந்து வீழ்ந்தது. வானமும் விண்மீன்களும் இருந்தன. பரமாத்மா மட்டுமே உடனிருந்தார். நீ அமைத்துக் கொண்ட எல்லைகள், கோடுகள் மறைந்தன. வான்வெளி தெளிவுற எஞ்சியது. நீ

சிறுகுடிலில் குடியிருக்கப் பழகிவிட்டாய், அது ஆட்டம் கண்டது. நீ பயந்து போனாய். தெருவோரம் உட்கார்ந்து விட்டாய்.

திண்ணமாக ஏதோ ஒன்று நிகழ்ந்திருக்கிறது. எவன் இதை உய்த்து உணர்ந்தானோ, வாயடைத்துப் போனான். அவனால் 'என்ன நிகழ்ந்தது? எவர் நிகழ்த்தியது?' என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

**உ**னக்குத் தெரியுமா? எப்போதாவது இப்படி நிகழ்வதுண்டு. நீ ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறாய். திடீரென எவரோ உன்னைத் தட்டி எழுப்புகிறார். விடிகாலை ஐந்துமணி இருக்கும். யாராவது உன்னை எழுப்பலாம். வெளியே கூச்சல், குண்டுவெடிப்பு, கார் மோதியிருக்கும், கூக்குரல் எழும் - நீ திடுக்கிட்டுக் கண்விழிப்பாய். திடுதிப்பென விழிப்பு, தூக்கக் கலக்கத்திலிருந்து உடனடியாய் விடுபடு. அம்பு பாய்வது போல் உறக்கக் கிறக்கத்திலிருந்து வெளியேறு!

பொதுவாக உறக்கத்திலிருந்து விழித்தெழுவது நிதானமாய், மெதுவாய் நிகழும். முதலில் ஆழ்துயில் விலகும். மெள்ள மெள்ளக் கனவுகள் மிதக்கும். கனவுகளில் சிறிது நேரம் ஊடாடிய பின், விழிப்பு துவங்கும், தொடரும், தெளிவுறும். விடிகாலையில் காணும் கனவு நினைவிருக்கும். நடுநிசியில் கண்ட சொப்பனம் நினைவு இராது. காலைக் கருக்கல் போதில் காணும் கனவு இலேசாக இருக்கும், உறக்கத்திற்கும் விழிப்புக்கும் இடையில் தோன்றுவதால், அக்கனவு விலகும்; குறைத்தூக்கம் தொடரும் 'எழுந்திருக்கலாம், கொஞ்சம் உறக்கமயக்கத்தில் கிடப்போம்' எனக் கண்ணாமூச்சி ஆட்டம் நடக்கும். புரண்டு படுப்பாய். விழிப்பு ஏற்பட்டதாகத் தோன்றும். அடுக்களையில் இல்லத்தரசி பணியாற்றும் ஓசை கேட்கும். பால்காரன் குரல் வாசலில் கேட்கும். தெருவில் ஜன சந்தடி; வேலைக்காரி வந்து கதவைத் தட்டுகிறாள்; பிள்ளைகள் பள்ளி செல்லத் தயாராகிறார்கள். நீ புரண்டு படுத்து, கணநேரக் குட்டித் தூக்கம் போடுகிறாய். பிறகு மெள்ள மெள்ள விழிப்புறத் தொடங்குகிறாய். விழித்தெழுகிறாய்.

ஆனால் எப்போதாவது எதிர்பாராது திடீரென நிகழ்வு ஏற்பட்டு விட்டால், அம்பு எய்தாற்போல் ஆழ்துயிலிலிருந்து விழிப்புணர்வு பெற்று எழுந்து விடுகிறாய். கண்விழித்ததும், உனக்குத் தோன்றும், 'நான் யார்? எங்கே இருக்கிறேன்? எதுவும் புலப்படவில்லையே!....'

இவ்வாறு அநுபவம் உங்கள் எல்லாருக்கும் ஏற்பட்டிருக்கும், 'நான் யார்? பெயர், இடம் தெரியவில்லையே? புதிய, விசித்திர உலகிற்கு வந்திருக்கிறேனோ?...' இந்த எண்ணம் சில கணங்கள் நீடிக்கும். பிறகு இயல்பு நிலைக்கு வந்து விடுவாய். இதொன்றும் பேரதிர்ச்சி இல்லை. பழக்கப்பட்ட நினைப்புதான். தினந்தோறும் விடிகாலையில் ஏற்படும் அநுபவம்தான். பழகிப்போன அநுபவம். கனவு, உறக்க மயக்கம், விழிப்பு பதற்றம், தெளிவு இவ்வட்டச் சுழற்சி பழக்கப்பட்டுப் போனதுதான்.

நிஜமான விழிப்பு ஏற்பட்டதும் நீ பேச்சிழந்து போவாய். என்ன நிகழ்கிறது என்பது உனக்குப் புரியாது! எல்லாம் சூனியமாக, பிரமையாக இருக்கும்.

ஆனால் சரியாகத்தான் நிகழ்ந்திருக்கிறது.

"த்ரஷ்டா (காண்பவன்), தர்சகன் (பார்வையாளன்), காட்சி எதுவும் இல்லை. எல்லாமே முடிவடைந்தது. அப்படியும் ஏதோ கொஞ்சம் எஞ்சியது."

இந்தக் 'கொஞ்சம் எஞ்சியது' என்பதற்கு நீ விளக்கம் பெற வேண்டும், என்பதற்காகத்தான் சாத்திரங்கள் குறித்துப் பேசுகிறேன். இந்தக் 'கொஞ்சம்' என்பதற்கு நீ வியாக்கியானம் செய்து கொள்ளவும், அர்த்தம் (பொருள்), குழுமொழி (பரிபாஷை) காணவும் சாத்திரங்களை விவரிக்கிறேன். இல்லாவிட்டால் இந்தக் 'கொஞ்சம்' உன்னை மூழ்கடித்துவிடும். நீ வெள்ளப்பெருக்கில் மிதந்து போவாய். நீ நிற்க, நிலைபெற இடம் கிட்டாது. இதற்காகத்தான் சாத்திர விவரிப்பு.

"..... எல்லாம் முடிந்து போனாலும் ஏதோ கொஞ்சம் எஞ்சியிருந்தது. இருட்டும் வெளிச்சமும் மாறிமாறிக் கண்ணாமூச்சி காட்டின. ஆனால் அப்போதுமுதல் கலக்கம் - குழப்பம் அதிகரித்தது. இதெல்லாம் என்ன? ஏன்? - புரியவில்லை"

**நா**ன் சொல்லுவதைக் கவனத்தில் கொண்டிரு. அதைப் பத்திரப்படுத்திக் கொள். அதை மெய்ஞானம் என எண்ணாதே. அறிமுகமாகக் கொள்! அதைப் பெட்டகமாக்கிக் கொள். போகப் போக நீ உணர்வாய். அநுபவம் என் சொற்களைப் புரியவைக்கும். உன்

அறியாமையிலிருந்து மேலெழுந்து எதிரே நிற்கும். நான் உனக்குச் சாட்சியாக இருப்பேன்.

ஆனால் ஒன்று; என் போதனையைக் கேட்கும்போது, நீ என்னோடு விவாதிக்கத் தொடங்கினால் நான் உன் சாட்சியாக இருக்க இயலாது. என் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது நீ மனத்துள் போராடிக் கொண்டிருந்தால், தருக்கவாதம் புரிந்தால், நீ பாசபந்தத்துடன், பரிவுடன் என் பேச்சைக் கேட்காது போனால் நான் உனக்குச் சாட்சியாக மாட்டேன். அப்போது நீ உனது மனப் பெட்டகத்துள் வைத்திருப்பது எனது அருள்வாக்காக இராது, உன் தான்தோன்றிக் கண்டுபிடிப்பாக அது இருக்கும்.

நேற்று இரவு, ஆஸ்திரேலியாவிலிருந்து வந்திருந்த உளவியல் விஞ்ஞானி என்னிடம் சன்னியாசம் பெற்றார். அவரிடம் சொன்னேன், "நீ என்னிடம் சன்னியாசம் வாங்காதிருந்தாலும் உன்னை வரவேற்கிறேன். ஆனால் என் விருந்தாளியாக மாட்டாய். என்னிடம் சன்னியாசம் வாங்கிக் கொண்டால் நீ என் பந்து, விருந்தாளி ஆவாய்; உன்னை வரவேற்கிறேன்".

என்னிடம் சிலர் கேட்கிறார்கள், "நாங்கள் உங்களிடம் சன்னியாச தீட்சை பெறாவிட்டால், எங்களிடம் உங்களது அன்பு, பரிவு குறைவாக இருக்குமா?" இல்லை, உங்களிடம் என் பூரண அன்பு இருக்கும். வரவேற்கிறேன். ஆனால் சன்னியாசம் பெற்றதும் எம் அதிதியாகவும் பந்துவாகவும் நீங்கள் ஆகிவிடுகிறீர்கள்.

இதில் பெரிய வித்தியாசம் உள்ளது. சன்னியாசம் (துறவு) மேற்கொள்ளாமல் எம் போதனையைக் கேட்கும்போது தொலைவில் இருப்பாய்; துறவு மேற்கொண்டதும் அணுக்கத்தில் வந்து சேருகிறாய். சன்னியாசம் பெறாமல் என் உபதேசத்தைக் கேட்கும்போது ஆராய்வாய், ஏற்பு-மறுப்புகளை மேற்கொள்ளுவாய், உனக்குப் பிடித்ததை வைத்துக் கொள்ளுவாய், மற்றதைத் தவிர்ப்பாய்.

இதில் குறிப்பிட வேண்டியது, உனக்குப் பிடிக்காதது, ஏற்க மனம் வராதது உனக்கு பயனுள்ளதாகும். உனக்குப் பிடித்தது உன்னை மாற்றவோ, முன்னேற்றவோ செய்யாது. உனக்குப் பிடித்தமானது என்றால் உன் கடந்த காலத்துடன் இணைந்தது என்று அர்த்தம். கடந்த

காலத்துடன் இணையாதது உன் அகமனத்துள் புரட்சியைக் கிளர்த்தும். அதுதான் உன்னை மாற்றி அமைக்கும். உன்னோடு இணைந்திருப்பது உன்னை வலுவடையச் செய்யலாம், மாற்றிவிடாது. நீ பேசாமல் இருக்கிறாய், சிந்திக்கிறாய் என்றால் நீ புத்திசாலியாகிறாய்.

புத்திசாலி சமயத்தில் அசட்டுத்தனம் செய்வதுண்டு. ஆர அமர்ந்து தேர்வு செய்கிறான். தனக்கு விருப்பமானதை வைத்துக் கொள்ளுவான்; இல்லாததை ஒதுக்கி விடுவான் - இதனால் நமக்கென்ன ஆதாயம் என்று.

உனக்கு மறுபடியும் கூறுகிறேன். உனக்கு உபயோகமில்லாதது என்று நீ கருதுவது பிறிதொரு நாளில் உனக்கு உபயோகமாக அமையும். இன்று உனக்கு அதை அறிந்து கொள்ள இயலாமல் போகும். அதற்கான அநுபவம் உனக்கு ஏற்படவில்லை. இருந்தாலும் மறுபடியும் கூறுகிறேன், என்னிடம் கேட்ட அந்தக் கருத்தை - தனக்குப் பயனற்றது என எண்ணிய அந்தக் கருத்தை நீ பத்திரமாக வைத்துக் கொள். என்றைக்காவது ஒருநாள் அநுபவம் ஏற்பட்டால் உன் அகஉணர்விலிருந்து அக்கருத்து எழும். உன் கலக்கத்தை நீக்கும். அப்போது நீ பேச்சிழந்து இருக்கமாட்டாய். உனது வியப்பு உன்னைப் பாதிக்காது. அச்சம், கலக்கம் ஏற்படாது.

**மேலே, உயரத்திலே**
**காற்று இசைத்தது கீதம்**
**தேவதாரு விருட்சம் எதிரொலித்தது**
**பனி மலைச்சிகரங்களில் பிரதிபலித்தது**
**மாலைச் செவ்வொளி வானில் ஒளிர்ந்தது.**
**அதைப் பெற்றுக் கொண்டது யார்?**
**அதைப்பெற ஆவலோடு ஆசைக் கரம் நீட்டியது யார்?**
**அஹோ!.... அது நான் தந்த இதயத்துள் இறங்கியது.**
**நான் ஏற்றுக் கொண்ட கண்ணீரில் கலந்தது,**
**அது அறிமுகமில்லாத அந்நியமாய் வந்தது**
**அது தேவதாரு, வான்முகடு, காற்று வழியே-**
**என் வழியே தனக்குள் தன்னையே கொணர்ந்தது**
**தன்னுள் சங்கமித்தது,**
**சோதி சொரூபமாய், தனியாய் துவங்கியது**
**கண்கள் வசமிழந்து மூடுகின்றன**

**வாக்கு மட்டுமல்ல, நிசப்தத்தின் எதிரொலிப்பும்**
**அங்கே முடிவடைகிறது.**

என் போதனையைக் கவனமாய் கேள்! கண்ணீர் மல்கக்கேள்! இதய ஈடுபாட்டுடன் கேள்! அன்புடன் கேள்! புத்திசாலியாய், பகுத்தறிவுவாதியாய் தருக்கவாதத்துணையுடன் கேட்காதே! இதுதான் சிரத்தை, நிட்டை (ஈடுபாடு).

**மேலே உயரத்திலே**
**காற்று இசைத்த கீதம்**
**தேவதாரு விருட்சம் எதிரொலித்தது,**
**பனிமலைச் சிகரங்களில் பிரதிபலித்தது**
**மாலைச் செவ்வொளி வானில் ஒளிர்ந்தது**
**அதைப் பெற்றுக் கொண்டது யார்?**
**அதைப்பெற ஆவலோடு ஆசைக் கரம் நீட்டியது யார்?**

இல்லை; ஆசைக்கரம் நீண்டபோது ஆங்கே அக்கரம் குறுகிப் போனது. ஆசைக்கரத்தில் பிகைஷதான் அடங்கும், சாம்ராஜ்யம் அடங்காது. சாம்ராஜ்யம் கைவர பிரேமை நிரம்பிய இதயம் வேண்டும். பிட்சைப் பாத்திரமோ, இச்சைப் பாத்திரமோ உதவாது.

அதைப் பெற்றுக் கொண்டது யார்?
அதைப்பெற ஆவலோடு ஆசைக் கரம் நீட்டியது யார்?

நீ இங்கு என் போதனையை உன் விருப்பம், தேவைக்கு ஏற்பக் கேட்டுக் கொள்ளலாம், ஏற்றுக் கொள்ளலாம். நீ ஆசைக்கரம் நீட்டிக் கொண்டு என்னிடம் வருகிறாய். ஆசை-அபிலாஷை பிக்கு (யாசகன்) போன்றது. கொஞ்சம் நீ பிகைஷயாகப் பெறலாம். அது உன் சாப்பாட்டு மேசையில் சிந்திக்கிடக்கும் ரொட்டித் துண்டுகள் மாதிரி. நீ என் விருந்தாளியாகவில்லை. சன்னியாசம் பெற்றிருந்தால், அதுவே உன்னை பந்து, அதிதியாக்கியிருக்கும்.

**அஹோ!.... அது நான் தந்த**
**இதயத்துள் இறங்கியது.**
**நான் ஏற்றுக் கொண்ட கண்ணீரில் கலந்தது,**
**அது அறிமுகமில்லாத அந்நியமாய் வந்தது**
**அது தேவதாரு, வான்முகடு, காற்று வழியே-**
**என் வழியே தனக்குள் தன்னையே கொணர்ந்தது**

**தன்னுள் சங்கமித்தது,**
**சோதி சொரூபமாய், தனியாய் துவங்கியது**
**கண்கள் வசமிழந்து மூடுகின்றன**
**வாக்கு மட்டுமல்ல, நிசப்தத்தின் எதிரொலிப்பும்**
**அங்கே முடிவடைகிறது.**

அதற்காக உன்னை ஆயத்தமாக்கிக் கொள். உன் இதயத்துள் அன்பை நிரப்பிக் கொள். அதற்காக அநுதாபத்துடன் செவி சாய்க்கக் கற்றுக்கொள். நான் உனக்குச் சொல்லிக் கொண்டிருப்பதை மனப்பெட்டகத்துள் பாதுகாத்து வைத்துக் கொள். பிறகு கலக்கம் ஏற்படாது. பிறகு அது அறிமுகமில்லாததாக, அந்நியமாக வந்துசேரும். அப்போது அதை நீ உணர்ந்து கொள்ளுவாய். அதன் உள்ளார்ந்த ரகசியக்குரலை அறிந்து கொள்ளுவாய். அதன் அமைதியில் மூழ்க மாட்டாய். பயப்படாதே! பந்தத்திலிருந்து விடுபடுவாய். இல்லாவிட்டால் அது மரணம் போல் தோன்றும்.

பரமாத்மா நீ அறியாமல் வந்து சேர்ந்தால், நீ அறிந்து கொள்ள எந்த உபாயமும் (வழிமுறை), சாதனமும் இல்லாதிருந்தால் நீ மரித்ததாகவே உணர்வாய். நீ பரமாத்மாவின் உறவை அறிந்து கொள்ள சிறிதளவாவது உபாயம் (முன்முயற்சி) இருந்தால், சத்குருமார்களிட மிருந்து போதனை பெற்றிருந்தால், சான்றோரிடம் ஒட்டுறவு கொண்டிருந்தால், பரமாத்மாதான் 'மோட்சம்', 'முக்தி' என்பதை அறிவாய். இல்லாவிடில் மரணமடைந்தாற்போல் இருக்கும்.

நீ பயந்து போனால் அத்திசையில் பயணிப்பதை நிறுத்திக் கொள்ளுவாய். பயப்படத் துவங்கினால் பயநடுக்கம் அதிகரிக்கும். நீ அந்த வழியில் போகலாகாது. அது பயப்படுத்தும், கைகால்களை நடுங்க வைக்கும் பாதை. பாதை மருங்கில் செயலிழந்து உட்கார வேண்டியதுதான். எல்லாமே புலப்படாமல் போகும்; தொலைந்து போனதாகத் தோன்றும். அறியப்படாததும், அறிமுகமில்லாததும் எஞ்சும். உன்னை அச்சுறுத்தும், கலவரப்படுத்தும். நீ அந்த வழியில் பயணிக்காதே!

**ர**வீந்திரநாத் தாகூர் ஒருகவிதையில் கூறுகிறார், "பல பிறவிகளில் பரமாத்மாவைத் தேடி அலைந்தேன். கிடைக்கவில்லை. எப்போதாவது வெகுதூரத்தில், சந்திரனில், தாரகைகளில்

பரமாத்மாவின் பிரதிபலிப்பு தோன்றும். நம்பிக்கை இருந்தது, தேடிக் கொண்டிருந்தேன். பிறகு ஒருநாள் எதிர்பாராமல், எம் பெரும்பேறு காரணமாக பரமாத்மாவின் இல்லத்துத் தலைவாசலுக்கு வந்துசேர்ந்தேன். படிகளில் தாவித்தாவி ஏறினேன். ஜன்ம-ஜன்மாந்திரங்களாக அலைந்து திரிந்த புனித யாத்திரை நிறைவு பெற்றது!

"ஆஹா! பரம பாக்கியம்! கைச்சலங்கை வாத்தியம் இசைத்து, ஆடிப்பாட வேண்டும்போல் இருந்தது. கூடவே பயம், 'பரமாத்மா எதிரே வந்துவிட்டால்? நான் என் செய்வேன்?... இதுகாறும் தேடித் திரிந்தேன், அதுவே கடமையாக இருந்தது. இதற்காகவே வாழ்ந்தேன். என் வாழ்க்கைப் பயணமே இதுதான். பரமாத்மா கிட்டிவிட்டால் முக்திதான் - மனிதப்பிறவிக்கு மரணம். பிறகு என் வாழ்வு என்ன ஆகும்? என் பயணம் எங்கு செல்லும்? எதைப்பெற, எதைத் தேடிப் பயணிப்பேன்? பிறகு எதுவுமே மிஞ்சாது;...' இப்படி எண்ணிப் பயந்து போனேன். கைச்சலங்கை இசைக்கருவியை ஓசை எழாமல் கீழே போட்டேன். மணிக்கதவம் தாள் திறந்து விட்டால்? காலணிகளைக் கையில் எடுத்துக் கொண்டு ஓடத்தொடங்கினேன்;... இன்றும் ஓடிக் கொண்டிருக்கிறேன்!"

மகாகவி தாகூர் கவிதையில் கூறினார்; "நான் இப்போதும் தேடிக் கொண்டிருக்கிறேன். எனக்கு பரமாத்மாவின் திருமாளிகை எங்கே உள்ளது என்பது தெரியும். அந்த இடத்தை விட்டு மற்ற இடங்களில் தேடிக் கொண்டிருக்கிறேன். தேடல்தான் வாழ்வு, ஜீவனம். அந்தத் தலைவாசலைத் தவிர்க்கிறேன். அந்தப் பக்கமே போவதில்லை. ஆனால் மற்ற இடங்களில் அலைந்து திரிந்து பலரிடமும் "பரமாத்மா எங்கே?" என்று விசாரிக்கிறேன். ஆனால் எனக்குத் தெரியும் பரமாத்மா எங்கே இருக்கிறார் என்று.

நான் இத்தகு ஞானிகளை அறிவேன். பலப்பல பிறவிகளிலும் பரமாத்மாவைத் தேடிப் பயணித்தவர்கள், பலமுறை இறைவனின் உறைவிடத்திற்கு அருகில் சென்றிருக்கிறார்கள். உள்ளே செல்லப் பயப்பட்டு, எல்லாம் மறந்து திரும்பியிருக்கிறார்கள். பயம் மட்டும் மறக்கவில்லை, தொடர்கிறது. அதனால்தான் பொதுஜனங்கள் தியானம் செய்ய முன்வருதில்லை. தியானம் என்றாலே பயப்படுகிறார்கள்,

தவிர்க்கிறார்கள். பகவான், இறைவன், பரமாத்மா எனும் சொற்களைச் சுயநலத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். வாழ்வாதாரத் தத்துவமாக அதை நாடவோ, தேடவே முற்படுவதில்லை.

கோவில், மசூதிகளுக்குப் போய் வருவார்கள், சமுதாய வழக்கமாக, பொதுஜன வழிமுறையாக, பரம்பரைப் பழக்கமாக, கடமை வழிபாடாக, நேர்த்திக் கடனாக, போக வேண்டும் என்பதற்காகப் போகிறார்கள். ஆனால் எப்போதுமே தேவாலயத்தை, பள்ளிவாசலை மனத்துள் நிறுவிக் கொள்ளுவதில்லை. இதில் ஆபத்து என்று எண்ணித் தவிர்த்து விடுவர். இறைவனை, பரமாத்மாவைத் தொலைவிலேயே வைத்திருப்பார்கள். காரணம் இருக்கும். ஆழ்மனத்துள் புதைந்திருக்கும். அநுபவத்தில், மறைந்திருக்கும். நினைவுத்தடத்தில் அச்சம் குடிகொண்டிருக்கும். அதனால் அந்த இறைவனின் உறைவிடத்தை எட்டியதும் தடுமாறி நடுங்கித் தவித்திருப்பர்.

எந்த அன்பருக்கு இந்த (பரமாத்மா ஆலயத்தை எட்டிய) அநுபவம் ஏற்பட்டுள்ளதோ, அவர் சரிவர உணராது போனால் பரிதவித்துப் போவார். அவர் தியான யோகத்திலிருந்து விலகியிருப்பதே நல்லது. இது மிகச்சங்கடமான நிலைமை. திரும்ப சுயநிலைக்கு வந்தால் சரி, இல்லாவிட்டால்? பயணப்பாதையின் ஓரத்தில் தன் வசமிழந்து, தளர்ந்து, தவித்து உட்கார்ந்து விட்டால்? பார்ப்பவர் ‘இது பைத்தியம்’ என்பார்கள். சிறிது நேரம் அப்படி உட்கார்ந்திருந்தால் பாதகமில்லை. நீண்ட நேரமானால், சனங்கள் கூடுவார்கள், போலீஸ் வரும், ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போவார்கள். ‘மூளை கலங்கிவிட்டது, பைத்தியம் முற்றி விட்டது’, எனக்கூறி மயக்க ஊசிபோட்டு விடுவார்கள்.

**எ**ன் பழைய நண்பர் கடிதம் எழுதியிருந்தார் - “உங்களிடம் சன்னியாசம் பெற்றவர். ஆசிரமத்திலிருந்து புறப்படும்போது ஆடிப்பாடிக் கொண்டு வீடுவரை சென்றார். அக்கம் பக்கத்தாரும், வீட்டாரும் அவரது பக்தி நிலையைக் கண்டு பதறிப் போனார்கள். இதற்கு முன் இவர் இப்படி வந்ததில்லையே?...! என்று திகைத்துப் போனார்கள். ‘இவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது’ என முடிவெடுத்து, அவரைக் கட்டிப்பிடித்து வீட்டுக்குள் இழுத்து

வந்தார்கள். 'என்ன ஆயிற்று உங்களுக்கு? ஏன் இப்படி ஆர்ப்பாட்டம்....?' என்று கேட்டார்கள்.

சன்னியாசி சொன்னார், "அடேய்! எனக்கு ஒன்றும் ஆக வில்லை. மிக்க மகிழ்ச்சியாக, ஆனந்தமாக இருக்கிறேன். மெய்ஞான போதம் பெற்றிருக்கிறேன்..." அவர் பேச்சை உற்றம் சுற்றும் எவரும் ஏற்கவில்லை. சந்தேகம் வலுத்தது. 'இவருக்குப் பைத்தியம் முற்றிவிட்டது. வெளியே நடமாட விடக்கூடாது. ஆஸ்பத்திரியில் அடைத்து வைக்க வேண்டும்?' அப்படியே செய்தார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு அவரிடமிருந்து கடிதம் வந்தது. அதில் எழுதியிருந்தார், "நான் இங்கே ஆஸ்பத்திரியில் ஆனந்தமாய் சிரித்து, மகிழ்ந்து கொண்டிருக்கிறேன். நோயாளியாகி நான் துன்பப்பட்டுக் கொண்டிருந்தேன், அப்போது ஆஸ்பத்திரியில் என்னைச் சேர்க்கவில்லை. நான் நிரம்ப மகிழ்ச்சியாய் இருக்கிறேன், இப்போது கொண்டுவந்து இங்கே சேர்ந்திருக்கிறார்கள்! நல்ல வேடிக்கை இது. என்னைப் பைத்தியம் என்று நினைக்கிறார்கள். அவர்களை நினைத்துச் சிரிக்கிறேன். 'என் ஆனந்தக் களிப்பை உங்களால் அறிந்து கொள்ள முடியவில்லையே, பைத்தியக்காரர்களே!' என்று கூறுகிறேன்."

என்னிடம் கேள்வி கேட்டது நல்லதாயிற்று. பயப்பட வேண்டா. இந்த அநுபவம் மெள்ள மெள்ள அடங்கும். சாட்சி நிலையை மேற்கொள். இது இயலும்.

**மூன்றாவது கேள்வி :**

**நாம் ஈசுவரனின் அம்சங்கள் (இறைவனின் கூறுகள்) அழிவற்றவர்கள். இந்த அம்சம் மூலத்திலிருந்து (ஈசுவரனிடமிருந்து) எப்போது, எப்படி, ஏன் பிரிந்தது? விலகியது? இந்த அம்சம் மறுபடியும் மூலத்தோடு இணைபிரியாத ஒட்டுறவு கொள்ள முடியுமா? முடியாதா? முடியும் என்றால் அருள்கூர்ந்து மூலத்துடன் அம்சத்தைச் சேர்த்து விடுங்கள். மாறி மாறி இந்த உலகியல் அவல வாழ்வில் புகுந்து, பயந்து வாழாதிருக்கலாமே.**

இதில் உள்ள வித்தியாசத்தைக் கவனியுங்கள். இப்போது எழுந்த கேள்வி அநுபவ பூர்வமானது, சாத்திர சம்மதமானது – "நாம் ஈசுவர அம்சங்கள், அழிவற்றவர்கள்".

நீ காதால் கேட்டாய், படித்தாய். இதனால் உன் அகங்காரத்திற்குத் திருப்தி. ஏற்றுக் கொண்டிருக்கிறாய். இதைவிடப் பெரிய விஷயம் "நாம் ஈசுவர அம்சம்" என்பது அகங்காரத் திருப்திக்கு. வேறென்ன இருக்கும்? 'நாம் இறைவன் (ஈசுவரன்), பிரும்மம், அழிவற்றது (அவிநாசி)' இந்த உணர்வைத்தானே நீ விரும்புகிறாய்? இதுதான் அகங்காரத்தின் தேடல், உன் உள்ளார்ந்த பேரவா, 'நான் அழிவற்றவன், ஈசுவர அம்சம், பிரும்ம சொரூபம், அகிலத்திற்கும் அதிபதி!'

"நாம் ஈசுவர அம்சம், அழிவற்றவர்."

இந்த உணர்வு உனக்கு ஏற்பட்டதா? ஏற்பட்டிருந்தால் கேள்வி எழாது. ஏற்படாதிருந்தால் பதில்கூறத் தேவையில்லை. கேள்வி கேட்டுக் கொண்டே இருக்கலாம்.

"அருள்கூர்ந்து கூறுங்கள், அந்த அம்சம் மூலத்திலிருந்து எப்போது, ஏன், எப்படிப் பிரிந்தது? விலகியது?"

இது பண்டிதத்தனமான கேள்வி. எப்போது? – நேரம், நாள், தேதி தேவை. தெரிந்து என்ன செய்யப் போகிறாய்? நான் தேதி, வருடம், நேரம் சொன்னால் உனக்கு என்ன இலாபம்? உன் வாழ்க்கையில் புரட்சி ஏற்பட்டு விடுமா? நீ என்ன ஆதாயம் பெறுவாய்?

"..... எப்போது, ஏன், எப்படிப் பிரிந்து விலகியது?"

நீ ஈசுவர அம்சம் என்பதை உணர்ந்திருந்தால், மூலத்திலிருந்து (ஈசுவரனிடமிருந்து) ஒருக்காலும் விலகல் என்பது இல்லை என்பதை அறிந்திருப்பாய். பிரிந்து விலகியதாகக் கனவு கண்டிருக்கிறாய். பிரிவதே இல்லை. அம்சம் (பகுதி) எப்படிப் பிரியும்? உறுப்பு (பகுதி) உருவத்தோடு ஒன்றியிருக்கும். இது அம்சம் + அம்சி ஒட்டுறவு. நீ அறிந்ததை மறந்திருப்பாய். பிரிவு என்பதே இல்லை, மறதி ஏற்பட்டிருக்கும். பிரிவதற்கு எந்த உபாயமும் (வழிமுறை) இல்லை. நாம் உள்ளபடியே இருக்கிறோம். நமது இன்றியமையாத இணைப்பை

மறந்திருக்கலாம், பிறகு நினைவுப்படுத்திக் கொள்ளலாம். பேதம், குலைவு எல்லாம் நினைவிற்கும் மறதிக்கும் இடைப்பட்டதுதான்.

"மூலத்திலிருந்து எப்போது, ஏன், எப்படிப் பிரிந்தது?"

பிரிந்தால்தானே நாம் தக்க பதிலைச் சொல்ல முடியும்? பிரியவே இல்லையே. இரவு உறங்கும்போது கனவு கண்டாய். கனவில் நீ குதிரையாக மாறினாய். காலையில் துயிலெழுந்ததும் நீ கேட்கிறாய் "நான் ஏன், எப்படி, எப்போது குதிரையானேன்?" கஷ்டம். முதல் நிஜம், நீ குதிரையாகவில்லை. வெறும் கனவு. காலையில் எழுந்ததும் உனக்குத் தெரிந்து விட்டது. கனவு கண்டபோதும் நிஜமாய் நீ குதிரை ஆகவில்லை. இதை நினைவு வைத்துக் கொள். நீ அக்கனவின் கருத்துருவில் சிக்கியிருந்தாய் - 'நான் குதிரை ஆகிவிட்டேன்! இதுதான் அஷ்டாவக்கிரரின் அடிப்படைக் கருத்து, நம்பிக்கை.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "நீ எந்தக் கருத்துடன் 'நான்' எனும் தன்மையைச் சேர்க்கிறாயோ, அப்படியே ஆகி (மாறி) விடுவாய். தேகாபிமானம் (நான் இந்த மேனி எனும் நம்பகம்) ஏற்பட்டால் நீ தேகமாகி விடுகிறாய். பிரம்மாபிமானம் (நான் பிரம்மம் எனும் நம்பகம்) ஏற்பட்டால், நீ பிரம்மம் ஆகிறாய். நீ எதனோடு 'நான்' என்பதை இணைக்கிறாயோ, அதுவாகவே ஆகி விடுகிறாய். கனவில் உன்னைக் குதிரையோடு இணைத்துக் கொண்டாய், குதிரையாகி விட்டாய். இப்போது உன் சுய சரீரத்தோடு 'நான்' தன்மையை இணைத்துக் கொண்டிருக்கிறாய். நீ மனிதனாகியிருக்கிறாய். ஆனால் நீ நீயாக இல்லை. நீ உள்ளபடியே இருக்கிறாய்; உன் இயல்பில், தன்மையில் எந்த பேதமும் இல்லை.

இத்தகையக் கேள்வி பொருளற்றது, வீண். இதில் உன் நேரத்தை வீணடிக்காதே. இத்தகைய கேள்விகளுக்குப் பதில் கூற முற்படுபவர்கள் உன்னைவிட அதிக அஞ்ஞானிகள், அறிவிலிகள்.

**ஜே**ன் மதத்துப் பக்கிரி (துறவி) போகோஜுவின் வாழ்க்கையில் நிகழ்ந்தது. ஒருநாள் காலையில், படுக்கையிலிருந்து எழுந்ததும், பிரதான சீடனை அழைத்து, அவனிடம் கேட்டார், "நான் இரவு ஒரு கனவு கண்டேன். அதற்கு விளக்கம் தர உன்னால் முடியுமா?"

சீடன் சொன்னான், "குருதேவா! நான் தண்ணீர் எடுத்து வருகிறேன். கைகால் முகம் கழுவிக் கொள்ளுங்கள்." பிறகு மண்பாண்டத்தில் தண்ணீர் கொண்டு வந்து வைத்தான். கைகால்களைக் கழுவிவிட்டான். முகம் கழுவிக் கொண்டார் குரு. அப்போது அடுத்த சீடன் அந்தப் பக்கம் வந்தான். குரு அவனிடம் கேட்டார். "நான் நேற்று கண்ட கனவிற்கு விளக்கம் சொல்லுவாயா?"

அவன் சொன்னான், "குருஜி! உங்களுக்கு ஒரு கப் டீ கொண்டு வருகிறேன்" விரைவாக டீ கொண்டு வந்தான். குரு உரக்கச் சிரித்தார். "நீ விளக்கம் கூறினால் உன்னை அடித்துத் துரத்தியிருப்பேன்" என்றார்.

சொப்பனத்திற்கு விளக்கம் எதற்கு? சொப்பனம் பார்த்தாகி விட்டது, மறைந்து விட்டது, உறக்கம் நீங்கி விழிப்பு ஏற்பட்டது. இப்போது எதற்கு பஞ்சாயத்து விசாரணை?

சீடர்கள் சரியாகத்தான் பதிலளித்திருக்கிறார்கள். அவர்கள் வைத்த பரீட்சை அது. ஒரு சீடன் தண்ணீர் கொண்டு வந்து முகம் கழுவச் செய்தான். சொப்பனம் விலகி விட்டது. தொந்தரவும் தீர்ந்தது. மேற்கொண்டு வியாக்கியானம் எதற்கு? விளக்கவுரை யதார்த்திற்கு, உண்மைக்குத் தேவை, கனவுகளுக்கு அல்ல. பொய், மாயம் – இதற்கு விளக்கம் எதற்கு? நிகழாத நிலைக்கு விளக்கம் ஏன்? 'கனவு கண்டேன்' எனத் தெரிந்திருப்பது போதும். கை, கால், முகம் கழுவிக் கொண்டால் தூக்க மயக்கம் விலகும். இயல்பு நிலை வரத் தொடங்கும்.

இரண்டாவது சீடன் தேனீர் கொடுத்தது சரியான சேவை. முகம் கழுவிய பிறகும் சிறிது உறக்கக்கிறக்கம் இருக்கும். சூடாய் தேனீர் பருகியதும் புத்துணர்ச்சி ஏற்படும்; விழிப்புணர்வு எழும். கனவுக் கவலை இராது.

நானும் இதைத்தான் சொல்லுகிறேன். கைகால் முகம் கழுவி, டீ குடித்து புத்துணர்வு பெறு. அம்சமான நீ மூலத்திலிருந்து விலகவே இல்லை. (ஜீவாத்மா பரமாத்மாவை விட்டு ஒருபோதும் விலகாது) விலகிப் போக எந்த உபாயமும் (வழி வகை) கிடையாது.

பிறகு கேட்கிறாய், "அம்சம் மூலத்துடன் மறுபடியும் இணைவது, எக்காலத்திலும் இணைபிரியாத ஒட்டுறவு நிகழுமா? நிகழாதா?"

நீ பிரியவே இல்லை என்கிறபோது இணைவது பற்றிப் பேசுவது வீண் பிதற்றல். இதனால்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "முக்திபெற முயற்சிப்பதே பந்தம். முக்தியைத் தடுக்கும்" அவர் கூறுவது இதுதான், "எதனிடமிருந்து நீ பிரியவே இல்லையோ, அதனுடன் மறுபடியும் இணைவது எப்படி? முயற்சியும் வீண் செயல். பித்துக்குளித்தனம். அந்த முயற்சியே உனக்குத் தடையாகி விடும். முக்தி பெறமாட்டாய்."

சிந்தித்துப் பார்! நீ வீட்டை விட்டே கிளம்பவில்லை. அப்போது வீடு திரும்ப வேண்டும் என்கிற எண்ணமோ, முயற்சியோ ஏற்படுமா?

ஒரு குடிகாரன். இரவு வீடு திரும்பினான். முட்டக் குடித்திருந்தான். வாசல் பக்கம் நின்று தேடினான். தன் வீடுதானா என்று சந்தேகம். அரவம் கேட்டு அவன் தாய் கதவைத் திறந்தாள். குடிகாரன் தாயைத் தெரிந்து கொள்ளவில்லை, "ஏ பாட்டியம்மா! என் வீடு எங்கே இருக்கு? வழி சொல்லுங்க" என்றான்.

தாய் சொன்னாள், "எலே! நீ என் மகன்டா, நான் உன் அம்மா. தெரியல்லை? இதுதாண்டா உன் வீடு."

குடிகாரன், "கிழவி! என்னை ஏமாத்தாதே! இது என் வீடு இல்லை, நீ என் அம்மா இல்லை, என் வீடு இந்தப் பக்கம்தான் எங்கியோ இருக்குது. எங்கே? அதைச் சொல்லுங்கறேன், ....." என்றான்.

தெருக்காரர்கள் கூடிவிட்டார்கள். குடிகாரனை சமாதானப் படுத்தினார்கள். "இதுதாண்டா உன் வீடு, உள்ளே போ!" என்றான் கூட்டத்தில் ஒருவன். அவனும் குடித்திருந்தான். வேறு சிலரும் அடையாளம் சொல்லி குடிகாரனை வீட்டுக்குள் அனுப்ப முயன்றார்கள். குடிகாரன் புரிந்து கொள்ளவில்லை. எந்த அடையாளமும் புலப்படவில்லை. தன்னையே தெரிந்து கொள்ளாதவன் தன் வீட்டை எப்படித் தெரிந்து கொள்ளுவான்?

அங்கே மற்றொரு குடிகாரன் வண்டி ஓட்டிக் கொண்டு வந்தான். கூட்டத்தாரை விலக்கிவிட்டு, "ஏலே! நீ என் வண்டியிலே ஏறி உட்காரு. உன் வீட்டிலே கொண்டு விடுறேன், வா!" என்றான்.

முதல் குடிகாரன் மகிழ்ந்து போனான். 'இவன் தான் சரியான ஆள். சரியாகச் சொல்லுகிறான். இவன்தான் எனக்குக் குரு. மற்றவங்க புத்தியில்லாதவனுக. நான் மாறி மாறிக் கேட்கிறேன். 'என் வீடு எங்கே இருக்குது?' என்று. எல்லாப் பயலுகளும் 'இதுதாண்டா உன் வீடு'ன்னு சொல்லுறானுக. நான் குருடனா? எனக்குத் தெரியாதா? நல்ல வேளை. சத்குரு கிடைத்து விட்டார்!'

நீ ஒன்றைக் கவனத்தில் கொள். நீ தவறான கேள்வியைக் கேட்டால், தவறான குருமார்களின் மாயவலையுள் சிக்கி விடுவாய். உன் தவறான கேள்விக்குத் தவறான பதில் சொல்ல ஒரு அசடன் வந்து சேருவான், இது உலகியல் நியதி. நீ கேட்டாலும், கேட்காவிட்டாலும் பதில் சொல்ல ஆசான்கள் காத்திருக்கிறார்கள்; உன் போன்ற சீடன்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். நீ தாறுமாறான கேள்வியைக் கேட்டு. சிக்கலில், குழப்பத்தில் வீழ்ந்து தவிக்கிறாய். நீயே தேடிக் கொண்ட விபத்து.

"மறுபடியும் இணைவது சாத்தியமா?"

பிரிவே ஏற்படவில்லை, விலகிப் போகவில்லை எனும்போது மறுபடியும் இணைவது பற்றிப் பேசுவானேன்?

மேலும் கேள்வி நீள்கிறது. "இணைபிரியாத ஒட்டுறவு சாத்தியமா?" சேர்வதும், பிரிவதும் நிகழ வாய்ப்பு இல்லையே. இதெல்லாம் புத்திபூர்வமான தருக்கவாதமாகத் தோன்றும். தவறு; நாம் யார் என்பது நமக்கே நினைவு வரவில்லையே.

'பரமாத்மா நம்மை விட்டு விலகியது, நம்மிடமிருந்து வேறுபட்டது' என்று இருந்தால் அத்தருக்கவாதம் சரியானது. பரமாத்மா உன் சுவபாவம், இயல்பு. இதை நீ மறந்திருக்கலாம். நம் சுவபாவத்தை நாமே மறந்து போவது இயல்புதான்.

ஒரு நண்பர் கேள்வி கேட்டார், "ஆத்மா சுத்தம், புத்தம் (மெய்யறிவு உள்ளது), முக்தம் (பந்தமற்றது) எல்லையற்ற மகாசக்தி, சிறந்த சுதந்திரம் எனும்போது பேராசையும் பேதைமையும் எப்படி வரும்?"

இதுவும் , ஆத்மாவின் சுதந்திரம். ஆசாபாசம் கொள்ள விரும்பினால் அப்படியே செய். ஆத்மா ஆசாபாசத் தொடரைக்

கொள்ளாது போனால் வேறு எதற்காவது அடிமைப்பட்டுப் போகும். இதைப் பற்றிச் சிந்தித்துப் பார்!

உலகியல் வாழ்வு (சம்சாரம்) உனது சுதந்திரம். நீ விரும்புகிறபடி மாறுவாய். உன் விருப்பமும் சுதந்திரமானது. நீ விரும்பினால் இப்போதே முக்தி. இல்லாவிட்டால் பந்தம் தொடரும்.

பிரிந்து போன அம்சம் எப்படி இணையும் என்று என்னால் விளக்க முடியாது. பிரிவு ஏற்படவே இல்லை. ஆனால் ஆத்மாவிற்குச் சுதந்திரம் உண்டு. அது விரும்பும்போது எதையும் மறந்து போகலாம், நினைவில் நிறுத்திக் கொள்ளலாம். இது ஆத்ம சுவபாவம். இது இல்லாது போனால் ஆத்மா எல்லைக்குள் அடங்கிவிடும். அதன் முக்தி தடைபட்டுப் போகும். அதன்மீது பிற ஆதிக்கம், அடையாளம் ஏற்பட்டு விடும்.

**மே**லை நாட்டில் திதரோ எனும் சிந்தனையாளர் இருந்தார். அவர் 'இறைவன் சர்வ வல்லமை கொண்டவன் அல்லன்' என வாதிட்டு நிரூபணம் செய்தார். பூரணசக்தி, சர்வசக்தி இறைவனுக்கு இல்லை என்பது அவரது கருத்தியல். அவரது தருக்கவாதம் ஏற்புடையதாகத் தோன்றும். அவர் கூறுவார், "கடவுள் இரண்டும் இரண்டும் ஐந்து எனக் காட்டுவாரா? காட்ட முடியாது. அப்போது அவர் எப்படி சர்வசக்திமான் ஆவார்? இரண்டும் இரண்டும் நாலாகத்தான் இருக்கும். கடவுளாலும் மாற்றமுடியாது. இதேபோல் முக்கோணத்தை நாலுகோணமாக ஆக்குவாரா? நாலுகோணமாக அமைத்தால் அது முக்கோணம் ஆகாது. அது அது தனித்தனியே இருக்கும். ஒன்று மற்றதாக ஆக்கப்பட முடியாது. ஆக, கடவுளின் சக்தி, வல்லமை வரம்புக்கு உட்பட்டதுதானே?"

கிறித்துவர்களின் கடவுளான பரமபிதா சார்ந்த தீர்மானத்தை, கருத்தியலை அறிஞர் திதரோ சிதைத்து விட்டார். ஆனால் திதரோவிற்கு இந்தியர்களின் சனாத்ன தர்மக் கோட்பாடு பற்றித் தெரிந்திருந்தால் திக்குமுக்காடிப் போயிருப்பார். இந்திய தத்துவவாதிகள் கூறுவர், "எல்லா உபத்திரவங்களுக்கும் ஈசுவரன்தான் காரணம். ஈசுவரனுக்குள்ள சுதந்திர சக்தியை 'அகடித கடனா சக்தி' (சாத்தியமில்லாததைச் சாதித்துக் காட்டும் ஆற்றல்) என்பர். அவர்

இரண்டும்+இரண்டும் ஐந்து. அல்லது மூன்று எனக் காட்டுபவர். இதைத்தான் 'மாயா' என்கிறோம். மாயை மகாசக்தி. இதன்மூலம் இரண்டும் + இரண்டும் ஐந்து. அல்லது மூன்று என்று ஆகிவிடும். இரண்டும் + இரண்டும் நான்கு என்று ஆனால், மாயையிலிருந்து விடுபட்டாகி விட்டது என்போம்."

இங்கே முக்கோணம் நாற்கோணம் போல் தோற்றுகிறது. ஏமாற்று வித்தை நிகழ்கிறது. இங்கு ஆள் ஆளுக்கு வெவ்வேறு போதனை, புரிதல் நிகழ்கிறது. இது மாயை லீலை.

மாயையை நாம் (இந்திய தத்துவம்) பரமாத்மாவின் சக்தி என்போம். இதற்கு என்ன அர்த்தம் தெரியும் உனக்கு? பரமாத்ம சக்தி மாயை (மயக்கம்). பரமாத்மா விரும்பினால் நம்மை (பிரஜைகளை) பிரமையில் ஆழ்த்தும் வல்லமை உள்ளவர். இல்லாது போனால் அவர் வரம்புக்கு உட்பட்டவராகி விடுவார். கனவு காணாத பரமாத்மா, பரமாத்மாவாக விளங்க முடியாது. கனவு காண இயலாத அளவுக்கு வரையறுக்கப்பட்டு விடுவார். ஆனால் அப்படி இல்லை. பரமாத்மா கனவுகாண வல்லவர். நீ கனவு காண்கிறாய். நீ பரமாத்மா, கனவு காண்கிறாய். விழித்திருக்கிறாய், சொப்பனம் காண்கிறாய் - இந்த வல்லமை உனக்கே உரியது. நீ விரும்பும்போது கனவு காணலாம். விழித்தெழலாம் விழிப்பு, உறக்கம், மயக்கம், சொப்பனம் எல்லாம் உன் விருப்பத்திற்கு உட்பட்டவை. நீ எப்போதும் விழிப்புணர்வுடன் இரு. அல்லது கனவு உலகில் வாழ்ந்திரு! - உன் இஷ்டம்.

மனிதனின் சுதந்திரம் தங்குதடை இல்லாதது. ஆத்மாவின் சக்தியும் அப்படியே. கனவு - நனவு, மயக்கம் - மெய்மை ஆத்மாவின் இரு வழி வரிசைகள். இவ்விரண்டிலும் எல்லாமே அடக்கம்.

நீ கேட்கிறாய், "அம்சத்தின் மறுசேர்க்கை நிகழுமா?"

முதல் மறுப்பு, 'மறு சேர்க்கை (புனர்மிலன்) என்ற சொல்லாதே! 'மறுநினைவு' என்று சொல். சரியான சொல்லை உபயோகப்படுத்து கிறாய் என்பேன்.

பிறகு உனது கேள்வி, "இணை பிரியாத (மறுசேர்க்கை)...?"

இதற்கு நான் உத்தரவாதம் கொடுக்க முடியாது. இதற்கு நீதான் பொறுப்பு, உன் விருப்பம். நீ அதை விட்டுவிடவோ, மறந்து போகவோ விரும்பினால் உன்னை எவரும் தடுக்க முடியாது. நீ அதையே நினைத்துக் கொண்டிருக்க விரும்பினாலும் எவரும் தடுக்க இயலாது. இதற்காக நீ நிம்மதி இழந்து சங்கடப்பட வேண்டாம். உன் சுயசுவாதீனம், சுதந்திரம் எவ்வளவு உள்ளது என எண்ணிப் பெருமைப்படலாம். நீ பரமாத்மாவையே மறக்கலாம், தடை இல்லை. பரமாத்மா உனக்கு இடையூறு கொடுக்க மாட்டார். நீ பரமாத்மாவிற்கு எதிராகச் செல்ல விரும்பினாலும், அதற்கான வலிமையை அவர் அளிப்பார்.

**சூ**ஃபி பக்கிரி (துறவி) ஹஸன் எழுதி வைத்திருக்கிறார், "நான் ஒருநாள் இரவு இறைவனிடம் வினவினேன், 'இந்தக் கிராமத்தில் மிகச்சிறந்த தர்மாத்மா (அறவோர்) யார்?' இறைவன், 'உன் பக்கத்து வீட்டுக்காரர்தான் நீ தேடும் தர்மாத்மா' என்றார்."

ஹஸன் பக்கத்து வீட்டுக்காரரைப் பொருட்படுத்தியதே இல்லை. அவர் எளிமையான சாமானியர். அத்தகையவர்களைப் பிறர் மதிப்பதில்லை, கவனிப்பதுமில்லை. அடாவடிக்காரர்களைத்தான் பிறர் மதிப்பதும், கவனிப்பதும் வழக்கம். பக்கத்து வீட்டுக்காரர் 'தான் உண்டு, தன் வேலை உண்டு' என்று அடக்கமாக இருப்பவர். வீண் பேச்சு, செயல் கிடையாது. வம்பு தும்பிற்கு வரமாட்டார். மிக எளிமை, அடக்கம். ஹஸன் சொன்னார், "இவரா மிகச் சிறந்த புண்ணியசாலி, தர்மவான்?...!"

மறுநாள் காலையில் எழுந்ததும் ஹஸன் பக்கத்து வீட்டுக்காரரை அருகில் சென்று பார்த்தார், அவர் முகத்தில் ஒளி தெரிந்தது. அன்று இரவு இறைவனிடம் கேட்டார், "இறைவா! நீங்கள் இனம் காட்டி அருளியது நல்லதாயிற்று. அவர் தர்மாத்மாதான். அவரைப் பூசிப்பேன், வணங்கி ஆசி பெறுவேன். அவர்தான் என் குருநாதர். மற்றொரு கேள்வி. இந்தக் கிராமத்தில் மிகவும் கெட்ட தீயமனிதன் யார்? அவனிடமிருந்து விலகி என்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்."

இறைவன் சொன்னார், "அதே பக்கத்து வீட்டுக்காரன்தான்."

“குழப்பமாக இருக்கிறதே. எப்படி அவர்...?”

“நான் என்ன செய்வது? நேற்று இரவு நல்ல இயல்போடு இருந்தான். இன்று கெட்ட தீய இயல்புடன் இருக்கிறான். நான் எதுவும் செய்ய முடியாது. நாளைக் காலையில் எப்படி இருப்பானோ? நல்ல இயல்புக்குத் திரும்பலாம், திரும்பாமலும் போகலாம்” - இறைவன்.

ஆத்மா பரம சுதந்திரன். அவர்மீது எந்தக் கட்டுப்பாடும் இல்லை. இந்தப் பரம சுதந்திரத்தைத்தான் மோக்ஷம் என்று கூறுகிறோம். மோக்ஷத்துள் ஏற்பதும், மறுப்பதும் அடக்கம். நீ ஆத்மாவை மறக்க விரும்பினால் எவரும் தடுக்கப் போவதில்லை. நீ வெளியேற விரும்பினாலும் அப்படியே. தடுத்தால் அது மோக்ஷமாக இராது.

ஒரு கிறித்துவப் பாதிரியார் மரித்து விட்டார். பிறகு சுவர்க்கம் புகுந்தார். அங்கே உள்ளவர்களைக் கண்டதும் திகைத்துத் தவித்துப் போனார். எல்லார் கைகளிலும் கால்களிலும் விலங்கிடப்பட்டிருந்தது. பாதிரியார் பதற்றத்துடன், “இதென்ன அலங்கோலம்? சுகபோக சொர்க்கத்தில் கைகால்களுக்கு விலங்குகளா? ஏன்?” என்றார்.

சொர்க்கத்தின் வாயில் காப்போர் சொன்னார்கள், “இவர்கள் அமெரிக்கர்கள். அமெரிக்காவிற்கே திரும்பிப் போக வேண்டுமாம். சொர்க்கம் வேண்டாமாம். விலங்குச் சங்கிலி போட்டு முடக்கிவிட்டோம். சுவர்க்கத்தை இவர்கள் அவமதித்திருக்கிறார்கள். இவர்கள் கூற்று, ‘எங்களுக்கு சொர்க்கம் பிடிக்கவில்லை, வேண்டாம். இதைவிட எங்கள் அமெரிக்காவே மேல். சுகமாய், சொகுசாய் அங்கு வாழ்ந்தோம். இங்கே இருப்பதெல்லாம் சர்வமட்டம். இங்கே இருக்கிற அப்சரஸ் மங்கையரை விட அழகாய், அம்சமாய் எங்கள் அமெரிக்கப் பெண்கள் திகழ்கிறார்கள். இங்கே கிடைக்கிற சுராபானம் மட்டமான சரக்கு. எங்க அமெரிக்காவில் விதம்விதமாய் சிறந்த மதுபானங்கள் கிடைக்கின்றன.

இங்கே உள்ள சுவர்க்க இல்லங்கள் படுபழசு. எங்கள் தேசத்தில் வானளாவிய கோபுர மாளிகைகள் ஏராளம். கோபுரத்தை விட்டு குப்பைமேட்டுக்கு எவன் வருவான்?...’ இவர்கள் அமெரிக்காவிற்கே

திரும்பிப் போக வேண்டுமாம்; அடம் பிடிக்கிறார்கள். 'சுவர்க்கத்தில் உள்ள மாடமாளிகைகள் பத்தாம் பசலி ஆர்க்கிடெக்ட் இன்ஜினியர்களால் கட்டப்பட்டதாம். பத்தாயிரம் - பதினைந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் நிருமாணித்தவை இப்போது பாடாவதி யாகத்தான் இருக்கும்' என்கிறார்கள். அமெரிக்காவிற்குத் திரும்பிப் போக வேண்டும் என்று அடம் பிடிக்கிறார்கள். அதனால்தான் விலங்கிட்டு முடக்கி வைத்திருக்கிறோம். சுவர்க்கத்தை அவமதித்திருக்கிறார்கள். இவர்களால் இங்கு வருபவர்களுக்கும் பூலோகம் திரும்பும் ஆசை தொற்றிக் கொள்ளுகிறது."

கைகால்களுக்கு விலங்கு போட்டால் இது எப்படி சொர்க்கமாகும்? இதைவிட நரகமே மேல். அங்கே விலங்கு பூட்ட மாட்டார்கள். இங்கு கவனிக்க வேண்டியது சுவர்க்கத்தின் தன்மையை. சுவர்க்கம் என்றால் சுதந்திரம், முக்தி (விடுதலை), மோக்ஷம். உனக்குச் சுதந்திரம் உள்ளது. நீ சுதந்திரமாக வாழ்வதுதான் முக்தி. இது இறுதி நிகழ்வு, இறுதித் தீர்ப்பு. எந்தக் கட்டுப்பாடும் கிடையாது.

முக்தி பெற்ற ஜீவாத்மா திரும்பிப் பூவுலக வாழ்விற்கு வர விரும்பினால் எவரும் தடுக்க முடியாது. பொதுவாக முக்தி பெற்ற ஆன்மாக்கள் திரும்பி வருவதில்லை. அதிசயமாக எவராவது திரும்பிவர விரும்பினால் எவரும் தடுக்க முடியாது. எப்படித் தடுக்க இயலும்? எவராவது தடுத்து விட்டால் அது முக்தி பெற்ற ஆத்மா இல்லை.

நீ சுவர்க்கத்திலிருந்து வெளியேறக் கிளம்பியதும் தேவர்கள் உன்னைத் தடுத்து, "நில்! உன்னை வெளியேற விட மாட்டோம். இது சொர்க்கம். எங்கே புறப்படுகிறாய்?" என்று கேட்டால், அப்போதே சொர்க்கம் தொலைந்தது.

முக்தி பெற்ற ஆத்மாக்கள் மேலுலகத்திலிருந்து திரும்பி வரும் என்று நான் சொல்லவில்லை. நான் சொல்லுவது இதுதான், 'திரும்ப விரும்பினால் எவரும் தடுக்க முடியாது'. நீ அப்படித் திரும்ப விரும்பினால்தான் என்ன செய்ய முடியும்? நீ பரமாத்மாவை மறக்க விரும்புவாயானால் நான் என்ன செய்ய முடியும்? நீ பூரண முக்தி பெற்றுவிட்டாய் என்று அறிவிப்பதுதான் என் பணி.

ஆனால் நீ கோருகிறாய், "இயன்றால் அம்சத்தை மூலத்துடன் இணைத்துவிட அருள்புரியுங்கள்!"

உன் தீர்மானம், முடிபு அற்பம், மட்டம். நீ கேட்பதன் அர்த்தம் இதுதான் - நீ இணைய விரும்பவில்லை, ஆனால் நான் சேர்த்துவைக்க வேண்டுகிறாய். இது எப்படி நடக்கும்? நீ சந்திக்க, இணைய விரும்பினால் அது நிகழும். இது உன் விருப்பம், தீர்மானம், ஆர்வம் சார்ந்து இருக்கும். வேறு எவரும் வந்து உன்னைச் சேர்த்து வைக்க முடியாது. வலுக்கட்டாயமாக மோக்ஷத்திற்கு இட்டுச் செல்ல எந்த உபாயமும் (வழிமுறை) இல்லை; உள்ளே, வெளியே எங்கும் இல்லை. நீ உன் விருப்பப்படியே நடக்கிறாய், போய்ச்சேர்!

நான் எப்படியாவது சேர்த்து வைத்தாலும், நீ வெளியேறி விடுவாய். அந்தச் சேர்க்கை வெளியிலிருந்து புகுத்தப்பட்டது. உன் ஆத்மாவோடு சேராது. நிர்ப்பந்த சம்பந்தமாகும். இது நடவாது. இந்நிலைமை இல்லாதிருந்தால் ஒரு மெய்ஞானி மகான் உலகத்தார் எல்லாரையும் முக்தி பெற வைத்து விடுவார். ஒரு மெய்ஞானி புத்தர் போதும். எல்லாரையும் இணைக்கவும், விடுதலை பெற வைக்கவும் அவரால் இயலும். அவருடைய கருணை அத்தகையது. எனினும் உன் விருப்பம் தான் முக்கியம். அதற்கு எதிராக எதுவும் நிகழாது. உனக்கு விருப்பம் இருந்தால் இப்போதே இங்கேயே நிகழும்! பிறகு சுகமாய் வாழ்வாயாக! இப்போதே நீ முக்தனாகி விடு!

பிறர் வந்து உன்னை பரமாத்மாவுடன் இணைப்பார் என விரும்பினால், அது நிகழாது, மறுபடியும் குடும்ப வாழ்க்கையில் சிக்கிக் கொள்ளுவாய். பிறர் வந்து உன்னை சுகமாக வாழவைக்கவோ, அன்பு செலுத்தவோ, மதிப்பு அளிக்கவோ, முக்தி அருளவோ, பரமாத்மாவோடு சேர்த்து வைக்கவோ நீ எதிர்பார்த்தால், விரும்பினால் அது நடவாது. அவர் அந்நியர், மற்றவர் என்பதை மறவாதே.

சரி, நீ எவ்வளவு காலத்திற்குத்தான் பலவீனனாக, ஆண்மை - வலிமையற்றவனாக இருப்பாய்? சுயசக்தியை உணர எப்போது விழித்தெழுவாய்? எப்போது உன் பேராற்றலைப் பிரகடனப்படுத்தப் போகிறாய்? நீ உன் கால்களில் எப்போது நிமிர்ந்து நிற்கப் போகிறாய்? பிறர் தோளில் சாய்ந்து வாழ்வதை எப்போது விடுவாய்? சிலகாலம்

பெண்டாட்டி தோளில், அதிகார வர்க்கத்தின் தோளில், அல்லது அரசியல் தலைவர்கள் தோளில் சாய்ந்தே, சார்ந்தே வாழ்ந்து வருகிறாய். எப்போது சுயபல பராக்கிரமத்துடன் வாழப்போகிறாய்?

**நா**ன் கேள்விப்பட்ட தகவல். தில்லி புறநகரில் சாலை அமைப்பு பராமரிப்புப் பணிகளுக்காகச் சில தொழிலாளிகள் அனுப்பப்பட்டார்கள். அவர்கள் அங்கு சென்றதும் கடப்பாறை, மண்வெட்டி, பாண்டுகளைக் கூடவே கொண்டு வரவில்லை என்பது நினைவு வந்தது. உடனே இன்ஜினியருக்குப் போன் செய்தார்கள். அவரிடமிருந்து பதில் வந்தது, "இப்போதே அனுப்பி வைக்கிறேன். அதுவரையில் நீங்கள் ஒருவன் தோளில் மற்றவன் சாய்ந்து ஓய்வு எடுங்கள். சரியா?"

தொழிலாளிகள் வழக்கமாகச் செய்யும் வேலைதான் இது.

நாமும் அப்படித்தான் பிறர் தோளில் சாய்ந்து இளைப்பாறுகிறோம். தோள்களை மாற்றிக் கொள்ளுகிறோம். கண்டசியில் குருசாமியைத் தேடுகிறோம். அவர் தோளில் சாய்ந்து, அவர்மூலம் கரைசேர முயற்சிக்கிறோம், பிரார்த்தனை செய்கிறோம், "குருதேவா! நீங்கள்தான் சம்சார சாகரத்திலிருந்து எங்களைக் கரையேற்ற வல்லவர். எங்களை உத்தாரணம் செய்தருளுங்கள்!"

நீ உன் ஆளுமை அறிவிப்பை, சுயசக்தி பிரகடனத்தை எப்போது வெளிப்படுத்துவாய்? அதில்தான் உன் சுவபாவம் (சுயத்தன்மை) அடக்கம். அது மலரவும் பரவவும் செய்யும். பிறரை அண்டி எவ்வளவு காலம் இருப்பாய்? பிச்சைக்காரனாகி கப்பரை ஏந்தித் திரியப் போகிறாயா? பரமாத்மாவும் பிச்சையாகக் கிடைக்கும் என நம்புகிறாயா? இந்தப் பேதைமை மயக்கத்திலிருந்து விழித்தெழு!

உன் கோரிக்கை, "மாறி மாறி, அடிக்கடி இந்தக் களேபரத்தில் (உலகியல் வாழ்வில்) புகுந்து, நடுங்கிச் சாகாமல் இருக்க அருள் புரியுங்கள்!"

இந்தக் களேபரத்துள் நீ விருப்புற்று வந்திருக்கிறாய். இதில் வேடிக்கை என்னவென்றால், உன்னைத் தன்னந்தனியாக இருக்க வைத்தால், அந்த ஏகாந்தத்தைக் கண்டு பயப்படுவாய். உன்னை எவன்

தடுக்கிறான்? இமயமலைக்குப் போ, ஏகாந்தமாய் வாசம் செய். பிறகு? அந்தத் தனிமை உன்னை அச்சுறுத்தும், பயந்து நடுங்கி ஓடுவாய்; பழையபடியே களேபரத்துள் வாழ வந்து சேருவாய். தனிமைப் பயம் உன்னைச் சந்தடிச் சள்ளையில் தள்ளி விடுகிறது. தனிமையில் இருக்கப் பயம், சந்தடிக்கிடையில் உழல வெறுப்பு. ஏடாகூடமான நிலைமைதான். தனிமையிலும் இருக்க முடியாது, கூட்டத்தோடு சந்தடியில் இருக்கவும் பிடிக்கவில்லை.

நீ எப்போதாவது கூட்டத்திலிருந்து விடுபட்டு தனிமையில் தவித்திருக்கிறாயா? நடுநிசி, கும்மிருட்டு, காட்டுப்பாதை, நீ தனி ஆள்; நிலைமை எப்படி ஆகும்? சந்தோஷமாகவா இருக்கும்? ஆனந்தம் பொங்குமா?

கூட்டம் சந்தடியில் கலந்து வாழ்வது மேலானதாகத் தோன்றும். தெரிந்தவன், தெரியத்தக்கவன் எவனாவது கிடைப்பான். அளவளாவலாம். தனிமையில் சோர்வு, சலிப்பு, அச்சம் ஏற்படும். சாவு நெருங்குவதாகத் தோன்றும். தனிமை சாவுக்கு சமானம்.

**ப**ரமாத்மாவிடம் இலயித்தால் தன்னந்தனியனாகி விடுவாய். ஜகத்தில் இரு பரமாத்மாக்கள் இல்லை. ஒன்றே பரம்பொருள். அதில் மூழ்கியதும் ஐக்கியமாகி விடுவாய். நீ, பரமாத்மா இரண்டும் ஒன்றாகி விடும் - அத்வைதம். இதற்காக, முன் முயற்சியாக தியான யோகத்தில் ஈடுபட வேண்டும். ஏகாந்த நிலையை உணர வேண்டும். பரம ஏகாந்தத்தில் மூழ்கவேண்டும். ஆனந்தம் மலரும். இன்னிசைப் பண் ஒலிக்கும். மதுரகீதம் எதிரொலிக்கும். ஏகாந்தத்தில் துவக்கத்தில் இசைவு, விருப்பு தோன்றிய பின் பரம ஏகாந்தத்தில் (ஆழ்ந்த தனிமை) கலப்பாய். பரமாத்மாவைப் பெற, ஏற்க இதொரு பயிற்சி.

என்னைக் கேட்டால் நான் இதைத்தான் சொல்லுவேன், "தியானம் பரமாத்மாவைப் பெற வழிமுறை ஆகாது. தியானம் செய்யாமலும் பரமாத்மாவைப் பெறலாம். தியானம் பரமாத்மாவைத் தாங்கும் திறன் தரும் பயிற்சி. நீ தகுதிபெற உதவுகிறது. பரம ஏகாந்தத்தில் ஆழ்ந்து விடுவாயானால், நீ முற்றிலும் தனியனாகி விடுவாய். பிறகு பிற பௌதிக பாதிப்புகள் - ரேடியோ, டி.வி., செய்தித்தாள், உற்றம் சுற்றம், மனம்மகிழ் கிளப்புகள், சபாக்கள்,

சமுதாயம் - எதுவும் உன்னை அண்டாது. பரமாத்ம ஐக்கியம் எனும் ஒருமைக்குத் தயாராகி விடுகிறாய்.

நான் உன்னை சம்சாரக் களேபரத்திலிருந்து வெளியே கொணரத் தயாராக இருக்கிறேன். நீ தயாரா? நீ தனிமையில் யோக சாதனையில் அமர்ந்தாலும், உன் மூளையில் அக்களேபரத்தை இயங்க வைக்கிறாய். எந்த உற்றம் சுற்றங்களைத் துறந்து வெளியேறியிருக்கிறாயோ, அவர்களோடு மூளையில் சிந்தனை மூலம் உறவாடுகிறாய், துறந்து வந்த மனைவியோடு தலைக்குள் உரையாடுகிறாய். கூட்டம் கும்மாளங்களைத் தலைக்குள் இயங்க வைக்கிறாய். கற்பனைகளைப் படைக்கிறாய். உன்னால் தன்னந்தனியாக இருக்கவே முடியாது. இதனால்தான் நீ (பரமாத்மாவிடமிருந்து) அடிக்கடி இங்கே திரும்பி வந்து விடுகிறாய்.

சம்சார சாகரத்துள் புகத் திரும்பிவரக் காரணம் நீதான். இந்தக் கோலாகலம் (சம்சாரக் களேபரம்) நீ விரும்பியது, அதனால்தான் உனக்கு அது லபித்திருக்கிறது.

**மனித வாழ்வு எதுவுமில்லை, இதில்**
**எதுவும் இல்லை என்பதுதான் செய்தி**
**மனிதனின் வாழ்க்கையில் எதுவுமில்லை**
**மானுட வாழ்வும் ஒரு வாழ்வா?**
**வாழ்வு என்றால் அது பரம்பொருள் வாழ்வு**
**எதுவும் இல்லை இதில், என்பதுதான் செய்தி**
**மனிதன் எதுவும் இல்லை எனும் விவரம்.**

**மு**ன்பு முல்லா நஸருத்தீன் கட்டிலிலிருந்து விழுந்து முழங்காலை ஒடித்துக் கொண்டானே, அது வீண் விஷயம் (எதுவும் இல்லை எனும் விவரம்). பிள்ளை பிறக்கவில்லை, அதற்காக கட்டிலில் இடம் ஒதுக்குகிறான். கீழே சரிந்து விழுகிறான். கால் ஒடிந்தது.

நீதிமன்றத்தில் வழக்கு நடக்கிறது. இரு நபர்கள் ஒருவருக்கொருவர் மண்டையை உடைத்து விட்டார்கள். நீதிபதி கேட்டார், "என்ன தகராறு?" குற்றவாளிகள் கூச்சப்பட்டார்கள். தயங்கித் தயங்கி, "எப்படிச் சொல்லுவது? சொல்லவே வெட்கமாக இருக்கிறது. உங்க இஷ்டப்படி தண்டனை கொடுங்க, ஏத்துக்கிறோம்" என்றார்கள்.

நீதிபதி, "விவகாரம் தெரியாமல் எப்படி, யாருக்குத் தண்டனை கொடுப்பது?" என்று கேட்டார்.

இருவரும் ஒருவனை ஒருவன் பார்த்து, "நீ சொல்! நீ சொல்!" என்று சாடை காட்டினார்கள். நீதிபதி அதட்டவே இருவரும் மாறி மாறிக் கூறினார்கள் - "நாங்கள் நண்பர்கள், ஆற்றுப் படுகையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். இவன், 'நான் ஒரு எருமை மாடு வாங்கப் போகிறேன்' என்று சொன்னான். நான் சொன்னேன், 'எருமையை வாங்காதே. நான் சாகுபடி நிலம் வாங்கப் போகிறேன். அதில் பயிர் வளரும். உன் எருமை அதை மேய்ந்து விடும். என் விளைச்சல் நாசமாகும். நமக்குள் தீராப்பகை ஏற்படும்' என்றேன்.

"அதற்கு இவன் சொன்னான், 'போடா பொக்கி! நீ நிலம் வாங்குறதுக்கு வேண்டி நான் எருமை வாங்காமே இருக்க முடியுமா? நீ நிலம் வாங்காதே! எருமை மாடு கண்ட இடத்திலே மேயத்தானே செய்யும்? அதன் பின்னாலேயே போய்க் கொண்டு இருக்க முடியுமா? என் மாட்டை உன் நிலத்திலே மேயவிட மாட்டேன் என்றால் இதென்ன சிநேகம்? நீ ஒரு சிநேகிதனா?"

"எனக்கு ரோசம் வராதா? 'எலே! நான் நிலம் வாங்கியாச்சின்னு வெச்சுக்க. எங்கே, நீ எருமை மாட்டை வாங்கி வா, பார்க்கலாம்' என்று சூளுரைத்து, மணல் வெளியிலே கைத்தடியாலே கோடு போட்டுக் காட்டினேன், 'இதுதாண்டா என் சாகுபடி வயல்' என்றேன். இந்த மடையன் தன் கைத்தடியை என் வயலுக்குள்ளே நுழைச்சு 'இதுதான் என் எருமை', மேயட்டும். அப்பாலே போ!' என்று அதட்டினான். வாய்ச்சண்டை கைச்சண்டையாயிடிச்சு. நான் அவனைத் தடியால் அடிக்க, அவன் திருப்பித் தடியால் என்னை அடிக்க, சண்டை வலுத்தது. இரண்டுபேர் மண்டைகளும் உடைஞ்சு ரத்தக் களரி ஆயிடிச்சு. முன்சீஃப் ஐயா! நீங்க தண்டனை கொடுங்க. சொல்லவே கூச்சமாயிருக்குங்க."

**மனித வாழ்வு உதவாக்கரை**
**எதுவும் இல்லை என்பதுதான் செய்தி,**
**நீ மனிதனுக்கு எல்லாம் கொடுத்தாய்**
**இருந்தாலும் மனிதச்சாதி உதவாக்கரை,**
**உள்ளம், அறிவு ஆர்ப்பரிப்பு தவிர**

ஆபத்து - விபத்து மோகம் வேறு இல்லை,
எழில்சூழ் உலகம்தான் சகலமும்
காதல் சூழ் உலகம் ஏதுமில்லை
மனிதன் ஆடை அங்கியை மாற்றுகிறான்
இந்த அழியும் உலகம் உதவாக்கரை
மனித ஜீவிதமும் எதற்கும் பயனில்லை
இங்கு எதுவுமே இல்லை என்பதுதான் செய்தி.

'நீ வெறும் உதவாக்கரை, வேறு எதுவும் இல்லை' என்பதை நீ உணர்ந்தால் போதும், உனக்கு எல்லாமே அறியவரும், புரிந்து கொள்ளுவாய்.

**கடைசிக்கேள்வி :**

**வெகுநாளாக உங்களிடம் கேள்வி கேட்க விரும்புகிறேன். நான் என்ன கேள்வி கேட்க வேண்டும் என்பதை அருள் கூர்ந்து நீங்களே சொல்லுங்கள். இந்த சிஷ்யையின் வணக்கத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்.**

**நி**ச்சயிக்கப்பட்ட விஷயம். பல வருடங்களாக இந்த அம்மணியை அறிவேன். அவள் என்னிடம் எதுவும் கேட்டதில்லை. இப்படிப்பட்டவர்கள் சிலர்தான். முதல் முறையாக இவர் இப்படிக் கேட்டிருக்கிறார். ஆனால் எதுவும் கேட்கவில்லை.

"வெகுநாளாக உங்களிடம் கேள்வி கேட்க விரும்புகிறேன். நான் என்ன கேள்வி கேட்க வேண்டும் என்பதை அருள்கூர்ந்து நீங்களே சொல்லுங்கள்"

வாழ்க்கையில் உண்மையான கேள்வி கேட்க இயலாமல் இருப்பதுதான். நீ கேட்கக்கூடிய கேள்வி கேட்கக்கூடாததாக இருக்கும். உன்னால் கேட்க இயலாமல் இருப்பதுதான் நீ கேட்க வேண்டிய, கேட்கத்தக்க கேள்வியாகும். வாழ்வினைச் சார்ந்த உண்மையான கேள்வியை சொற்களுக்குள் கட்டுப்படுத்த முடியாது. வாழ்வின் நிஜக்கேள்வியை தெளிந்த கண்களால், ஆர்வம் மிளிரும் விழிகளால் மட்டுமே விண்ணப்பிக்க முடியும். ஜீவிதத்தின் வினா நிலைபெறும் இருப்பைச் சார்ந்தது. உனது திடமான உணர்ச்சிப் பாங்கினால்தான் வெளிக்காட்ட முடியும்.

அந்த அம்மணி துலாரியை நான் பல நாட்களாக அறிவேன். அவள் என்னிடம் நேரிடையாக ஏதும் வினவவில்லை. ஆனாலும் அவள் கேள்வியைச் செவிமடுத்திருக்கிறேன். அது அவளுடைய கேள்வி இல்லை. நீ நேரிடையாகக் கேட்பது உனது கேள்வி; உன்னால் கேட்க இயலாதது பலருக்கும் பொதுவான கேள்வி.

நம் எல்லோரிடமும் ஒரே கேள்வி உள்ளது. அது இதுதான் - இங்கு எல்லாம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. எனினும் எதிலும் எந்தப் பயனும் காணோம். இந்த ஆட்டம் பாட்டம் ஓட்டம், போட்டா போட்டி - இதற்கெல்லாம் எந்தப் பொருளும் இல்லை. நிறையப் பெறுவதும் இழப்பதும் நிகழ்ந்து கொண்டிருந்தாலும் எதுவும் கைக்கெட்டியதாகத் தெரியவில்லை, கையை விட்டுப்போனதாகவும் தெரியவில்லை. பல பிறவிகளிலும் தொடரும் நீள் பயணம், இலக்கு எதுவெனத் தெரியவில்லை. நாம் வாழ்கிறோம், ஏன் வாழ்கிறோம்? நம் இருப்பு எத்தகையது? நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்? என்ன நடக்கிறது இங்கே? நம் வாழ்வுக்கு என்ன பொருள்? இந்த ஜீவித சங்கீதத்திற்கு என்ன பயன்?

எல்லாருடைய உள்ளங்களிலும் இந்தக் கேள்விகள் அழுந்தி இருக்கின்றன. நம் இருத்தல் சார்ந்த கேள்வி. நமது இருத்தலுக்கு என்ன அர்த்தம்? இதற்குச் சொற்களால் பதிலளிக்க முடியாது. கேள்வியே சொற்களுக்குள் அடங்காதபோது, பதிலை எப்படிச் சொற்களால் தரமுடியும்?

நம் அகத்தினுள் எது நித்தியவாசம் செய்கிறதோ, அதை நீ எப்படி வேணுமானாலும் கூறலாம் - சாக்ஷி, த்ரஷ்டா, ஜீவனதாரை, சைதன்னியம்; அது 'அநாமம்' (பெயர் இல்லாதது). பரம்பொருள், நீ விருப்பமான பெயரைச் சூட்டிக்கொள் - பரமாத்மா, மோக்ஷம், நிர்வாணம், ஆத்மா, அநாத்மா (ஆத்மா அல்லாதது), பூரணன், சூனியம். மிக முக்கியமான விஷயம், நீ அந்த 'அநாம'த்தில் (பெயர் இல்லாதது) மூழ்கிவிடு. பிறகு உன்னுள் எழும் கேள்விகள் விலகிவிடும். பதில் கிடைக்கும் என்று கூறமாட்டேன். கேள்வி விலகும், இது மட்டுமே நிகழும். கேள்வி விலகியதும் நீ சைதன்ய நிலையை அடைவாய். இதுதான் உனக்குரிய பதில். வேறு பதில் கிட்டும் என்று சொல்ல மாட்டேன்.

கேள்வியற்ற நிலையில் ஜீவிதம் ஆனந்தமயமாகும், மங்களம் நிகழும், சுப ஆசிகள் கிட்டும். நீ களிப்புற்று நடனமாடுவாய். மெல்லிசையை முணுமுணுப்பாய். சமாதி சித்திக்கும். பிறகு உன்னிடம் எந்தக் கேள்வியும் எழாது. கேள்விக்கு எதுவுமே இருக்காது. உன் வாழ்க்கை கேள்விக் குறியாகாது. வாழ்க்கை ஒரு ரகசியம், பிரச்சினை இல்லை, சமாதானப் படுத்தவேண்டாம். வாழப் பழக வேண்டிய ரகசியம். அதற்காக ஆடிப்பாடி மகிழவேண்டும். விழா எடுத்து உற்சவம் கொண்டாட வேண்டிய ரகசியம் அது.

**ஆழ்மனசினுள் இறங்கு**
**மேனி, மனத்தைக் கடந்து**
**உணர்வையும் கடந்து உள்ளே செல்!**
**வாழ்நாள் முழுவதும் அநுபவித்து**
**நாம் கண்டு கொண்டோம்**
**பாசம், நேசம், எது, எங்கே என்று,**
**மலர் எங்கே நறுமணம் வீசும்?**
**நீண்டு வாழ்ந்து கண்டு கொண்டோம்**
**பாசம், நேசம், பரிவு எங்கே என்று,**
**மலர் எங்கெல்லாம் மணக்குமென்றும்;**

சுகந்தம் வீசுகிறது, எங்கிருந்து? வாழ்க்கையின் நிழல் படிகிறது, இதன் ஆதாரம் எங்கே? பிரதி பிம்பம் பிரதிபலிக்கிறது. ஆனால் மூலாதாரம் எங்கே? பிரதித்தொனி மலைமுகடுகளில் ஒலிக்கிறது; மூலத்தொனி எங்கே எழுகிறது?

**வாழ்நாள் முழுவதும் அநுபவித்து**
**நாம் கண்டு கொண்டோம் -**
**பாசம்,நேசம் எது?**
**மலர் எங்கே நறுமணம் வீசும்? என்று,**
**ஏக்கத்தின் உருவாய் துலாரி வந்தாள்**
**ஈட்டிக் குத்தலாய் புன்னகை கிட்டியது**
**நீண்டு வாழ்ந்து கண்டு கொண்டோம் -**
**சுகந்தம் எங்கே? மகரந்தம் எங்கே?**
**கார்முகில் எங்கே மழை பொழியும்?**

கார்முகில் உன் உள்ளார்ந்த அகத்தினுள் பாசமழை பொழிகிறது. உன் ஆழ்மனத்துள் மலர் மணக்கிறது - கஸ்தூரி மானின்

அண்டகோசத்தில் கஸ்தூரி கமகமப்பதுபோல். உன்னுள் வினா எழுகிறது. 'இந்த சுகந்தம் எங்கிருந்து மணக்கிறது?' இந்த சுகந்தம் உனது, பிறரது அல்ல. இந்நறுமணத்தை நீ வெளியே தேடினால், அது கானல்நீர் போலாகும், மாயாஜாலம் விரியும். பல பிறவிகள் தொடர்ந்து பயணிக்கிறாய். இலக்கை எட்டவில்லை. என்றைக்கு நீ உன் ஆழ்மனத்துள் எட்டிப் பார்க்கிறாயோ, அன்றே பரமாத்மாவின் ஆலய மணிக்கதவம் திறக்கப்பட்டு விடுகிறது. அன்றே உன் இலக்கான அமுதசுரபியின் கேந்திரத்தானத்தை அடைந்து விடுகிறாய். அங்கு உன் பிரேமை, பிரபு (பரமாத்ம சான்னித்தியம்) கிட்டிவிடும்.

மனசு உன்னை வெளியே தக்க வைத்திருக்கிறது. அது சொல்லும், "உள்ளே போகலாம். பொறு என்ன அவசரம்? சிறிது நேரம் இங்கே தங்கியிரு!"

**ஏதோ ஒரு நல்லாசை உதவியோடு**
**நதிக் கரையில் வெகுநேரமாக**
**மௌனமாய், தனியாய் நிற்கிறேன்,**
**செவ்வொளி படர்ந்த மாலைப்போது**
**இதயத்திற்கும் இதமாய் இனிதாகிறது**
**ஆவல்மிகு ஆனந்த விழாக்கோலம்**
**இம்மாலைப் போதின் அந்தி மயக்கம்**
**என் சிந்தையுள் பரவியுள்ளது.**
**நான் நினைப்பதெல்லாம் -**
**என் சிந்தனையின் அந்தி மயங்குகிறது**
**தடங்கல், தடுமாற்றம், மனச்சள்ளை**
**நிஜ ஜீவித வாழ்வில்**
**நிராசையிலும் ஓர்ஆசை நம்பகமாகிறது**
**மனசே! மேலும் சிறுநேரம் குதூகலி!**
**ரம்மிய இருள்மயக்கத்தில்**
**மலர்ந்து மகிழ்ந்து தழுவிக்கொள்!**
**இராப்போது இருள்கவிய இன்னும்**
**நிறைய நேரம் உள்ளது.**

மனசு 'இன்னும் கொஞ்ச நேரம், மேலும் சிறிது நேரம்' எனப் போதனை செய்து கொண்டிருக்கிறது. உன்னையே கனவுகளில் மறந்துவிடு. சிறிது நேரம் கானல்நீர் மாயங்களின் பின்னால் ஓடு. மிக இனிய கனவுகள், மரணம் நெருங்க நெடுங்காலம் உள்ளது.

இதனால் ஜனங்கள் யோசனை செய்கிறார்கள் - துறவு மேற்கொள்ளுவோம், வழிபாடு வேண்டுதலைச் செய்வோம், தியானம் அநுட்டிப்போம், குறிப்பாக, வயோதிக தசையில், சாக்காடு நெருங்கும் போது. ஒருகால் காலதேவனை நாடிக் கீழிறங்கும்; மறுகால் தியான யோக சித்தி பெற மேலெழும்பும்.

**மனசே! மேலும் சிறுநேரம் குதூகலி!**
**ரம்மிய இருள்மயக்கத்தில்**
**மலர்ந்து மகிழ்ந்து தழுவிக்கொள்!**
**இராப்போது இருள்கவிய இன்னும்**
**நிறைய நேரம் உள்ளது.**

இப்படித்தான் நாம் தப்பித்துக் கொண்டு போகிறோம். இரவு வரும், போகும். விரைவாகவே இரவு வந்து விடுகிறது. பலமுறை நாம் பிறவியையும் வாழ்வையும் தொலைத்திருக்கிறோம். சாவை எதிர்பார்க்கிறோம், சாகிறோம். தியானம் வசப்படுவதற்கு முன்பே மரித்து விடுகிறோம். வாழ்க்கை வீணாகிறது. கிடைத்த வாய்ப்பு கெடுகிறது. இந்த முறை எச்சரிக்கையாக இருக்க வேண்டும். வாய்ப்பைக் கைநழுவ விடக்கூடாது. இந்த வாசனை (விழைவு) உனக்கே உரியது. இவ்வாழ்வு உன்னுள் மறைந்திருக்கிறது. உள்ளிருக்கும் திரையை விலக்க வேண்டும்.

வெளியே கேட்க வேண்டிய கேள்வி இல்லை இது. வெளியிலிருந்து பதில் வராது. எங்கிருந்து கேள்வி எழுகிறதோ, அந்த ஆழ்மனத்துள் இறங்கிப் பார். கேள்வி தெளிவில்லாமல் நிழலாடும் உள்ளகத்துள் நுழைந்து பார். கேள்வியை அங்கே ஆராய்ந்து பார். கேள்வி என்ன என்பதைப்பற்றிக் கவலைப்படாதே. எங்கிருந்து கேள்வி எழுகிறது என்பதை ஆராய்ந்து பார். அதற்காகக் கவலைப்படு. ஆழ்மனத்திற்கும் அடியில் தேடிப்பார். அங்கிருந்துதான் கேள்வி எழுகிறது. அந்த இடத்தைத் தேடு!

பதில் பற்றிப் புரிந்து கொள், நிர்ணயம் அதில் கிட்டிவிடாது. பதில் என்பதன் பொருள் - வாழ்வின் மேன்மையை நீ உணரும்நிலை. அந்நிலையில் வாழ்வு புதிர் அல்ல, திருவிழாவாகி விடுகிறது.

**எழிலார்ந்த மௌனம்**
**அதில் கொதிக்கும் ஆசைக்ள் வெளிப்படும்**

**எரித்துவிடும், ஒடுங்கிவிடும்,**
**அதில் ஓசையில்லாத உன் இசை ஒலிக்கும்**
**நீதிநெறிப் பிரகடனம் நிகழும்!**
**எழிலார்ந்த மௌனம்**
**அதில் கொதிக்கும் ஆசைகள் வெளிப்படும்**
**எரித்துவிடும், ஓடுங்கிவிடும்.**

இல்லை, உள்ளகத்தில் ஒரு மௌனம், ஒருசாந்தி; அதில் எல்லா ஆசைகளின் தாபமும் அடங்கிவிடும்; அதில் ஓசையில்லாத உன் இசை ஒலிக்கும். பிறகு எந்த ஒலியும் (ஸ்வரம்) கேட்காது. வெறும் சந்தம் (ஒசை நயம்) மட்டுமே கேட்கும் - சொல், சுவரம் இல்லாத சந்தம், சுத்தமான சந்தம் ஒலிக்கும்.

**அதில் ஓசையில்லாத உன் சந்தம் ஒலிக்கும்**
**நீதி நெறிப் பிரகடனம் நிகழும்**
**அங்குதான் ஜீவித சத்தியம் வெளிப்படுகிறது**
**நீதிநெறிப் பிரகடனம் நிகழ்கிறது,**
**கருங்கரைசல் போன்ற இரவு -**
**அதில் உருவம், மூர்த்தம், பிரதிமை எல்லாம்**
**கரைந்து புகலடைகின்றன**
**கனவு-நனவுகளைக் கடந்த புனித**
**ஆழ்ந்த நித்திரையில்,**
**அதினின்றும் நீ எழும்பி கைநீட்டி**
**வேகமாய் பற்றி இழுத்துக் கொள்ளுகிறாய்,**
**ஆரத்தழுவிக் கொள்ளுகிறாய்!**

**ப**ரமாத்மா உன்னுள் மறைந்திருக்கிறான். நீ உள்ளார்ந்து இறங்கிப்பார். மூர்த்திகளை விட்டுவிடு! எண்ணங்களையும், உருவகங்களையும், தீர்மானங்களையும் விட்டுவிடு! உள்ளத்துள் எழும் குமிழிகள். இன்னும் ஆழத்துள் இறங்கு. அங்கே அலைகள், இரைச்சல் இராது. ஆழ்ந்த மௌனம். பரம நிசப்தம். அம்மௌனம் மட்டுமே ஒலிக்கும்!

**அதில் ஓசையில்லாத உன் சந்தம் ஒலிக்கும்**
**நீதி நெறிப் பிரகடம் நிகழும்;**
**அதனுள் இறங்கு!**
**அதிலிருந்து நீ கை உயர்த்தி**

**வேகமாய் பற்றி இழுத்துக் கொள்ளுகிறாய்**
**ஆரத்தழுவிக் கொள்ளுகிறாய்;**
**அங்கேதான் சேர்க்கை இணைப்பு**
**சுய பாசபந்தம்!**

நீ தேடிக் கொண்டிருப்பது உன்னுள் மறைந்துள்ளது. நீ எந்தக் கேள்வியைத் தேடிக் கொண்டிருக்கிறாயோ, அதற்குரிய பதில் உன்னுள்ளேயே மறைந்திருக்கிறது. விழித்துக் கொள்! இக்கணமே அதை அநுபவி!

அஷ்டாவக்கிரரின் எல்லா சூத்திரங்களும் (நூற்பா) ஒரே செய்தியைத்தான் போதிக்கின்றன – "அதைப் பெற வேண்டுவதில்லை. பெற்றிருக்கிறாய். விழித்தெழு! உய்த்து உணர்ந்து கொள்!"

**ஹரி ஓம் தத்ஸத்!**



ஜனகர் கூறினார் -

அஹோ நிரஞ்ஜன: சாந்தோ போதோ (அ)ஹம் பிரகிருதே: பர: |
ஏதாவந்தமஹம் காலம் மோஹேனைவ விடம்பித: || (21)

யதா ப்ரகாசாம்யேகோ தேஹமேனம் ததா ஜகத் |
அதோ மம ஜகத் ஸர்வம் அதவா ந ச கிஞ்சன || (22)

ஸ சரீரமஹோ விச்வம் பரித்யஜ்ய மயா (அ) துநா |
குதஸ்சித் கௌசலாதேவ பரமாத்மா விலோக்யதே || (23)

யதா ந தோயதோ பின்னஸ்தரங்கா: ப்பேனபுத்புதா: |
ஆத்மனோ ந ததா பின்னம் விச்வம் ஆத்ம விநிர்கதம் || (24)

தந்துமாத்ரோ பவேதேவ படோ யத்வத் விசாரத: |
ஆத்ம தன்மாத்ரமே வேம் தத்வத் விச்வம் விசாரிதம் || (25)

யதைவ இக்ஷுரஸே க்லுப்தா தேன வ்யாப்தேவ சர்க்கரா|
ததா விச்வம் மயி க்லுப்தம் மயா வ்யாப்தம் நிரந்தரம் || (26)

ஆத்மா அக்ஞாநாத் ஜகத் பாதி ஆத்மஞானாத் ந பாஸதே |
ரஜ்ஜு அக்ஞானாத் அஹிர்பாதி தத்க் ஞானாத் பாஸதே ந ஹி ||
(27)

கும்மிருளில் திடீரென வெளிச்சம் பரவினால், குருடனுக்கு எதிர்பாராமல் கண்ணொளி கிட்டினால், எப்படி இருக்கும்? அப்படித்தான் பேரரசர் ஜனகருக்கு நிகழ்ந்தது. இதுவரைக் காணாததைக் கண்டார், இதுகாறும் கேளாததைக் கேட்டார். அவர் இதயம் புதிய அலைவீச்சால், புதிய உற்சாகத்தால் நிரம்பியது. உயிர் புதிய தரிசனம் கண்டது. நிச்சயமாக இதற்கெல்லாம் தகுதி படைத்தவர்தான் ஜனகர்.

மழைபொழிகிறது, மலைமுகடு, அடிவாரம் எல்லாம் நீர் நிரம்புகிறது. அதற்கு முன்பு வெற்றிடமாக இருந்தது. பெருமழை கொட்டும்போது ஏரிகள் நிரம்பி விடுகின்றன. கணுக்கால் அளவு இருந்த நீர்த்தேக்கம் கழுத்தளவுக்கு உயர்ந்து விடுகிறது.

வெறுமையான பாத்திரம் உத்தமமானது; நிரம்பியுள்ளது தகுதியற்றது.

அகங்காரம் மனிதனைக் கல்லாக்கி விடும். செருக்கின்மை மனிதனை வெறுமை, சூனியம் பெற வைக்கிறது.

ஜனகர் வெறும் (ஏதும் இல்லாத) பாத்திரம். ஒருகண நேரத்தில் பேரதிசயம் (அஹோபாவனை) ஏற்பட்டது. கேட்டதுமே விழிப்புற்றார். எவரும் கூப்பிடவில்லை, அழைப்புக் கிட்டியது. சாட்டையின் நிழலே போதுமானது, சாட்டையைச் சொடுக்கவும் தேவைப்படவில்லை.

அஷ்டாவக்கிரரும் பாக்கியசாலிதான். அவருக்கு ஜனகர் போன்ற தக்கவர் (சுபாத்திரம்) தத்துவ போதனையைச் செவி மடுக்கக் கிடைத்தாரே! மனித இன வரலாற்றில் எத்தனையே குருமார்கள் தோன்றியிருக்கிறார்கள். ஆனால் அஷ்டாவக்கிரரைப் போன்ற பாக்கியசாலியான குருதேவர் வேறு எவரும் இல்லை. ஜனகர் போன்ற அரிய, சீரிய நற்சீடர் கிடைத்தாரே! சிறு சமிக்ஞையிலேயே விழிப்படைந்து விட்டாரே; காத்திருந்தவர் போலும். இளங்காற்றின் மெல்லிய தீண்டல் பட்டதும், உறக்கம் நீங்கியது. ஆழ்ந்த உறக்கம் இல்லை. கனவில் இலயித்திருக்கவில்லை. தொட்டதும் எழுந்துவிடும் இலேசான உறக்கம். கருக்கல் விடியப் போகும் பிரும்ம முகூர்த்த வேளை.

**பௌ**த்த ஜாதகக் கதையில் கூறப்பட்டுள்ளது. புத்தர் ஞானபோதம் பெற்றதும் ஏழு நாட்கள் வரையில் மௌனமாக இருந்தாராம். அவர் எண்ணினார், 'என் உரையைப் புரிந்து கொள்ளுபவர்கள், நான் உரைக்காது இருந்தாலும் கருத்தை அறிந்திருப்பர். என் உரையைப் புரிந்து கொள்ளாதவர்கள், நான் தொடர்ந்து அறிவுறுத்தினாலும் புரிந்து கொள்ளப் போவதில்லை. எதற்காக உரைக்க வேண்டும்? வீண் பிரயாசை எதற்கு? விழித்தெழ

ஆயத்தமாக இருப்பவர்களுக்கு ஏதாவதொரு வழிவகை தூண்டுதலாகக் கிட்டும். அவர்களை அழைக்கவோ, கூப்பாடு போடவோ தேவை இல்லை. ஏதாவதொரு பறவை கூவினாலும், காற்று மரங்களைத் தழுவி சலசலத்தாலும் போதும்.

அப்படித்தான் நிகழ்ந்தது.

ஒரு மரத்தடியில் லாவோத்சு உட்கார்ந்திருந்தார். சருகு இலை மரத்திலிருந்து வீழ்ந்தது. அதைப் பார்த்த லாவோத்சுவிற்கு ஞானபோதம் ஏற்பட்டது. அச்சருகு அவருக்குக் குருவாகியது. எல்லாமே தெரிந்தது. சருகு இலையில் தன் பிறப்பு, இறப்புகளைக் கண்டார். இன்றோ நாளையோ நானும் இச்சருகு போல் உதிர்ந்து விடுவேன். ஞானம் நிறைவு பெற்றது.

புத்தருக்கும் இப்படித்தான் நிகழ்ந்தது. வழியில் நோயாளிக் கிழவனைப் பார்த்ததும் திடுக்கிட்டார். சவ ஊர்வலத்தில் சடலத்தைப் பார்த்து, "இவனுக்கு என்ன ஆயிற்று?" எனப் பிரமித்தார், சாரதியிடம் வினவினார்.

ரத சாரதி சொன்னான், "இது மனிதருக்கு ஏற்படும் இறுதி நிலை. ஒருநாள் உங்களுக்கும் எனக்கும் ஏற்படும் மரணம் இது."

"ரதத்தைத் திருப்பு! அரண்மனைக்குப் போ! இனி எங்கும் நான் போக மாட்டேன். சாவு நெருங்கும்போது வாழ்வு வீணாகி விட்டது புரிகிறது." சித்தார்த்தர் பதைபதைத்துப் போனார்.

நீயும்தான் தெருவில் கொண்டு போகப்படும் சவங்களைக் கண்டிருப்பாய். தெரு ஓரத்தில் உட்கார்ந்து சிறிது நேரம் அநுதாபப் பட்டிருப்பாய். "ஐயோ.. பாவம், அப்பாவி மனிதன் செத்துவிட்டானே. வாலிபப் பிராயம். குடும்பம் வளரவில்லை, திண்டாடும். இது ரொம்ப அநியாயம்."

செத்தவனுக்கு நீ இரக்கப்படுகிறாய். நீ உனக்காக இரக்கப்பட்டாயா? உன் சாவைத்தானே அவன் அறிவித்திருக்கிறான். இதேபோல் நீயும் ஒருநாள் சவமாய், பாடையில் பயணிப்பாய். நீ தெரு முக்கத்தில் இருந்து இவனுக்காக இரக்கப்படுவதைப் போல், உனக்காக மற்றவரும் இரக்கப் படுவார்கள். உன் நிலைமை, நன்றி கூற முடியாமல்

கட்டையாய் கிடப்பதுதான்.. இதோ சுமந்து செல்லப்படுகிறதே அது உன்னுடைய சவமும்தான்.

சரியான பார்வையாளனாக இருந்தால், ஆழ்ந்த சைதன்யம் இருந்தால், அகக்கண் கூர்மையாக இருந்தால் போதும், 'ஒரு மனிதன் மரித்தால் எல்லா மானுடமும் மரித்து விட்டது, இகவாழ்வு விரயமாகி விட்டது' என்பது புலப்படும், உணரப்படும்.

சகலத்தையும் துறந்து புத்தர் வெளியேறி விட்டார்.

அவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது. அப்போது அவர் சிந்தித்தார், "மதி மயக்கத்திலிருந்து எழக்கூடியவன் பிறர் எழுப்பாமலேயே எழுச்சி பெறுகிறான். ஏதாவதொரு காரணம், சாக்குப் போக்கு போதும்."

ஒரு ஜேன் மத பக்தை நிலா இரவில் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துச் சென்றாள். காவடிக் கம்பின் இரு நுனிகளிலும் நீர்க்குடத்தைக் கட்டித் தூக்கிச் சென்றாள். வழியில் காவடிக் கம்பு ஒடிந்து விட்டது. இரு குடங்களும் கீழே விழுந்து, தண்ணீர் தரையில் வழிந்தோடியது. பௌர்ணமி நிலவு. குடத்து நீரில் முழுமதியின் பிரதிபிம்பம் பொலிந்தது. தினமும் காணும் காட்சி. குடத்து நீர் தரையில் கொட்டி வழிந்ததும் பிரதிபிம்பம் மறைந்து விட்டது. ஜேன் பக்தை பதறிப் போனாள். குடத்து நீரோடு சந்திர பிம்பமும் போய் விட்டதே! அப்போதே அவளுக்கு ஞானோதயம் ஏற்பட்டுவிட்டது. ஆசிரமத்தை அடையும் முன்பே அவளுக்கு நடு வழியிலேயே சமாதி நிலை ஏற்பட்டு விட்டது. ஆனந்தக் கூத்தாடினாள். 'இந்தப் பௌதிக உலகம் வெறும் பிரதிபிம்பம் மட்டுமே' என்பதை உணர்ந்து கொண்டாள். நாம் இங்கு உருவாக்குவதெல்லாம் ஒருநாள் உருக்குலைந்து அழிந்து போகும் - சந்திர பிம்பங்களைப் போல. இந்த இனிய இலக்கியப் படைப்புகள், அழகிய உருவங்கள் சகலமும் மறைந்து போகும். இவை தண்ணீரில் தோன்றிய பிரதி பிம்பங்கள். தோன்றிய போது தென்பட்டன, காட்சியளித்தன. காலாவதியானதும் கரைந்து போயின.

பிறகு, புத்தர் சிந்தித்தார், 'இந்த உலகாயத வாழ்வில் என்ன சாரம் (மகத்துவம், நோக்கம்) இருக்கிறது? எவரிடம் சொல்லுவது? எல்லாருமே உறக்கக் கிறக்கத்தில் கிடக்கிறார்கள். விழித்தெழ

விரும்புபவன், விழித்தெழ வேண்டியவன் என் போதனை இல்லாமலேயே, தாமதித்தாவது எழுந்து விடுவான். காலம், நேரம் வேறுபடும். எழுந்திருக்க வேண்டாதவன் எவ்வளவுதான் உசுப்பி கூச்சலிட்டு எழுப்பினாலும் புரண்டு படுப்பான், எழுந்திருக்க மாட்டான். கண் விழித்தாலும், சினந்து பார்ப்பான், "ஏன் என் உறக்கத்தைக் குலைக்கிறாய்? உனக்கு வேறு வேலை இல்லையா? தூங்க விடமாட்டாயா? சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தேன், எழுப்பி அவதிப்பட வைத்து விட்டாயே, உனக்கு என்ன கேடு?...." என்று ஏசுவான்.

இமேனுவல் காண்ட் பிரபல ஜெர்மனி சிந்தனையாளர். அவர் தினமும் விடிகாலை மூன்று மணிக்கு படுக்கையிலிருந்து எழுந்து விடுவார். எல்லாமே அவருக்கு மணிக்கணக்கில் நடைபெற வேண்டும். கடிகார முள் குறிப்பதைப் போலவே அவருடைய நிகழ்ச்சிகள் இருக்கும். அவர் பல்கலைக் கழகத்திற்கு வகுப்பு நடத்தச் செல்லும் போது, தெருவில் இருப்பவர்கள் சரியான நேரம் குறிக்க கைக் கடிகாரங்களைச் சரிசெய்து கொள்ளுவார்களாம். இதேபோல் முப்பது ஆண்டுக்காலம் நேரம் தவறாமல் துல்லியமாகச் செயல்பட்டு வந்தார். குளிர் காலத்தில் வேலைக்காரனுக்கு உத்திர விடுவார், "என்ன ஆனாலும் சரி, பின் இரவு மூன்று மணிக்கு என்னை எழுப்பி விடவேண்டும். உலுக்கி, புரட்டி, அடித்தாவது என்னை எழுப்பி விடு! நான் திருப்பி அடித்தாலோ, திட்டினாலோ பொருட்படுத்தாதே. நீயும் திருப்பி அடி. ஆக, எப்படியும் என்னை எழுப்பி விடு."

இதனால் அவரிடம் எந்தப் பணியாளும் நிலைப்பதில்லை. இந்தத் தொல்லையை எவன் சகிப்பான்? மூணு மணிக்கு எழுப்பி விட்டால் ஆத்திரப்படுகிறார், எழுப்பாவிட்டால் காலையில் எழுந்ததும் கோபிக்கிறார். கைகலப்பு கூட ஏற்பட்டு விடுகிறது. அவர் அடிப்பார், திருப்பி வேலைக்காரனை அடிக்கச் சொல்லுவார். எப்படியும் அவரை எழுப்பியாக வேண்டும். "அப்போது தூக்கக் கலக்கத்தில் நான் கண்டபடி திட்டினாலும் பொருட்படுத்தக் கூடாது; காதிலே போட்டுக் கொள்ளாதே" என்பார்.

இப்படியும் மனிதர்கள் இருக்கிறார்கள்.

புத்தர் சிந்தித்தார். இந்த உலக வாழ்வில் என்ன சாரம் (மகத்துவம்) இருக்கிறது? உறக்கத்தில் ஆழ்ந்திருப்பவன் எப்படி யெல்லாம் எழுப்பினாலும் தூங்கிக் கொண்டுதான் இருப்பான். உறக்கம் துறந்து எழுந்திருக்கத் தீர்மானித்தவன் நான் கூவி அழைக்கா திருந்தாலும் எழுந்து விடுவான்.

புத்தர் ஏழு நாட்கள் மௌனமாக உட்கார்ந்திருந்தார். தேவர்கள் வந்து வேண்டிக் கொண்டார்கள். "நீங்கள் இப்படி செயல்படாமல் முடங்கி இருக்கலாமா? எப்போதாவது மிக மிக அரிதாகத்தான் புத்தராகும் வாய்ப்புக் கிட்டுகிறது. உலகம் காத்திருக்கிறது. மனிதர்கள் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். கருணை மழை பொழியும், ஞானபோதம் அருள்பாலிக்கும் என்று ஏங்கிக் காத்திருக்கிறார்கள். வறட்சியால் பரிதவிக்கும் குடிமக்கள் மழைக்கு ஏங்கித் தவிப்பதைப் போல. நீங்கள் கருணை மழை பொழிய வேண்டும். பல பிறவிகளாக ஜனங்கள் தாகத்துடன் தவிக்கிறார்கள். மெய்ஞான போதம் எனும் அருள்மழை பொழிந்து மக்களை நல்வாழ்வு வாழ வையுங்கள். அவர்கள் அஞ்ஞான மயக்கத்தில் கிடக்கிறார்கள். அவர்களை எழுப்பி விழிப்படைய வையுங்கள். அவர்களை எழுப்பிவிட மெய்ஞானி, புத்தர்தான் வரவேண்டும். எழுப்பாவிட்டால் அப்படியே காலம் காலமாக உறங்கிக் கொண்டிருப்பார்கள். எழுச்சி பெறச் செய்ய ஞானி புத்தருக்காகக் காத்திருக்கிறார்கள். புத்தர் பிரானே! நீங்கள் எழுந்திருங்கள்! புறப்படுங்கள்!"

புத்தருக்கு என்ன சொல்லுவதென்றே தெரியவில்லை. சமாதானம் கூற முயன்றார். தேவர்கள் அன்புடன் அறிவுறுத்தி புத்தரைச் சம்மதிக்க வைத்தார்கள்.

புத்தருடைய சிந்தனையும் தேவர்களுடைய சிந்தனையும் அவரவர் நிலைகளில் சரியானவை.

மூன்று விதமாக ஆர்வலர்கள் இருக்கிறார்க.ள ஒருசாரார் எவ்வளவு எழுப்பினாலும் எழுந்திருக்க மாட்டார்கள். உலகில் இவர்கள்தாம் பெரும்பாலானவர்கள். இவர்கள் காதால் கேட்பார்கள், கேட்டதாகக் காட்டிக் கொள்ள மாட்டார்கள்; பார்ப்பார்கள் பார்த்ததாகக் காட்டிக் கொள்ள மாட்டார்கள். பிறர் சொல்லுவதை, போதிப்பதைப்

புரிந்து கொள்ளுவார்கள்; ஆனால் அப்புரிதலைத் தம் சார்பில் விவாதித்து சுயபோதனையைக் காப்பார்கள். புரிந்ததைப் பூசி மெழுகி உருக்குலைத்து விடுவார்கள். அறிந்திருந்தும் அறியாதததுபோல், அறியாமையைப் பேணுவார்கள். அறியாமையோடு இவர்களுக்கு ஒட்டுறவு அதிகம். பழைய அறிமுகத்தைக் கைவிடப் பயப்படுவார்கள்.

இரண்டாவது ரக ஆர்வலர்கள் நடுநிலையில் இருப்பவர்கள். எவராவது தக்கவர், சிறந்தவர் வந்து ஒருமுறை எழுப்பினால் போதும். எழுந்து விடுவார்கள். புத்தர், அஷ்டாவக்கிரர், கிருஷ்ணர் - இப்படி எவராவது வந்து எழுப்பி விட்டால் போதும். அர்ச்சுனன் இத்தகைய ஆர்வலன். கிருஷ்ணனுக்கு பெருமுயற்சி செய்ய வேண்டி இருந்தது. நீண்டகால முயற்சி. இதன் விளைவாக பகவத் கீதை உருவாக்கப் பட்டது - நீண்ட நேரத்திற்குப் பிறகு அர்ச்சுனனுக்கு தன் மதி மயக்கம் விலகியது புரிந்தது. "கண்ணா! எனது சம்சயங்கள் விலகின. உன்னையே சரணடைகிறேன். என் இலக்கு புலப்படுகிறது. இதற்காக வேண்டி எவ்வளவு பிரயாசை, போராட்டம்!...." என்றான்.

மூன்றாவது ஆர்வலர் மிகச் சிறந்தவர். ஜனகரைப் போன்றவர்கள். போதிப்பதற்கு முன்பே அறிந்து கொண்டு விட்டார்கள். அஷ்டாவக்கிரர் சபையில் கூறினார். ஜனகருக்கு மட்டும் இலக்கு புலப்பட்டு விட்டது!

இன்றைய சூத்திரங்கள் (உரையாடல்) ஜனகருடையவை. அஷ்டாவக்கிரர் கூறிக் கொண்டிருக்கும் போதே ஜனகருக்கு உட்கருத்து, இலக்கு எல்லை, சத்திய போதம் எல்லாமே புரிந்து விட்டன - பொறி தட்டியது போல.

முன்பே சொல்லியிருக்கிறேன் - மழை பெய்கிறது பாறைகள் மண்டிய இடத்தில், எந்தச் செடியும் முளைக்காது. கல்லும் மண்ணும் கலந்த நிலத்தில் பெய்தால் முளைவிடும்; வேண்டிய அளவுக்கு இருக்காது. வளமான விளை நிலத்தில் மழை பொழிந்தால், நிறையப் பயிர்கள் முளைக்கும். அங்கு பாறை, சரளை ஏதும் இராது.

ஜனகர் அத்தகு வளமான விளை நிலம். சிறு சமிக்ஞை, குறிப்பு போதும்.

ஜனகருடைய நிலையை அறிந்து கொள்ள தனித் தகுதி வேண்டும். நீயும் முன்சொன்ன மூன்று வகைப்பட்ட ஆர்வலர்களில் ஒரு வகையைச் சார்ந்திருப்பாய். நீ எந்த வகை நிலையில் தங்கியிருக்கிறாய் என்பது உன்னைப் பொறுத்தது. நீ சாமானிய சனங்களில் ஒருவனாக இருக்கலாம். போதனையைக் காதில் போட்டுக் கொள்ள மாட்டேன் என்று அடம் பிடிக்கலாம். வேறொரு வகைப்பட்டவன். சத்தியத்திற்கு எதிராகப் போரிடச் சபதம் செய்திருக்கிறான். மற்றொருவன் கேட்பதை வேறு விதமாகப் புரிந்து கொள்ளுவான்; அப்படித்தான் என் காதில் விழுந்தது என்பான். கேட்டதுமே தன் திறனுக்கேற்ப விளக்கம் செய்து கொள்ளுவான். அதில் ஆழ்ந்திருப்பான். அதற்குத் தன் சாயத்தைப் பூசுவான். ஒன்று கிடக்க ஒன்று அவன் காதில் விழும். அதையே அறிந்து கொண்டிருப்பான்.

போதிப்பதை நீ காதில் வாங்கிக் கொள்ளுவதில்லை, நீ கேட்க விரும்புவதைக் கேட்டுக் கொண்டதாக எண்ணுவாய்.

ஒருநாள் முல்லா நஸருத்தீனின் பீவி கோபக் கொதிப்புடன் வீட்டுக்குள் வந்தாள். முல்லாவிடம், "பிச்சைக்காரர்கள் கூட மோசடிக்காரர்களாக இருக்கிறார்கள்" என்று கத்தினாள்.

"ஏன்? என்ன நடந்தது?" நஸருத்தீன்.

"அந்தப் பிச்சைக்காரன் கழுத்திலே ஒரு அட்டையை தொங்க விட்டிருந்தான். அதிலே எழுதியிருந்தது. 'நான் பிறவிக்குருடன். பிச்சை போடுங்க!" கூடவே ஒரு குவளையையும் தொங்க விட்டிருந்தான். நான் கொஞ்சம் சில்லறையை அதிலே போட்டேன். உடனே அந்தக் குருடன் "பேரழகி அம்மணி! ஆண்டவன் உனக்கு மேன்மை அளிப்பார்" என்றான். எனக்கு ஆச்சரியம். நீங்களே சொல்லுங்க, நான் அழகானவள் என்பது குருடனுக்கு எப்படித் தெரியவந்தது? அவ்ன் குருடு இல்லை. ஏமாத்திப் பிழைக்கிறான்."

முல்லா வாய்விட்டுச் சிரித்தான். "நிசமாகவே அவன் பிறவிக் குருடன்தான். நான் மட்டும் குருடன் இல்லை, எனக்கு ஒரு கூட்டாளியும் கிடைத்திருக்கிறான்! அவனுக்குக் கண்பார்வை இருந்தால் உன்னை அழகி என்று சொல்லியிருப்பானா?"

மனைவி சொன்னது வேறு, முல்லா புரிந்து கொண்டது வேறு. முல்லா தனக்கு வேண்டியதைக் கேட்டிருக்கிறான், மனைவி சொன்னதை, அவள் கருத்துப்படி காதில் போட்டுக் கொள்ளவில்லை.

கவனி, தினமும் இப்படித்தான் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. நீ பலவற்றையும் கேட்க வேண்டியிருந்தாலும், நீ விரும்புவதைத்தான் கேட்கிறாய், புரிந்து கொள்ளுகிறாய். இது பற்றி நீ யோசிப்பதும் இல்லை. 'சொன்னவன் கருத்தும், நீ புரிந்து கொண்டதும் ஒன்றுதானா?' என்பதை ஆராய்வதில்லை.

முல்லா ஒருவரிடம் வேலை பார்த்தான். முதலாளிக்கு அவனது வேலை திருப்தி அளிக்கவில்லை. ஒருநாள் முல்லாவிடம், "நஸருத்தீன்! நீ சரியாக வேலை செய்வதில்லை. வேறு ஆளை வேலைக்கு அமர்த்தப் போகிறேன்" என்றான்.

"கட்டாயம் வேறொரு ஆளை வையுங்க. இங்கே இரண்டு ஆட்களுக்கு வேலை இருக்கு" - முல்லா.

முதலாளி முல்லாவை நீக்கிவிட்டு, அவனுக்குப் பதிலாக வேறொரு ஆளை வேலைக்கு வைத்துக் கொள்ளப் போவதாகக் கூறினான். முல்லா தனக்கு உதவியாக வேறொரு ஆளை முதலாளி வேலைக்கு வைக்கப் போவதாக நினைத்துக் கொண்டான். இப்படித்தான் இங்கே பலரும் இருக்கிறார்கள்.

நீ பின்னால் நின்று கொண்டு குரு போதிப்பதைக் கேட்கிறாய், அதை மறு பரிசீலனை செய்து பார். - இது தானே உனக்குப் போதிக்கப்பட்டது? சரியாக, கவனமாகக் கேட்கும் திறன் பெற்றவன், இரண்டாம் ரகத்து ஆர்வலன். மூன்றாம் ரகத்தவனைவிட மேலானவன். மூன்றாம் ரகத்தவன் கேட்ட போதனையில் தன் கருத்தைக் கலக்குகிறான். தனக்குத்தானே பேசிக் கொள்ளுகிறான். அதன் எதிரொலிகளையும் கேட்கிறான். அவன் நோக்கு சரியில்லை, தெளிவு இல்லை. எல்லாவற்றையும் குளறுபடி ஆக்குகிறான்.

இரண்டாம் ரக ஆர்வலன் எடுத்துக் கூறுவதைக் கவனமாகக் கேட்டுக் கொள்ளுகிறான். அதன் பயனைப் பெறத் தாமதமாகும். பயன்பெறப் பாடுபடவேண்டும். இதற்குத் துணிச்சல் அவசியம். மனப்பூர்வமாகக் கேட்டுக் கொண்டால் துணிச்சல் வரும். சத்தியத்தைக்

கேட்டறிந்த பிறகு அசத்தியம் அங்கு இராது. சத்தியத்தைச் சரிவர ஏற்று, உணர்ந்து கொண்ட பிறகு, பழைய பழக்க வழக்கங்களை உதறித் தள்ளி விடவேண்டும். வாசல் கதவைத் தெரிந்து கொண்டால் சுவர் ஏறிக் குதித்து வெளியேறும் வழக்கத்தை விடத்தான் வேண்டும். சுவரில் மோதிக் கொள்ளுவது வீண் எனத் துணிவுதான் வேண்டும். தன்னை மாற்றிக் கொள்ள சாகசம் (துணிவு) செய்ய வேண்டும்.

பிறகு முதல் ரக ஆர்வலர் முன் வருகிறார். உன்னிடம் பகுத்தறிவும் துணிச்சலும் இருந்தால் நீ நம்பர் ஒன் ஆர்வலன்தான். இவருக்குப் பகுத்தறிவும் துணிச்சலும் சேர்ந்தே மேலெழும். கால இடைவெளி இராது. இரண்டும் தொடர்ந்து இயங்கும். இன்று அறிகிறான், நாளைக்குத் துணிவுடன் முனைகிறான் என்று இருக்காது. இந்தப் பிறவியில் ஞானம் ஏற்பட்டு அடுத்த பிறவியில் துணிச்சலுடன் இயங்குவான் என்பதும் இல்லை. எங்கு எப்போது அறிகிறானோ, அங்கே அப்போதே சாகசச் செயலாற்றலைத் துவக்கி விடுவான். அப்போது இலக்கு நிகழ்வு ஏற்பட்டு விடுகிறது, எதிர்பாராமல் சூரியோதயம் ஏற்படுவது போல.

ஜனகர் முதல் ரகத்து ஆர்வலர் (போதனையை உள்ளார்ந்து செவிமடுப்பவர்).

இது சம்பந்தமாக மற்றொரு செய்தியையும் கவனத்தில் கொள்ள வேண்டும். ஜனகர் ஒரு சக்கரவர்த்தி. அவரிடம் எல்லாச் செல்வங்களும் தேவைக்கு அதிகமாகவே உள்ளன. சுக போகங்களை அநுபவித்தார். சுக போகங்களை அடக்கத்துடன் அளவாக அநுபவிப்பவருக்கு யோக சித்தி, புரட்சிகரமாக, எளிதாகக் கிட்டிவிடும். அந்த அநுபவமே அவருக்குப் போதிக்கும் இந்த சுகபோக வாழ்வு வீண் என்று. பாதிப் பணியை வாழ்க்கையே செய்து விடும். மனத்தில் சந்தேகங்கள் எழுந்தால் பிறகு வாழ்க்கை ஏது? மறுவாழ்வுதான் ஏது? பிறகு சத்திய ஜீவனம் ஏது?

ஆனால் சுகபோகங்களைத் துய்க்காதவனுக்கு அவற்றின் ஈர்ப்பும், ஆவலும், மோக மயக்கமும்தான் தொடர்ந்து இருக்கும். சுகபோகம் கிட்டவில்லை, அதன் கவர்ச்சியும் ஆசையும் பற்றிக் கொண்டிருக்கும். அவன் மிகவும் அவதிப்படுவான். ஆகையால், நீ ஆச்சரியப்பட வேண்டாம். பாரத தேசத்தில் உதித்த தீர்த்தங்கரர்கள்,

(சமணக்குரவர், மகாத்மாக்கள், மெய் ஞானியர்கள் எந்த மதத்தவராக இருந்தாலும், பெரும்பாலும் அரசர், பேரசர்களின் வழித்தோன்றல் களாகத்தான் இருப்பார்கள். இதற்குக் காரணம் இருக்கும், தேவைத் தொடர்பும் இருக்கும். இவர்களிடமிருந்து அறிந்து கொள்ள வேண்டிய செய்தி, சுகபோகத்தை அநுபவிப்பதன் மூலமாகத்தான் அதிலிருந்து முக்தி கிட்டுகிறது. பேரரசருக்குச் செல்வச் செழிப்பால் நற்பயன் இல்லை என ஞானோதயம் ஏற்படுகிறது. அவரிடம் செல்வக் குவியல் இருப்பதால், செல்வக் குவியலுக்குள் இருப்பது வெறும் சூனியம், வெறுமை, பேரழகிகள், மாளிகைகள் எல்லாமே வீண். உள்ளே எதுவும் இல்லை என்பதை உணர வெளியே பெரும் பொருள் இருக்க வேண்டுமே. எதுவும் வெளியே இல்லாது போனால் அநுபவிக்க ஆதுரம் மேலோங்க, 'பிறகு கிட்டும், பிறகு சுகம்,....' என எதிர்பார்த்து நம்பிக்கையுடன் வறிய மனிதன் வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

நம்பிக்கை, எதிர்பார்ப்புகளிலிருந்து விடுபடுவது மிகமிகக் கடினம். நம்பிக்கையைச் .சரிபார்க்க வழி இல்லை. ஏழை நம்பிக்கையோடு நினைக்கிறான், 'நாளைக்குப் பணம் கிடைக்கும், சுகமாக இருக்கலாம்' பணக்காரனுக்கு வேண்டிய பணம் கிடைத்து விட்டது. நம்பிக்கை கொள்ள வழி இல்லை. செழிப்போடு உள்ள சமூகம் சமயச் சார்பாக, பக்தி சிரத்தையோடு இருக்கும்.

அமெரிக்காவில் மதவாத மோகம் தீவிரமாகப் பரவி வருகிறது. ஆச்சரியமாக இருக்கிறதா? ஆதிகாலம் தொடங்கி உலகில் இது நிகழ்ந்து வருகிறது. பாரததேசம் வளம் நிரம்பி இருந்த காலத்தில் புத்தர், மகாவீரர், அஷ்டாவக்கிரர் போன்றவர்கள் இருந்திருக்கிறார்கள். யோக சாதனை சிறப்பாக வளர்ந்திருந்தது. ஆன்மீகம் மேலோங்கியது. மக்களுக்கு 'பௌதிக வாழ்வும், வசதிகளும், வளமார்ந்த நிலைகளும் இருந்தாலும் போனாலும் ஒன்றுதான். எந்த இலாபமும், பயனும் இல்லை' என்பது தெரிந்திருந்தது. நாடு ஏழ்மை, தாழ்மையில் சிக்கிக் கொண்டால், அத்தெளிவு ஏற்படாது. ஞானம் பெறுவது .மெத்தக் கடினமாகிவிடும்.

ஏழை மனிதன் முக்தி பெற முடியாது என்று நான் சொல்ல வரவில்லை. ஏழை முக்தன் ஆகலாம், மதாபிமானியாகலாம், தார்மிக நெறிகளுடன் வாழலாம். ஆனால் வறுமையில் வாடும் சமுதாயம்

அவ்விதம் இருக்காது. தனி நபர் விதிவிலக்கு. இதற்கு ஆழ்ந்த ஈடுபாடு வேண்டும்.

ஏழை கோவிலுக்குச் சென்று பகவானைத் தரிசித்து பிரார்த்திப்பது உலகில் உள்ளது. தனக்குக் கிட்டாதது எதுவோ அதைத்தான்.

உனக்கு மேதா விலாசம் உள்ளது, எல்லாச் செல்வங்களும் உள்ளன, போதனைகளைப் புரிந்து கொள்ளும் அறிவாற்றல் இருக்கிறது; சரி, இதனால் உனக்கு ஞானபோதம், முக்திநிலை ஏற்பட்டு விடுமா? சாதனை புரிய வேண்டும்; பரிபக்குவம் ஏற்பட வேண்டும், திடமான தீவிர ஈடுபாடு இருக்க வேண்டும்.

செல்வம் நிறைந்தவர்களுக்கு 'அதெல்லாம் வீண், பயனற்றவை' எனும் போதம் ஏற்படுவதில்லை. செல்வம் இல்லாதவர்களுக்கு ஏற்பட வாய்ப்பு இல்லை. விதிவிலக்காகச் சிலருக்கு ஏற்படலாம். புத்தர், ஜனகர், அர்சுனன் முதலானோருக்கு எளிதாக போதம் ஏற்பட்டது, விழிப்பு ஏற்பட்டது. கபீர்தாஸ், தாதூதயாள், ஸந்த் ஸஹஜோ, ஏசு கிறிஸ்து, முகம்மது நபி முதலானோருக்கு - இவர்களிடம் செல்வச் செழிப்பு இல்லாததால் - போதம், விழிப்பு ஏற்படுவது கடினமாக இருந்திருக்கும். எனினும் இலக்கை எட்டினார்கள். விழித்தெழுந்தார்கள்.

பௌதிக வாழ்க்கையில் நம்மிடம் இல்லாததைப் பற்றிய ஆசை நம்மைச் சூழ்ந்திருக்கிறது. பற்றிக் கொண்டிருக்கிறது.

நேற்று இரவு ஒரு கவிதை படித்தேன். அதாவது -

**எனக்கு ஓர் இனிய ஆசை**
**ஆதனால் மறுபிறவி வேண்டும்**
**அப்போது எனக்கு ஓர் உறுதுணைவி**
**கிட்ட வேண்டும், கிட்டும்; அவள்**
**அன்பு நிரம்பிய உறவுக்காரி**
**அன்பு செலுத்தும் பிரிய சகி,**
**காலையில் துயிலெழுந்ததும் என்னை**
**பாச நேசப் புன்னகையுடன் பார்ப்பாள்**
**உள்ளத்துள் அணைத்துக் கொள்ளுவாள்**
**மதியப் போதில் பல அலுவல்களில்**
**உழன்று களைத்துப் போனாலும்**

என் வரவை ஏக்கத்துடன் எதிர்நோக்கிக்
காத்திருப்பாள் கனிவுடன்,
மாலைப்போது நான் வீடு திரும்பியதும்
தன் ஆசை-ஆவல்களைப் புறக்கணித்து
என்னை நிரந்தர அடகு என
வைத்திருக்க வேண்டும்,
அத்தகைய ஓர் உறுதுணைவியைப்
பெற நான் ஆசைப்படுகிறேன்,
அவள் என் சுகத்தை நன்றி எனும்
சோதியில் சேர்க்க வேண்டும்,
என் துக்கத்தையும் தனது
சூடேறிய கண்ணீர் முத்துக்களுடன்
இணைத்துக் கொள்ள வேண்டும்,
எங்கள் இல்லறத்தில் ஏழ்மை புகுந்தாலும்
தவிக்காமல், தளராது இருக்க வேண்டும்,
வாழ்க்கைப் பயணம் கடின மானாலும்
முகம் சுளிக்காமல், மனம் சுணங்காமல்
கூடிவாழ வேண்டும்,
ஒருகால் அடுத்த ஜன்மத்தில்
இப்படிப்பட்ட உறுதுணைவி கிட்டலாம்,
அவள் அன்பு செலுத்தும் பிரிய சகி,
என் ஆசை இதுதான்,
ஆதலால் மறுபிறவி எனக்கு வேண்டும்.

**வி**ரும்புவது கிட்டாத போது - ஒருவனுக்கு மனத்துக்கினிய காதலி கிட்டவில்லை, மற்றவனுக்குப் பணம் கிட்டவில்லை, வேறொருவனுக்குப் பதவி கிட்டவில்லை, அடுத்தவனுக்கு பேர் - புகழ் கிட்டவில்லை, ஆதலால் மறுபிறவி பெற விரும்புகிறார்கள். எண்ணற்ற பிறவிகள் எடுத்திருக்கிறோம், அப்படியும் கிட்டாதவை, எட்டாதவை, நிறைவேறாதவை இருக்கத்தான் செய்யும். அவற்றை வேண்டி மறுபிறவி, அடுத்த பிறவி, அதற்கும் அடுத்த பிறவி எனத் தொடர் விருப்பம் நீடிக்கும்.

ஆசை - நசைகளுக்கு முடிவு இல்லை. தேவைகள் குறைவு, ஆசை - இச்சைகளுக்கு எல்லை இல்லை. இவற்றின் துணையுடன் மனிதன் வாழ்ந்து வருகிறான்.

கவனமிருக்கட்டும் - செல்வம் கட்டுப்படுத்தாது, செல்வ ஆசை கட்டிப் போடுகிறது. மதிப்பு மரியாதை கட்டிப் போடாது, அதற்கான ஆசை கட்டிப் போடும்.

ஜனக மகாராஜாவிடம் எல்லாம் இருந்தது. ஆண்டு அநுபவித்தும் விட்டார். எவராவது, ஏதாவது கொஞ்சம் சமிக்ஞை செய்தால் போதும், விழித்தெழக் காத்திருந்தார். கனவுகள் வீணாகின. துயில் எழக் காத்திருந்தார். உறக்கம் விலகப் போகிறது.

இதனால்தான் சொல்லுகிறேன், அஷ்டாவக்கிரருக்கு உத்தமமான தலைசிறந்த சீடன் கிடைத்து விட்டான்.

ஜனகர் சொன்னார், "நான் குற்றமற்றவன், சாந்தமானவன், அறிவார்ந்தவன், இயற்கைக்கு மாறுபட்டவன். அஹா! ஆச்சரியம்! இத்தனை காலமாக அஞானி நான் மோக மதிமயக்கத்தால் ஏமாற்றப்பட்டிருக்கிறேன்."

ஒளிக்கதிர் இறங்கியது, 'அஹோ, நிரஞ்ஜன:!' (ஆஹா, நான் கடவுள்!) ஆச்சரியம்!

அஷ்டாவக்கிரரின் ஞானபோதத்தை - "நீ நிரஞ்ஜனன் (குறைவற்ற ஈசுவர சொரூபன்), குற்றமற்றவன்!" கேட்டவுடனேயே புத்தொளி அகமனத்துள் - உயிர்நிலையுள் ஊசி போல் இறங்கியது. மெய்யுணர்வு ஒலித்தது.

**"அஹோ நிரஞ்ஜன: சாந்தோ போதோ அஹம் பிரகிருதே: பர:!"**

- ஆச்சரியம்! நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? நான் நிர்தோஷன் (குற்றமில்லாதவன்), சாந்தன் (அமைதியானவன்), போதன் (மெய்யறிஞன்), பிரகிருதி (இயற்கை)க்கு அப்பாற்பட்டவன். எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது, இவ்வளவு காலமாக நான் மோகம், மாயை, மயக்கத்துள் -உழன்று கொண்டிருந்தேன், வஞ்சிக்கப்பட்டேன் -

**"ஏதாவந்தம் அஹம் காலம் மோஹேனைவ விடம்பித:"**

திகைத்துப் போனார் ஜனகர். இதுகாறும் கேட்டிராத அருள்வாக்கை இன்று கேட்டிருக்கிறார். அஷ்டாவக்கிரரிடம் தரிசித்த ஞானபிரகாசத்தை வேறு எவரிடமும் இதுவரை கண்டதில்லை.

கேட்டதும், கண்டதும் அபூர்வம். அஷ்டாவக்கிரர் சோதி சொரூபமாக விளங்கினார். அவரது தத்துவஞான தேஜஸ் ஜனகரை பிரமிக்க வைத்தது. ஆச்சரியத்தின் உச்சத்தை அடைந்தார். தத்துவ ஞானபோதம் ஆட்கொண்டது. 'ஆஹா! உணர்ந்து கொண்டேன், நான் நிரஞ்ஜனன்!' உடனடியாய் நம்பிக்கை ஏற்படவில்லை, நம்ப முடியவில்லை.

சத்தியத்தை நம்புவது மிகக் கடினம். காரணம், நாம் அசத்தியத்துள் (பொய், மாயம்) ஜன்ம ஜன்மாந்தரமாக உழன்று, நம்பி வாழ்ந்து வந்திருக்கிறோம். சிந்தித்துப் பார்! குருடனுக்கு திடீரென பார்வை வந்தால், அவன் நம்புவானா? 'இது பிரகாசம்?, ஒளி? இவை வண்ணமயமான காட்சிகள்? இது வானவில்? இவை வண்ண மலர்கள், மரங்கள்? இது சந்திரன்? இது சூரியன்? எல்லாம் நிஜமா?...' என எண்ணுவான். இவற்றை எல்லாம் காண்போம் என அவன் சிந்தித்திருக்கவே மாட்டான். 'கனவில்கூட இவைகளை நான் கண்டதில்லையே!...'

ஒளி வெளிச்சம் இருக்கட்டும், குருடனுக்கு இருள் எது என்பது கூடத் தெரியாது. நீ நினைப்பாய், குருடன் இருட்டில் இருக்கிறான் என்று. இது தவறு. இருளைக் காணவும் உணரவும் கண்பார்வை வேண்டும். நீ கண்களை மூடிக் கொண்டால் இருட்டு தெரிகிறது; காரணம், நீ கண் திறந்ததும் ஒளியைக் காண்பாய், தெரிந்து கொள்ளுவாய். எப்போதுமே கண்மூடி (குருடனாக) இருப்பவன் இருள், ஒளி எதையும் அறிய மாட்டான். குருடனால் கனவில்கூட வண்ணமிகு வானவில்லைக் காண இயலாது. கண்திறந்து பார்க்கத் தொடங்கும்போது வெளிப்படை உலகம் பூராவும் நம்ப இயலாமல் இருக்கும். தவித்துப் போவான்.

ஜனகருக்கும் அப்படித்தான் திகைப்பு - பதைப்பு ஏற்பட்டது. ஆச்சரியத்தில் மூழ்கிப் போனார். வாய்விட்டுச் சொன்னார், 'ஆஹா! நான் குற்றமற்றவன்! (நிர்தோஷன்)''

காலம்காலமாக மனிதன் தன்னைக் குற்றம், பாபம் செய்திருப்பவன் என்றே எண்ணி வந்திருக்கிறான். குருமார்கள் அப்படித்தான் கூறி வருகிறார்கள். பண்டிதர்கள், புரோகிதர்கள், மதாசாரியர்கள், "நீ பாபம் செய்திருக்கிறாய், முன்வினைப் பயனை அநுபவிக்கிறாய். முன்பிறவிகளில் செய்த பாவங்கள் இந்தப்

பிறவியிலும் தொடருகின்றன,..." என்றெல்லாம் பயமுறுத்தி வைத்திருக்கிறார்கள். எவருமே, "நீ குற்றமற்றவன், பாவம் செய்யாதவன். உன் குற்றமற்ற தன்மையை எவராலும் எதாலும் மாற்ற முடியாது. நீ எவ்வளவுதான் குற்றங்கள் (தெரிந்தும் தெரியாமலும்) புரிந்திருந்தாலும் நீ குற்றவாளி ஆகமாட்டாய்" என்று எடுத்துக் கூறியதில்லை.

நீ செய்த பாவங்கள், குற்றங்கள் யாவும் நீ கண்ட கனவுகளைப் போன்றவை. கண் விழித்ததும் எல்லாம் மறைந்து விடும். புண்ணியம், பாவம் எதுவும் உனதல்ல. நீ செயல் புரியவில்லை, செய்ய வேண்டியதும் உனதல்ல, நீ கர்த்தாவே (செய்பவன்) இல்லை. நீ த்ரஷ்டா (காண்பவன்), சாட்சி மட்டுமே.

"நான் குற்றமற்றவன்!" திகைப்புடன் ஜனகர் கூறினார். நான் சாந்தன் (அமைதியானவன்). அமைதியின்மையை (அசாந்தி) இதுகாறும் பற்றியிருந்தேன். அப்படி எண்ணியிருந்தேன்.

நீ எப்போதாவது சாந்தியை அறிந்திருக்கிறாயா? ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் உனக்குப் புலப்படும் - நீ சாந்தி என எண்ணியிருந்தது இரு அசாந்திகளுக்கு இடைப்பட்ட நேரம். ஆங்கிலத்தின் 'கோல்டு வார்' என்பார்கள். நல்ல சொலவடை அது. 'குளிர்ச்சியான போர்' இரு போர்களுக்கு இடையில் 'கோல்டு வார்' நிகழ்கிறது. இரு கொதிப்பேறிய போர்கள், இடையில் குளிர்ப்போர்! ஆக, போர் தொடர்கிறது. முதலாம் உலகப் போர் முடிந்தது; பிறகு இரண்டாம் உலகப் போர் தொடங்கியது. இடையில் இருபது வருடங்கள் 'கோல்ட் வார்' காலம். போர் வெளிப்படையாக இல்லை; உள்ளூரக் குமைந்து கொண்டிருந்தது. அண்டர்கிரவுண்ட் வார்.

இப்போதும் குளிர்ப்போர் நடந்து கொண்டிருக்கிறது உலக மெங்கும். போர் ஆயத்தங்கள் நடைபெறுகின்றன. ராணுவ ஒத்திகைகள் நடத்தப்படுகின்றன. புதுப்புது வெடி குண்டுகள் தயாரிக்கப்படுகின்றன. கனரகத் துப்பாக்கிகள் பாலிஷ் போடப்படுகின்றன. இது குளிர் யுத்தம். என்றாவது ஒருநாள் வெடித்தெழும். பெரும் போர் மூளும், பரவும்.

நீ சொல்லும், கருதும் சாந்தி, குளிர்அசாந்தி. நீ கொதித்தெழுந்தால் அப்போது சூடேறிய அசாந்தி. இரு சூடேறிய அசாந்திகளுக்கு இடையில் உள்ள காலம் உனக்கு சாந்தியாகத்

தோன்றும். அது நிஜ சாந்தி இல்லை. குளிர்ந்த அசாந்தி. சூடேறவில்லை, கொதிப்பு அதிகரிக்கவில்லை, அதனால் நீ அதைத் தாங்கிக் கொள்ளுகிறாய், சமாளித்துக் கொள்ளுகிறாய். இதுதான் நிலைமை. இரு அசாந்திகளுக்கு இடையில் உள்ளது சாந்தி ஆகுமா? இரு போர்களுக்கு இடையில் எங்காவது சாந்தி (சமாதான அமைதி) நிலவ முடியுமா?

சாந்தியை நிஜமாக அறிந்தவனுக்கு அசாந்தி முடிவடைகிறது. நீ சாந்தியை உணரவில்லை, 'சாந்தி' எனும் சொல்லைக் கேட்டிருக் கிறாய். நீ அநுபவிப்பது அசாந்தி மட்டுமே. சாந்தி உன் பேரவா, நம்பிக்கை.

ஜனகர் சொன்னார், "நான் சாந்தன், போதன் (அறிவு பெற்றவன்). நீ அறிந்தது. அநுபவித்தது எல்லாமே மதிமயக்கம் (மூர்ச்சை). உன்னிடம் கேள்வி கேட்டால் ஒன்றுக்குக் கூட உன்னால் பதில் சொல்ல முடியாது. உன்னிடம் ஒருவர் கேட்கிறார், "நீ ஏன் அந்தப் பெண்ணைக் காதலிக்கிறாய்?" நீ பதில் சொல்லுவாய்," தெரியவில்லை. ஏதோ காதல் ஏற்பட்டு விட்டது." இது ஒரு பதிலா? காதல் நிகழ்வு ஏற்பட்டு விட்டது. நிகழ்வு முதல் சந்திப்பிலேயே சம்பவித்தது. கண்டதும் காதல்! உனக்குத் தெரியுமா? இந்தக் காதல் எங்கிருந்து எப்படி எழுந்தது? எதுவும் தெரியாது. இந்தக் காதல் மூலமாக உனக்கு வாழ்வில் இன்பம், சுகம் கிட்டவேண்டும் என விரும்புகிறாய்! காதல் ஏற்பட்டது பற்றி உனக்கு ஏதும் தெரியாது. அடிமனத்தின் எந்தக் கோணத்திலிருந்து காதல் எழுந்தது என்பது தெரியாது. இதன் வித்து எது? எங்கே? எப்போது முளை விடுகிறது? தெரியாது. அப்படியும் நீ சுகப்பட வேண்டும் என ஆசைப்படுகிறாய். சுகம் கிட்டாது, துக்கம் (துன்பம்)தான் கிட்டும். சச்சரவு, தொந்தரவு ஏற்படும். மனத்தாங்கல், பகை எழும். பொறாமை, எரிச்சல் ஏற்படும். நீ துடித்துத் தவிக்கிறாய். நீயே கூறுவாய், "என்ன இதெல்லாம்? என்ன நிகழ்ந்தது? இந்தக் காதல் - வாதல் வீண், ஏமாற்று வேலை."

முதலிலிருந்தே மதிமயக்கம் (மூர்ச்சை) இருந்திருக்கிறது.

நீ பணம் சம்பாதிக்க ஆலாய் பறக்கிறாய், ஓடித் திரிகிறாய். ஏன் இதெல்லாம்? என்று கேட்டால் நீ ஏதாவது சால்சாப்பு சொல்லுவாய். பணம் காசு இல்லாமல் எப்படி வாழ முடியும்? என்று கேட்பாய்.

நிறையச் செல்வம் வைத்திருப்பவர்களும் உன்னைப்போல் பணம் சம்பாதிக்க அலைகிறார்கள். போதும் எனும் மனம் வருவதில்லை. நீ போதிய பணம் சம்பாதித்த பிறகும் மேலும் சம்பாதிக்க அலைவாய்.

**ஆ**ண்ட்ரூ கார்னேகி இறந்தபோது ஆயிரம் கோடி ரூபாய் சம்பாத்தியத்தை விட்டுச் சென்றார். இறப்பதற்கு முதல் நாள்வரை பணம் சம்பாதித்து வந்தார். மரிப்பதற்கு இரு தினங்கள் முன்பு அவரிடம் செயலாளன் கேட்டான், "உங்களுக்குத் திருப்திதானே? ஆயிரம் கோடி ரூபாய் சேர்த்தாகி விட்டது." கார்னேகி பதில் சொன்னார், "திருப்தியா? எனக்கா? நிம்மதி இல்லாமல் சாகப் போகிறேன். என் திட்டம் இலட்சம் கோடி ரூபாய் சேர்த்தாக வேண்டும் என்பதுதான். நிறைவேற வில்லையே. இந்த அதிருப்தி என்னை வாட்டுகிறது."

இங்கு இல்ட்சம் கோடி ரூபாய் சம்பாதிக்கத் திட்டமிட்டவருக்கு, சம்பாதித்தது ஆயிரம் கோடிதான். தொண்ணூறு ஆயிரம் கோடி நட்டம். அவருக்கு இப்போது கைவசமுள்ள ஆயிரம் கோடி ரூபாய், வெறும் நயா பைசாதான். கையிருப்பு நிதிக்கு மதிப்பு இல்லை.

அந்தப் பணத்தைத் தின்னவோ, குடிக்கவோ முடியாது. அதற்கு எந்த உபயோகமும் இல்லை. ஆனால் சம்பாதிக்க ஓடியாடத் தொடங்கினால் அது நிற்காது, ஓயாமல் தொடரும்.

நீ உன்னையே கேட்டுப்பார், எதற்கு ஓட்டம்? பதில் வராது. மூர்ச்சை (மதி மயக்கம்) தான் பதில். எங்கே, எதற்காக இந்த ஓட்டம், ஆட்டம்? போகாமல் என்ன செய்வது? எதற்காக முடங்கி இருக்க வேண்டும்? இதற்கும் பதில் வராது.

குடிபோதையில் நடந்து போகிறவனாகத்தான் இருக்கிறான். மனிதன். நம் வாழ்வின் முடிவிடம் நம்மிடம் இல்லை. நாம் போதம் (ஞானம்) இல்லாதவர்கள்.

**கு**ர்ஜியேஃப் சொல்லி வந்தான், "நாம் தூக்க மயக்கத்தில் நடமாடுகிறோம். கண்கள் திறந்திருக்கும், விழிப்பிலும் தூக்கக் கலக்கம். கண்களில் உறக்கக் கிறக்கம். ஏதோ நிகழ்கிறது, ஏதேதோ செய்து

கொண்டிருக்கிறோம். இப்படியே காலம் போய்க் கொண்டிருக்கிறது. "ஏன்?" என்று வினவப் பயப்படுகிறோம். காரணம், பதில் இல்லை. கேள்வி எழுப்புவதால் மனச்சள்ளைதான் மிஞ்சும்.

இதை உணர வேண்டும். இது அஷ்டாவக்கிரரின் சுய, நிஜ உபாயம், விதிமுறை. இயற்கையைக் கடந்து போக வேண்டும். தென்படுவது எல்லாம் 'நான்' இல்லை. ஏற்படும் அநுபவமும் நான் இல்லை. தென்படுபவைகளைக் கடந்தவன் நான். நான் காண்பவன். தென்படுவது நான் இல்லை. எனக்கு ஏற்படும் அநுபவங்களை எல்லாம் கடந்தவன் நான். அவைகளைக் காண்பவன் நான். நானே எப்படி அநுபவமாக ஆகமுடியும்? நான் இந்த தேகமோ, மனமோ, எண்ணமோ, கருத்தோ இல்லை. நான் இந்து இல்லை, முசல்மான் இல்லை, கிறித்துவன் இல்லை. நான் பிராம்மணனும் இல்லை, சூத்திரனும் இல்லை. நான் பாலகன், வாலிபன், வயோதிகன் இல்லை. அழகானவனோ, குரூபியோ நான் இல்லை. புத்திசாலியும் இல்லை. மடையனும் இல்லை. நான் யாராகவும் இல்லை. எல்லா இயற்கை (பிரகிருதி) பரிணாமங்களுக்கும் அப்பாற்பட்டவன் நான்.

இந்த ஞானக்கதிர் ஜனகரின் இதயத்துள் இறங்கியது. ஆச்சரியம் தாளவில்லை. திடுக்கிட்டுப் போனார். முதல்முறையாக அகக்கண்கள் திறந்தன 'என்ன அதிசய ஆச்சரியம்! இத்தனை காலமாக நான் மோக மாயையால் ஏமாற்றப்பட்டு வந்திருக்கிறேன்' என உணர்ந்தார்.

"இதுவரை நான் எதையெல்லாம் அமைத்தேனோ, விரும்பினேனோ, என்னவெல்லாம் இனிய கனவுகள் கண்டேனோ, அவை யாவும் மோக மயக்கம். மாய உறக்கம். வெறும் கனவுகள். தூக்கத்தில் எழுந்த எண்ணங்கள். அவைகளுக்கு எந்த இருத்தலும் இல்லை."

**அஹோ அஹம் ஏதாவந்தம் அஹம் காலம்**
**மோஹேநைவ விடம்பித:,**

நீங்கள் என்னை திகைக்க வைக்கிறீர்கள், உலுக்கி எடுத்து விட்டீர்கள். என் மனக்கோட்டைகள் இடிந்து சரிந்து விட்டன. நான் விரிவாக்கம் செய்த சாம்ராஜ்யம். வெறும் மோக மயக்கத்தின் பரிணாமம்.

அறிந்து கொள்ள முயற்சி செய். நீயும் அந்த வாக்கினைக் கேட்டிருந்தால் உனக்கும் இப்படித்தான் ஆகியிருக்கும். நீ செய்ததெல்லாம் வீணாகிப் போகும். கிட்டியதும் கிட்டாததாகி விட்டது. எல்லாம் வீண்.

**மு**ல்லா நசருத்தீன் தூக்கத்தில் உளறிக் கொண்டிருந்தான். கண்விழித்து, மனைவியிடம், "சீக்கிரம் என் மூக்குக் கண்ணாடியைக் கொண்டு வா!" என்றான்.

"மூக்குக் கண்ணாடி எதற்கு? நடு ராத்திரி, படுக்கையிலே தூக்கம். இப்போது கண்ணாடியை மாட்டிக் கொண்டு என்ன செய்வீங்க?" - மனைவி.

"சீக்கிரம் எடுத்துவா என் கண்ணாடியை. கனவிலே ஒரு பேரழகி வந்து காட்சி அளிக்கிறாள். தெளிவாய் அவளைப் பார்க்க வேண்டும். வெறும் கண்ணுக்கு மங்கலாய் தெரிகிறது அவளுடைய வாளிப்பு மேனி, அழகான முகம்."

கனவையும் உண்மையான நிகழ்வாக்கப் பார்க்கிறாய். எப்படியாவது கனவு நனவாகி விட வேண்டும். எவரும் உன் கனவை வெறும் சொப்பனம் என்று சொல்லி விடக்கூடாது என்று எண்ணுகிறாய். அப்படிச் சொன்னால் நீ கோபிக்கிறாய். மகான்களை நாம் இப்படித்தான் அவமதித்திருக்கிறோம். அவர்கள் நம்மை நிறையக் கோபப்பட வைத்திருக்கிறார்கள். நாம் கனவுகள் கண்டு களித்திருந் தோம், அவர்கள் நம்மை உலுக்கி எழுப்பிக் கொண்டிருந்தார்கள். நாம் ஆழ்ந்த உறக்கத்தில் கிடந்த போதும் எழுப்பியிருக்கிறார்கள். நம்மைக் கேட்காமலேயே, நாம் கோராமலேயே நம் உறக்கக் கிறக்கத்தைக் குலைத்திருக்கிறார்கள். அலாரம் மணி அடித்தது. நாம் கோபிக்காமல் இருக்க இயலுமா?

ஆனால் அவர்களுடைய அறிவுறுத்தலைக் கேட்டிந்தாயானால், நீ அவர்களுக்கு நன்றி செலுத்துவாய். வாழ்நாள் முழுவதும் நன்றி உணர்வோடு இருந்திருப்பாய்.

நினைவுபடுத்திப் பார். கண்ணபிரான் பகவத் கீதையில் அறிவுரை வழங்கிக் கொண்டிருந்தார். அர்சுனன் குறுக்கிட்டு கேள்வி

எழுப்பிக் கொண்டிருந்தான். அஷ்டாவக்கிரரின் கீதை உபதேசத்தின் போது ஜனகர் கேள்வி எழுப்பவில்லை. பேருவகை, பேராச்சரியம் கொண்டு அதிசயப்பட்டார். அந்த உணர்வைத்தான் வெளிப் படுத்தினார். தம் ஏற்பை, சம்மதத்தைத் தெரிவித்தார். ஜனகர் கூறியது இவ்வளவுதான், "ஆஹா! பிரபு! என்னைத் திகைக்க வைத்தீர்கள்! என்னை எழுப்பி விட்டீர்கள்!"

கேள்வி கேட்க ஏதும் இல்லை. ஜனகருக்கு. 'நான் குற்றமற்றவன்; சாந்த சொரூபன்; ஞானம் பெற்றவன்; இயற்கைக்கு அப்பாற்பட்டவன்' எனும் மெய்யறிவு ஏற்பட்டது.

இவ்வளவு சீக்கிரம் ஞானபோதம் நிகழ்ந்து விட்டதை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. இன்னும் கொஞ்சம் கால அவகாசம் தேவை என்று தோன்றுகிறது. நமக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது; பதற்றமாகவும் இருக்கிறது - இவ்வளவு சீக்கிரமாக, வேகமாக அது நிகழ்ந்து விட்டதே!

**ஜே**ன் துறவிகளின் வாழ்க்கையில் பல நிரூபணங்கள், நிகழ்வுகள். ஜேன் சித்தர்கள் பற்றிய புத்தகங்கள் கீழை-மேலை நாடுகளில் வெகுவாகப் பர்வி வருகின்றன. அவற்றைப் படித்தவர்கள் பிரமிக்கிறார்கள். பலப்பல நிகழ்வுகள் கூறப்பட்டுள்ளன. ஒருகண நேரத்தில் ஜேன் துறவிக்கு ஞானோதயம், அறிவு விழிப்பு ஏற்பட்டு விட்டதாம்! நம்மால் நம்ப முடியவில்லை. நாம் எத்தனையோ வழிமுறைகளை, உபாயங்களைச் செய்கிறோம், அப்படியும் ஞான போதம் ஏற்படுவதில்லை. தொடர்ந்து முனைந்து முயற்சிக்கிறோம். அப்படியும் ஞானபோத நிகழ்வு ஏற்படுவதில்லை. தியானம் இலயிக்காத போது, ஜபம் தவம் செய்யத் துவங்குகிறோம். மனசு சலித்து விடுகிறது. ஆனால் இங்கு ஜனகர் கண நேரத்தில் விழிப்புணர்வு பெற்று விட்டார்!

இப்படி அரிதாகத்தான் நிகழும். உன் தகுதியைப் பொறுத்து இருக்கிறது. உனது தகுதியில் குறை - கோளாறு இருந்தால் ஞானசித்தி பெறக் காலதாமதம் ஆகும். தாமதம் அந்நிகழ்வு காரணமாக அல்ல. நிகழ்வு உடனடியாக, அக்கணமே சம்பவிக்கும். அஷ்டாவக்கிரர் அடிக்கடி கூறுகிறார், "சுகமாக இரு! இப்போதே நீ சுகாநுபவம் பெற்றவன். நீ முக்தன். இப்போதே முக்தனாகிவிடு!"

நிகழ்வு இக்கணமே ஏற்பட்டுவிடும். காலதாமதம் ஆவது நமது தகுதிக் குறையால்தான். நமக்கு அதற்கான தகுதி இல்லையே. தகுதி பெறக் காலதாமதம் ஆகும். இடைப்பட்ட தடை - தடங்கல்கள் அகற்றப்பட வேண்டும். ஊற்றுக்காலிலிருந்து அருவி வெளிவரக் காத்திருக்கிறது. எக்கணமும் வெளிப்படும். அதுகூறும். "ஆனால் நான் பாய்ந்து பரவ பாதை நடுவே உள்ள தடங்கல்கள் - பாறைகள், குன்றுகள், மேடுகள் உள்ளனவே. அவைகளை அகற்று. நான் பெருக்கெடுத்து ஓடிக் கடலில் கலக்க வேண்டும். என் பிரவாக வேகத்தைத் தடுக்கும் தடைகளை அப்புறப்படுத்து!"

அருவியின் பிரவாக வேகம் ஆற்றொழுக்காய் பாய்ந்து செல்வதும், தாமதத்தைத் தவிர்ப்பதும் எத்தனைத் தடைகள் குறுக்கிடுகின்றன என்பதைப் பொறுத்தது. அருவி ஊற்றிலிருந்து வெளியேறக் காத்திருக்கிறது. இக்கணமோ, அல்லது சிறிது நேரத்திற்குப் பிறகோ, அல்லது பல பிறவிகளுக்குப் பிறகோ வெளிப்படும். வெளிப்பாட்டில் தடை இல்லை. தங்குதடைகள் வெளிப்பட்ட பிறகு பாய்ந்து முன்செல்லும் நிலையில்தான் உள்ளன.

ஜனகரின் அக உணர்வில் எந்தத் தடையும் இல்லை. 'ஆஹா!' என்று வெளிப்பட்டது பேராச்சரியம். நன்றியுடன் ஏற்றுக் கொண்டார். பேரானந்தத்தில் மூழ்கினார். அப்போது ஜனகர் சொன்னார், "நான் தனி ஒருவனாகவே இந்த தேகத்தை வெளிப்படுத்துகிறேன். இதேபோல் இந்த உலகத்தைப் புலப்படுத்துகிறேன். இதனால்தான் என் உலகம் முழுமையானது. (சம்பூர்ணம்) எனது என எதுவும் இல்லை."

இது ஆஸ்திக நிலை. அர்சுனன் நாஸ்திக நிலையில் இருந்தான். அவன் மறுக்கிறான் - "இல்லை" என்கிறான். அடிக்கடி கேள்வி கேட்கிறான். பல சந்தேகங்கள் அவனுக்கு. மாறிமாறிக் கேள்வி கேட்கிறான். ஜனகர் ஏதும் கேள்வி கேட்கவில்லை.

இதனால்தான் இந்த அஷ்டாவக்கிர கீதையை 'மகாகீதா' என்கிறேன். அர்சுனனின் நாத்திக நிலை இறுதியில் அழிந்து போகிறது. அவன் வீடு திரும்புகிறான். ஜனகரிடம் நாத்திகத்தனம் இல்லை. அவர் வீட்டுவாசலில் நின்று கொண்டிருந்தார், யாரோ வந்து உலுக்கினார், தெரிவித்தார், "ஜனகரே! நீ வீட்டுவாசலில் தான் நிற்கிறாய். வேறெங்கும்

போக வேண்டாம்". இதைக் கேட்டபின் ஜனகர் கூறினார், "ஆஹா! இந்த சரீரத்தை நான் தனியனாகவே வெளிப்படுத்துகிறேன். இதேபோல இந்த உலகத்தையும் வெளிப்படுத்துகிறேன்."

அஷ்டாவக்கிரர் சொன்னார், "உன் சாட்சி சொரூபம் உனக்கு மட்டுமல்ல, உன்னை மட்டும் மையப்படுத்துவது இல்லை. சகல சிருஷ்டிகளையும் மையப்படுத்துவதாகும். வெளிப்புறத்தில் நாம் தனித் தனி; அகப்புறத்தில் நாம் யாவரும் - யாவையும் ஒன்றே. எப்படி கடல்மேல் அலைகள் தனித் தனியாக இருந்தாலும், கடலுக்குள் எல்லா அலைகளும் சங்கமித்து ஒன்றாகும். அலைகள் பலவிதம். பெரிது, சிறியது, அழகானது, குரூபி, அழுக்கானது, சுத்தமானது - இப்படிப் பல பேதங்கள் கடலுக்கு மேல் பரப்பில். கடலுக்குள் எல்லாமே சங்கமம், பேதமற்றது. எவனுக்கு சூழ்நிலை மையம் (சுதந்திரம்) நினைவுக்கு வருகிறதோ, அவனது தன்மை (ஆளுமை) அற்றுப் போகிறது. அவன் ஒரு நபராக, மேனியனாக (வியக்தி) இருப்பதில்லை. ஜனகர் இதைத்தான் வெளியிட்டார்.

**நே**ற்று இரவு ஒரு வாலிபன் என்னிடம் வந்து சொன்னான், "குருதேவா! தியானத்தில் இலயித்திருக்கும் போது நிகழ்ந்ததில் எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை."

சரிதான். திடீரென ஒரு நிகழ்வு ஏற்பட்டு விட்டால் நம்ப முடியாமல்தான் இருக்கும். அற்ப சொற்ப விஷயங்களில் தான் நமக்கு நம்பிக்கை ஏற்படும். மிகப் பெரியதாக அதிசயப்படும்படி நிகழ்ந்து விட்டால் எப்படி நம்பிக்கை ஏற்படும்?

பரமாத்மாவே உன் எதிரில் வந்து நின்றால் பேராச்சரியத்தில் மூழ்குவாய், பேச்சிழந்து நிற்பாய். நம்பமாட்டாய்.

மேலை நாட்டில் பிரபல ஞானியர் ஒருவர் இருந்தார், பெயர் தரதூலியன். அவருடைய ஞானவாக்கு இது, "என்னிடம் ஒருவர் 'கடவுளுக்கு ஏதாவது சாட்சி இருக்கிறதா?' என்று கேட்டார். நான் சொன்னேன், 'கடவுள்தான் சாட்சி. கடவுளை நம்ப முடியாது. நம்பகம் இல்லாதவன். அவனிடம் நம்பிக்கை ஏற்படவில்லை. கடவுள் இல்லாத ஒன்று, பிறக்காத ஒன்று.' நான் வேறு எப்படிக் கூற முடியும்?"

மிக அற்புதமான அதிசயமான கருத்து இது. ‘கடவுள் உள்ளது; ஆனால் அது அசம்பவம் (பிறக்காதது).’ உலகம் பிறவி உள்ளது, கடவுளுக்குப் பிறவி கிடையாது. பிறப்பது அற்ப சொற்பம், பிறவாதது மிகமிகப் பெரியது (விராட்). ஆனால் அசம்பவம் அரிதாகச் சம்பவிக்கிறது. (பிறவாததும் எப்போதாவது பிறக்கும்). அப்போது அதன்பால் நம்பிக்கை ஏற்படுவதில்லை. ஆக, நீ அதை நம்பித்தான் ஆகவேண்டும். உன் வேர்ப்பிடிப்புகள் யாவும் அழிந்து போயின. பிறகு எப்படி நம்புவாய்? ‘நீ’ எனும் தன்மை அழிந்ததும் அது நிகழ்கிறது. நம்பிக்கை கொள்ள எவர் இருப்பர்? அது நிகழும்போது நீ சிதறிப் போயிருப்பாய்.

நீ இதுவரை இருளைப் போன்றவன், ஞானபோத சூரியன் உதித்ததும் நீ மறைந்து போவாய்.

ஜனகர் சொன்னார், “இதனால்தான் பார் முழுவதும் என்னுடையது. அல்லது எனக்கென்று எதுவுமே இல்லை.”

இந்த இரு விஷயங்களும் நிகழக் கூடியவை. இவைகளுக்கு இடையில் உள்ள கருத்து, நோக்கம் வெறும் பிரமை. உலகம் முழுவதும் எனது. ஏனெனில் நான் பரமாத்மாவின் ஒரு பகுதி, அங்கம். நான் பரமாத்மா, நான் உலகம் அனைத்திற்கும் கேந்திரம். என் சாட்சி உலக மனைத்திற்கும் சாட்சியாகும். உலகம் அனைத்தும் என்னுடையது - இதொரு நிகழ்வு; அல்லது எனது என்று எதுவும் இல்லை. நானே இல்லையே, நான் எங்கும் இல்லை. சாட்சி நிலையில் நான் இல்லை. சாட்சியம் எஞ்சியிருக்கும். உரிமை கொண்டாட எவனும் இல்லை. எல்லாமே எனதாக இருக்கும்போது வேறு எவன் சாட்சிய உரிமை கொண்டாடுவான்?

ஜனகர் சொல்லுகிறார், “இரு வாய்ப்புகள் உள்ளன. இவை தார்மிக வெளிப்பாடுகள். பூர்ணமாக இருக்கும். அல்லது சூனியமாக இருக்கும். கிருஷ்ணன் பூர்ணத்துவத்தைத் தேர்ந்தெடுத்தார். உபநிடதங்களும் அப்படியே. அந்தப் பூர்ண தத்துவத்திலிருந்துதான் எல்லாமே வெளிப்படும். பிறகும் பூர்ணமே (முழுமை) எஞ்சியிருக்கும். அப்பூர்ணத்துள் எல்லாமே ஒடுங்கிவிடும். அப்படியும் பூர்ணம் விரிவோ, குறைவோ பெறாது.

உபநிடதங்கள் (வேதாந்தம்), கிருஷ்ணன், இந்து (சனாதன) ஞானியர், சூஃபி துறவியர் பூர்ணத்தை ஏற்றார்கள். புத்தர் சூனியத்தைத் தேர்ந்தெடுத்தார். ஜனகர் கூறினார், "ஆகையினாலே எல்லாமே என்னுடையது. நான் பூர்ணன், பூர்ண பராத்பர பிரும்மம்; அல்லது எனது என்று எதுவும் இல்லை, நான் பரம சூன்யம்." ஜனகருடைய இரு தீர்மானங்களும் சத்தியம், ஏற்புடைத்து.

புத்தருடைய கருத்துரை முழுமையானதல்ல. கிருஷ்ணனின் கருத்துரையும் அப்படியே. ஜனகருடைய இந்த வாக்குமூலத்தில் எல்லா தத்துவங்களும் அடங்கும். இரு கருத்துக்களும் சரிதான். இரு விதமாகக் கூறலாம். ஏனென்றால், உலகம் அனைத்திற்கும் நான் கேந்திரமானவன் எனும்போது, எல்லாமே என்னுடையவைதான். அப்போது 'நான்' இருப்பதில்லை. 'நான்' எனும் தன்மை விலகிப் போகிறது. தூசி தட்டிப் புறந்தள்ளியது போல தூசிப் படலம் பின்னால் காற்றில் கலந்து தொடருகிறது. யாத்திரிகன் முன்னேறிச் செல்கிறான். தூசி தரையில் படிந்துவிடும். பிறகு எனக்கு (பயணிக்கு) என்ன இருக்கிறது? எனது என எதுவும் இல்லை.

**அத மம ஸர்வம் ஜகத்...**

-உலகம் எல்லாம் எனது.

**அதவா மம கிஞ்சன ந,**

அல்லது, எனது என எதும் இல்லை.

'ஆச்சரியம்! எனது சரீரத்துடன் உலகைத் துறந்து, ஏதோவொரு திறமையினால் (உபதேசத்தால்) நான் இப்போது பரமாத்மாவைத் தரிசிக்கிறேன்.'

**அஹோ! ஸசரீரம் விச்வம் பரித்யஜ்ய...**

ஆச்சரியம்! என் சரீரம் போய்விட்டது. அத்துடன் உலகம் முழுவதும் போய்விட்டது. தியாகம் நிகழ்ந்திருக்கிறது. தியாகம் செய்யப்படுவதில்லை. தியாகம் உணர்வுநிலை. செயற்பாடு இல்லை. எவனாவது 'நான் தியாகம் செய்தேன்' என்று சொன்னால், அது தியாகமே இல்லை, தியாகம் நிகழவில்லை. தியாகத்தை போகமாக (அநுபவம்) மாற்றி விட்டான். எவனாவது, "நான் தியாகி" எனச்

சொல்லிக் கொண்டால், அவனுக்குத் தியாகம் என்ன என்பதே தெரியவில்லை. ஏனெனில் எதுவரையில் 'நான்' உணர்வு இருக்குமோ அதுவரை தியாகம் இராது.

தியாகத்திற்கு அர்த்தம் விடுதல், துறத்தல் அல்ல. தியாகம் என்பது விழிப்புற்று நோக்குதல். 'எனது என எதுவும் இல்லையே, விடுவதற்கு என்ன இருக்கிறது?' என்பதை உணர்தல். எதையாவது வைத்திருந்தால்தானே விடுவதற்கு?

நீ தூங்கி எழுந்ததும் காலையில், "சரி, இரவு கண்ட கனவுகளைத் துறந்து விடுகிறேன்." என்றா சொல்லுகிறாய்? இரவில் நான் பேரரசனாக இருந்தேன்; பொன்வேய்ந்த மாடமாளிகையில் வசித்தேன்; நவரத்தின அணிகலன்களைத் தரித்துக் கொண்டிருந்தேன்; என் சாம்ராஜ்யம் மிகப்பெரியது. உத்தமமான பிள்ளைகள், மனைவி இருந்தார்கள். ராஜபோக சுகவாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தேன் - அவ்வளவையும் இப்போது காலையில் துறந்து விட்டேன் என்று சொல்லுவாயா? சொன்னால் உன்னைப் பைத்தியம் என்பார்கள். எள்ளி நகையாடுவார்கள். கனவில் கண்ட அரசாட்சியை நீ விடமுடியாது. தானாகவே மறைந்து போன மாயம் அது.

பரம ஞானமான மெய்ஞானத்தின் சூட்சுமம் இதுதான் - உனக்குத் தென்படும் இந்த பௌதிக உலகம் வெறும் மாயக்காட்சி. எதுவும் இல்லை. இதில் விடுவதற்கு என்ன இருக்கிறது? ஆனால் சாமானியர்கள் தாம் துறந்ததாகக் கருதும் பௌதிகப் பொருள்களுக்குக் கணக்கு வைத்திருக்கிறார்கள்.

ஓர் அன்பர் என்னைச் சந்திக்க வந்தார். மனைவியும் உடன் வந்திருந்தாள். அன்பர் பிரபல கொடை வள்ளல். அவர் துணைவி சொன்னாள், "குருதேவ்! இவரைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திராது. இவர் புகழ்பெற்ற கொடையாளியாக்கும் இலட்சம் ரூபாய் வரை தானம் செய்திருக்கிறார்."

கணவர் மனைவி கையை அழுத்தி, "ஒரு லட்சம் இல்லை; ஒரு லட்சத்துப் பத்தாயிரம் ரூபாய்" என்றார்.

இது தானமாகாது, பற்று வரவுக் கணக்கு, வியாபாரம். கொடுத்த பணத்திற்குச் சரியான கணக்கு. இவர் எதிரே பரமாத்மா வந்து

தோன்றினால், அவர் கழுத்தைப் பற்றிக் கொண்டு, "ஒரு லட்சம் பத்தாயிரம் ரூபாய் தானம் கொடுத்திருக்கிறேன்; பதிலுக்கு நீ எவ்வளவு கொடுப்பாய்?" என்று கேட்பார். கொடையாளி படித்த சாத்திரத்தில், "இங்கு ஒன்று கொடுத்தால், மேலுலகில் கோடிக்கணக்கில் திரும்பக் கிடைக்கும்." என்று சொல்லியிருக்கிறது. இந்த ஆதாய வியாபாரத்தை எவன் விட்டு வைப்பான்? ஒன்றுக்குக் கோடி! வட்டிவிகிதம் பார்த்தாயா? இதுபோல எங்காவது லேவாதேவி இருக்குமா? சூதாட்டக்காரன்கூட இவ்வளவு ஆதாயம் பெற முடியாது. ஒன்றுக்கு ஒரு கோடி சூதாட்டத்தில் கூட கிட்டாது. இது மகா பெரிய சூதாட்டம். ஒன்றுக்குக் கோடி என்றால், இலட்சம் ரூபாய் விட்டால் எத்தனை கோடிகள் கிடைக்கும்! இது பேராசையின் மாபேராதிக்கம்.

இலட்சத்தில் கணக்கீடு நடக்கிறது, ரூபாயின் மதிப்பு முழுவதும் அழியவில்லை. முதலில் பணத்தை இரும்புப் பெட்டியினுள் வைத்தார்கள். இப்போது அந்த இடத்தில் தியாகங்களின் கணக்கு, பதிவேடு வைக்கப் பட்டிருக்கிறது. ஆக ஆதாய-இலாபக் கனவு குலையவில்லை, வளர்ந்து தொடர்கிறது.

**சீ**ன நாட்டின் ஒரு புராதனக்கதை. பேராசருக்கு ஒரே மகன். மரணப்படுக்கையில் கிடந்தான். வைத்தியர்கள் கைவிட்டு விட்டார்கள். "சாவு நெருங்கிக் கொண்டிருக்கிறது. இந்த நோய்க்கு மருந்து கிடையாது. இரு தினங்கள் தாக்குப் பிடிக்கலாம். அதற்குள்ளும் மரிக்கலாம்."

பேரரசர் இரவு முழுவதும் மகனுக்கு அருகில் அமர்ந்திருந்தார். உறக்கம் இல்லை. கண்ணீர் பெருகுகிறது. எந்த நேரத்தில் உயிர் பிரியுமோ? விடிற்காலையில் கண்ணயர்ந்து விட்டார் உட்கார்ந்த படியே. அப்போது ஒரு கனவு. மாபெரும் சாம்ராஜ்யம், இதற்கு இவர்தான் அதிபதி. பன்னிரண்டு பிள்ளைகள். அழகு, வாலிபம், வீரம், மதிநுட்பம், செயல்திறன் எல்லாம் நிரம்பியவர்கள். சம்ராட்டின் புகழ், பெருமை பாரெங்கும் பரவியிருந்தது. பேரானந்த ராஜவைபவம்...

அந்த சமயத்தில் நோய்வாய்ப்பட்டிருந்த ஒரே மகன் மரித்து விட்டான். அருகில் இருந்த மகாராணி கதறி அழுதாள். பேரரசர் கண் விழித்தார், திகைத்துப் போனார், விக்கித்துப் போனார். மகாரர்ணிக்கு

அதிர்ச்சி. மகனிடம் பாசம் மிக்க மன்னருக்கு என்ன ஆயிற்று? அழவில்லை, கண்ணீர் விடவில்லை. உணர்ச்சியிழந்து உட்கார்ந்திருக் கிறாரே! புத்தி பேதலித்து விட்டதா? மகன் நோயாளியாகக் கிடக்கும் போது அழுது கொண்டிருந்தவர், மகன் மரித்ததும் அழமாட்டாமல் போனது ஏன்?

மனைவி அவரை உலுக்கி, "என்ன ஆயிற்று உங்களுக்கு? அழுகை வரவில்லையா? கதறி அழவேண்டிய வேளையில் இப்படிக் கற்சிலையாய் இருப்பது...!" என்று கூறி அழுதாள்.

பேரரசர் சொன்னார், "எதற்கென்று அழுவது? சற்றுமுன் என் பன்னிரண்டு பிள்ளைகளும் இறந்து போனார்கள். மாபெரும் சாம்ராஜ்யம் இருந்தது, மறைந்து போனது. அதற்கு அழுவேனா? இதற்கு அழுவேனா? எதற்கெல்லாம் அழுது கொண்டிருப்பது? பன்னிரண்டு பிள்ளைகள் செத்துப் போனார்கள், இங்கு பதிமூன்றாவது பிள்ளையும் செத்துவிட்டான். எல்லாம் சமாப்தி!...."

மகாராணி மகாராஜாவை பதைபதைப்போடு பார்த்தாள்.

பேரரசர் வேதனையோடு சொன்னார், "எதற்கெல்லாம் அழுது கொண்டிருக்க முடியும்? பன்னிரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். இப்போதுதான் செத்துப் போனார்கள். பெரிய சாம்ராஜ்யம் இருந்தது. மறைந்து போயிற்று. அதெல்லாம் கனவில் நிகழ்ந்தவை. இதுவும் ஒரு கனவுதான். அந்தக் கனவைக் கண்டு கொண்டிருக்கும் போது, இந்தப் பிள்ளையை மறந்து போனேன். இந்த ராச்சியம், நீ, இந்த மாளிகை எல்லாம் மறந்து போயின. அந்தக் கனவு கலைந்தது. நீங்கள் நனவிற்கு வந்திருக்கிறீர்கள். இன்று இரவு வேறு கனவு காண்பேன்: உங்களை மறந்து போவேன். போதும், இனி எனக்கு எதுவும் இல்லை, எதுவும் வேண்டாம். ஞானம் பிறந்தது. எல்லாம் மாயை, மயக்கம், கனவு."

ஜனகர் கூறுகிறார், "ஆச்சரியம்! இந்த சரீரத்துடன் உலகத்தையே துறந்து விட்டேன்."

இது தியாகம். எங்கும் போகவில்லை, இருந்த இடத்திலேயே - அரண்மனையிலேயே எல்லாம் துறந்தாயிற்று. அஷ்டாவக்கிரர் எதிரிலேயே. அரண்மனை, அரச வைபவம், செல்வக்குவியல், பணியாட்கள், காவலர்கள், உபசாரங்கள் எல்லாம் இருந்து

கொண்டிருக்கின்றன. அந்த நிலையில் ஜனகர் சொல்லுகிறார், "ஆச்சரியம்! தியாகம் (துறவு) நிகழ்ந்துவிட்டது!"

தியாகம் உள்ளார்ந்தது, அக உணர்வானது, ஞானபோதமானது. "எவ்வளவு இயல்பாக, விரைவாகப் புரட்சி ஏற்பட்டுவிட்டது! ஆஹா! அதிசயமானது உமது உபதேசம், குருதேவா! நான் இங்கு இப்போது பரமாத்மாவைத் தரிசிக்கிறேன். உலகம் தென்படவில்லை. சிருஷ்டி முழுவதும் உருமாறி விட்டது."

அஷ்டாவக்கிரரின் இந்த சூத்திரம் மகத்தானது. நீ இருக்கிற இடத்திலேயே, நிலையிலேயே ஞானபோதப் புரட்சி நிகழ்ந்து விட்டது! இமயமலைக்குச் சென்று தவம் புரிய வேண்டாம். துறவறம் பூண்டு விலகிப் போக வேண்டாம். அலைந்து திரிந்து தேடித் தவிக்க வேண்டாம். மனைவி, மக்கள், உற்றம் சுற்றம், வீடு, வசதி சகலமும் இருக்கிறது. எவருக்கும் தெரியவில்லை. புரட்சி நிகழ்ந்திருக்கிறது. இது உள்ளார்ந்த ஆத்மாநுபூதி. என்ன நிகழ்ந்திருக்கிறது என்பது உனக்கே புரியவில்லை. மனைவி, மக்கள், வீடு, சொத்து எதுவும் தன்னுடையவை எனத் தோன்றவில்லை. அதிதியைப் போல் நீ இருப்பாய். எல்லாம் இருக்கும், எல்லா நிகழ்வுகளும் தொடரும். ஆனால் எதுவும் உன்னைப் பாதிக்காது. சத்திரத்தில் தங்கிச் செல்லும் பக்கிரி, பரதேசி போல் நீ இருப்பாய். எல்லாமே விளையாட்டு, நாடகம். இதன் இடையேதான் ஞானபோதப் புரட்சி நிகழ்ந்திருக்கிறது.

**எ**ன்னிடம் ஒரு பிரபல நடிகர் வந்து கேட்டார், "சுவாமி! நான் நடிப்பில் மேலும் சிறப்பாக வளர்ச்சி பெறுவது எப்படி?" நான் சொன்னேன், "இதற்குரிய சூக்குமம் இதுதான். நிஜ வாழ்க்கையில் சிறப்பாக வளர்ச்சி, மலர்ச்சி பெற விரும்புகிறவர் வாழ்க்கையை நடிப்பாக ஆக்கிக் கொள்ள வேண்டும். அதை நம்ப வேண்டும். நடிப்புக் கலையில் சிறப்புற மேன்மை பெற விரும்புகிறவர், நடிப்பை வாழ்க்கையாக ஆக்கிக் கொள்ள வேண்டும். நடிகர் அதன்மூலம் தம் தொழிலுக்கு (நாடகம், சினிமா) கௌரவம், மதிப்பு ஏற்படுத்திக் கொடுக்கிறார்.

தன் நடிப்பால் விமரிசகர்களையும் வியப்பில் ஆழ்த்தும் வெற்றி வாகை நடிகர் பொய்யை மெய்யாகக் கருதுபவர். அதனால் அவர்

வெற்றி பெற முடிகிறது. நடிப்பை நிஜ வாழ்வாகக் கொண்டிருப்பதால் தான் அவரால் வெற்றி பெற முடிகிறது. நடிக்கத் தொடங்கியதுமே அந்தப் பாத்திரத்தோடு ஒன்றிப் போய் விடவேண்டும், மேடை, நடிப்பு, நாடகம் எல்லாமே மறைந்து (மறந்து) விடவேண்டும். பார்வையாளர்களை மெய்மறக்கச் செய்ய வேண்டும். சோகக் காட்சியில் அழுகையும், கண்ணீரும் இயல்பாகவே வரவேண்டும்.

நிஜ வாழ்க்கையில் திறமை, பெருமை பெற வேண்டுமானால், வாழ்க்கையை நடிப்பாக்கிக் கொள்ள வேண்டும். வாழ்க்கையே நடிப்புதான் எனக் கருத வேண்டும், நம்ப வேண்டும். ஊர், குடும்பம், வீடு எல்லாம் நாடக மேடை. இங்கு நிரந்தரமாகத் தங்கியிருக்க முடியாது. இது சத்திரம், பயணியர் விடுதி. ஆண்டிகள், பரதேசிகள், வழிப்போக்கர் எனப் பலரும் வருவார்கள், தங்குவார்கள், போய் விடுவார்கள். பிறப்பும் இறப்பும் வளர்தலும் இப்படித்தான். இங்கு வேர் பதிய நிலையாய் வசிக்க வேண்டாம். தேவை இல்லை. வசிக்கத் துவங்கினால் வாதனை, வேதனை சூழ்ந்து கொள்ளும்.

இந்த உலகியல் வாழ்வில் வேர் பதியாதவன் சன்னியாசி (முற்றும் துறந்தவன்). அவன் பரதேசியாகப் பயணித்துக் கொண்டிருப்பான். நாடோடி வாழ்க்கைதான் அவனுக்கு உள்ளது, உரியது. நாடோடியை இந்தியில் 'க்கானாபதோஷ்' என்பர். பொருள் பொதிந்த சொல். 'க்கானா' - வீடு, 'பதோஷ்' - தோள். எவனுக்கு வீடு அவனது தோளாக இருக்கிறதோ, அவன் 'க்கானாப்தோஷ்'. இவன்தான் சரியான, நிசமான சன்னியாசி.

**இ**ப்ராஹிம் என்ற சூஃபி பக்கிரி இருந்தார். பல்க்கு நாட்டு மன்னராக இருந்தவர். இரவு உறங்கிக் கொண்டிருந்தபோது, எவனோ பள்ளியறையின் கூரைமீது நடந்து செல்லும் ஓசை கேட்டது. இப்ராஹிம் விழிப்புற்று, "யாரடா காவாலி, நடுநிசியில் கூரை மேலே நடப்பது?' எனக் கத்தினார்.

பதில் வந்தது, "நான் காவாலி இல்லை. என் ஒட்டகம் காணாமல் போய்விட்டது. அதைத் தேடிக் கொண்டிருக்கிறேன்."

இப்ராஹிம் சிரித்தார். "பைத்தியக்காரா! ஒட்டகம் எப்படியடா கூரையில் கிடைக்கும்? அது எப்படியடா கூரைமீது ஏறமுடியும்?

யோசிக்க வேண்டாமா? மடையா!'' என்று சாடினார்.

கூரைமீதிருந்து குரல் கேட்டது, "என்னைப் பைத்தியம், முட்டாள் என்று ஏசுவதற்கு முன்பு நீங்கள் உங்களைப் பற்றி யோசியுங்கள். செல்வம், புகழ், பெருமை, இசை, மது - இவைகளால் சுகம் கிட்டுகிறதா? கிட்டினால் ஒட்டகம் கூரைமீது கிடைக்கும்.''

இப்ராஹிம் திகைத்துப் போனார். நடுநிசி, வந்தவன் ஓடினான். இப்ராஹிம் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினார். கூச்சலிட்டார், "அந்த ஆளைப் பிடியுங்கள். அவன் புத்திசாலியாக இருக்கிறான். அவனை விடக்கூடாது'' ஆனால் அவன் ஓடிப் போனான். இப்ராஹிம் அந்த ஆசாமியைத் தேடிப் பிடித்து வர ஆட்களை அனுப்பினார். 'அவன் ஞானியாக இருப்பான் போலிருக்கிறதே. தத்துவ போதனை செய்திருக்கிறான். எதற்காக அப்படிச் சொன்னான்?...' பக்கிரியார் வியந்து போனார்.

பிறகு இப்ராஹிம் பக்கிரியார் உறங்க முடியவில்லை. மறுநாள் காலையில் தர்பாரில் வந்து அமர்ந்தார். கவலை, கலக்கம் நீங்கவில்லை. முகம் வாடியிருந்தது. நேற்று அந்த மனிதன் கூரைமீதிருந்து சொன்னது அவரைப் பாதித்தது. மனவேதனை, ஜனகர் போன்றவனாக இருப்பானோ? மனதைத் தாக்கினாலும் சரியாகத்தான் சொல்லி யிருக்கிறான். அவன் பைத்தியக்காரன் என்றால் நான் அவனைவிட மோசமான பைத்தியம். என்னைப் புத்திசாலி என்று சொல்லிக் கொள்ள முடியுமா அவனோடு ஒப்பிடும் போது? எவருக்கு இந்தப் பௌதிக உலகில் சுகம் கிடைத்திருக்கிறது? நானும் தேடிக் கொண்டுதான் இருக்கிறேன் சுகத்தை. கிடைக்கவில்லையே. கிடைத்திருந்தால் கூரைமீது ஒட்டகமும் கிடைத்திருக்க வேண்டும். நடவாத காரியம். இடைஞ்சல் இல்லையானாலும் நிகழாது. யார் அந்த ஆசாமி? எப்படி கூரைமீது ஏறினான்? பிறகு எப்படிக் குதித்து ஓடிப்போனான்? எங்கே போனான்?...

பக்கிரியார் கவலையில் ஆழ்ந்து போனார். தர்பாரில் அமர்ந்திருக்கிறார், தர்பார் கூடியிருக்கிறது. நிகழ்ச்சி நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் சூஃபி ஞானி இப்ராஹிமின் மனம் அதில் ஈடுபடவில்லை. மனம் எங்கேயோ அலைகிறது. வேறொரு உலகிற்கு மனம் போய்விட்டது. தியாகம் நிகழ்ந்திருக்கிறது. அற்பசொற்ப

விஷயம். அதற்கே அக்கணமே நிகழ்ந்திருக்கிறது! அஷ்டாவக்கிரர் தான் கூரைமீது நின்று கொண்டு அப்படிப் பேசியிருப்பாரோ? பேசியிருக்க வேண்டும். பேசக் கூடியவர்தான்.

அப்போது தர்பார் வாசலில் ஏதோ குழப்பம் நிகழ்வது தெரிந்தது. ஓர் ஆசாமி இரைந்து கூறுகிறான், "நான் இந்தப் பரதேசிச் சாவடியில் கொஞ்சம் தங்க வேண்டும். உள்ளே போகவிடு!"

காவலாளி மிரட்டுகிறான், "எலே, பைத்தியம்! இது சாவடி இல்லை; பாதுஷாவின் தர்பார், மகால், மாளிகை, வெளியே பேட்டையில் சத்திரம், சாவடி இருக்கிறது. அங்கே போய் தங்கிக் கொள்! போ!..."

"இல்லை, நான் இங்கேதான் தங்குவேன். இது சாவடிதான். என்னை ஏமாத்தாதே, வேறே ஆளைப்பாரு! நான் இந்தச் சாவடியிலேதான் தங்கப் போகிறேன்" வந்தவன் முரண்டு பிடித்தான்.

இப்ராஹிம் ஞானியார் காதில் அவன் கூவல் விழுந்தது. அவர் புரிந்து கொண்டார், 'நேற்று கூரைமீது நின்று பேசியவன் இவன்தான். அதே குரல்.' உடனே அந்த மனிதனை தர்பாருக்கு அழைத்துவர ஆணையிட்டார்.

அந்த மனிதனை தர்பாருக்கு அழைத்து வந்தார்கள். இப்ராஹிம் கேட்டார், "நீ என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாய்? எதற்கு இந்தப் பிடிவாதம்? இது எனது அரண்மனை. இதை நீ சாவடி என்கிறாயே, இது எனக்கு செய்கிற அவமதிப்பு இல்லையா?"

அவன் பதிலளித்தான், "அவமதிப்போ, வெகுமதிப்போ - அநாவசியம். ஒண்ணு கேட்கிறேன், பதில் சொல்லும். இதற்கு முன்பும் நான் இங்கே வந்திருக்கிறேன், அப்போது இந்த அரியணையில் வேறொருவர், அமர்ந்திருந்தாரே."

இப்ராஹிம், "அவர் என் தந்தையார்" என்றார்.

வந்தவரும் ஒரு பக்கிரி. அவர் கேட்டார், "அதற்கு முன்பும் நான் இங்கு வந்திருந்தேன். அப்போது மற்றொருவர் உட்கார்ந்திருந் தாரே?"

"அவர் என் பாட்டனார், தந்தைக்குத் தந்தை"

"அதனால் தான் இந்தக் கட்டிடத்தை வழிப்போக்கர் தங்கும் சாவடிக்கூடம் என்கிறேன். இங்கே மனிதர்கள் வருகிறார்கள், தங்குகிறார்கள், பிறகு போய்விடுகிறார்கள். நீங்கள் எத்தனை காலம் இங்கே தங்கியிருப்பீர்கள்? நான் பிறகு இங்கு வந்து பார்க்கும்போது, வேறொருவர் தங்கியிருப்பார். இதனால்தான் இந்த இடத்தை சாவடி என்கிறேன். இது வீடு இல்லை. வீட்டில் வந்து ஒருவர் தங்கினால், நிரந்தரமாகத் தங்கிவிடுவார். அங்கிருந்து எவரும் அவரை அகற்ற முடியாது; அவரும் அகல இயலாது. வீடுபேறு பெறுவார்."

இதைக் கேட்டதும் இப்ராஹிம் சூஃபி ஞானி அரியணையிலிருந்து இறங்கி வந்துவிட்டார். வந்த துறவியிடம் சொன்னார், "வணங்குகிறேன், ஞானியாரே! இது சாவடிதான். நீங்கள் இங்கே தங்கியிருங்கள். நான் வெளியேறுகிறேன். இனியும் இந்தச் சாவடியில் நான் ஏன் தங்க வேண்டும்?"

இப்ராஹிம் மாளிகையை விட்டு வெளியேறி விட்டார். அவர் தியாகத்திற்குத் தகுதி பெற்று விட்டார். தகவு நிரம்பியவர் ஆனார்.

**ஜ**னகர் கூறுகிறார், "கணநேரத்தில் எனக்குத் தியாக உணர்வு ஏற்பட்டு விட்டது. இந்த சரீரம் உட்பட உலகம் முழுவதையும் துறந்து நேரிய துறவியாகி விட்டேன். எந்தத் திறனால் இதைச் செய்தேனோ! எத்தகைய உத்தம உபதேசம் பெற்றிருக்கிறேன்! உங்களுடைய (அஷ்டாவக்கிரருடைய) ஆக்கத் திறமை, கலைமேதைமை மகோன்னதம்!

**அஹோ சரீரம் விச்வம் பரித்யஜ்ய, குதஸ்சித் கௌசலாத்.**

-எத்தகு சாதுரியம் இது! எப்பேர்ப்பட்ட குருதேவரைப் பெற முடிந்திருக்கிறது!

**ஏவ மயா அதுனா பரமாத்மா விலோக்யதே.**

- இப்போது எனக்கு பரமாத்மா மட்டுமே காணக் கிடைத்திருக்கிறார்! எல்லாமே பரமாத்மாவின் சொரூபங்களாகத் தெரிகின்றன. பரமாத்மாவின் அலைவீச்சுகள்.

'தண்ணீரிலிருந்து எழும் அலைகள், நுரைக்குமிழிகள், நீர்க் குமிழ்கள் வேறுபட்டவை இல்லையோ, தண்ணீரிலேயே கரைந்து போகின்றவையோ, அதுபோலத்தான் பரமாத்மா விடமிருந்து வேறுபட்டவை எவையும் இப்பாரினில் இல்லை. சகலமும் பரமாத்மாவின் சொந்தக் குமிழ்; குமிழிகள், அலைகள், நுரைகள் அவரிடமிருந்து எழுகின்றன, அவரிடமே ஒன்றி விடுகின்றன.

**யதா தோயத: ப்பேன-புத்புதா: பிந்நா: ந.**

"அப்படித்தான் நாம் எல்லோரும் இருக்கிறோம். குருதேவா! எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது." - ஜனகர் அஷ்டாவக்கிரரிடம் சொன்னார். இது பயின்று அறிந்த வேதாந்த தத்துவம் இல்லை. இது சுய அநுபவம். ஆழ்ந்த ஆத்மாநுபவத்திலிருந்து எழுந்த வாக்குறுதி - "நான் அப்படித்தான் பார்க்கிறேன். அறிகிறேன்."

நீயும் பாரேன். இதொரு திருஷ்டி பேதம் (பார்வை மாறுபாடு). மேலை நாட்டு அறிஞர்கள் இதை 'கைஸ்டோல்ட்' தத்துவம் என்பர். இது மகத்துவம் உள்ள சொல். சிறார்களின் பாடப் புத்தகத்தில் கோடுகளால் வரையப்பட்டுள்ள படங்களைப். பார்த்திருப்பாயே? அவற்றில் ஒன்று; உற்றுப் பார்த்தால் கிழவி தென்படுவாள், பிறகு பார்த்தால் யுவதியாகத் தெரிவாள். நீ பார்த்துக் கொண்டே இருந்தால் மாறுதல்கள் புலப்படும். மறுபடியும் முதிய மாது, பிறகு பேரிளம்பெண். ஒரே கோட்டோவியம், இரு. உருவங்களைக் காட்டும். நீ வியந்து போவாய். மனக்கலக்கம் ஏற்படும். இதை நீ உணராமல் இருந்திருக்கலாம். இரு உருவங்களை ஒருசேரக் காணமாட்டாய். எனினும் நீ இரு உருவங்களையும் கண்டிருக்கிறாய். அந்த ஒரு ஓவியத்தில் கிழவியையும் யுவதியையும் பார்த்திருக்கிறாய். இரு உருவங்களுமே அந்த ஒரு படத்தில் இருப்பதையும் அறிவாய். இருந்தாலும் இரு உருவங்களையும் ஒரு சேரக் காணமுடியாது. ஒரே கோட்டோவியத்தில் அடங்கி யிருந்தாலும், அதை நீ அறிந்திருந்தும் ஒருசேர இருவர்களையும் பார்க்க இயலாது. இந்த நிலைப்பாடுதான் ஜெர்மன் மொழியில் 'கைஸ்டோல்ட்' எனப்படும்.

அச்சொல்லின் விளக்கம் - ஒரு நிலையில் பார்த்தால் ஒரு பொருள் தென்படும்; வேறு விதமாகப் பார்க்கும்போது மற்றொரு

பொருள் தென்படும். பார்க்கப்படும் பொருள் ஒன்றுதான், பார்க்கும் விதத்தால் பொருள் மாறாட்டம் ஏற்படுகிறது.

உலகியல் வாழ்வு இப்படித்தான். அஞானி பார்க்கும்போது பலப்பல பொருள்கள் தென்படுகின்றன. ஒரு கைஸ்டோல்ட் - ஒரு வகை. பிறகு ஞானி இந்த உலகைப் பார்க்கிறான், பல்பொருள்கள், பல்வகை உருவங்கள் தென்படுவதில்லை. ஒரே விராட் சொரூபம் தென்படுகிறது ஞானிக்கு.

ஜனகர் சொன்னார், "ஏவ மயா அதுநா பரமாத்மா விலோக்யதே. (ஒரே பரமாத்மாதான் எனக்குத் தென்படுகிறார்)"

இந்த மரங்கள் பரம்பொருளின் பசுமைப் பரப்பு. இந்த மலர்களில் வண்ணக் கோலங்களாக மலர்வது அப்பரமாத்மா. மலர்களின் நறுமணத்தோடு தென்றலாகக் குலாவுவதும் அதுவே. வான்வெளியில் குவியும் முகில்களாக அது உள்ளது. உன்னுள்ளும் அது உறங்குகிறது. புத்தர், அஷ்டாவக்கிரர் ஆழ்மனத்துள் அது விழித்தெழுகிறது. பாறாங்கல்லினுள் ஒடுங்கி உறங்கிக் கிடப்பதும் அதுதான். மனிதருள் அது எப்போதாவது சிலிர்த்தெழும், விழித்தெழும். எல்லாமே அதன் உருவங்கள். சிலவற்றில் தலைகீழாய் நிற்கும், சிலவற்றில் நேராக நிமிர்ந்திருக்கும். மரங்கள் மனிதரை ஒப்பிடும் போது தலைகீழாய் நிற்பதாகத் தோற்றும்.

**சி**ல நாட்களுக்கு முன்பு தாவரவியல் ஆய்வு நூல் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். ஓர் இடத்தில் வியந்து திகைத்துப் போனேன். தகவல் சரியாகத்தான் தோன்றியது. நூலாசிரியர் ஒரு ஆய்வாளர். அவர் எழுதியிருந்தார், 'மரங்கள் தலைப்பகுதி பூமிக்கு அடியில் புதைந்திருக்கிறது.' பூமியிலிருந்துதான் மரங்கள் தமக்கு வேண்டிய உணவை எடுத்துக் கொள்ளுகின்றன. மரங்களின் வாய் நிலத்தடியில் உள்ளது. பூமிக்குள்ளிருந்துதான் உணவை, நீரை எடுத்துக் கொள்ளுகின்றன. கால்கள் வானம் நோக்கி உள்ளன. சிரஸாஸனம் (தலைகீழ் யோகாசனம்) செய்து கொண்டிருக்கின்றன! முதிய யோகிகளைப் போல் இருக்கின்றன.

அந்த ஆராய்ச்சியாளர் உயிரின வளர்ச்சியை அந்த அடிப்படையில் விளக்கியிருக்கிறார். மண்ணுளிப் பாம்புகள்

(நாங்கூழ்ப் புழு), மீன்கள் தரையை ஒட்டி சமதள அளவில் வாழ்பவை. வால்-முகம் நேராக, நேர்க்கோடு போட்டாற் போல் இருக்கும். மரங்களுக்கு அடுத்த படியாக படைக்கப்பட்டவை. அடுத்த வரிசையில் நாய்கள், பூனைகள், சிங்கம், சிறுத்தைகள். இவைகளின் தலை மேல் நோக்கி இருக்கும். பிறகு குரங்குகள். இவை உட்கார, முடியும். குனிந்து நிமிர முடியும். குரங்குகள் உட்கார்ந்திருக்கும் நிலையில் மனிதர்களைப் போலத் தோன்றும். மரங்கள் சிரஸாசனம் செய்யும் மனிதர்களுக்கு ஒப்பானவை. மனிதன் எழுந்து நிமிர்ந்து நிற்க இயலும். மரத்திற்கு எதிர்மாறாக கால் தரையிலும் தலை மேலேயும் இருக்கும். படைப்பின் முழுமையை மனிதனிடம் பார்க்கலாம்.

எனக்கு விருப்பமான விஷயம் இது. எல்லாருக்கும் உள்ள விளையாட்டு இது. தலைகீழாய் நிற்பது, நேராக நிற்பது, படுத்திருப்பது, உறங்குவது, விழித்திருப்பது, சுக-துக்கங்களில், அமைதி-அமைதி இன்மையில் (கலக்கத்தில்) ஆழ்ந்திருப்பது இப்படிப் பல அலை வீச்சுகள். எல்லா அலைகளும் ஒரே விராட் ஆத்மா நிலைக்கு உட்பட்டவை.

**யதா தோயத: தரங்கா: ப்பேன-புத்புதா: பின்னா: ந.**

- எவ்வாறு நீரிலிருந்து அலை, நுரை, குமிழிகள் வேறு இல்லையோ, அவ்வாறே சகலமும் ஆத்மாவிடமிருந்து வேறுபட்டவை இல்லை. எல்லாமே ஒன்றுபட்டவையே.

**இ**தை நீ பார்த்து உணர்ந்து கொள், பிறர் கூறுவதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாதே. இது 'கெஸ்டோல்ட்' மாறுதல் சார்ந்த விசயம். இதில் ஒரு கண நேரத்தில பளிச்சிடுவது காணக் கிடைக்கும். மின்னல் காட்சி. கவனமாகப் பார், எல்லாமே ஒன்றினுள் ஒடுங்கிப் போவதைக் காண்பாய், மறைந்து போனதை அறிந்து கொள்ளுவாய். மாபெரும் கடல் அலை பாய்கிறது. அலைவீச்சு நீடிக்காது. அதை நீட்டிக்க - அதிக நேரம் காண உனது திறமை வளர்ந்திருக்க வேண்டும். ஆனால் பொதுவாக, கண நேரம் தான் காட்சி அளிக்கும். மகா சமுத்திரத்தில் அலைகள் பொங்கி, மோதிப் பாயும். அவை அம்மாக்கடலின் அம்சங்கள். ஒரே சூரியன், ஒளிக்கதிர்கள் சூரியனுடையவையே. ஒரு இசை எழுகிறது. எல்லா சுவரங்களும் அந்த இசையைச் சேர்ந்தவை.

ஜீவராசியின் வாழ்க்கையில் புரட்சி எழும் ஒரே கணத்தில்; மெள்ள மெள்ள அது உனது சாசுவத சொரூபம் ஆகிவிடும்.

இதை நீ விருப்புற்றால் பற்றிக் கொள். இல்லையெனில் தவறவிடு. ஜனகர் பற்றிக் கொண்டார், மெய்போத ஞானியானார்.

**இரவில் விழித் தெழுந்தேன்**
**இருளின் மறைப்புத் தட்டிக்குப் பின்னால்**
**திடீரென உணர்ந்தேன் அமைதியின் ரகசியப்**
**பேச்சை செவிமடுத்தேன்,**
**மெள்ள மெள்ள ஒலித்த ரகசிய இசை ஓசை**
**உத்தம கீதத்தில் உரையாடல்-**
**அது சொல்லியது-**
**ஏ தடையில்லாதவனே! நீ இன்னும்**
**விழித்தெழவில்லையா?**
**தங்குதடையில்லா இந்த ஊற்றுப்பெருக்கு**
**எங்கும் பரவுகிறது ஒளிவீசியவாறு**
**ஏ துர்பாக்கியவனே! எத்தனை முறை**
**உன்னருகில் நிரம்பி வழிந்தது!**
**நீ காணவில்லையே, உன் குவளையில்**
**நிரம்பி, ததும்பி வழிந்து போனதே,**
**நீ காணவில்லையே!**

நீ இக்குரலை, ரகசியச் செய்தியை, வாக்குகளை இப்போதுதான் முதல் முறையாகக் கேட்கிறாய் என்பது இல்லை. பலமுறை கேட்டிருக்கிறாய். நீ மிகப் புராதனமானவன். நீ அஷ்டாவக்கிரரிடம் அந்த வாக்குகளைக் கேட்டிருக்கலாம். உன் போன்ற சிலரும் நிச்சயம் கேட்டிருக்கலாம்; சிலர் புத்தரிடம் கேட்டிருக்கலாம்; சிலர் கிருஷ்ண பரமாத்மாவிடமிருந்தும் செவியுற்றிருக்கலாம்; வேறு சிலர் ஏசு கிறிஸ்துவிடமிருந்தும், நபிகள் நாயகம் வாயிலாகவும், லாவோத்சு மூலமாகவும், பார்ஸி மதகுரு ஜரதுஸ்திரரிடமிருந்தும் கேட்டு அறிந்திருக்கலாம். இப்பூவுலகில் அனந்த கோடி மனிதர்களைக் கடந்து வந்திருக்கிறாய். எண்ணற்ற தீபங்கள் எரிந்தன. அவற்றுள் ஒரு விளக்கொளியாவது உன் கண்ணில் படாமல் இருந்திருக்காது. உன் இதயக்குவளை பலமுறை நிரம்பித் ததும்பியிருக்கிறது.

ஏ அப்பாவி மனிதா! எவ்வளவோ தடவை உன் இதயக்குவளை நிரம்பி வழிந்திருக்கிறது, நீ காணாதிருந்தாய், வழிந்தோடியது, உன் இதயக்குவளை நிரப்பப்பட்டும் உன் கவனம் இன்மையால் வழிந்து வடிந்து போனது, நீ அதைப் பாதுகாத்துக் கொள்ளவில்லை. அக் கீதம் என்னிடம் சொல்லியது, 'தடையற்றவனே! நீ இன்னுமா விழித் தெழவில்லை? தடங்கல் இல்லாத ஊற்றுப்பெருக்கு ஒளிர்ந்து பரவி வழிந்து போனது

**பொ**ழுது புலர்ந்தது. பலமுறை பொழுது புலர்ந்திருக்கிறது. சூரியன் உதித்திருக்கிறது. ஆனால் நீயோ இருட்டைப் பற்றிக் கொண்டு குந்தியிருக்கிறாய்! இந்தத் துர்பாக்கியத்தை, அவலத்தை நீ எப்போது விடப்போகிறாய்? இந்த இருள் தானே விலகாது, நீ விலக்க வேண்டும்.

ஜனகர், 'எனக்கு ஒன்றுதான் தென்படுகிறது" என்றார். பிறகு தொடர்ந்தார், "அந்த ஒன்றினிலே ஐக்கியமாகி விட்டேன். அந்த ஒன்று என்னுள் ஐக்கியமாகி விட்டது."

**வேதங்கள் உரைக்கின்றன-**
**எவன் தியாகி ஆகிறானோ, அவன்**
**சன்னியாசி (முற்றும் துறந்தவர்),**
**வேத மறைகளைவிட மேம்பட்டவன்,**
**அவன் பிரதாபம் உலகினும் பெரிது,**
**சர்வேசுவரனிடம் குடி கொண்டவன்-**
**அவனுள் குடிகொண்டவன் சர்வேசுவரன்,**
**வேதங்கள் கூறுகின்றன-**
**எந்த மனிதன் தியாகியோ**
**அவனே சிறந்த துறவி,**
**வேதங்களைவிட மேலானவன்**
**வேதங்களைவிட வலுவானவன்,**
**ஏனெனில்-**
**அத்தியாகியுள் சர்வேசன் வசிக்கிறான்**
**சர்வேசுவரனுள் தியாகி வசிக்கிறான்.**

அக்கணத்தில் ஜனகருடைய மெய்யுணர்வு தனித்து இல்லை, சர்வேசனுள் ஒன்றிக் கலந்து விட்டது. வியந்து போனார். 'சிந்திக்கும்

போது ஆடை நூல் மட்டுமே எனப் புரிந்து விடுகிறதோ, அதேபோல் இந்த அகில உலகமும் ஆத்ம நிலைப்பாடுதான் எனப் புரிகிறது.'

விழித்தெழுந்து பார்க்கும்போது, புத்திபூர்வமாக ஆய்ந்து சிந்திக்கும்போது, அந்த சத்தியம் புரிகிறது. ஆடையை உன்னிப்பாய் பார். என்ன தெரிகிறது? நூல்களின் வலையைக் காண்பாய். ஊடும் பாவுமாக, குறுக்கும் நெடுக்குமாகப் பின்னப்பட்ட நூல்கண்டைப் பார்ப்பாய். நூல்களின் வலைப்பின்னல் தான் ஆடை, வஸ்திரம். இதில் வேடிக்கை என்னவென்றால், நூல்கண்டை உன்னால் உடுத்திக் கொள்ள முடியாது. அதுவே ஆடையாக நெய்யப்பட்ட பின் உவந்து உடுத்துகிறாய். ஆடையும் நூல்கண்டு போன்றதுதான். ஆனால் சீர்படுத்தப்பட்ட, செம்மையாய் உருவாக்கப்பட்ட நூல்பத்தையை உடுத்துகிறாய். ஊடும் பாவுமாக நெய்யப் பெற்ற நூல்பத்தை அது. ஆக, ஆடையும் நூல்கள்தானே? அதை எப்படி மாற்றி அமைத்துக் கொண்டாய் என்பதுதான் வித்தியாசப் படுத்துகிறது.

ஜனகர் சொல்லுகிறார், பரமாத்மா ஓரிடத்தில் பசுமையான விருட்சம், மற்றோரிடத்தில் ரோஜா மலர். வேறுவேறு இடங்களில் தண்ணீர், மலைகள், சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள். இவை யாவுமே பரமாத்மாவின் சைதன்ய சொரூபங்கள், நிகழ்வுகள். நீ பல்வகை ஆடைகளை நூலைக் கொண்டு உருவாக்குவது போல், பரமாத்மா விடமிருந்து பல்லாயிரம் உருவங்களை நிருமாணித்துக் கொள்ளுகிறாய்.

விஞ்ஞானிகள் கூறுவர், எல்லாப் பொருள்களும் ஒரே பரமாணு எரிசக்தி (எனர்ஜி)யிலிருந்து உருவாக்கப்பட்டவை. இதை மின்சார சக்தி (கரெண்ட்) என்றும் கூறுவர். பெயரில் என்ன இருக்கிறது? எல்லாமே ஒரு மூல சக்தியின் படைப்புகள் என்பர். அதற்குப் பல வார்ப்பட அச்சுகள் தனித்தனியே இருக்கும். தங்கத்தை உருக்கி பல்வகை அணிகள் உருவாக்கப் படுகின்றன. அவைகளை உருக்கினால் தங்கம் மட்டுமே இருக்கும். அணி உருவகை பலப்பல, ஆனால் அவற்றின் மூலாதாரம் ஒன்று. பின்னங்களானவை மூலத்தில் அபின்னமாகிறது.

**யத்வத் பட: தந்துமாத்ரம், இதம் விச்வம் ஆத்ம - தன்மாத்ரம்**

- எப்படி ஆடை நூல்களின் இணைப்போ, அப்படித்தான் இந்த உலகம் ஆத்மா எனும் மூல தத்துவத்தால் உருவானது. மின்சக்தி, எரிசக்தி என்பதைவிட 'ஆத்மா' எனக் குறிப்பிடுவது சிறந்தது. மின்சக்தி ஜடப்பொருள். அதிலிருந்து மெய்யுணர்வு (சைதன்யம்) வெளிப்படாது. மின்சக்தியிலிருந்து உயிர்ப்பொருள் வெளிப்படு மானால், அது வெறும் மின்சக்தியாக இராது. உற்பத்தியாவது உள்ளுறைந்து இருக்கும். சைதன்யம் தென்படுகிறது, வெளிப் பட்டுள்ளது. அது உள்ளுறைந்து இருக்கும். இல்லையேல் எப்படி வெளிப்படும்? நீ மாங்கொட்டையை நட்டாய்; மாஞ்செடி முளைத்து, வளர்ந்து மரமாகியது. மாம்பூ, மாவடு, காய், கனி என வெளிப்பட்டன. நீ வேப்பங்கொட்டையை நட்டாய்; வேப்பமரம் முளைத்தது. பூ, காய், பழம் என விளைந்தன.

விதையினுள் உள்ளவைதான் முளைக்கும், வெளிப்படும். உலகியல் வாழ்வில் புலப்படும் உணர்வுகள் யாவும் மூல சைதன்யத்துள் (மெய்யுணர்வு) பொதிந்துள்ளவையே. இதை எரிசக்தி, மின்சக்தி எனக் கூறலாகாது. 'ஆத்மா' எனக் கூறவேண்டும்.

"ஆய்ந்து சிந்தித்துப் பார்க்கும்போது, ஆடை நூல்மயம் எனத் தெரிகிறதோ, அதேபோல் இந்த பௌதிக உலகம் யாவையும் ஆத்மாவில் ஒடுங்கியவைதாம்."

"எப்படி கரும்புச் சாறில் உருவாக்கப்பட்ட சர்க்கரையில் கரும்பு வியாபித்திருக்கிறதோ. அப்படித்தான் என்னால் உருப்பெற்ற இந்த உலகத்துள் நான் வியாபித்து இருக்கிறேன்."

எவ்வாறு நீ கரும்பிலிருந்து சர்க்கரையை உருவாக்கினாலும் அதனுள் கரும்புச்சாறு உறைந்திருக்கிறதோ, அவ்வாறுதான் சைதன்யத்துள் பரமாத்மா வியாபித்திருக்கிறார்; என்னுள்ளும், உன்னுள்ளும் பரமாத்மா உள்ளார். நாம் பரமாத்மாவினுள் வியாபித்துள்ளோம்.

"ஆத்மாவினை அறியாத அஞ்ஞானத்தால் இந்த உலகம் புலப்படுகிறது, விளங்குகிறது..."

இதை நீ நன்கு உணர்ந்து கொள். மகத்தான தத்துவம் இது - "ஆத்மாவின் அறியாமையால் இந்த உலகம் வெளிப்படுகிறது, தெரிய வருகிறது. ஆத்மாவின் ஞானத்தால் (மெய்யறிவு) அல்ல..."

கெஸ்டோல்ட் மாறுகிறது. பார்க்கும் முறை, வகை மாறுகிறது.

"... எப்படிப் பழுதை (வைக்கோற்புரி) யில் அறியாமையால் பாம்பு தோற்றுகிறதோ, அறிவு பெற்றதும் (பழுதை எனத் தெரிந்ததும்) அத்தோற்றம் தெரிவதில்லையோ, அப்படித்தான் உலகம் புலப்படுகிறது."

இரவு இருட்டில் பழுதையை அல்லது கயிற்றைப் பார்த்ததும் பயந்து பதறினாய். தடி எடுத்து அடித்தாய். ஒருவன் விளக்கேற்றி வந்தான். நீ கைத்தடியை உதறிவிட்டாய். பயம் போய் விட்டது. விளக்கொளி அது பாம்பு அல்ல பழுதை - கயிறு எனக் காட்டியது. பழுதையை பழுதை என்று பார்க்காததால், அது பாம்பாகத் தெரிந்தது. நிசத்தில் அங்கு பாம்பு இல்லை. வெறும் உருவெளித் தோற்றம், கயிற்றரவு.

ஆத்மாவை ஆத்மாவாகப் பார்க்காததால் உலகம் தெரிகிறது. தன்னை அறிந்து கொண்டவனுக்கு உலகம் இல்லாது போகும். இதற்கு அர்த்தம், வீடு வாசல், உற்றம் சுற்றம் எல்லாம் மறைந்து போகும் என்பதல்ல. இவை இருக்கவில்லை என்பதும் இல்லை. இவை யாவும் ஒன்றினுள் (பரமாத்மா) ஒன்றிவிடுகின்றன. கடலில் அலைகள், நுரைப்பத்தைகள், குமிழிகள் எழும்பி ஒடுங்கி விடுவதைப் போல.

தன்னை உணர்ந்தவனுக்கு உலகம் இல்லாது போகும். தன்னை அறியாதவனுக்கு, அவனது உலகம் முடிவடைவதில்லை. உலகினைத் துறந்து விட்டதால் மட்டுமே நீ உன்னை அறிந்திட முடியாது. நீ உன்னை முதலில் உணர்ந்து கொள்; உன் உலகம் தானே விடுபடும், விலகி விடும்.

தியாகத்திற்கு (துறவு) இரு வரிசைகள். ஒருவரிசை (தாரை) கூறுகிறது, "உலகினைத் துறந்து விட்டால் நீ உன்னை உணர்ந்து கொள்ளலாம்." இரண்டாவது வரிசை கூறும், "முதலில் உன்னை உணர்ந்து கொள், உலகு விலகி விடும், திண்ணம்." முதல் வரிசை குழப்பம், மயக்கம். உலகினைத் துறந்தாலும் நீ உன்னை உணர முடியாது. ஏனெனில், உலக இருப்பு பற்றிய எண்ணம் இருந்து கொண்டிருக்கும்.

கவனமாய் அறிந்து கொள்ள முயற்சி செய். கயிறு (அல்லது பழுதை) தரையில் கிடக்கிறது. பாம்பு எனத் தோற்றுகிறது. வழிப்போக்கன் ஒருவன் உன்னிடம் வந்து, "பாம்பு நினைவை விலக்கிவிடு, கயிறு தென்படும்." என்கிறான். நீ சொல்லுவாய், "பாம்பு நினைப்பை எப்படி விடுவது? பாம்பு தெரிகிறதே. கயிறு தெரியவில்லையே."

சரி, நீ ராமநாம ஜபம் பண்ணி, துணிவை வரவழைத்துக் கொண்டு, தைரியமாக நின்று கொண்டு, "இது பாம்பு இல்லை, கயிறு, வெறும் கயிறு" என்று சொல்லிக் கொண்டாலும், உன் மனசு, 'இது பாம்புதான்' என்று நினைவுபடுத்திக் கொண்டிருக்கும். 'இவன் சொல்லுவது பொய். என்னை ஏமாற்றப் பார்க்கிறான். கிட்டத்திலே போகலாகாது. கயிறாக இருந்தாலும் சரி, எதுக்குத் தொல்லை? அருகிலே போகலாகாது' என்று நினைப்பாய்.

உலகைத் துறந்து விலகுபவன் "உலகமே ஒரு மாயை" என்று சொல்லிக் கொண்டே ஓடுவான். மாயை என்றால் ஏன் ஓடுகிறாய்? என்று கேள். இல்லாததைக் கண்டு ஓடுவானேன்? எதைத் துறந்து விலகுகிறாய்? பணம் - செல்வம் வெறும் மண் என்றால் மண்ணைக் கண்டு பயந்து ஓடுவானேன்? மண்ணுக்குப் பயப்படுவதில்லையே. பணம், மண் தேவைப்படும்போது பயன்படுத்துகிறாய். அவை மாயாஜால விளையாட்டு, கனவுக் காட்சிகள்.

இரண்டாம் வரிசை அதிகம் பொருத்தம், யதார்த்தம். விளக்கேற்றிப் பார். கயிற்றைக் கயிறாகப் பார். பாம்பு பயம் போய்விடும். இதுமாதிரி உலகபந்தம் விலகிவிடும்.

"ஆத்மா பற்றிய மெய்யறிவு இல்லாததால் உலகம் பௌதிகமாகக் காட்சியளிக்கிறது. ஆத்மஞானம் ஏற்பட்டால் அந்த உலகத் தோற்றம் இராது."

ஆத்மாவைப் பார்! உலகு தென்படாது. உலகைப் பார்த்துக் கொண்டிருந்தால் ஆத்மதரிசனம் கிட்டாது. இரண்டில் ஒன்றுதான் கிட்டும். இரண்டும் ஒருசேரத் தென்படாது. இரண்டையும் (உலகு, ஆத்மா) ஒருசேரக் காண எந்த வழிவகையும் (உபாயம்) இல்லை.

ஓர் உதாரணம் - இருட்டறையில் உட்கார்ந்திருக்கிறாய். இருள்தான் தென்படும். பிறகு விளக்கேற்றி எடுத்து வா. விளக்கொளியில் இருட்டைக் காண முடியாது. இருட்டு தென்படாது. இருட்டைப் பார்க்க வேண்டுமானால் விளக்கை எடுத்து வராதே. வெளிச்சமும் இருட்டும் ஒருசேரக் காணக் கிடைக்காது. ஏன்? எப்படி?... இருட்டு வெளிச்ச மின்மையின் நிலை. இல்லாததும் இருப்பதும் எப்படி ஒரே சமயத்தில் ஒருசேரக் காணப்படும்?

உலகம் ஆத்மஞானம் இல்லாமை. ஆத்மஞானம் ஏற்படும்போது உலகம் மறைந்து போகும். இரண்டும் அதன் அதன் நிலையில் இருக்கும், ஒருங்கிணைந்து இராது. எல்லாமே உருவெளித் தோற்றம், உருவெளி மாற்றம்.

**எ**ன்னிடம் சிலர் கேட்கிறார்கள், "குருதேவா! வேண்டுபவருக்குத் துறவறம் தருகிறீர்கள். ஆனால் அவர்களிடம், "வீடு, மனைவி - மக்கள் எல்லாவற்றையும் துறந்து விடு! என்று சொல்லுவதில்லையே, ஏன்?"

நான், பதில் சொல்லுவேன், "சன்னியாசம் பெறுபவர்களிடம்' எல்லாம் துறந்து விடு!' என்று நான் சொல்லுவதில்லை. நான் சொல்லுவது இதுதான், 'ஆத்மாவாக இருங்கள், ஆத்மாவுடன் ஒன்றி இருங்கள். 'ஆத்மவான்' ஆகுங்கள். எது உள்ளதோ அது அப்படியே இருக்கும். அதைத் துறக்க முடியாது. இல்லாததைத் துறக்கத் தேவை இல்லை."

நாம் காண விரும்புவதைக் கண்டு வருகிறோம்.

நீதிமன்றத்தில் ஒரு வழக்கு விசாரணை. நீதிபதி முல்லா நசருத்தீனிடம்கேட்டார், "ஒரே மாதிரி இருக்கும் நூற்றுக்கணக்கான எருமைகளுக்கிடையே, நீ உன் சொந்த எருமையை எப்படி அடையாளம் காண்கிறாய்?"

நசருத்தீன் பதிலளித்தான், "கனம் நீதிபதி அவர்களே! இதென்ன பெரிய விசயம்? உங்கள் கச்சேரியில் கருப்புக் கோட்டு அணிந்து கொண்டு பல வக்கீல்கள் வளைய வருகிறார்கள். அவர்களிடையே என் வக்கீலை அடையாளம் கண்டு கொள்ளுகிறேனே, அப்படித்தான் எருமையும்."

முல்லா சொன்னது, எவரை நாம் அடையாளம் காண விரும்புகிறோமோ, அவரை எளிதாகக் கண்டு கொள்ளுகிறோம். எருமையானாலும் சரி, வக்கீலானாலும் சரி.

நாம் அறிய விரும்புவதை அறிந்து கெள்ளுகிறோம். இனம் காண விரும்புவதையும் கண்டு கொள்ளுகிறோம். உலகில் வாழ விரும்பினால் உலகோடு ஒத்துப்போக வேண்டும். எதிர்த்துப் போராடக் கூடாது. உள்மனத்துள் விழிப்புணர்வு ஏற்பட வேண்டும். உலகியலிலும் விழிப்பு ஏற்பட்டு விடும்.

**மு**ல்லா நசருத்தீன் மனைவி, கைக்குழந்தையுடன் ஒரு நாட்டிய நிகழ்ச்சிக்குப் போனான். வாசல் காவலாளி எச்சரித்தான், "முல்லா! நாட்டியம் நிகழும்போது குழந்தை அழுதால் மண்டபத்தை விட்டு வெளியே வந்து விடவேண்டும். நீ விரும்பினால் டிக்கெட் பணம் திரும்பக் கிடைக்கும். அழுகிற குழந்தையோடு ஹாலில் உட்கார விடமாட்டோம். கவனமிருக்கட்டும்!"

பாதிநேர நிகழ்ச்சி முடிந்தது. முல்லா பீவியிடம் கேட்டான், "நடனம் எப்படி இருந்தது?"

"திராபை. நல்லாவே இல்லை" - மனைவி.

"ஏன் தாமதிக்கணும்? குழந்தையைக் கிள்ளிவிட வேண்டியதுதானே?" - முல்லா.

உன்னையே தனக்குள் உலுக்கிக் கொள்ள. எழுப்பிவிடு! விழிப்புணர்வு எழுந்ததும் எல்லாம் சரியாகும்.

விழித்தெழுதல், முழுவிழிப்பு மகா மந்திரம். அது ஒன்றுதான் ஆத்ம தாரக மந்திரம்.

**ஹரி ஓம் தத்ஸத்!**



முதல் கேள்வி :

குருதேவ்! என் உடல் ஒரு கூண்டுபோல், பெரிய குப்பிபோல் இருக்கிறது. உள்ளே இளஞ்சிங்கம் அடைபட்டிருக்கிறது. பல காலமாய் உறங்கிக் கொண்டிருந்தது. இப்போது, சீண்டினேன், அறிவுற்றுத் தீவிழித்து, மூரி நிமிர்ந்து, முழங்கி எழுந்திருக்கிறது. கடும் பசி; கூண்டிலிருந்து வெளியேறத் தவிக்கிறது. பகல் பொழுதில் பலமுறை சினந்து கர்ஜிக்கிறது. எம்பிக் குதிக்கிறது. முன்னங்காலால் கூண்டை அறைகிறது. நான் நடுங்கிப் போகிறேன். விதிர்த்து, உரோமக்கால்கள் குத்திடுகின்றன. என் நெற்றி, பொட்டுப் பகுதிகளில் தாளாத வலி. பிறகு, நான் விசித்திர போதையில், கிளர்ச்சியில் ஆழ்ந்து விடுகிறேன். சிறிது நேரத்தில் சிங்கம் அடங்குகிறது. கூண்டுக்குள் உலாத்திக் கொண்டு உறுமுகிறது. பிறகு ஏதோ துதிகீதம் கேட்டு, உங்களை நினைத்து களிப்புற்று ஆடுகிறது. கருணை கூர்ந்து எனக்குக் கூறுங்கள், இதெல்லாம் என்ன? ஏன் நிகழ்கிறது?

நன்றே நிகழ்ந்திருக்கிறது. சுபம், சுபம். எப்படி நடக்க வேண்டுமோ, அப்படித்தான் நிகழ்ந்திருக்கிறது. பயப்பட வேண்டாம். நிகழட்டும், நிகழவிடு. அதோடு ஒத்துழை. ஓர் அபூர்வ - அதிசய வழிமுறை தொடங்கியிருக்கிறது. இதன் இறுதிப்பயன் முக்தி, விடுதலை.

நாம் இந்த உடலுள் சிறைப்பட்டிருக்கிறோம், சிங்கம் கூண்டுக்குள் அடைபட்டிருப்பதைப்போல. பல காலமாக கூண்டுக்குள்

இருந்ததால் கர்ஜிப்பதைக் கூட மறந்து விட்டது. வெகுகாலம் அடைபட்டிருந்ததால், இந்தக் கூண்டுதான் தன் குகைவீடு என்று எண்ணியது. மேலும் இந்தக் கூண்டே நான்தான் எனவும் நம்பியது - தேஹோ அஹம்! (நான் சரீரம்).

நான் உன்னை அடித்து எழுப்பிவிட வேண்டும். இதற்காகவே நீ என் அணுக்கனாக இருக்கிறாய். நான் அடித்ததும் நீ விழிப்புறுவாய், எழுவாய்.

நான் கூறும் இந்த வசனம் வெற்றுப் பேச்சு இல்லை. இதை அம்பு எனக் கருது: இது உன்னைத் துளைக்கும். என்மீது கோபப்படுவாய். எல்லாம் அமைதியாக நிகழ்ந்து வருகையில், நீ வசதியாக வாழ்ந்து கொண்டிருக்கையில், இந்தக் கலக்கம் களேபரம் உனக்கு ஏற்பட்டிருக்கிறது. உன்னை விழித்தெழச் செய்ய வேறுவழி இல்லை. உன்னை நோக அடித்துத்தான் விழிப்புணர்வை எழுப்ப வேண்டியிருக்கிறது.

அகமனத்திலிருந்து ஊக்கசக்தி (எனெர்ஜி) மேலெழும்போது, சரீரம் ஒத்து வராது. அதைத் தாங்க முடியாது சரீரத்தால். ஊக்க சக்தியைத் தாங்கிக் கொள்ள, ஏற்க உருவாக்கப்படவில்லை நம் சரீரம். இதன் திராணி - திறன் சொற்பம். ஊக்க சக்தி மகத்தானது. ஒருவன் தன் வீட்டுக் கூடத்துள் பரந்து விரிந்துள்ள வான்வெளியை அடைக்க முயன்றால் எப்படி இருக்கும்? அதுபோலத்தான் ஊக்கசக்தியை சரீரத்துள் ஒடுக்க முயற்சிப்பதும்.

ஆக, அகத்துள் ஊக்கசக்தி எழும்போது, சரீரத்தில் பல சங்கடங்கள் ஏற்படும். தலைவலி தாளாது. பூரண ஞானம் ஏற்பட்ட பிறகும் சரீரத்தில் உற்பாதம் உபத்திரவப்படுத்தும். மெய்ஞான உதயம் ஏற்படுவதற்குமுன் உடல் ஒத்துழைக்காதது இயல்பு. குறிப்பிட்ட மின்சாரக் கம்பியில் நூறுகேண்டில் மின்சாரம் பாயத் திறன் கொண்டபோது, ஆயிரம் கேண்டில் மின்சாரத்தைப் பாய விட்டால் என்ன ஆகும்? துடிதுடிக்கும், எரிந்து போகும். இதே போலத்தான் உன்னுள் ஆழ்ந்து உறங்கியிருக்கும் ஊக்க சக்தி (எனெர்ஜி, ஊர்ஜா) மேலெழும்போது உன் உடல் தாங்காது. உன் உடல் பிச்சைக்காரனாகத் தயார், பேரரசாகத் தயாரில்லை. இது சரீரத்தின் அளபெடை எல்லை, உன்னுடையதல்ல. துடிப்பு, விதிர்ப்பு, பரிதவிப்பு எழும், புயல் வீசும்.

ஞானோர்தயத்திற்கு முன்பு, சமாதி சித்திக்கு முன்பு இதெல்லாம் சகஜம். சிலபோது சமாதி சித்தியும் பரிதவிப்பும், புயல்வீச்சும் ஒன்றாக நிகழக்கூடும். காரணம் சரீரம் ஒத்து வராததுதான்.

ஜெ.கிருஷ்ணமூர்த்தியின் வாழ்க்கையில் இப்படித்தான் நிகழ்ந்தது. நாற்பது வருட சாதனை. பரமஞானம் சித்தித்த பிறகும் உடல் உபாதை நீங்கவில்லை. அதிர்வை, விதிர்ப்பை உடல் தாளவில்லை. கிருஷ்ணமூர்த்தி நடுநிசியில் படுக்கையிலிருந்து எழுந்து கத்துவார், அலறுவார், அரற்றுவார், உறுமுவார் - விலங்கு போலவே உறுமுவார். நாற்பது வருடங்களாகத் தீராத கொடும் தலைவலி. வந்து வந்து போகும். தலைவெடித்து விடும் போல் வேதனை வலி பொங்கும்.

நாற்பது ஆண்டுக்காலமாக கிருஷ்ணமூர்த்திக்கு இக்கொடும் வேதனை வரும், போகும். பொதுவாக சாதகரின் சமாதிநிலைக்கு சரீரம் ஒத்துப் போகும். கிருஷ்ணமூர்த்திக்கு இது இலபிக்கவில்லை. ஒருவேளை சமாதி சித்தி பெற அவர் மேற்கொண்ட கடினப் பயிற்சி காரணமாக இருக்கலாம். தியாஸபி சிந்தனையாளர்கள் கிருஷ்ணமூர்த்தியை வளர்த்து மேம்படுத்தினார்கள். அவர்கள் சமாதி சித்தி பெறக் கடுமையாகச் சாதகம் செய்தவர்கள். அவர்களுடைய மகத்தான விருப்பம், ஒரு ஜகத்குருவை உருவாக்க வேண்டும் என்பது. ஜகத்திற்கு (உலகிற்கு) இது மிகத் தேவை. புத்தர் போன்றவர் அவதரிக்க வேண்டும்.

கிருஷ்ணமூர்த்தி தன்போக்கில் சாதகம் செய்திருந்தால் சித்திபெற மேலும் சில பிறவிகள் எடுத்திருக்க வேண்டும். அப்போது அந்த சரீர உபாதை இருந்திராது. அவசரப்பட்டார். இரு ஜன்மங்களில் ஏற்படும் சித்தி நிலை ஒரு பிறவியிலேயே, விரைவாகவே கிட்டிவிட்டது. இதற்கு சரீரம் ஒத்துழைக்க வில்லை. திடுதிப்பென நிகழ்ந்து விட்டால் சரீரம் அலமரல் பெறும், பரிதவிக்கும். அப்படியும் நிகழ்ந்து விட்டது. நாற்பது ஆண்டுக்கால வாதனை வருத்திக் கொண்டிருந்தாலும் அது (சித்தி) நிகழ்ந்திருக்கிறது.

இதொரு சிக்கலான, சஞ்சலப்படுத்தும் விஷயம்தான். பரமஞான சித்தி பெற்ற ஒரு சாதகர் நடுநிதியில் எழுந்து அலறி,. அரற்றுகிறார் என்றால் அதிசயம்தான், குழப்பம்தான். ஆனால் கணக்கு சரியாக

இருக்கிறது. ஆத்மஞான நிகழ்வுக்குக் குறைந்த பட்சம் இரு பிறவிகள் எடுத்திருக்க வேண்டும். அதை மிக விரைவில் நிகழ வைக்க முயன்றதும், சரீரம் முரண்டு பிடிக்கிறது. சரீர இயக்கம் தொடர்கிறது. நிகழ்வு சித்தித்தது. முயற்சியும் தொடர்கிறது. இலக்கை எட்டிவிட்டார், சரீரம் பின்தங்கி விட்டது. இழுபறி தொடர்கிறது. ஆத்மா வீடு வந்து சேர்ந்தது, சரீரம வந்து சேரவில்லை. இதனால்தான் வலி, வேதனை.

இதற்காகப் பயப்பட வேண்டாம். சமாதிசித்திக்கு முன்புள்ள நிலைமை இது. இதைப் பெரும் பாக்கியமாகக் கருதி ஒத்துப் போக வேண்டும். அப்போதுதான் மெள்ள மெள்ள அமைதி பெற முடியும். சரீரம ஒத்துழைக்கத் துவங்கியதும் அதன் தகுதி, திறன் வளரும், வலுப்பெறும்.

எல்லையற்ற ஆத்மநிலையைக் கோருகிறாய், அழைக்கிறாய். இதற்காக நீயும் எல்லை கடந்த உச்சநிலையை எட்ட வேண்டும். அந்த விராட் சொரூபத்தை எதிர்கொள்ள நீயும் விராட் (பிரும்மாண்டம்) ஆகவேண்டும்.

**ப**ழைய ஆவண பைபிளில் ஓர் அருமையான கதை.

ஜேகப் கடவுளுடன் குத்துச் சண்டை போட்டான். கடவுளோடு எவனாவது சண்டை போடுவானா? ஆனால் ஜேகப் அதைச் செய்தான். இரவு பூராவும் சண்டை நடந்தது. பொழுது புலர்ந்தபோது ஜேகப் சளைத்துத் தோற்றுப் போனான்.

கடவுள் வெற்றியுடன் திரும்பும்போது, ஜேகப் அவர் கால்களில் விழுந்து, "எனக்கு அருளாசி வழங்கிவிட்டுப் போங்கள்" என வேண்டினான்.

"உன் பெயர் என்ன?" - கடவுள்.

"என் பெயர் ஜேகப்."

"சரி, இன்றுமுதல் உன் பெயர் இஸ்ரேல். ஜேகப் மரித்து விட்டான். யூதர்களின் வமிசப் பெயர் இஸ்ரேல்தான் இனி உன் பெயர்" - கடவுள்.

இதுபோலத்தான் நான் உனக்குச் சன்னியாசம் அளிக்கும்போது, உன் பெயர் தொலைந்துவிடும். புதுப்பெயர் சூட்டப்படும். பழையன கழிதலும், புதியன புகுதலும் இங்கும் உண்டு.

கடவுள் கூறியதை மறவாதே, "ஜேகப் மரித்து விட்டான். இப்போதிலிருந்து நீ இஸ்ரேல், உன் சொந்தப் பெயர் இஸ்ரேல்."

இந்தக் கதை புராதன பைபிளில் உள்ளது. மனிதன் கடவுளோடு சண்டை போட்ட கதை வேறெங்கும் கிடையாது. இக்கதையில் ஒரு பேருண்மை பொதிந்துள்ளது. அந்த மேலான ஆக்கசக்தி இறங்கும்போது ஏற்படும் எதிர்வினை சண்டை போடுவது போன்றதுதான். அப்பெரு நிகழ்வு ஏற்படும்போது, நீ கடவுளிடம் பொருதித் தோற்கும் போது, உனது உடல வெலவெலத்துப் போகிறது. நீ தோல்வியை 'ஏற்கிறாய். இதனால் உனக்குப் பரம தீக்ஷை (மேலான வாழ்வு நெறி) கிட்டுகிறது. அக்கணத்தில் கடவுளின் அருள் பாலிப்பைப் பெறுகிறாய். புதிய பிறவி பெறுகிறாய். முதல்முறையாக நீ அமுதத்தைச் சுவைக்கிறாய்.

அது யோக சின்மய நிலை. அங்குதான் ஜேகப் இருந்திருப் பான். இரவு எவ்வளவு காலம் நீடிக்குமோ, தெரியாது. சண்டை எவ்வளவு நேரம் நீடிக்குமோ, தெரியாது. ஊகிக்கவும் இயலாது. அச்சண்டை நலம் தரும், சுபம் தரும்.

இந்த ஆக்க சக்திக்குத் துணை புரி. உன் அகத்துள் உறங்கியிருந்த சிங்கம் விழித்தெழுந்து வெளியேற முனைகிறதே, அந்த சிங்கம் நீதான். ஆக்க சக்தி மேலெழ விரும்புகிறதே, காமகேந்திரத்திலிருந்து எழும்பி சகஸ்ராரசிரஸ் (ஆயிரம் இதழ்களுள்ள தாமரை போன்ற நாடி மண்டலம்) நோக்கிச் செல்ல விரும்புகிறதே, அதற்கான வழியை அமைக்கிறதே, அந்த ஆக்க சக்தி நீதான். அது கடந்த பல பிறவிகளாக உன்னுள் முடங்கிக் கிடந்தது. இப்போது மேலெழும்ப முனைகிறது. நீ மகா பாக்கியசாலி, மகா புண்ணியசாலி. இதன்வழியே நீ பரம்பொருளின் பேரருள் பெற நெருங்கியிருக்கிறாய். உனது உருமாற்றம் (மோட்சம்) நிச்சயம் நிகழ இருக்கிறது.

**கி**ருஷ்ணமூர்த்தி தன் பதிவேட்டில் எழுதி வைத்திருக்கிறார். 'தலைவலி கடுமையாகப் பாதிக்கும் போது இரவு பூராவும் தூங்க

முடியவில்லை. அலறல், அரற்றல் எழுகிறது. யாரோ என்னுள் உறுமுகிற ஓலம். சிறிது நேரமானதும், அதிசய அநுபவம். பரம சாந்தி பேரமைதி ஏற்படுகிறது. நாலா பக்கங்களிலிருந்தும் அருள்மழை பொழிகிறது. எங்கு பார்த்தாலும் மலர்ந்து பொலியும் கமலமலர்கள்!

இதே சின்மய நிலைதான் உனக்கு வர இருக்கிறது. நல்லதே நிகழும்.

நீ கூறுவது, "....இதற்குப் பிறகு நான் அபூர்வ, அதிசய போதையில், கிறக்கத்தில் ஆழ்ந்து விடுகிறேன்."

ஏனெனில், உள்ளடங்கிய ஊக்கசக்தி முட்டி மோதிப் போராடி மேலே எழும்ப முற்படுகையில் சரீரம் கொஞ்சம் ஒத்துழைக்கும், உதவும். அப்போது புதிய உவகைக் கிறக்கம் எழும். இது வளர்ச்சி. நீ மேலெழுந்திருக்கிறாய். நீ ஆக்கிரமித்திருக்கிறாய். சிறைக் கூடத்திலிருந்து வெளியேறி இருக்கிறாய். சுதந்திர ஆகாயத்தை அடைந்திருக்கிறாய். நீ பெரு மகிழ்ச்சியில் திளைப்பாய். பேரானந்தப்படுவாய். கூத்தாடுவாய்!

நீ சொல்லியிருக்கிறாய், "பிறகு என்னுள் அடைபட்டிருக்கும் சிங்கம் சிறிது அமைதியாகியும் சஞ்சலப்படுகிறது, நிலை கொள்ளாமல் அரற்றுகிறது, அலைகிறது, உறுமுகிறது. இடையே பஜன் - கீர்த்தன் இசை கேட்டோ, அல்லது உங்கள் நினைப்பிலோ களிப்புற்று நர்த்தனமாடுகிறது."

அந்தச் சிங்கம் குதித்தாடிக் களிநடனம் புரியத்தான் ஆசைப்படுகிறது. உடலுக்குள் அரங்கு மேடை இல்லை, போதிய இடம் இல்லை. நடனமாட நல்லதளம் வேண்டாமா? உடலுக்குள் அதற்கு இடம் ஏது? வெளியே வந்துதான் ஆடலரங்கு பெறவேண்டும். நீ வெளியேறி உல்லாச நடனம் புரியும்போது, உனக்குப் புரியும், 'நான் சரீரம் அல்லன்' என்பது. நீ மெய்மறந்து ஆனந்தக் களிநடனம் புரியும்போது, உச்ச கட்டத்தில் ஆடும்போது, நீ சரீரத்தைவிட்டு வெளியேறி விடுகிறாய். உன் சரீரம் குதித்தாடிக் கொண்டிருக்கும்; ஆனால் நீ வெளியேறியிருப்பாய். சரீரத்துள் ஒடுங்க மாட்டாய்.

இதனால்தான், தியான யோகப் பயிற்சியில் நடனமாடுவதைக் கட்டாயமாக்கி யிருக்கிறேன். நடனம் போன்ற அற்புத சாதனம்

தியானத்திற்கு இல்லை. நடனத்திலேயே தியான லயம் கிட்டுகிறது. நீ மெய்மறந்து களிநடனம் புரியும்போது உன் ஆத்மா சரீரத்தைவிட்டு வெளியே வந்துவிடும். உடல் முனைப்புடன் நடனமாடும், நீ உடலைவிட்டு வெளியேறி இருப்பதை உணர்வாய். அப்போதுதான் உன்து அசல் நடனம் துவங்கும். இங்கு உன் சரிரம் கீழே தரையில் நடனமாடும்; நீ மேலே, வான்வெளியில் நடனமாடிக் கொண்டிருப்பாய். சரீரம் பூமியில், நீ பூமியை விட்டு விலகி அந்தரத்தில் நடனமாடுவீர்கள். சரீரம் ஜடப் பொருளாய் உயிர்ப்பில்லாது ஆடும்; நீ ஜீவநடனம், சைதன்ய நர்த்தனம் புரிவாய். அப்போது நீ கூத்தபிரான் நடராஜப் பெருமான் ஆகிவிடுவாய்!

உன் கோரிக்கை, "குருதேவா! இதெல்லாம் என்ன? ஏன் நிகழ்கிறது? எனக்குத் தெளிவுபடுத்துங்களேன்."

அற்புதம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அபூர்வ அதிசயம் இது. இதை விளக்கவோ, புரிய வைக்கவோ இயலாது. அநுபவித்து உணர வேண்டும். நான் சொன்னாலும் உனக்கு விளங்காது. இதை நீ ஏற்றுக்கொள். அதற்கான தகுதியைப் பெற்றிருக்கிறாய். இதற்கு அடிபணிந்து அடங்கி ஒதுங்காதே. எளிதாய் ஏற்றுக்கொள்.

இயல்பாக அடங்கிப் போக மனம் தூண்டும். இப்படித் தோன்றும், 'இதென்ன பித்துக்குளித்தனம்? சிங்கம்போல் உறுமுகிறேன், கர்ச்சிக்கிறேன். பார்க்கிறவர்கள் என்னைப் பைத்தியம் என்பார்கள்.' இதை அடக்கிக் கொள், மறைத்துக் கொள். வெளிக்காட்டாதே?

பிறர் ஏச்சுப் பேச்சுக்காகக் கவலைப்படாதே. பைத்தியம் என்பார்களா? சரி, பைத்தியமாகி விடு. பைத்தியமாக மாறாமல் பரமஹம்ஸர் (பரம ஞானி) ஆகமுடியுமா? நீ உன்னுள் தியானித்திரு. இதனால் ஆனந்தம் ஏற்படுகிறதா? மகிழ்ச்சிக்கிறக்கம் எழுகிறதா? கவலைப்படாதே. இந்த பௌதிக உலகு உனக்குத் துச்சம். அதைவிட நீ மதிப்பு, மகத்துவம் அதிகம் உள்ளவன். இந்த உலகத்துடன் பற்று வரவு எதுவும் வைத்துக் கொள்ள வேண்டாம். உன் ஆளுமையை, ஆத்மாநுபவத்தை விட்டுக் கொடுக்க வேண்டாம். உலகப் பேரரசாட்சி, சாம்ராஜ்ய பதவி கிடைத்தாலும் விட்டுக் கொடுக்காதே.

ஏசு பிரான் கூறியிருக்கிறார், "நம் ஆத்மாவைக் கொடுக்க இந்த உலகம் பூராவையும் பெறலாம் என்றாலும் வேண்டாம். ஆத்மாவை

இழந்து என்ன இலாபம்? ஆத்மாவுக்காக உலகம் அனைத்தையும் இழந்தாலும் இலாபம் நமக்குத்தான்."

துணிச்சலை, தைரியத்தை விட்டு விடாதே. நம்பிக்கையுடன், ஈடுபாட்டுடன் முன்னேறு. மெள்ள மெள்ள சரீரம் ஒத்துப்போகும். உறுமல், முழக்கம் போய்விடும். களிநடம் புரிவது தொடரும். உள்ளுறைச் சிங்கம் தவிக்காது. வெளியேற அதற்கு வழி கிட்டியிருக்கிறது. விரும்பும்போது வெளியேறட்டும். திரும்ப வந்து சேரட்டும். அப்போது இந்த உடல் சிறைக்கூடமாக இராது. தங்கி இளைப்பாறும் சுகவாச விடுதியாகி விடும். நீ விருப்பம் போல் வெளியேறவும், உள்ளே வரவும் வசதியாகி விடும். பிறகு உடலோடு உனக்குப் பிணக்கு இராது. அது நல்லதொரு ஓய்வுக்கூடம். நீ களைத்திருந்தால் அதற்குள் வந்து விசிராந்தியாக இளைப்பாறலாம். பிறகு உடலோடு நமக்கென்ன சள்ளை, சழக்கு?

நம் சரீரம் ஆலயமாகி விடுகிறது.

**இரண்டாவது கேள்வி :**

**நேற்று நீங்கள் சொன்னீர்கள், எங்களோடு நீங்கள் எப்போதும் இருப்பதாக. ஆனால் நாங்கள் துறவறம் பெற்றபின்தானே உங்களோடு இணைந்து இருப்போம். நான் உங்களிடம் சன்னியாச தீட்சை பெற்றதாக நினைவு இல்லை. எப்போது நான் தீட்சை பெற்றேன்? எங்கே பெற்றேன்? சன்னியாசம் என்ன என்பதே எனக்குத் தெரியாது. எப்படி நான் சன்னியாசி ஆவேன்? பிரபு! நான் எப்படி உங்கள் அணுக்கத் தொண்டனாக இருப்பேன்? எனக்குத் தகுதி இல்லையே. தாசனாக இருக்க திட ஈடுபாடு, பூரண அர்ப்பணிப்பு வேண்டுமே. என்னிடம் அவை இல்லையே. எனக்கு வழி காட்டுங்கள்.**

**இ**துபோல் பலமுறை நிகழ்ந்திருக்கிறது. நான் சன்னியாச தீட்சை சிலருக்குக் கொடுத்திருக்கிறேன். ஆனால் அவர்களுக்கு விபரம் தெரியாது. துறவறம் ஏற்க வராதவர்களுக்கும் சன்னியாச தீட்சை

அளித்திருக்கிறேன். அவர்களுக்கு சன்னியாசம் பற்றி ஏதும் தெரியாது. சன்னியாசம் பெற எண்ணியதுமில்லை. அந்த வரிசையில் வரும் உன் மனப்போக்கை, அதில் பொதிந்திருக்கும் பல விஷயங்களை நான் பார்க்கிறேன்.

நேற்று இரவு என்னைக் காண ஒரு இளம் பெண் வந்திருந்தாள். அவளிடம் வந்த நோக்கம் பற்றி நான் ஏதும் கேட்கவில்லை. அவளை எதிரே உட்கார வைத்தேன். "கண்களை மூடிக்கொள். இப்போதே சன்னியாசம் பெற்றுக்கொள்!" என்றேன்.

சன்னியாசம் பெற அவளுக்கு விருப்பமா, இல்லையா என்பதையும் நான் கேட்கவில்லை. அவள் எதிரே அமர்ந்து கண்களை மூடிக் கொண்டு தயாரானாள். முறையாக என்னிடம் தீட்சையும் பெற்றாள்.

மாறாக, சிலர் பிரமிக்கிறார்கள், வியப்படைகிறார்கள். சிலர் மாதக் கணக்காக யோசனை செய்து கொண்டிருக்கிறார்கள். வருஷக்கணக்கில் யோசித்துக் கொண்டிருப்பவர்களும், யோசனையிலேயே காலம் கடத்தி காலமானவர்களும் இருக்கிறார்கள். அந்தப் பெண் நான் சொன்னதுமே தீட்சை பெற்றுக் கொண்டாள். அவளது உள்ளுணர்வுக்கு அது தெரியாமல் இருக்கும்.

நாம் புதியவர்கள் அல்லர். மிகப் புராதனமானவர்கள். அந்தப் பெண் பல ஜன்மங்களாக யோசித்து, ஆலோசித்துக் கொண்டிருந்தவள். தியானிக்க அவளிடம் தகுதி, தாக்கம் இருந்திருக்கிறது. அதை அறிந்ததால்தான் உடனடியாக அவளுக்குத் தீட்சை அளித்தேன். "உட்கார், தியானத்தில் மூழ்கிவிடு!" என்றேன். உன்னிடம் கேட்க வேண்டியதில்லை, உன் விருப்பத்தை விசாரிக்க வேண்டியதில்லை. கேட்க வேண்டிய அவசியம் இல்லை. எல்லாம் நான் அறிவேன்.

இப்படித்தான் தயாள் என்பவருக்கும் சன்னியாசம் கொடுத்தேன். தயாளிடம் ஏதும் கேட்கவில்லை. அவருக்கே தெரியாது நான் சன்னியாசம் கொடுப்பதும், அவர் ஏற்பதும்.

சரி, உனக்கு உன்னைப் பற்றித் தெரியுமா? தெரியாது. நீ எங்கிருந்து வருகிறாய்? எவ்வளவு சொத்து சேர்த்திருக்கிறாய்? உனக்கே தெரியாது. இந்த ஜன்மத்தில், கடந்த ஜன்மங்களில் நீ

என்னவெல்லாம் செய்தாய் - தெரியாது. எவ்வளவு சம்பாதித்தாய்? என்னவெல்லாம் சேமித்தாய்? - தெரியாது.

**நீ** ஒரு காரியம் செய்து கொண்டிருக்கிறாய். ஓவியம் வரைந்து கொண்டிருக்கிறாய். பாதி வரைந்ததும் சாவு வந்து விட்டது. செய்வினையை மறந்தாய். மறுபிறவியில் ஜனித்தாய். முன்பிறவியில் வரைந்து நின்று போன ஓவியப்பணி பற்றி உனக்குத் தெரிவித்தால், அந்த அரைகுறைச் சித்திரத்தை உன் எதிரில் வைத்தால், உனக்கு அதன் நினைவு வராது. நான் ஒரு சைத்திரிகன் என்ற எண்ணமே உனக்கு ஏற்பட்டிருக்காது. நான் உனக்கு அதன் விவரமெல்லாம் எடுத்துச் சொல்லி, "முன்பிறவியில் விட்டுப்போன உன் ஓவியத்தை இப்பிறவியில் பூர்த்தி செய்," என்று கூறினால், நீ பதில் சொல்லுவாய், பிரபு! எனக்கு எதுவும் தெரியாது. தூரிகையை என் கையில் கொடுத்து, "முன்பிறவியில் வரைந்து முடிக்க முடியாத இந்த ஓவியத்தை இப்போது நிறைவு செய்! என்கிறீர்கள். எனக்கு சித்திரம் வரையவே தெரியாதே. தூரிகையை நான் பிடித்ததே இல்லையே."

மறுபடியும் நான் கூறுகிறேன், "பிடி தூரிகையை! சித்திரம் எழுத ஆரம்பி. தானே வரும். முன்பிறவி ஞாபகம் வரும், தொடங்கு ஓவியத்தை."

நீ திகைத்து, தவித்து நிற்கிறாய்.

இப்படித்தான் நிகழ்ந்தது இரண்டாம் உலகப் போர் நடந்தபோது. ஒரு சோல்ஜர் குண்டடிபட்டு விழுந்தான். தலையில் பலத்த அடி. நாடி நரம்பு சிதைந்து நினைவு இழந்து கிடந்தான். பிறகு சரியான சிகிச்சையால் மயக்கம் தெளிந்தது. ஆனால் சுயபிரக்ஞை இல்லை. தான் யார்? என்ன பெயர்? என்ன பதவி? எங்கு வந்தோம்? இப்போர் எங்கு, ஏன் நடக்கிறது? எதுவும் தெரியவில்லை. எந்தத் தடயமும் கிடைக்கவில்லை. எல்லாம் அவனுக்கு மறந்து போனது. மருத்துவர்கள் முயன்று பார்த்தார்கள். அவனுக்கு சுயநினைவு திரும்பவில்லை. அவனது மூளையில் நினைவாற்றல் தொடர்பு அற்றுப்போயிற்று.

ஒரு மருத்துவர் யோசனை கூறினார், "இவனது சொந்த ஊர் இங்கிலாந்தில் இருக்கும். அங்கு ஊர் ஊராகக் கொண்டு காட்டலாம். சொந்த ஊரைக் கண்டதும் பழைய ஞாபகம் வந்துவிடும்."

இரு உதவியாளர்களுடன் அந்த சோல்ஜரை இங்கிலாந்திற்கு அனுப்பி வைத்தார்கள். ரயில் பயணம் தொடர்ந்தது.

ரயில் நிற்கும் நிலையங்களில் இறங்கி, "இது உன் ஊரா?" என்று கேட்பார்கள். அவன் "இல்லை" என்பான். உதவியாளர்கள் சலித்துப் போனார்கள். கடைசிப் பயணத்தின்போது, சிறு நிலையத்தில் ரயில் நின்றது. வழக்கமாக அங்கு நிறுத்தம் இல்லை. ஏதோ காரணமாக ரயில் அக்கிராமத்தில் நின்றது. மூவரும் இறங்கினார்கள். பெயர்ப்பலகையைப் பார்த்ததும் நோயாளி சோல்ஜர் மகிழ்ச்சியுடன், "இதுதான் என் ஊர். இங்குதான் பிறந்து, வளர்ந்தேன். இங்கிருந்துதான் ராணுவத்தில் சேர்ந்தேன். அதோ, எதிர் தெருவில் என் வீடு" என்று சொல்லிவிட்டு வீடுநோக்கி ஓடினான். அருகில் உதவியாளர்கள் இருப்பதை மறந்து போனான்.

தொடர்ந்து அவனுக்கு எல்லாமே ஞாபகம் வந்தது. தொலைந்து போன நினைவு திரும்பியது.

நான் இப்படித்தான் தயாள் போன்றவர்களுக்குத் திடீரென சன்னியாசம் அளிக்கிறேன். ஒரு நம்பிக்கை. இவரைக் காஷாய (காவி) நிற ஆடையுடன் அலைய வைத்தால் ஒரு நாள் பழைய நினைவு திரும்பும். முன்பிறவியில் காவி உடையுடன் நடமாடியது நினைவு வரும். நான் ஆனந்தக் கூத்தாடச் சொல்லுவேன். அதன் மூலம் முன் ஜென்மத்தில் அவர் ஆனந்த நடனம் புரிந்தது நினைவுக்கு வரும்.

தியானம் செய் என்பேன். தியானத்தில் ஆழ்ந்திருக்கும் போது, ஆழ்மன அசேதன வாசல் திறக்கப்படலாம். பழைய நினைவுகள் பொங்கி வெளி வரலாம்.

இதற்காகத்தான் நான் பிரசங்கம் செய்து கொண்டிருக்கிறேன் - பகவத்கீதையை, அஷ்டாவக்கிர கீதையை, ஜரதுஷ்டிரர் கருத்துக்களை, புத்தரின் போதனைகளை, ஏசு பிரானின் வசனங்களை, கிருஷ்ணனின் உபதேசங்களைச் சார்ந்து சொற்பொழிவு செய்து கொண்டிருக்கிறேன். ஏதாவதொரு கருத்துரை உன் ஆழ்மனத்துள் எதிரொலிக்கலாம். எந்தச் சொல் உன் அக உணர்வை எழுப்பும், மூடியுள்ள ஆழ்மனக் கதவைத் திறக்கும் சாவியாகும் என்பது தெரியாது. எந்த சொற்றொடர் உன்னை உலுக்கி எழுப்புமோ? பல உபாயங்களைக் கையாளுகிறேன், உன்

ஜன்ம - ஜன்மாந்தரத் தொடர்புகள் இணைந்து, சைதன்ய சித்தியை நீ பெற வேண்டும் என்பதற்காகவே நான் தொடர்ந்து பேசிக் கொண்டிருக்கிறேன். உன் நியதி உன்னுடன் இணைந்து ஒரே தத்துவமாகித் தொடர்ந்து வரும். நீ வீடுபேறு பெற பலமுறை முயன்றிருக்கிறாய், நடுவில் விட்டு விலகியிருக்கிறாய். இதை நித்திய நியதியாக, இணை பிரியாத உறுதுணையாக ஆக்கத்தான் என் தொடர் சொற்பொழிவு நீடிக்கிறது.

தயாள் சொல்லுவது சரிதான். "நான் சன்னியாசம் பெற்றது நினைவு இல்லை" என்கிறான். அவன் சன்னியாசம் பெறவில்லை நான் அவனுக்கு அளித்தேன். அவனுடைய மயக்கம் அவன் பேச்சில் தெரிகிறது, "எப்போது நான் துறவறம் பெற்றேன்?" எங்கே பெற்றேன்? நீங்கள்தான் கொடுத்தீர்களா? உங்களிடம் நான் வரவே இல்லையே."

நீ உன் அருகில் வந்தால்தான் என்னிடம் வரமுடியும். வேறு வழியில்லை. நீ உன்னை உணர்ந்து கொண்டால்போதும், என்னிடம் வந்து என்னை அறிந்து கொள்ளுவாய். என்னிடம் வந்து சேருவதற்கு வெளியே அலைந்து திரிய வேண்டாம். நீ உன்னுள் - உன் ஆழ்மனத்துள் இறங்கிப் பார்.

"எனக்கு சன்னியாசம் பற்றி முன்பும் ஏதும் தெரியாது. இன்றும் அதே நிலைமைதான்." - இது உன் கூற்று.

உனக்குத் தெரியாதிருக்கலாம். சீக்கிரம் தெரியவரும். இது நிஜம். நீ சிந்திப்பது நல்ல மனநிலை. உன் அறியாமை உனக்குத் தெரிந் திருக்கிறது. இப்படித் தன்னை அறியாதவர்கள் துர்பாக்கியசாலிகள். நீ நல்ல, சரியான நிலையில் இருக்கிறாய். தூய மனப்பாங்கு உனக்கு உள்ளது. நீ, உன் மனம் வெற்றிடம், இதை நிரப்பலாம், நிரப்ப வேண்டும்.

மெய்யறிவு தன்னை அணுகுவதைத் தடுக்கிறது. 'நான் ஒரு அறிவிலி, அஞானி' என நீ உணர்ந்தால், நல்ல நிலையில் இருக்கிறாய் என்று அர்த்தம். இத்தகுத் தூய மனநிலைதான் மெய்ஞான சித்தி பெற உதவுகிறது. நான் அறியவில்லை என உணர்வதுதான் அறிவதற்கான முதல் முன்னேற்றம்.

“எனக்கு அதற்கான தகுதி ஏது? அதற்கு ஏற்ற சிரத்தை, ஈடுபாடு, அர்ப்பணிப்பு என்னிடம் இல்லையே” - இது உன் பேச்சு.

தகுதி உள்ளவனுக்குத்தான் இந்த எண்ணம், கேள்வி எழும். தகுதி இல்லாதவன் “தன்னைப்போல் தகுதி நிரம்பியவன் எவன் இருப்பான்?’ என எண்ணுவான். நீ கொண்டுள்ள தன்னடக்கம்தான் உனது தகுதியை நிரூபிக்கிறது. ‘அதற்கு வேண்டிய சிரத்தை, ஈடுபாடு, அர்ப்பணிப்பு எனக்கு ஏது?’ என நீ நினைப்பதுதான் உன் தகுதியை எடுத்துக் காட்டுகிறது. இதுதான் சிரத்தை, ஈடுபாடு, அர்ப்பணிப்புக்கு அடையாளம். விதை பொதிந்திருக்கிறது. பருவம் வரக் காத்திருக்கிறது. இசைவான பருவம் வந்ததும் விதை முளைவிடும், வளரும். புரட்சி எழும்.

இது சிறப்புமிக்க பயணம். முன்பின் அறியாத யாத்திரை இது. கவிக்குரல் -

தொடர் வரிசையாக மௌனத்தின் திரைமறைப்பு
அறிவிலியாய், சோம்பேறியாய், அஞ்சியிருந்த
நாம் இப்போது மர்மம் அறிந்திருக்கிறோம்,
உன் மீது கொண்ட மோக மயக்கத்தில்
பித்துப் பிடித்து நிம்மதி இழந்தோம்,
உன்னைப் பிரிந்த துன்பத்தால்
தீப்பிழம்பாய் தகிக்கலானோம்,
கோணல் காலப் போக்கின் தாக்கம் இது;
முன்பு கூரிய அம்பாக இருந்த நாம்
இப்போது மொண்ணையாகி வளைந்து குறுகி
வில்லாகிப் போனோம்; எங்களுக்கு
வழிகாட்டியோ, வழித்துணையோ
எவரும் எம்மோடு இல்லை;
எந்தப் பாதையில் பயணிக்கிறோம்?
எங்கே சென்றடையப் புறப்பட்டோம்?
சுய மதிமயக்கத்தில், அறியாமையில்
களிப்புற்று மகிழ்ந்திருக்கிறோம்!
தன்னிலை இழந்து இலக்கின் அடையாளமாய்
மாறிப் போனோம் சேருமிடம் சேர்ந்து.

இந்தச் சேருமிடம் - இலக்கு, இழந்தும் திரும்பக் கிடைக்கிறது. நீ 'நான் - எனது' என்று வாழ்ந்திருக்கும் வரை இலக்கு கிட்டாது. உன்னை நீ இழந்த பிறகுதான் இலக்கு எட்டும், கிட்டும்.

சுயமதி மயக்கத்தில் - அறியாமையில் பெருமகிழ்வு ஏற்படுகிறது.

எங்கு நீ இல்லையோ, எங்கு உனது மமதை மறைந்ததோ, எங்கு மதிமயக்கம் - அறியாமை வந்ததோ, அங்கு தன்னிலை இழந்து, இலக்கின் அடையாளமாக ஆகிப் போனோம். எல்லாம் இழந்தபின் அங்கு சென்றடைந்தோம். இது அழிந்து போகும் பாதை.

ஆக, 'எனக்கு சமர்ப்பணம் செய்யும் தகுதி எங்கே இருக்கிறது?' என நீ உணரும்போது, தன்னிலை நீக்கம் துவங்கியதும் மதிமயக்கம், அஞ்ஞானம் வந்து சேருகிறது. 'அதற்கு ஏற்ற ஈடுபாடு எங்கே இருக்கிறது என்னிடம்?' என உனக்குத் தோன்றியதும், தன்வயம் இழந்து 'நீ' மறைந்து விடுகிறாய்.

சன்னியாசம் என்பது உன்னை இழப்பதுதான், தொடர்ந்து பரமாத்மாவாக ஆவதுதான்.

**'வழிகாட்டியோ, வழித்துணையோ**
**எவரும் எம்மோடு இல்லை.**

- இது தனித்த பெரும் பயணம், உலாப் புறப்பாடு.

'வழிகாட்டியோ வழித்துணையோ' எவரும் இல்லை. இறுதியாக குருவும் விலகிப் போனார். ஏனெனில் அங்கு இடம் போதாது, ஒருவர்தான் தங்கலாம். அன்பு வழி மிகக்குறுகிய சந்து. இருவர் தங்கவோ நுழைந்து செல்லவோ இயலாது. சீடன், குரு, பரமாத்மா - மூவர். குரு விலகுவார், சீடனான நீயும் விலகுவாய், பரமாத்மா மட்டும் இருப்பார்.

வழிகாட்டியோ வழித்துணையோ எவரும் நம்மோடு இல்லை; எந்தப் பாதையில் பயணிக்கலானோம்? நிரம்பத் தைரியம், துணிச்சல் கொண்ட நெடும் பயணம் இது. பட்டறிவு இல்லாமல் செயலாற்றத் துணிபவர்களின் சாகச முனைப்பு இது. நீக்குப்போக்குத் தெரிந்த,

திட்டமிட்டுச் செயலாற்றத் தொடங்கும் புத்திசாலிகளின் காரியமல்ல இது. பேரன்பு ஊக்குவிக்கும் துள்ளிக் குதிப்பு இது.

**மூன்றாவது கேள்வி –**

> **நீங்கள் சொன்னீர்கள் 'நீ இப்போதே, இங்கேயே, இக்கணத்திலேயே முக்தனாகி விட்டாய் (விடுதலை பெற்று விட்டாய்).' ஆனால் நான் எனது ஆளுமையிலிருந்து எப்படி விடுதலை பெறுவேன்?**

**நீ** 'எப்படி?' என்று கேட்பது தவறு. நீ புரிந்து கொள்ளவில்லை. அஷ்டாவக்கிரரின் உபதேசம் முழுவதும் இதில் அடங்கியுள்ளது – அநுட்டானம் – செயலாற்றல் – எப்படி? என்பது அநுட்டானத்தின் குறியீடு. எப்படி? – எத்தகு விதி முறையில்? நீ அறியாமையால் கேள்வி கேட்டிருக்கிறாய். அஷ்டாவக்கிரரை நீ புரிந்து கொள்ளவில்லை. புரிந்து கொள்ள மாட்டாய். நீ பதஞ்சலி முனிவரிடம் போய் முறையிடு. அவர் சொல்லுவார் "எப்படி?" என்பதற்குப் பதிலை, அவர் வழிகாட்டுவார். பல உபாயங்களை உபதேசிப்பார் – "யமம், நியமம், ஸம்யமம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணா, சமாதி – இப்படி வரிசைக்கிரமமாக அநுட்டித்துப் பார், விடை கிடைக்கும்."

நீ பயந்து போய், "பெரியவரே! இவைகளை அநுட்டிக்கப் பல பிறவிகள் எடுக்க வேண்டும் சாத்தியமில்லை. குறைத்துக் கொள்ளுங்கள். சுலப வழியைக் காட்டுங்கள்" என்று இறைஞ்சுவாய்.

பெரும்பாலான யோகிகள் யமம் (புலனடக்கம்) யோக விதியை அநுட்டித்து சித்தி பெறுகிறார்கள். அடுத்த விதி 'நியமம்' வரை போவதில்லை. பல யோகியர் யோகாசனங்களை முறையாகச் செய்து கொண்டு காலம் கடத்துவார்கள், காலமாகி விடுவார்கள். அடுத்த யோக விதிகளுக்கு – தாரணா, தியானம் நிலைகளுக்குப் போவதில்லை. யோகாசனங்கள் பலப்பல. அவைகளை எல்லாம் செய்து பழகுவது மிகக்கடினம். தீவிரமாக யோக சாதனை செய்பவர்கள்கூட, யமம், நியமம், ஸம்யமம், பிராணாயாமம், பிரத்தியாஹாரம் கடந்து தாரணா வரை எட்டுவார்கள். முக்திசித்தி நிகழ்வு இறுதியான சமாதி யோக நிலையில்தான் கிட்டும். இந்த சமாதி யோகத்தைப் பதஞ்ஜலி முனிவர்

இரு வகையாகப் பிரித்திருக்கிறார் - ஸவிகல்ப சமாதி (மாற்று வகையுள்ள சமாதி), நிர்விகல்ப (மாற்று வகையற்ற) சமாதி என்று. மேலும் பிரித்துக் கொண்டு போகிறார். தரையிலிருந்து வானம் வரை எட்டக் கூட்டப்படும் மாடிப்படிகளைப் போல.

ஆக, உனக்கு 'எப்படி?' எனும் அநுட்டானத்தில் (செயல்முறை) தீவிரம், ஆர்வம் இருந்தால் பதஞ்ஜலியிடம் போய்க் கேள். இறுதியாக அவர் இதைத்தான் சொல்லுவார், "எல்லா யோக வழிகளையும் விட்டுவிடு. நிறைய அநுட்டித்து விட்டாய்," ஆனால் அப்படியும் விடாப்பிடியாக அநுட்டித்து வருபவர்களும் இருக்கிறார்கள். அந்த வரிசையில் நீ இருந்தால் அநுட்டித்துக் கொண்டிரு; உன் விதி.

-

**உ**ன் வீட்டில் ஒரு சுட்டிக் குழந்தை இருக்கிறது. கூச்சல், கத்தல், விஷமம். நீ அதட்டுகிறாய், "பேசாமல் உட்கார்ந்திரு!" உட்காருகிறது. ஆனால் விஷமம் ஓயவில்லை. கையைக் காலை ஆட்டி ஆர்ப்பாட்டம் செய்கிறது. அதற்கு ஏதாவது செய்து கொண்டிருக்க வேண்டும். ஊக்க சக்தி அதைத் தூண்டுகிறது. அதை இப்படி அதட்டி வெறுமனே உட்கார வைக்க முடியாது. விபரீதமாகும். அதன் போக்கில் விட்டு அடக்க வேண்டும். "இந்த வீட்டை ஏழு தடவை சுற்றி விட்டு வா!" என்று சொல். அது சந்தோஷமாய் சுற்றி வரும். ஐந்தாவது சுற்றிலேயே களைத்துப் போய், மூச்சு இரைக்க உன் பக்கத்தில் வந்து அடங்கி உட்கார்ந்து விடும். "போதும் அப்பா! முடியல்லை. களைப்பாய் இருக்கு," என்று சொல்லும். பிறகு நீ "பேசாமல் இங்கே உட்கார்ந்திரு" என்று சொல்ல வேண்டாம்.

பதஞ்சலியும் இப்படித்தான்; அடக்கம் இல்லாதவர்களுக்கு, கடும் வேலைகளைக் கொடுத்து, "முடித்து விட்டு வா!" என்பார். உடலை வருத்தி ஆசனங்களைச் செய்து விட்டு வா, என்றதும் நீ அப்படியே முனைந்து விடுவாய். சில காலத்திற்குப் பிறகு, நீ களைத்துச் சளைத்துப் போய், "சுவாமி! ஆசனமெல்லாம செய்து களைத்துப் போய் விட்டேன். வேறு வழி சொல்லுங்கள்." என்பாய். அவர் சொல்லுவார், "இதை நீ ஆரம்பத்திலேயே சொல்லியிருந்தால் நாம் இருவருமே தப்பித்திருப்போம் முனைப்பு - முயற்சியிலிருந்து சரி, இபபோது அமைதியாய் அடங்கி அமர்ந்திரு!" என்பார்.

பொதுவாக மனிதன் நினைத்ததை (விரும்பியதை) சாதிக்க ஏதாவது செய்ய விரும்புகிறான். ஏதும் செய்யாமல் சாதிக்க முடியாது என்பது அவன் கருத்து. நீ அப்படித்தான் கருதுகிறாய். உன் கருத்திற்கு ஒத்துவராதவர் அஷ்டாவக்கிரர். அவர் கூறுவார், "நீ முக்தன் (முக்தி - விடுதலை பெற்றவன்)." நீ விவரம் புரியாமல், தவறாகப் புரிந்து கொண்டு, "இப்போதே, இங்கேயே 'நீ முக்தன்' என்கிறீர்களே. நான் என்னிடமிருந்து (நான் - எனது எனும் உணர்விலிருந்து) எப்படி விடுதலை பெற்றவன் ஆவேன்?" என்கிறாய்.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "நான் முக்தன் ஆகவில்லை என்று நினைத்திருப்பவன்தான் 'எப்படி?' எனக் கேள்வி எழுப்புவான். 'நீ அந்த ரகம். 'நான்தான் பந்தப்பட்டுக் கிடக்கிறேனே, எப்படி முக்தி பெறுவேன்? என்றே எண்ணிக் கொண்டிருக்கிறாய்.

இங்கு அஷ்டாவக்கிரர் கூறுவார், "நீ பந்தப்பட்டு இருக்க வில்லை. பந்தப்பட்டிருப்பதாகப் பிரமையில், மதிமயக்கத்தில் இருக்கிறாய். இதுதான் உனக்குப் பந்தம்." பிறகு நீயே கேட்பாய், "இந்தப் பிரமையிலிருந்து எப்படி விடுதலை பெறுவது?"

இப்பவும் உனக்குத் தெரியவில்லை. பிரமை - பிராந்தி என்பதன் பொருள் இல்லாதது, இல்லாமை என்பதுதான். இல்லாததிலிருந்து விடுதலை எப்படி? நீ பார்த்துக் கொண்டிருக்கும் போதே 'முக்தன்' ஆகிவிடுகிறாய்.

உதவி, உபாயங்களைக் கைக் கொண்டால் சங்கடத்தில் சிக்குவாய், அவதிக்கு ஆளாவாய். எந்த ஓர் உபாயமும் வீண்தான். வாழ்நாள் குறுகிய காலகட்டத்துள் அடங்கியது.

உதவி, உபாயங்களை மேற்கொள்ளத் தொடங்கினால் ஒரு ஜன்மம் போதாது. பல ஜன்மங்கள் எடுத்தாலும் காரிய சித்தி பெற முடியாது. தந்திர உபாயங்கள் (செயல் முறைகள்) ஏராளம். எத்துணை பிறவிகள் எடுத்தாலும் போதாது. செய்து கொண்டே இருக்க வேண்டியதுதான். இச் செயல்பாட்டில் உனக்கு நம்பிக்கை இருக்கிறது. இதனால் உனக்குக் கர்வம் தலைதூக்கும். செருக்குற்றுத் திரிவாய்.

இதனால்தான் அஷ்டாவக்கிரர், "ஏதும் நீ செய்யாதே! செய்பவர், செய்ய வல்லவர் பரமாத்மா ஒருவரே. எது நிகழ்கிறதோ நிகழட்டும்.

அதில் நீ ஈடுபடு, கலந்துகொள். 'நான் என்னிலிருந்து எப்படி விடுதலை பெறுவேன்?' என்று கேட்காதே. 'நான் - எனது' எனும் எண்ணம் எழுந்தால் எழட்டும், விட்டுவிடு."

நீ யார் உன்னிடமிருந்து உன்னை விடுவித்துக் கொள்ள? 'இப்படியெல்லாம் நடக்கிறது' என்று எண்ணி, நம்பி வாழ்ந்து கொண்டிருக்கிறாய். இதையெல்லாம் நீ உருவாக்கவில்லை. அப்படி எதையாவது எப்போதாவது நீ உருவாக்கியதாக நினைவு இருக்கிறதா? நீ எதையும் செய்யவில்லை, உருவாக்கவில்லை, கொணரவில்லை. பின், எதிலிருந்து விடுதலை பெற விழைகிறாய்? நீ கொணராத திலிருந்து, உருவாக்காததிலிருந்து எப்படி விடுதலை கிட்டும்? 'நான் என்னதான் செய்வது?' என்று கேட்கிறாய். உனக்கு இரு கண்கள், காதுகள் கிட்டியது போல் அகங்காரச் செருக்கும் கிடைத்திருக்கிறது. உன் கையில், செயலில் எதுவும் இல்லை. எது உள்ளதோ அது சரி, 'நான்' உணர்வும் சரிதான்.

இந்த விஷயத்தில் குறை காணாதே, குற்றம் சாட்டாதே. குறை - குற்றம் காணாத தெளிந்த மனநிலையில் நீ உன்னை (அகந்தையை) இழப்பாய். பரமாத்மா உருவாக்கியதுதான் உன் ஆளுமை. நீ உருவாக்கியதாகக் கருதும்போதுதான். 'நான்' எனும் அகந்தை ஏற்படுகிறது.

**இ**ப்போது நீ புதிய கேள்வியை எழுப்பியிருக்கிறாய், 'நான்' உணர்வை எப்படிப் போக்குவேன்? ஆக, இது ஒழித்தழிக்க வேண்டிய 'நான்' ஆகிவிடும். இனி நீ தப்ப முடியாது. பணிவுள்ளவனுக்கும் அகந்தை ஏற்படுகிறது. செருக்குற்றவன் சராசரி மனிதனைவிடப் பெரியவனாகிறான்.

பணிவானவனின் அகங்காரத்தை நீ பார்த்தாய். அவன் சொல்லுகிறான், "பிரபு! நான் உங்கள் கால்தூசு." ஆனால் அவன் கண்களை - பார்வையைக் கவனி. அவை மாறாகச் சொல்லும். நீ இப்படிச் சொல்லிப்பார், "நீ சரியாகத்தான் சொல்லுகிறாய். என் கால்தூசி நீ என்பதை முன்பே அறிவேன்." உடனே சண்டைக்கு வருவான். கோபிப்பான். நான் அவன் பேச்சை ஒப்புக் கொள்ளுவதை அவன் விரும்புவதில்லை, எதிர்பார்ப்பது இல்லை. "நீ மிகவும் பணிவன்பு

உள்ளவன். பண்பட்டவன். என் கால்தூசு நீ என்று சொல்லாதே. நீ சொர்ணச்சிகரம், கோபுரகலசம். உத்தம புருஷன், ..." என்று நான் சொல்ல வேண்டும் என்பதே உன் எதிர்பார்ப்பு.

உன் போன்றவன் குருவிடம் வந்து, "சுவாமி! நான் உங்கள் பாததூளி. கால்தூசிக்குச் சமம்." என்று சொன்னதும், குரு," ஆமாம். நானும் அப்படித்தான் கருதுகிறேன் உன்னை" என்று சொல்லட்டும், அந்த மனிதன் குருவைக் கோபத்துடன் பார்ப்பான். அவரைவிட்டு விலகுவான். அவரை மதிக்க மாட்டான், ஏறிட்டும் பார்க்க மாட்டான். அவன் செருக்குற்றுத் திரிபவன். பணிவு, அடக்கம் எல்லாம் பாசாங்கு. கர்வம் வினயவேஷம் போட்டுக் கொண்டிருக்கிறது.

ஆக, நீ உன்னிடமிருந்து விடுபட முயன்றால் விடுபட வேண்டிய 'நான்' புதிய அவதாரம் எடுக்கும்; புதிய 'நான்' என்பதை உருவாக்கும். உடையை மாற்றிக் கொண்டாலும் நீ 'நீ'தானே.

அஷ்டாவக்கிரரின் அறிவுரையை அறிந்து கொள். அவசரப் படாதே. 'நான்' என்பதிலிருந்து விடுபட. முயற்சி முனைப்பில் ஈடுபடாதே. உள்ளதை ஏற்றுக் கொள். அஷ்டாவக்கிரர் எப்படி 'நான்' உருவாகும்? உருவாகாது" என்று கூறுகிறார். இதைப் புரிந்து கொள். ஏற்றுக் கொள். உன் அகங்காரம் தொலையும் வந்த சுவடு தெரியாமல். அதை ஊக்கும் சக்தி தொலைந்தது. ஆதாரம் விலகி விட்டது. அதன் மேல் எழும்பிய கட்டுமானம் சரிந்து விழத்தான் வேண்டும்.

நான் 'கர்த்தா' (செய்பவன்) என்கிற எண்ணம் விலகிவிட்டால் எல்லா உலகாயத உபத்திரவங்களும் விலகிப்போகும். சொத்து-செல்வம், பதவி, புகழ் பெற அலைவது கர்த்தாவின் செயல்தான். உலகிற்கு நீ ஏதாவது செய்து சாதித்துக்காட்ட விரும்புகிறாய்.

'என்னிடம் வரும் பலரும் இதைத்தான் கோருகிறார்கள், "நான் ஏதாவது சாதனை செய்து காட்ட வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். வழிகாட்டுங்கள்" என்று கேட்கிறார்கள். "எப்படிப்பட்ட சாதனை செய்து காட்ட விரும்புகிறாய்?" என்று நான் கேட்டால், "என் பெயர் புகழ் நிலைத்து நிற்கவேண்டும். நான் காலமான பிறகும் ஜனங்கள் என்னை நினைக்க வேண்டும்" என்பார்கள். "சரி, அதில் உனக்கு என்ன இலாபம்? உன் பெயரை நினைவு கொள்ள எவனுக்கு விருப்பம்,

உன்னைத் தவிர? நீ இறந்துபோன பிறகு உன் பெயரை எவன் நினைப்பான்? உன் பெயருக்கு என்ன மதிப்பு? நீ உயிரோடு இருக்கிற வரையில் உன் பெயர் ஓர் அடையாளம். பிறகு? ஏட்டில் படிந்து கிடக்கும். துடிப்பு இராது. சிகந்தர், நெப்போலியன் பெயர்கள் ஏட்டில் பதிவு செய்யப்பட்டிக்கின்றன, என்ன பயன்? எவனுக்கு உபயோகம்?

ஆனால் நமக்குப் பிள்ளைப் பிராயத்திலிருந்தே இந்தத் தொற்றுவியாதி சேர்க்கப்பட்டிருக்கிறது. "வாழ்நாளில் ஏதாவ்து செய்து சாதிக்க வேண்டும். அது இல்லாமல் சாகக்கூடாது. நல்லதோ, கெட்டதோ செய்தாக வேண்டும். பேர் எடுத்தாக வேண்டும்" என்று பிள்ளைகளுக்குப் போதிக்கப்பட்டு வந்திருக்கிறது. "நல்லது செய்ய முடியவில்லையா? கெட்டதாவது செய். உன் பேர் பிரபலமாக வேண்டும். அது முக்கியம்." என்று சிலர் போதனை செய்வார்கள். பைத்தியக்கார மனிதர்கள். தம் பெயரை பிரபலப்படுத்த என்னவெல்லாம் செய்கிறார்கள். மலை ஏறிப் போவார்கள், பாறைகளில் தம் பெயர்களைச் செதுக்குவார்கள். பழைய கோட்டை கொத்தளங்களைப் பார்க்கப் போவார்கள் சுற்றுலாப் பயணிகள்; பாழடைந்த சுவர்களில் தம் பெயர்களை எழுதுவார்கள். அங்கு முன்பே வேறொருவர் பெயர் எழுதி வைத்திருப்பார். அதை அழித்து விட்டுத் தம் பெயரைப் பெரிய எழுத்தில் கிறுக்குவார்கள். பிறகு வரும் மற்றவர்கள் அதை அழித்துவிட்டு, அதன் மேலேயே தம் பெயர்களை எழுதுவார்கள். இது கேவலமான கிறுக்குத்தனம். நீ இத்தகைய பைத்தியக்காரத்தனத்தில் ஏன் ஈடுபடுகிறாய்?

**தான்தோன்றி ஆசைகள் புனைந்த**
**கனவு வலைகள் பலப்பல,**
**புத்தொளி வீசி எழுந்தன, பரவின**
**பலப்பல நசுக்கப்பட்ட பேரவாக்கள்,**
**மேனி மேனாணிப்பு மெதப்பு, அன்புப்போதை**
**புகழ்ப்பெருமிதம், செல்வச் செருக்கு**
**பௌதிக உலகினில் மனிதருக்காக**
**விரிந்துள்ளன பல மாயை வலைகள்,**
**அவரவர் பாக்கியம், அவரவர் சாதுரியம்**
**மகிழ்ச்சிகளால் சீரழிந்தவர்கள் பலர்**
**துன்பத்தால் சீர்மல்கி இன்புற்றவர் பலர்.**

**மனிதர் வாழ்வு மெத்தக் கடினம் இப்பாரினிலே**
**இப்படிக் கடின வாழ்வு நீண்டதில்லை**
**காலகதி மேம்படக் காத்திருக்கிறது**
**உள்ளத்துச் செல்வம் சரிதாகக் கிட்டும்**
**மற்றச் செல்வங்கள் பலவும் கிட்டும்**
**பெரும் செல்வந்தர்கள் பலர் உள்ளனர்**
**ஆனால் அவர்களது உள்ளம் தரித்திரம்,**
**எத்தனையோ காட்சிகள் மறைந்துள்ளன**
**மதிமயக்கத்துள், பெருமைப் போதையில்**
**சுய உணர்வுச்சூழல் ஒன்றுதான், ஆனால்**
**மதிமயக்கப் பாதாளங்கள் அநேகம்**
**மதிமயக்கத்துள் பலகாட்சிகள் புதைந்துள்ளன.**

நமது மயக்கத்துள் பல காட்சிகள் புதைந்துள்ளன. தொடர் காட்சிகள். திரைக்குப்பின்னால் திரைவரிசைகள். கதைகளுக்குள் உபகதைகள். இந்த மதிமயக்கத்துள் எத்தனையோ பாதாளங்கள் மறைந்துள்ளன - செல்வத்தின், பதவிகளின், மதிப்பின், கனவுகளின் பாதாளங்கள் வலை விரித்துள்ளன.

எத்தனையோ காட்சிகள் மதிமயக்கத்துள் மறைந்திருக்கின்றன; சுய உணர்வுச்சூழல் ஒன்றுதான், ஆனால் மதிமயக்கப் பாதாளங்கள் பலப்பல.

சுய உணர்வு (பிரக்ஞை) உள்ளவனுக்கு சூழ்நிலை ஒன்றுதான். அவனது சுவபாவம் (இயல்பு) ஒன்று, சொரூபம் ஒன்று, ருசி (சுவை உணர்வு) ஒன்று.

புத்தர் சொன்னார், "கடலை ருசித்துப்பார்! எங்கு சுவைத்தாலும் உப்பாகத்தான் இருக்கும். என்னைச் சுவைத்துப்பார் (ஆராய்ந்து பார்), பிரக்ஞை நிரம்பியதாக இருக்கும். எனக்கு உள்ள ஒரே சுவை - சுயபிரக்ஞை.

அதே சுவைதான் அஷ்டாவக்கிரருக்கும் - கர்த்தா (செயலர்) இல்லை, போக்தா (துய்ப்பவர்) இல்லை - சாட்சி மட்டுமே. ஆகையால், நீ "எப்படி?" என்று கேட்காதே. அப்படிக் கேட்பதில் கர்த்தா நிலை வருகிறது. போக்தா நிலையும் வருகிறது, நீ தவறி விடுகிறாய். அஷ்டாவக்கிரரை அறிந்து கொள்ளாமல் தவறுகிறாய். அவர்

சொல்லுவதெல்லாம் இதுதான் - "எது எப்படி உள்ளதோ அதைப் பார்! சாட்சியாகு! பார்த்துக் கொண்டிரு! அகங்காரம் இருந்தால் அதை மட்டும் பார்! செய்வதற்கு என்ன இருக்கிறது? பார்த்திரு, போதும். பார்ப்பதால் புரட்சி (மறுமலர்ச்சி, சித்தி) ஏற்படுகிறது.

உனக்குப் புரிந்ததா? விஷயம் கொஞ்சம் சிக்கல்தான். ஆனாலும் புரிந்து கொள்ளக்கூடியதுதான். நேரியது, தெளிவானது. அஷ்டாவக்கிரர் கூறும், "பார்த்திரு, போதும். என்பதில் 'கர்த்தா' இருப்பதில்லை, 'சாட்சி' மட்டுமே உள்ளது. நீ சாட்சியாகிறாய். கர்த்தா விலகியதால் தொடர்புள்ள எல்லா அநுபவங்களும் விலகி விடும். பிறகு நீ எதற்காக ஓடித்திரியப் போகிறாய்? பணம், பட்டம், பதவி, அகங்காரம் எல்லாமே தொலைந்து போகும்.

ஒரு தத்துவத்தை சாதனையாகக் கொள் - சாட்சி. நீ, வேறெதுவும் செய்ய வேண்டாம். மற்றவை தாமே நிகழ்ந்து கொண்டிருக்கும். நீ வீணுக்குக் குறுக்கிடுகிறாய், எதிரே நிற்கிறாய்.

**நா**ன் கேள்விப்பட்ட கதை -

ஒரு யானை தொங்கு பாலத்தின் மீது சென்றது. யானைப்பளு தாளாமல் பாலம் ஆடியது. ஒரு ஈ யானையின் துதிக்கையில் உட்கார்ந்திருந்தது. யானை பாலத்தைக் கடந்ததும், ஈ சொல்லியது, "யானை மகனே! பார்த்தாயா? நான் பாலத்தை நடுங்க வைத்தேன்."

யானை சொல்லியது, "அம்மணி! நீ வந்ததே எனக்குத் தெரியாது. நீ இப்போது பேசியதும் தெரிந்து கொண்டேன், நீயும் என்னுடன் வந்திருக்கிறாய் என்று."

நீயும் இப்படித்தான் ஈயைப் போல நினைக்கிறாய். இது நீ இல்லை, உன் ஜீவித சக்தி யானை போன்றது. நீ ஈ, ஜீவித சக்தி மீது அமர்ந்து கொண்டு நீ பீத்துகிறாய். இது அகங்காரம். உன்மீது சவாரி செய்கிறது. உனக்கு ஜீவித சக்தி அபாரம். அதன் மூலம் சகலமும் நிகழும். அது பரமாத்மாவின் ஜீவ சக்தி. அதில் உனக்கு உரிமை இல்லை. அதுதான் உன் சுவாசம், உயிர்மூச்சு. அது உன்னுள் விழித்திருக்கிறது, உறங்குகிறது. நீ நடுவில் நின்று மெதப்புடன் சண்டித்தனம் செய்கிறாய். அப்போது உன்னை எவரும் தடுப்பதில்லை.

யானை கொஞ்சம் தடுத்தது. ஈயிடம் "நீ வந்து அமர்ந்தது எனக்குத் தெரியாது' என்றது. பரமாத்மா இந்த அளவுகூட சொல்லுவதில்லை. பரம மௌனி பரமாத்மா.

நீ சண்டித்தனம் செய்தால் செய்ய விட்டுவிடும். பரம்பொருளின் செயலில் நீ உரிமை கொண்டாடினால் உன்னைத் தடுக்காது. நீ செய்யாததை 'நான் செய்தேன்' என்று சொன்னால் அது மறுக்காது; 'நீ செய்யவில்லை, செய்தவன் நான்தான்' என்று அறிவிக்காது. அதற்கு 'நான்' என்பதே இல்லை. இதனால்தான் உன் பிரமை, மயக்கம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

நீ கவனித்துப் பார். சிந்தித்து உணர்ந்து பார், உன் செயலால்தான் எல்லாம் நிகழ்கிறதா? எல்லாமே தாமே நடக்கின்றன - இது நிஜம், நிதரிசனம்.

இது நியதியின் அருமையான கோட்பாடு. பாக்கியவாதத்தின் சித்தாந்தம் - எல்லாம் தாமாகவே நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. தவறானவர்கள் தவறாகப் பொருள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இது அவர்கள் குற்றம். பாக்கியவாத சித்தாந்தத்தைச் சரியாகப் புரிந்து கொண்டால், நீ சாட்சி மட்டுமே என்பது தெளிவுறும். பிறகு நீ ஏதும் செய்வதற்கு இல்லை. பாக்கியக் கோட்பாட்டினால் சனங்கள் செயலற்றவர்களாகிப் போனார்கள். ஆனால் தம்மைச் செயலாளர் (கர்த்தா) என மயங்கினார்கள். செயல்புரியாத சோம்பேறிகள் (அகர்மண்யர்) ஒருபோதும் 'அகர்த்தா' (செயல்புரியாதவர்) ஆகமுடியாது.

இரண்டிற்கும் வித்தியாசம் உண்டு. அகர்மண்யர் சோம்பேறிகள், சவம் போன்றவர்கள். அகர்த்தா (தான் ஏதும் செய்யவில்லை என உணர்ந்திருப்பவர், செயல்புரியர்தவர்) ஊக்க சக்தி, ஆக்க சக்தி உள்ளவரானாலும், 'நான் செய்கிறேன்' என்று கூறாதவர், கருதாதவர். 'பரம்பொருள் தான் எல்லாம் செய்கிறது' என உணர்பவர், நம்புபவர், கூறுபவர். 'நான் சாட்சியாக இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறேன். லீலா விநோதங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்றே கூறுவர்.

மனிதன் மிகவும் வஞ்சகன், கயவன். அழகான சத்தியங்களை மிக மோசமாகப் பயன்படுத்துகிறான். பாக்கியம் (பெரும்நன்மை)

மேலான அழகிய சத்தியம். அதன் உட்பொருள், 'எல்லாம் தாமாகவே நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. உன் செயலில் ஏதும் இல்லை.'

எல்லாமே தீர்மானிக்கப்பட்டது. எது நிகழ வேண்டுமோ, அது நிகழும், நிகழ்கிறது. எது நிகழ்ந்ததோ, அது நிகழவேண்டியது. நீ ஒதுங்கி இருந்து வேடிக்கை பார்க்கலாம் இந்த லீலைகளை. குறுக்கிட்டு கூத்தாடத் தேவை இல்லை. நீ ஓடி ஆடி ஆர்ப்பாட்டம் செய்யத் தேவை இல்லை. எது நடக்க வேண்டுமோ, அது நடந்து கொண்டிருக் கிறது. எது நடக்க வேண்டுமோ, அது நடக்கும். நீ வெறும் சாட்சியாக இருந்து பார்.

மனிதர்கள் சாட்சியாக இருக்கத்தான் பாக்கியவாதம் (நல்லூழ் கோட்பாடு) கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் சனங்கள் செயலற்று சோம்பி உட்கார்ந்து விட்டனர். ஆனால் செயல்புரிய வல்லவன் என்கிற நினைப்பு நீங்கவில்லை. 'செய்து காட்டுவோம்!' என்றவர்கள், 'எதற்காகச் செய்ய வேண்டும்? செய்து என்ன இலாபம்?' எனச் சுணங்கியிருக்கிறார்கள். ஆக 'கர்த்தா' (செய்பவன்) எனும் எண்ணம் போகவில்லை. 'அகர்மண்யன்' (செயலாற்ற விரும்பாதவன்) நிலை நீடிக்கிறது.

அஷ்டாவக்கிரரை நீ அறிந்து கொள்! இதற்கு விதிமுறை, செயல்முறை ஏதும் இல்லை. அவரே கூறுகிறார், "அநுட்டானம் (செயலாற்றல்) கட்டுப்பாடு, பந்தம். விதிமுறையும் அப்படியே. செயல்படுவதே பந்தம்தான்."

**நான்காவது கேள்வி -**

**பிரபு! உங்களது அருளாசியால் ஆகாசத்தைப் பார்க்கிறேன். ஒளிக்கிரணங்களைக் கண்டு களிக்கிறேன். அநுபவ சஞ்சாரம் என்னுள் நிகழ்கிறது, ஒன்றிப்போகிறேன். ஆனால் இடையில் கலவி நசை (காமவாசனை) பற்றிக் கொள்ளும்போது, தியான யோகத்தில் மூழ்கு வதைப் போலவே புணர்ச்சிக் கிறக்கத்திலும் மூழ்கிவிட விரும்புகிறேன். அருள்கூர்ந்து என் நிலைமையை, தீர்வை எடுத்துச் சொல்லுங் களேன்.**

**மு**தல் விஷயம் - நீ காம வாசனைக்கும் சாட்சியாக இரு. அதை அடக்கி ஆளுபவனாக ஆகாதே. வலுக்கட்டாயமாகக் காம இச்சையைக் கட்டுப்படுத்த முற்படாதே. எப்படி மற்றச் செயல்களுக் கெல்லாம் சாட்சியாக இருந்து வருகிறாயோ, அதே போல் இதற்கும் இருப்பாய்.

கடினம்தான். காலம் காலமாக காம வாசனை (உடல் இன்ப வேட்கை) பாவகாரியம் என்று உனக்குப் போதிக்கப்பட்டு வந்திருக்கிறது. அந்த எண்ணம் உன் உள்ளத்தில் அமர்ந்திருக்கிறது.

இந்த உலகினில் பாவம் (தீமை) என்பதே இல்லை, பரமாத்மா மட்டுமே உள்ளார். பாவ உணர்வை விட்டொழி! எல்லாமாக இருப்பவர் பரமாத்மா ஒருவரே. அற்பத்திலும், இழிவிலும் பரமாத்மா; மகத்தான உத்தம நிலையிலும் பரமாத்மா. தாழ்வு - உயர்வுகளிலும் பரமாத்மா. காம வாசனையிலும் சமாதி நிட்டையிலும் அவரே. இவ்வுலகினில் பாவம், தீமை, புன்மை என எதுவும் இல்லை. எல்லாமே இயற்கை நிகழ்வுகள்.

நீ காம வாசனையிலேயே களித்திரு என்று சொல்ல வரவில்லை. நான் சொல்லுவது இதுதான். காம வாசனையையும் பரமாத்ம சொரூபமாகக் கருது, நம்பு. பல சொரூபங்களில் அதுவும் ஒன்று. அது முதல் படி பரமாத்மாவை அணுக. சமாதி சித்தியின் அநுபவம் சிறிதளவு காமப்புணர்ச்சியில் கிட்டும். அதனால்தான் அதற்குக் கவர்ச்சி. சமாதி சித்தி கிட்டியதும் அந்தச் சுவை, அந்தக் கவர்ச்சி மறைந்து விடும்.

அந்த அன்பர் கூறினார், "தியானத்தில் இலயித்துப் போகிறேன். உள்ளார்ந்த உணர்வுப் பெருக்கில் ஒன்றியிருக்கும்போது காம வாசனை பற்றிக் கொள்ளுகிறது. அதிலும் மூழ்கி ஒன்றிப் போக விரும்புகிறேன்."

மூழ்கிப்போ! தடுக்கத் தேவை இல்லை. மூழ்கி ஆழ்ந்திருக்கும் நிலையில் நீ அதற்குச் சாட்சியாக இரு. பார்த்துக் கொண்டிரு. மூழ்கி எழுவதை. காம இச்சை பற்றிக் கொள்ளுவதைக் கவனித்திரு சாட்சியாக. நடைமுறையில், 'காம இச்சை, காம வாசனை' இச்சொற்கள் மனத்துள் நிந்தனையைக் கொணருகிறது. இப்படிக் கூறு. "பரமாத்மாவின் ஒரு நிலை, வகை என்னைச் சூழ்ந்திருக்கிறது.

பரமாத்ம ஆக்க சக்தி என்னை ஆட்கொண்டிருக்கிறது. பரமாத்மாவின் இயல்பு, மாயை என்னைச் சூழ்ந்திருக்கிறது." இதை விட்டு, 'காமவாசனை' என்ற சொல்லைப் பயன்படுத்தினால், பழைய வழக்கப்படி பாவம், தீமை, புன்மை சார்ந்த பொருள் ஞாபகத்திற்கு வரும். பாவம் செய்த குற்ற உணர்வு மேலெழும். இந்நிலையில் சாட்சியாக இருப்பது இயலாது போகும். மயங்கி விழு அல்லது அடக்கி ஆள்பவனாக (நியந்தா) இரு. இவ்விரு நிலைகளுக்கும் இடைப்பட்டது சாட்சி நிலை. ஒன்று கிணத்துள் விழு! அல்லது மடுவில் விழு! இரண்டிற்கும் இடையில் நின்று நிலைத்திருந்தால் உனக்கு சமாதிசித்தி கிட்டியதாக அர்த்தம்.

முன் சொன்ன இரு நிலைகள் வெகு சுலபம். காம வாசனையில் மயங்கி மூழ்கியிருப்பது மிக எளிது. நிகழ்வதை முற்றிலும் மறந்து மயக்கத்தில் கிடப்பது சுலபம். காமவாசனையை அடக்கி, தடுத்து சமாளித்திருப்பதும் சுலபம்தான். ஆனால் இரு நிலைகளிலும் நீ தவறு இழைக்கிறாய்.

காமலோலனும் தவறுகிறான், புலனடக்கம் உள்ள பிரும்ம சாரியும் தவறுகிறான். நிஜமான பிரும்மசரியம் இருநிலைகளுக்கும் (காம இச்சையில் மூழ்குவது, அல்லது அதை அடக்கி வைப்பது) இடையில் நிலை நிற்கும்போதுதான் அமைகிறது. நீ அப்படித்தான் நிற்கிறாய். வேடிக்கை பார்த்துக் கொண்டிரு. உணர்ந்து கொள்ளுவாய் - காமவாசனை சரீரத்தில்தான் எழுந்தது, எதிரொலித்தது. மனத்தில் சிறிது நிழலாடியது. பிறகு விலகிப் போயிற்று. நீ தொலைவில் நின்று பார்க்கிறாய். இப்படி இருக்கும் போது உன்னுள் காமவாசனை எப்படி இருக்கும்? எப்படி ஏற்படும்? நீ பார்வையாளன் மட்டுமே, நடுநிலைச் சாட்சிக்காரன்.

இது அடிக்கடி நிகழும். தியானம் சரியாக செயல்படும்போது, குறுக்கே காமவாசனை தாக்கும். இதை நீ உணர்ந்து கொள். பல யோக சாதகர்களுக்கும் இது நிகழும். தியானம் சரியாக ஆழ்ந்து இயங்கும் போது, உன் வாழ்வில் சற்று ஓய்வு கிட்டும். மனஇறுக்கம் சமனப்படும். காலம் காலமாக நீ காமவாசனையை அடக்கி வந்தது விலகிவிடும். அடக்கப்பட்ட காமம் கொழுந்து விட்டு எரியும். ஆகையால் தியானம் செய்யும்போது காமவேட்கை எழுமானால், பயப்படாதே. தியானம்

சரியான வழியில் இருப்பதற்கு அது ஒரு அடையாளம். தியானம் இயக்குகிறது உன் இறுக்கத்தைப் போக்குகிறது. அடக்குமுறையை அகற்றுகிறது. தியான யோகத்தின் இயல்பு வழியில் நீ இயங்கிக் கொண்டிருக்கிறாய்.

தியானம் உன்னை இயல்பு நிலையில் நிறுத்தும்; பிறகு பரமாத்மாவிடம் கொண்டு செல்லும். இயற்கையோடு இணையாதது இயல்பாக இருக்க முடியாது. இயற்கையோடு இணையாதது பரமாத்மாவோடும் இணையாது. தியான யோகம் முதலில் உன்னை இயற்கையோடு இணைத்து இட்டுச் செல்லும். பிறகு பரமாத்மாவோடு இணைக்கும். இயற்கை பரமாத்மாவின் வெளிமுட்டம். அதனுடன் உனக்கு இசைவு, உறவு இல்லாது போனால், உள்ளுறைப் பரம்பொருளுடன் ஒன்றிப் போவது எப்படி சாத்தியமாகும்? பிரகிருதி (இயற்கை) பரமாத்மாவின் ஆலயத்தை எட்ட உதவும் படிக்கட்டு வரிசை. அப்படிகளைக் கடக்காமல் ஆலயத்தின் மூலத்தானத்தை எப்படி எட்ட முடியும்?

என் கருத்துரையைப் புரிந்து கொண்டால் (காமத்தை) அடக்குவதை விட்டுவிடு. அதை அமைதியாக ஏற்றுக் கொள். பரமாத்மா காட்டும் காட்சி அது. சுபம் (மங்களம்) அளிக்கும். நீ அடக்குபவனாகவோ, தீர்மானிப்பவனாகவோ ஆகாதே. பின்னால் நின்று கொண்டு 'அது சரி. இது சரியல்ல' என்று சொல்லாதே. 'நான் இதைச் செய்ய விரும்புகிறேன், இதைச் செய்ய விரும்பவில்லை' என்றும் கூறாதே. பேசாமல் பார்த்துக் கொண்டிரு.

**வயது சரிந்து கொண்டிருக்கிறது**
**ஆசை ஆவல்கள் கரைந்து சரிகின்றன**
**கனல்த்தீ தொடர்ந்து அணைந்து கொண்டிருக்கிறது**
**மோகமயக்கம் முயங்கிக் கொண்டிருக்கிறது**
**வெள்ளப் பெருக்கு அடங்கி வருகிறது**
**ஆசை முடங்கிக் கொண்டிருக்கிறது**
**மௌனத்தின் பூச்சு படிந்து கொண்டிருக்கிறது**
**கனல்வெப்பம் தணிந்து கொண்டிருக்கிறது**
**தீ அடங்கிக் கொண்டிருக்கிறது.**

சரியாகத்தான் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் ஒன்று: தீக்கனல் அணைவதற்கு முன்பு ஒருமுறை கொழுந்துவிட்டு எரியும்.

தீச்சுவாலை எழும். மருத்துவ நிபுணரைக் கேட்டுப்பார், மனிதன் இறப்பதற்கு முன்பு பிணி நீங்கி சொஸ்தமாகி விடுவான். எல்லா உடல் கோளாறுகளும் விலகிவிடும். பிணம் மாதிரிக் கிடந்தவன் எழுந்து உட்காருகிறான். கண்திறந்து பார்க்கிறான். புத்துணர்ச்சி ஏற்பட்டும் மரணிப்பதற்கு முன்பு எல்லா நோய் நொடிகளும் விலகிவிடும். வாழ்வு இறுதிப் பாய்ச்சலின் போது ஜீவித சக்தி மேலெழுகிறது.

நீ பார்த்திருப்பாயே - விளக்கு அணைவதற்கு முன் பளிச்செனை எரியும். எண்ணெய் ஒட்டத் தீர்ந்ததும், கடைசித்துளியை உறிஞ்சிவிட்டு சுடர்ந்து எழும். இறுதி எழுச்சி அது. விடிகாலைக்கு முன்பு இரவைப் பார்த்திருப்பாய் - இருள் மண்டிய இராப்போது இருளின் இறுதிக் கொழிப்பு அது.

இதே போல் தியானத்தில் ஆழ்ந்து இலயிக்கும் போது, இறுதிக் கொழிப்பை நீ உணர்வாய். காம வேட்கை (நசைஆசை) ஊக்க சக்தியுடன் மேலெழும்.

**வயது சரிந்து கொண்டிருக்கிறது**
**ஆசை ஆவல்கள் கரைந்து சரிகின்றன**

-ஆசை, ஆவல் எனும் மெழுகுவர்த்தி தீபம் கரைந்து வழிந்து கொண்டிருக்கிறது; வயது, பிராயம் குறுகிக் கொண்டிருக்கிறது.

**கனல்த்தீ தொடர்ந்து அணைத்து கொண்டிருக்கிறது,**
**மோக மயக்கம் முயங்கிக் கொண்டிருக்கிறது,**
**வெள்ளப் பெருக்கு அடங்கி வருகிறது.**

- வாழ்க்கை வெள்ளம் தேங்கிக் கொண்டிருக்கிறது.

**ஆசை முடங்கிக் கொண்டிருக்கிறது,**
**மௌனத்தின் பூச்சு படிந்து கொண்டிருக்கிறது.**

- தியான நிலை ஆழ்ந்து வருகிறது, மௌன நிலை உள்ளடங்கிக் கொண்டிருக்கிறது.

**மௌனத்தின் பூச்சு படிந்து கொண்டிருக்கிறது,**
**கனல் வெப்பம் தணிந்து கொண்டிருக்கிறது,**
**தீ அடங்கிக் கொண்டிருக்கிறது.**

இதில் எக்கணமும் கொதிப்பு எழும். அதைப் பார்த்திரு. அடக்காதே. அடக்கினால் உன்னுள் இறங்கிவிடும். மறுபடியும் பந்தப்படுவாய். அடக்க அடக்க எழுந்து கொண்டிருக்கும். எழும் கொதிப்பை அமைதியாகக் கவனி. உன் தியானத்தில் தடங்கல் ஏற்படாது. நீ சாட்சியாக இரு.

## ஐந்தாவது கேள்வி -

**எந்த பந்தத்திலும் சிக்காதே சாந்தமாக, சுகமாக இரு! என்று சொன்னீர்கள். ஆனால் துறவும் ஒரு பந்தம்தானே? மேலும், விதி, நியமம், வழிமுறை, உபாயம் - இவையும் பந்தம் தானே? எப்படி இவைகளுள் ஈடுபடாமல் இருக்க முடியும்? தயவு செய்து தெளிவு படுத்துங்கள்.**

**நீ** இந்தக் கேள்வி கேட்பதிலிருந்து என் போதனையைப் புரிந்து கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். புரிந்து கொண்டிருந்தால், எந்தப் பந்தத்திலும் சிக்காதே; அமைதியாய், சுகமாய் இரு! பிறகு இந்தக் கேள்வி எழாது. அமைதியில்லாமல் துன்பப்படுபவன்தான் இப்படிக் கேள்வி கேட்பான்.

நீ அமைதி இழந்து தவிப்பதால்தான் உனக்கு சன்னியாசம் மேற்கொள்ளுவது அவசியமாகிறது. சாந்தமாக இருந்தால் நீ சன்னியாசம் பெற்று விட்டதாகக் கருதலாம்.

நீ உன்னை ஏமாற்றிக் கொள்ளாதே. சன்னியாசம் மேற்கொள்ளத் துணிவு இல்லை என்றால் அஷ்டாவக்கிரரைப் புகல் அடையாதே. அமைதி (சாந்தி) நிரம்பியிருந்தால் உனக்குச் சன்னியாசம் எதற்கு? அமைதி பெற வேண்டித்தான் மனிதன் சன்னியாசம் மேற்கொள்ளுகிறார்கள்.

நீ சுகமாக, சாந்தமாக இருப்பதை உணர்ந்தால், ஜனகர் போன்ற ஆளுமை கொண்டிருந்தால் அப்போதே சன்னியாசம் பெற்றவனாகிறாய். ஜனகர் உன் மாதிரி கேள்வி கேட்கவில்லை. அவர் தெளிவாகக் கூறினார், "குருதேவா! நான் முக்தன் (விடுதலை அடைந்தவன்).

இதுவரையில் மாயை, மோக மயக்கத்தில் ஆழ்ந்திருந்தேனே, அதுதான் ஆச்சரியம்! எப்படி மதிமயங்கிக் கிடந்தேன்...?''

நிலைமை இப்படியும் இருக்கும். நீயும் ஜனகரைப் போலவே கேட்டிருப்பாய். ஆனால் உன் உள்ளத்தில் துறவு மேற்கொள்ள ஆவல்; ஆனால் துணிவு வரவில்லை. அஷ்டாவக்கிரரின் போதனையைக் கேட்டு, நீ இவ்வாறு நினைத்தால், நல்லதாயிற்று. சன்னியாசமும் ஒரு பந்தம்தான். அதில் சிக்கிக் கொள்ள வேண்டாம். சிக்கல் வளரும். மேலும், சன்னியாசம் எனும் தளையை (பந்தம்) விட்டுவிட்டாய் என்றால் அத்துடன் முடிந்து விடுமா? மற்றத் தளைகளை எப்போது, எப்படி விடப்போகிறாய்? சன்னியாசம் மேற்கொள்ளாமலேயே அதைத் தளையாகக் கருதிவிடத் துணிந்தாய். குடும்பத்தை, மனைவி மக்களை விடப்போகிறாயா? செல்வம், செல்வாக்கு, பதவிகளை விடுவாயா? மனப்போக்கை, மனப்பாங்கை விடுவாயா? 'நான்-எனது' எனும் அகங்காரத்தை, 'நான் செய்கிறவன்' எனும் செருக்கை விடுவாயா?

உன்னிடம் உள்ளவைகளை மட்டுமே நீ துறக்க முடியும். மேற்சொன்ன கேள்விகளை சன்னியாசிகளிடம் கேட்டுப்பார். நீ இன்னும் சன்னியாசி ஆகவில்லை. சன்னியாசத்தை விட்டு விடு என்று உன்னிடம் கூறுவது சரியாகாது. உன்னிடம் இல்லாததை விட்டுவிடு என்று சொல்ல முடியாது.

**ம**னிதன் மகா எத்தன். மனித மனம் நேர்மையற்றது. சுயநலம் மிக்கது. ஏமாற்றக் காத்திருப்பது. தனக்கு இசைவானது நிகழ்ந்தால் மகிழும். மனம் சஞ்சலமானது. அது நினைக்கும், 'பயந்து கொண்டு யோசித்திருந்தேன். நல்ல காலம், அஷ்டாவக்கிரர் கிடைத்தார். நன்றாகவே போதித்தார் - 'மறந்தும் துறவு மேற்கொண்டு விடாதே!' நல்லதாயிற்று.

அஷ்டாவக்கிரரிடமிருந்து நீ வேறெதுவும் கற்க வேண்டாமா?

என்னிடம் வரும் சிலர் சொல்லுகிறார்கள், ''இனிமேல் தியானம் செய்வதையும் விட்டுவிடலாமா? அஷ்டாவக்கிரர் தியானம் ஒரு பந்தம் (தடை) என்கிறாரே?...''

நான் கேட்பேன், "சொத்து சுகத்தை விட்டு விடுவாயா? பதவி வசதியை விடுவாயா? தியானத்தை மட்டும் விடப்போகிறாயாக்கும்?... தியானம் வசப்படவில்லை, அதற்குள் விடுதலையா? தியான யோகம் உனக்கு வசப்பட்டிருந்தாலும், 'விட்டுவிடலாமா?' என்று நீ கேட்டால், 'விட்டுவிடு!' என்றுதான் கூறுவேன்.

தியானம் சித்தித்தவன் விடுவதைப் பற்றிக் கேட்க மாட்டான். அந்த நிலையைக் கடந்திருப்பான். அவன் அஷ்டாவக்கிரரைப் புரிந்து கொண்டிருப்பான்; மகிழ்ந்து நெகிழ்ந்து போவான். இப்படி எண்ணுவான், 'தியானத்தில் தியானம் மட்டுமே விடப்படும், துறவில் பந்தப்படும் பிணைப்பு விடுபடும். சன்னியாசம் பந்தமாகாது. மற்ற பந்தப் பிணைப்புகளை விட்டு விலக அது ஓர் உபாயம், வழிகாட்டி. இறுதியில் அது தானாகவே விலகிப் போகும்.

சன்னியாசம் ஒருநிலையில் முள்ளாக இருக்கும் - உலகாயத முள் அது. அம்முள்ளை விலக்கிவிட்டால் நலமே கிட்டும். அஷ்டாவக்கிரரின் போதனையைச் சரியாகப் புரிந்து கொண்டால், அதைவிட சுபமானது நலம்மிக்கது வேறு எது இருக்க முடியும்? பிறகு துறவறம் தேவை இல்லை.

சிந்தித்துப் பார். பித்தலாட்டம் கூடாது. பித்தலாட்டம் பாதித்தால், துணிந்து சன்னியாசம் மேற்கொண்டுவிடு! பிறகு அதையும் துறக்கும் தகுதி, திறன் உனக்கு ஏற்படும்.

துறப்பதற்கு என்ன இருக்கிறது? ஆன்ம மெய்ஞான போதம் ஏற்பட்டதும், துறப்பதற்கு எதுவும் எஞ்சியிராது. எல்லாம் துறக்கப்பட்டிருக்கும். இதைத்தான் ஜனகர் அஷ்டாவக்கிரரிடம் சொன்னார், "குருதேவா! இந்த சரீரமும் விடுபட்டுப் போயிற்று." அப்போது ஜனகர் உயிரும் உடலுமாகத்தான் இருந்தார். உடல் பிரியவில்லை. அந்நிலையிலும் ஜனகர் கூறினார், "இந்த சரீரமும் விலகிவிட்டது. உலகம் பூராவும் விலகியது. எல்லாம் விலகின. நான் ஒட்டு-உறவு இல்லாமல் தனியனாக இருக்கிறேன். சொந்த சிந்தனை, கருத்து ஏதும் இல்லாமல் இருக்கிறேன். ஆகா! உங்களது உபதேசத்தின் மகிமையே மகிமை!"

இது அரிய, அதிசய கலைத்திறன். எதுவும் நிகழவில்லை. உலகம் விலகவில்லை, உடல் விலகவில்லை. ஆனால் எல்லாமே விலகிவிட்டது!

மெய் உணர்வு உனக்கு ஏற்பட்டதும், உன்னிடம் விடுவதற்கும் ஏதும் இராது. உலகம், துறவு எல்லாம் விடுபட்டிருக்கும். உடன் இருப்பவைகளை சொந்தமென நினைத்துக் கொண்டிருப்பவன், பற்றியிருப்பவன்தான் விடுவதை முயலவேண்டும்.

தியாகம் போகத்தின் நிழல், தியாகி போகியின் தலைகீழ் சொரூபம். போகம் விலகும்போதும் தியாகமும் விலகிவிடும். இரண்டும் சேர்ந்திருக்கும். சேர்ந்தே விலகும். போகிகள் தியாகிகளின் பாதங்களில் விழுந்து அடிபணிவதைப் பார்த் திருப்பாய். கூட்டுறவுப் பண்பு. இருசாராரும் சேர்ந்திருக்கிறார்கள். பாதிப் பாதியாக இயங்குகிறார்கள். தியாகி இல்லாமல் போகியும், போகி இல்லாமல் தியாகியும் வாழ இயலாது. இக்கூட்டுறவுத் தந்திரத்தைக் கவனித்தாயா?

ஒரு பக்தர் என்னிடம் வந்து தியான யோகம் கற்றுக் கொள்ள வேண்டும் என்றார். அவர் ஒரு துறவி. பரம்பரை முறைப்படி முன்பே துறவறம் ஏற்றவர். "சரி, நாளைக் காலையில் நம் தியானகூடத்திற்கு வாருங்கள்" என்றேன்.

"நாளைக் காலையில் வருவது முடியாத காரியம்."

"ஏன்? இதில் என்ன கஷ்டம்?"

"என்னுடன் இருக்கும் பணியாளர்கள் வராமல் நான் கிளம்பி வர முடியாது. பணம் காசு அவர்களிடம் இருக்கிறது. நான் பணத்தைத் தொடுவதில்லை. நாளைக் காலையில் அவர்களுக்கு வேறு வேலை, போய் விடுவார்கள். திரும்பி வரத் தாமதமாகும். அவர்கள் இல்லாமல் நான் இங்கு வர இயலாது" - தியான யோகம் பயில வந்த பக்தர்!

இது வேடிக்கையாக இல்லை? பணத்தின் தேவை உனக்கு. உன் ஜேபியில் பணத்தை வைத்துக் கொள். பணம் பந்தம்தான். பிறர் ஜேபியில் வைத்திருந்தால் பந்தம் விலகி விடுமா? டாக்சிக்குப் பணம் கொடுக்க வேண்டும், நீ சவாரி செய்கிறாய். நீதானே கொடுக்க

வேண்டும்? உன்னிடம் வைத்துக் கொள்ளுவதுதானே வசதி. பணத்தைத் தொடமாட்டேன் என்றால், உனக்காகப் பிறர் பணம் வைத்துக் கொண்டு செலவழிப்பதால் உன் பாவம் தொலையுமா? பந்தம் என ஒதுக்கிய பணம்தானே உனக்காகப் பயன்படுத்தப் படுகிறது? உனக்காக மற்றவன் பாவம் செய்ய வேண்டுமா? இதுதான் போகி - யோகி கூட்டுறவு!

பெரும்பாலும் தியாகிகள் போகிகளிடம் கட்டுண்டு இருக்கிறார்கள். போகிகளும் அப்படித்தான். போகி தியாகி காலில் விழுந்து வணங்குவான். அவரது அருளாசி பெற்று விட்டதாக மகிழ்வான். விரைவில் தானும் யோகியாகி புகழ், பெருமை பெறப்போவதாக அகம் மகிழ்வான்.

ஜைன சாதுக்களிடையே இது அதிகம். ஜைனர்கள் சாது (துறவி) அவர்களைத் தரிசித்து, வணங்கி ஆசி பெறப் போகிறோம் என்று பெருமையுடன் சொல்லிச் செல்வார்கள். தரிசித்து, வணங்கி, வழிபட்டுத் திரும்பியதும், "நல்லது; புண்ணிய லாபம் கிடைத்தது. உத்தமமான சம்பாத்தியம் இது." என்று பெருமிதத்துடன் சொல்லிக் கொள்ளுவார்கள். பக்தியிலும் இலாபக் கணக்கு! அங்கு சமணத் துறவிகளும் (சாதுக்கள்) 'எப்போது சம்சாரி பக்தர்கள் வருவார்கள்?' என்று ஏங்கிக் காத்திருப்பார்கள். இதேபோல் சம்சாரிகளும் (போகிகள்) சமண சாதுக்கள் எப்போது நம் ஊருக்கு, பேட்டைக்கு எழுந்தருளப் போகிறார்கள் என ஏங்கிக் காத்திருப்பார்கள்.

யோகிகள், போகிகள் இரு சாராரும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள்.

நிஜமான ஞானி தியாகியோ, போகியோ இல்லை. நான் ஒரு சாட்சி எனும் உணர்வோடு இருப்பவன். அவன் எந்த நிலையில் இருந்தாலும் - ஏழையோ செல்வந்தனோ சாட்சிதான். சாட்சி நிலைக்கு ஏற்றத் தாழ்வு கிடையாது. பெருமை சிறுமை, அழகு, அவலட்சணம் - எந்தப் பேதமும் இல்லை. சாட்சி நிலை எவரிடமும் ஏற்படும், ஒரே அளவில் இருக்கும்.

நாம் எல்லா நிலைகளுக்கும் சாட்சியாக இருக்க முடியும்; வெற்றி-தோல்வி; வெகுமானம் - அவமானம்; போற்றுதல் - தூற்றுதல் ஆகிய எல்லா நிலைகளுக்கும்.

"சாட்சியாக இரு!" - இவ்வளவுதான் அஷ்டாவக்கிரரின் உபதேசம். சாட்சியாக இருப்பது சுலபமல்ல. மெத்தக் கடினம். விதிமுறைகளைக் கடைப்பிடி. பதறாதே, பயப்படாதே. இறுதியில் விதிமுறைகளுக்கே சாட்சியாகி விடுவாய். இதனால்தான் உன்னைத் தியானத்தில் ஆழ்ந்து ஈடுபடு என்று கூறுகிறேன். கவலைப்படாதே. தியானம் செய்து கொண்டிருந்தால் சாட்சிநிலை சித்திக்கும் என்று சொல்ல மாட்டேன். தியானம் செய்யாமல் இருந்தால் உன் எண்ணங்கள் உன்னைச் சூழ்ந்திருக்கும், சுற்றிக் கொண்டிருக்கும். தியானமா சாட்சியா என்பது அல்ல குழப்பம். தியானமா எண்ணமா என்பதில்தான் குழப்பம்.

என் போதனை புரிந்ததா? புரிந்து கொள்ள முயற்சி செய். அஷ்டாவக்கிரர் சொல்லி விட்டார், "தியானமும் ஒருபந்தம் (தளை)தான்." இதை நம்பி நீ தியானத்தைக் கைவிட்டாய். பிறகு? சாட்சியாகி விடுவாயா? மாட்டாய். பழையபடி குப்பை கூளங்களான எண்ணங்களுள் உழல்வாய். அஷ்டாவக்கிரர் அளித்த ஏணியில் ஏறி மேல் நிலைக்குப் போகாமல், கீழ்நிலைக்கு இறங்கி, விழுந்து கிடப்பாய். ஏணி ஒன்றுதான். மேல்நோக்கி வைத்து ஏறுவதும், கீழ்நோக்கி அமர்த்தி தாழ்வரையில் விழுவதும் உன் செயல்.

**நா**ன் அறிவுறுத்துவது இதுதான் - ஆழ்நிலைத் தியானத்தில் ஈடுபடு. தியானமா? எண்ணமா? என்கிற தேர்வுக் குழப்பம். சாட்சிக்குத் தகுதி இல்லை. தியான யோகத்தில் தேர்ச்சி பெற்றதும் எண்ணங்களின் பாதிப்பு விலகிவிடும். பிறகு தியானமா? சாட்சியா? எனும் மேல் நிலையை எட்டுவாய். தியானத்தைத் துறந்து சாட்சியை மேற்கொள்.

சன்னியாசம் மேற்கொள்ள வேண்டாம் எனத் தீர்மானித்திருந்தால் நீ சம்சாரியாக இருப்பாய். இப்போது உன் ஈரொட்டு 'சன்னியாசமா, சம்சாரியா?' என்பது. இப்போதே சன்னியாசம் பெறு என்பேன். நீ சன்னியாசியாகி விட்டாய். சம்சார பந்தம் விலகியது. இப்போது உள்ள ஈரொட்டு 'சன்னியாசமா மகாசன்னியாசமா?' என்பதுதான். அப்போது நான் கூறுவேன், "சன்னியாசத்தை விடு, மகாசன்னியாசத்தை மேற்கொள்!" நீ மகா சன்னியாசத்துள் மூழ்கி விடுவாய்.

நீ ஜனகரைப் போல உடனடியாக முடிவெடுத்தால் நான் குறுக்கிட மாட்டேன். நீ சுகமாயிரு! இராது போனால் மேற்கொண்டு முயற்சி செய்; முனைந்து முன்னேறு!

நீ சத்தியத்தை அசத்தியமாக்கிக் கொள்ளலாம் மலர் உனக்கு முள்ளாகலாம். அது உன் பொறுப்பு. உன் தலைவிதி.

**வெளிச்சத்தில் கண்மூடி ஓடிவிடாதே**
**என் வெகுளி அன்பு உள்ளமே!**
**புலப்படாத பாதைகள் எல்லாம்**
**வழித்தடத்தில் முள்ளும் கல்லும் பலவும்,**
**இனிதே கமழும் நறுமணம் நுகர்ந்து**
**மலர்களை நம்பி ஏமாறாதே!**

நீ கவனமாய் இரு. விழிப்புடன் காலடி வை. நீ நடக்கத் துவங்கியதும், சுகந்தம் வீசும். மயங்காதே. அதை நாடி அடி எடுத்து வைக்காதே.

**வழித்தடத்தில் முள்ளும் கல்லும் பலவும்,**
**இனிதே கமழும் நறுமணம் நுகர்ந்து**
**மலர்களை நம்பி ஏமாறாதே!**

மென்மையான சுகந்தம் உள்நாசியைத் தவழும் போது கவனமாயிரு. நீ ஏறிட்ட உணர்வோ இது? இது உனது ஆவலோ? அல்லது உன் அச்சத்தின் பிரதிபலிப்போ? உனது பலவீனத்தின் விளைவோ? நீ ஏறிட்டு விரும்பி வரவழைத்திருக்கும் சுகவாசனை அலையோ இது? சுகந்த மயக்கில் த்டுமாறிப் போகாதே!

**வா**ளாவிருப்பது சுலபம் எனத் தோன்றும் போதனை பெறும்போது. ஏதும் செய்யாமல் வாளவிருக்கத் துவங்கும் போது மெத்தக் கடினம் புலனாகும். “சாட்சியாக இரு!” என்பதைக் கேட்கும்போது, மிக எளிதாகத் தோன்றும். ‘ஏதும் செய்ய வேண்டாம், வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தால் போதும்’ என்ற எண்ணம் எழும். செயல்படுத்தத் துவங்கியதும் புரியும் இது மெத்தக் கடினம் என்பது.

இதைச் செய்து பார்! உன் கைக் கடிகாரத்தைக் கண்ணெதிரே வைத்துக் கொள். வினாடி முள் நகர்ந்து ஒரு நிமிட நேரத்தை

எட்டுவதைக் கவனி. உன் பார்வை வினாடி முள் மீதே 'நான் இதற்கு சாட்சி' என்ற எண்ணத்துடன் இருக்க வேண்டும். ஐந்தாறு விநாடிகளுக்குப் பிறகு உன் கவனம் விலகிவிடும். வேறு நினைவு, எண்ணம் சூழ்ந்து கொள்ளும். சாட்சிநிலை மறந்து போகும். பிறகு நினைவு வந்து திடுக்கிடுவாய். 'விநாடி முள் நகர்ந்து போய்விட்டது, நான் கவனிக்கவில்லையே' என ஆதங்கப்படுவாய். ஒரு நிமிட நேரம் கூட உன்னால் சாட்சியாக நிலைத்திருக்க முடியவில்லை. சாட்சி நிலை ஆசையை விடு. இப்போது உன் எதிரே உள்ள ஈரொட்டு 'தியானமா? எண்ணமா?' என்பதுதான். தியானத்தைத் தேர்ந்தெடு. ஆழ்ந்து ஈடுபடு. பிறகு தியானமா? சாட்சியா?' எனும் தேர்வு வரும். நிதானித்து, தியான சித்தி பெற்று சாட்சி நிலையை எட்ட முற்படு. முன்னேறு! சித்தி பெறுவாய்.

**ச**ன்னியாசம் பற்றிக் கேள்வி கேட்டாய். என்னிடம் சன்னியாசம் பெறுவது என்னோடு இணையும் உபாயம், அபிநய பாவனை போன்றது. இது தளை (பந்தம்) இல்லை. நீ என்னுடன் பந்தப்பட்டு இருக்கவில்லை. நான் உனக்கு ஒழுங்குமுறை, கட்டுப்பாடு எதுவும் போதிக்கவில்லை. நீ என்னவெல்லாம் செய்ய வேண்டும், எப்படிச் செய்யவேண்டும் என்று உபதேசிக்க வில்லை. நான் உனக்குச் சொல்லுவதெல்லாம் ஒன்றுதான் "நீ சாட்சியாக இரு!" என் கை உனக்காக ஆயத்தமாக இருக்கிறது. என் கையைப் பற்றிக் கொள். என்னுடன் சில அடிகள் முன்னே நடந்து வா. என் பாதிப்பு உன்னைப் பற்றிக் கொள்ளும். இது ஒரு தொற்று நோய் - ஒட்டுவார் ஒட்டி. புத்தரோடு சில அடிகள் சேர்ந்து நட. அவரது ஆளுமை, ஜன்ம வாசனை உன்னைப் பற்றிக் கொள்ளும். தோட்டத்திற்குள் போய் வருகிறாய். உன் ஆடைகளில் மலர்மணம் வீசும் - பூக்களை நீ தீண்டாத போதிலும்.

சன்னியாசம் என்னுடன் சில அடிகள் இணைத்து செல்ல எழும் துணிவு, சிறிது பாவபங்கிமா (அபிநயஅடவு) என் பிரேமை சார்ந்தது. இப்பிரேமை உன்னை முக்தனாக்கப் பயன்படுத்தும் ஏற்பாடு. என்னுடன் சேர்ந்து நட. முக்தி வாசனையை உனக்கு அளிக்க விரும்புகிறேன்.

**உயிர் மூச்சின் படிமம் நான்**
**முதுமையால் கட்டுண்டவன்,**

**மரணத்திற்கு அழைப்பு விடுத்துள்ளேன்!**
**ஆனால் சொந்த அன்பு இருக்கிறதே-**
**இதன் மூலமாக நான்**
**ஜீவன் முக்தன் ஆக்கப்பட்டுள்ளேன்!**
**காலதேவனின் பெரும் கதாயுதத்தை**
**துள்ளி விளையாடும் பாலகன் ஒருவன்**
**கணப்போதில் எடைபோட்டு விடுகிறான்!**
**நீ எந்த மூலை?...**
**உயிர் மூச்சின் படிமம் நான்**
**முதுமையால் கட்டுண்டவன்,**
**மரணத்திற்கு அழைப்பு விடுத்துள்ளேன்!**

பிறப்பு - இறப்பு இதுதான் உன் வாழ்வு, இதன் உருவம் நீ. மூச்சுவிடத் தொடங்கியது, மூச்சுவிடுவது முடிந்தது - இவற்றுக்கு இடைப்பட்ட காலகதியில் கொஞ்சம் கதை அளப்பு, சிறு நாடகம். இதில் ஏதாவது சத்து, சாரம் இருந்தால், அது உன்னை ஜனன-மரணச் சுழலிலிருந்து வெளியேற்றிவிடும்....

**ஆனால் சொந்த அன்பு இருக்கிறதே**
**இதன் மூலமாக நான்**
**ஜீவன் முக்தன் ஆக்கப்பட்டுள்ளேன்!**

(இந்த ஜனன - மரணங்களுக்கிடையில் சொந்த பந்தமான அன்பு ஏற்பட்டுவிட்டால்)

சன்னியாசம் என்னுடன் பிரேமையில் இணைவது. இதைவிட அதிகம் இல்லை. இவ்வளவுதான். சன்னியாசத்தின் பரிபாஷை (குரு மொழி. குறியீடு) இதுவே. என்னோடு அன்புடன் கலந்து சிறிது தூரம் சென்றால் போதும் அதுவே வெகுதூரப் பயணமாகி விடும்.

மற்றவை வெளிப்படை விசயங்கள். காவி உடை, ஜபமாலை, கமண்டலம், பாதுகை எல்லாமே உன் திடசித்தத்தை வளர்க்க, துணிவைத் திடப்படுத்த, சுயபிரக்ஞையை நிலைநாட்ட. உன் அகமனத்துள் பல விசேடங்கள் நிகழும். உன் அகம் - புறம் சார்ந்தவை மூலம் அன்பு வெள்ளம் பெருகுவதை உணர்வாய்.

**...சொந்த அன்பு மூலமாக நான்**
**ஜீவன் முக்தன் ஆக்கப்பட்டுள்ளேன்!**

என்னை உன்மீது விழவிடு
நீ கல்லாயிருந்தாலும் கவலைப்படாதே
நம் அன்பு வெள்ளம் உன்
கல்லுருவைக் கரைத்துவிடும்,
ஒளிக்கதிர் என்மீது பொழிந்ததும்
நான் சொன்னேன் -
"வஜ்ரம்போல் உறுதி மிக்கவன் நான்
சாசுவத பாஷாணப் பாறையானேன்!"
ஒளிக்கதிர் கூறியது -
"அப்படியா! உன்னைத்தான் தேடி வந்தேன்,
உன்னைக் கொண்டு கோவில் கட்டுவேன்.
உன் அகப்புறத்துச் சோதியால்
தெய்வப் பிரதிமையை வடித்தெடுப்பேன்."
திகைத்து நின்ற என்னை
ஒளிக்கதிர் தழுவிக் குலாவியது!
ஒளிக்கதிர் என்மீது பொழிந்ததும்
நான் சொன்னேன் -
"வஜ்ரம் போல் உறுதி மிக்கவன்நான்
சாசுவதப் பாஷாணப் பாறையானேன்!"

நீயும் என்னிடம் இதைத்தானே சொல்லுகிறாய்? "நான் புராதனமான கடும்பாறை. மாறாதிருக்கவே சபதம் செய்து வந்தவன்." ஆனால் நான் உனக்குச் சொல்லுகிறேன் -

ஒளிக்கதிர் கூறியது-
அப்படியா! உன்னைத்தான் தேடி வந்தேன்,
உன்னைக் கொண்டு கோவில் கட்டுவேன்
உன் அகப்புறத்துச் சோதியால்
தெய்வப் பிரதிமையை வடித்தெடுப்பேன்."
திகைத்து நின்ற என்னை
ஒளிக்கதிர் தழுவிக் குலாவியது!
இந்தக் காவி ஆடைகள்
என் பாசப்பரிவின் அறிவிப்புகள்
உன் அன்பு என்மீது,
என் அன்பு உன் மீது
இஃதொரு பரிவுக்கூட்டுறவு.

**கடைசிக் கேள்வி -**

**எம் உளமார்ந்த அன்பரே!**
**என் வணக்கத்தை ஏற்கவும்,**
**என் கண்ணீர்ப் பெருக்கிற்கு**
**ஒரு புகலிடம் அருள்வீர்!**
**நீங்கள் பாச நேசத்தால்**
**என் வாழ்வை நிரப்பிவிட்டீர்கள்.**
**பிறகும் நான் வறுமை-வெறுமையில்**
**பரிதவிக்கிறேன்.**
**எம் உளமார்ந்த அன்பரே!**
**உறுதுணை நண்பரே!**
**என் சிரம் உங்கள் திருவடிகளில்**
**படையல் வில்வக்கனியாக!**
**நைவேத்ய பிரசாதமாக!**

பெண்மணி ஜெயாவின் கேள்வி அது. பல வருடங்களாக என் பக்தையாக இருந்து வருகிறாள். பக்தை மீராதேவியின் அன்புள்ளம் கொண்டவள். மீராவின் கீதம், களிநடனம் ஜெயாவின் உள்ளத்திலும் உள்ளன. அவை வெளிப்படும்போது மீராவின் அவதாரமாகத் திகழ்வாள். காலம் கனிய வேண்டும். ஒளிக்கதிர் எப்போதும் இறங்கும், இருள் நீங்கும். அவள் மிகத் துணிச்சல்காரி. நிச்சயம் அவள் மெய்ஞான சித்தி பெறுவாள்.

**ஆனால் இருள்சூழ்ந்திருக்கிறதே? எனினும்**
**அதனுள் உன் கருணை இழையோடுகிறது,**
**பகல்-இரவு சூழ்ந்துள்ள இகவாழ்வு-**
**நிழலும் எட்டிப்பார்த்துச் செல்லுகிறது**
**இறுதி மொழியாக, நிதர்சன நாமமாக**
**கருணாலயம்-அருட்பெரும் சோதி**
**இதுதான் மூலமந்திரம்**
**சூக்கும சூத்திர சாரமும் இதுவே**
**ஆழ்நிலை அமிழ்விற்கு இது அன்பு**
**இது நமது வணக்கம்;**
**இருள் மூட்டக் கவிப்பு**
**உன் அன்புக்கேணி எத்தனை ஆழம்!**
**சின்னஞ்சிறு கூப்புகை எமது;**

(இதயத்துள் அன்பு மிக்கவருக்குத் தனது அஞ்ஜலி - கூப்புகை மிகச் சிறியது என்பது புரியும். மேலும், பரமாத்மாவிற்கு எதிரில் நம் கைகள் மிகச் சிறியவையாகிவிடும், கூப்புகை குறுகி விடும்.)

**இருள் மூட்டக் கவிப்பு**
**உன் அன்புக்கேணி எத்தனை ஆழம்!**
**சின்னஞ்சிறு கூப்புகை எமது.**

ஜயா விண்ணப்பித்தாள் -

**"எம் உளமார்ந்த அன்பரே!**
**என் வணக்கத்தை ஏற்கவும்,**
**என் கண்ணீரப் பெருக்கிற்கு**
**ஒரு புகலிடம் அருள்வீர்!**
**நீங்கள் பாச நேசத்தால்**
**என் வாழ்வை நிரப்பி விட்டீர்கள்.**
**பிறகும் நான் வறுமை-வெறுமையில்**
**பரிதவிக்கிறேன்."**

இது ஒரு நிறைவு. இதனால் மனிதன் மேன்மேலும் சூனிய (வெறுமை) நிலையில் ஆழ்கிறான். சூனியத்தின் நிறைவு இது. சூனியம் நிரப்பியது, சூனியம் நிரம்பியது. உன்னை வெறுமையாக்குவதுதான் என் பணி. சூனியவானாக நீ ஆனால் நான் வெற்றி பெற்றேன். நீ (ஆசாபாசங்களால்) நிரம்பியவனாக, நிரப்பப்பட்டவனாக இருந்தால் நான் தோற்றுப் போனேன். மாறாக, நீ முற்றிலும் சூனியவானாகி விட்டால், உன்னுள் எதுவும் இராது - ஏதாவது கோடு, சப்தம், சொல், குப்பை கூளம் எதுவும் இராது. இந்த சூனியத்தில்தான் பரமாத்மா வெளிப்படுவார், கூடி வாழ்வார்.

**ஜயாவிடம் சொல்லுவேன் -**
**நீ போகலாம், ஆத்மா நீ, போ!**
**கன்னி, மணமகள் நீ,**
**தொடரும் தோழி நீ**
**இவர் வழியே மகா சூனியம் தான்**
**உனது தனிவழி,**
**இலட்சியம், மற்ற நீராதாரம்,**
**பதி ஒளிரும் அறவழி -**
**அதுதான் உன்னைப் பராமரிக்கும்**

**ஹே ஆத்மாவே!**
**நீ மேல் நிலையாள், மஹாதேவி!**
**ஹே இணை-பிணையானவளே!**
**நீயே வரித்தவள்**
**மகாசூனியத்துடன் சுழல்களும்**
**நீ படைத்தவை.**

இது வெறுமை, சூனியம் சார்ந்த சுழல்கள். இவற்றை உருவாக்கி ஆடிப்பாடி மகிழ்ச்சியுடன் எல்லாவற்றையும் துறந்து செல். நலமே நிகழும்.

நிகழ்விற்கு ஒரே உபாயம் இழப்பதுதான். நீ முழு சூனியமானதும் பரமாத்மா அவதரித்தார். நீதான் தடை, தளை. பயப்படாதே. வெறுமையானாய், எல்லாம் சித்தித்தது.

மகாராஷ்டிரத்தில் ஒரு கதை நிகழ்வு.

பக்த ஏகநாதர் மற்றொரு பக்தர் நிவிருத்தி நாதருக்கு கடிதம் அனுப்பினார். அதில் எதுவும் எழுதவில்லை, வெற்றுக் காகிதம். நிவிருத்தி நாதர் அதை ஆழ்ந்து கவனத்துடன் படித்துக் கொண்டிருந்தார். படிப்பதற்கு அதில் எதுவும் எழுதப்படவில்லை. அப்படியும் திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டிருந்தார். பக்கத்தில் அமர்ந்திருந்த பக்தை முக்தாபாயிடம் அக்கடிதத்தைக் கொடுத்தார் நிவிருத்தி நாதர். அம்மையாரும் அதை ஆழ்ந்து படித்தாள். கண்ணீர் மல்கப் படித்துக் கொண்டிருந்தாள். நெகிழ்ந்து போனாள்.

எதிரில் இருந்த பக்தர்கள் வியந்து போனார்கள். 'இதென்ன பைத்தியக்காரத்தனம்? முதல் பைத்தியம் ஏகநாதர், வெற்றுத்தாளைக் கடிதமாக அனுப்பினார். இரண்டாவது பைத்தியம் நிவிருத்திநாதர். அதைப் பலமுறை படித்துக் கொண்டிருந்தார். அடுத்த மகாபைத்தியம் முக்தாபாய். அழுது, நெகிழ்ந்து போகிறாள் அதைப் படித்துப் பார்த்து!

இது தத்துவம். எல்லா சாஸ்திர நூல்களும் வெறும் காகிதங்கள்தான். வெற்றுத்தாளைப் படிக்கப் பழகிக் கொண்டால், எல்லாச் சாத்திரங்களையும் படித்துவிடலாம். வேதம், குரான், குருகிரந்தம், பகவத் கீதை, உபநிஷத், பைபிள், தம்மபதம் - இன்னபிற.

வெற்றுத்தாளைப் படிக்கத் தெரிந்தவன் படித்தவன்; எல்லாவற்றையும் படித்தவனாகி விடுகிறான்.

நீ வெற்றுக் காகிதமாகி விடு! இப்படி உன்னை ஆக்கத்தான் முனைந்திருக்கிறேன். உன்னை (உன் தன்மை, ஆளுமை) அழிப்பதில் - இல்லாதவனாக ஆக்குவதில் ஈடுபட்டிருக்கிறேன். ஏனெனில் நீதான் பெருநிகழ்விற்குத் தடை.

**ஆத்மாவாகிய பெண்ணே!**
**கபடமில்லாக் கன்னிப் பெண்ணே!**
**மகாசூன்யத்துடன் சுழல்களை**
**நீ உருவாக்கியிருக்கிறாய்!**

**ஹரி ஓம் தத்ஸத்!**



ஜனகர் கூறினார் -

ப்ரகாசோ மே நிஜம் ரூபம் ந அதிரிக்தோ அஸ்மி அஹம் தத: |
யதா ப்ரகாசதே விச்வம் ததா அஹம் பாஸ ஏவ ஹி || (28)

அஹோ விகல்பிதம் விச்வம் அஞானான் மயி பாஸதே |
ரூப்யம் சுக்தௌ ப்பணீ ரஜ்ஜௌ வாரி சூர்யகரே யதா || (29),

மத்தோ விநிர்கதம் விச்வம் மயி ஏவ லயம் ஏஷ்யதி |
ம்ருதி கும்போ ஜலே வீசி: கனகே கடகம் யதா || (30)

அஹோ அஹம் நமோ மஹ்யம் விநாசோ யஸ்ய நாஸ்தி மே |
ப்ரஹ்மாதி-ஸ்தம்ப பர்யந்தம் ஜகன்னாசே அபி திஷ்டத: || (31)

அஹோ அஹம் நமோ மஹ்யம் ஏகோ அஹம் தேஹவானபி |
க்வசித் ந கந்தா ந ஆகந்தா வ்யாப்த விச்வம் வா ஸ்தித: || (32)

அஹோ அஹம் நமோ மஹ்யம் தக்ஷோ நாஸ்தி இஹ மத்ஸம: |
அஸம்ஸ்ப்ருஸ்ய சரீரேண யேன விச்வம் சிரம் த்ருதம் || (33)

அஹோ அஹம் நமோ மஹ்யம் யஸ்ய மே நாஸ்தி கிஞ்சன |
அதவா யஸ்ய மே ஸர்வம் யத் வாக் - மானஸ கோசரம் || (34)

**த**ர்மம் உய்த்து உணரும் அநுபூதி, எண்ணமோ கருத்தோ இல்லை. கருத்து தர்மத்தின் நிழலாகக்கூட ஆகாது. கருத்துக்களில் உழல்பவர்கள் தர்மத்திலிருந்து விலகியிருப்பவர்கள். வெகு தொலைவில் அவர்களைப் போல வேறு எவரும் இருக்க மாட்டார்கள்.

அன்பு, பாசம், பரிவு ஓர் உளமார்ந்த அநுபவம், பரமாத்மாவும் அப்படித்தான். அநுபவம் முழுமையான ஈடுபாட்டினால்தான் நிகழமுடியும்.

எண்ணம், கருத்து ஏற்படுவது மனிதனின் அற்ப விஷயம். மேற்போக்கான சிந்தனை. இதற்கு ஆழமான அடித்தளமோ, மூலாதாரமோ, மையமோ, சுற்றளவோ கிடையாது. எண்ணம் இல்லாமல் மனிதனால் வாழமுடியும். இப்போது விஞ்ஞான வளர்ச்சியால், சிந்திக்கிற, நினைக்கிற மெஷின் வந்துவிட்டது. இயந்திரத்தாலும் சிந்திக்க முடியும், செயலாற்ற முடியும் என்று நிரூபித்திருக்கிறார்கள். மனிதனுக்குத் தனிச்சிறப்பு, மேன்மை, மகத்துவம் இனி இராது.

அரிஸ்டாட்டில் போன்ற தத்துவ ஞானிகள் மனிதனை 'சிந்திக்கும் பிராணி (மிருகம்)' என்றார்கள். இப்போது அந்த அடைமொழியை, குறியீட்டை மாற்ற வேண்டும். இப்போதெல்லாம் கம்ப்யூட்டர் சிந்திக்கிறது. மனிதனைவிடச் சிறப்பாக, திறமையாக, சிந்திக்கிறது. மனிதன் தவறு செய்வான், கணினி தவறாது.

மனிதனின் மேன்மை அவனுடைய எண்ணங்களில் இல்லை. உய்த்து உணரும் சுய அநுபவத்தில்தான் மனித மேம்பாடு உள்ளது.

எடுத்துக்காட்டாக, நீ ஒரு தின்பண்டத்தைச் சுவைக்கிறாய், சுவை உணர்வு எண்ணமோ கருத்தோ அல்ல. நிகழ்ந்தது; நீ அதில் மூழ்கிப் போனாய்.

நீ மதுபானம் செய்கிறாய். அதன் விளைவு உன் கருத்துருவில் இல்லை. கைகால்கள் உதறும், குடிகாரனை நடக்கும்போது பார்த்திருப்பாயே? சாராயம் அவன் மயிர்க்கால்களிலும் பரவும். நடையில் பார்வையில் பிரதிபலிக்கும், அவன் உட்கார்ந்து எழுவதிலும், எண்ணத்திலும் குடிபோதை பிரதிபலிக்கும்.

தர்மம் (மதம், சமயம்) கள் போன்றது. கள்ளைக் குடித்தவனுக்குத்தான் அதன் சுவை, நசை தெரியும். குடித்தவன் கிறங்குவான், உணர்வான், மகிழ்வான்.

ஜனகருடைய மேற்சொன்ன வாக்குகள் மதுபானக் கிறக்கத்தில் (அது போன்ற நிலையில்) கூறப்பட்டவை. அவ்வாக்குகளை நீ சுவைத்து உணரவேண்டும். இல்லையேல் தவறிவிடுவாய். தாறுமாறாகப் பொருள் கொள்ளுவாய். உன் எண்ணங்களை அவற்றில் புகுத்துவாய்.

கிருஷ்ணன் கீதையில் கூறுகிறாரே, "ஸர்வ தர்மான் பரித்யஜ்ய, மாமேகம் சரணம் வ்ரஜ! (அர்சுனா! எல்லா நெறி முறைகளையும் துறந்துவிட்டு வா, என்னையே புகலாகப் பற்றிக் கொள்.)"

ஆக, கண்ணனின் 'என்னை' எனும் சொல்லுக்கு நீ அர்த்தம் செய்து கொள்ளுவது உன் கருத்துப்படி இருக்கும். கிருஷ்ணனுடைய கருத்தாக இராது. கிருஷ்ணனுக்கு 'நான்-எனது' என்பது இல்லை. இது வெறும் சொலவடை. குறியீடான, சங்கேதச் சொல். இதை நீ பெரிதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. உன் மதிமயக்கத்தால், சங்கேதம் (பிரதீகம்) சத்திய வாக்காக கருதப்படுகிறது. கிருஷ்ணனுக்கு அது நடைமுறை வழக்குச் சொல்; மெய்ஞான போதச் சொல் (பாரமார்த்திகம்) அல்ல.

**எ**வனாவது நம் தேசீயக் கொடி மீது எச்சில் துப்பினால் கலகம் ஏற்படும். போர் மூளும். "நம் தேசீயக் கொடியை அவமதித்து விட்டான்" என்று ஆத்திரப்படுவார்கள். தேசீய மூவண்ணக் கொடி - பாரதமாதாவின் துவஜம் - தாயின் மணிக்கொடி, நம் பாரத நாட்டின் அபிமான அடையாளம். ஆனால், பாரத பூமியில் தினமும் நீ எச்சில் துப்புகிறாய். எவரும் ஆத்திரப்பட்டு, எதிர்ப்பதில்லை, சண்டை போடுவதில்லை. நீ எந்த இடத்தில் துப்பினாலும் அது நம் தேசத்தில் துப்பியதுதான். இத்தேசத்தின் ஒரு சிறு அடையாளம் துணிக்கொடி. இதன் மேல் துப்பினால் பெரும் குற்றம், தண்டிக்காமல் விடமாட்டார்கள்.

மனிதன் அடையாளத்திற்கு அதிக மதிப்பு அளிக்கிறான். அறியாமையால், குருட்டு நம்பிக்கையில் அடையாளங்களோடு கூடி வாழ்ந்து வருகிறான்.

கிருஷ்ணன் 'நான், என்னை, எனது' என்று சொல்லுவதெல்லாம் அடையாளத்திற்காக. உலக வழக்கிற்காக, நடைமுறை வாழ்க்கைக்காக அப்படிப் பேச வேண்டியிருக்கிறது. பேசுகிறார். பேசிய பிறகு அந்த 'நான்' இருப்பதில்லை. கிருஷ்ணனை உன்னிப்பாய், ஊடுருவிப் பார்த்தாயானால் அங்கு, அவரிடம் 'நான்' இல்லை என்பதை அறிவாய். அங்கு பேரமைதி, பரம சூன்னியம் நிலவும். 'நான்' விடுபட்டுப் போகும். அதனால்தான் வெகு எளிதாக, இயல்பாக அவர் "என்னைப் புகலடை! - என்னைச் சரண் அடைவாய்!" என்கிறார்.

நமக்குத் தோன்றும். இது 'அகந்தைமிகு அறிவிப்பு' என்று 'நான்' என்பதற்கு நாம் பொருள் கொண்ட விதம் அப்படி நினைக்க வைக்கும்.

ஜனகருடை இந்த வாக்குகள் உன்னை மேன்மேலும் திகைக்க வைக்கும். இதுபோல் இவ்வுலகில் வேறு எவரும் கூறியதில்லை, ஜனகர் வாக்குகளை நீ முதலில் நம்பாமல் தவிப்பாய்.

ஜனகர் கூறுகிறார், "ஆஹா!... ஆஹா! என்னே என் சுவபாவம் (இயல்பு)! என்னே என் பேரொளி! ஆச்சரியம்! இந்த நான் யார்? நான் என்னையே சரண் அடைகிறேன். என்னையே வணங்குகிறேன், எனக்கே எனது நமஸ்காரம்." இதையெல்லாம் கேட்டு நீ திகைப்பும், கலக்கமும் கொள்ளுவாய்.

ஜனகர் தம் வாக்குகள் வழியே தமக்கே வணக்கம் செலுத்துகிறார். அருகில் எவரும் இல்லை. தொடர்ந்து கூறுகிறார், "நான் ஆச்சரிய மயமானவன்; எனக்கு நமஸ்காரம்... அஹோ அஹம் நமோ மஹ்யம் விநாசோ யஸ்ய நாஸ்தி மே!"

"நான் ஆச்சரியத்தில் மூழ்கியிருக்கிறேன். நானே ஆச்சரிய மயமாகினேன். நான் என்னையே வணங்குகிறேன். எல்லாமே அழிந்து போய்விடும். அப்போதும் நான் மட்டும் எஞ்சியிருப்பேன். பிரும்மா தொடங்கி சிறுதூசு வரையில் சகலமும் அழிந்து விடும். நான் பிழைத்திருப்பேன். எனக்கு வணக்கம்! என் போன்ற திறமையாளன் எவன் இருக்கிறான்? இகவாழ்வில் ஈடுபட்டிருக்கிறேன்; பற்று, ஒட்டு இல்லாமல் - தண்ணீரில் தாமரையைப் போல. எனக்கு நமஸ்காரம்."

மனித இனம் எக்காலத்திலும் இதுபோன்ற பிரகடனத்தைக் கேட்டிருக்காது. "எனக்கே எனது வணக்கம்!" நீ சொல்லலாம், இது செருக்கின் கொடுமுடி. பிறரிடமும் இதை நீ சொல்லுவாய். சொல்லிக் கொள். இது முறையானதே. தன் பாதங்களைத் தானே தொட்டு வணங்குவது - ஆத்மவந்தனம்.

**ரா**மகிருஷ்ண பரமஹம்ஸரின் வாழ்க்கை நிகழ்வு. ஓர் ஓவியர் ராமகிருஷ்ணரின் முழுஉருவ ஓவியத்தை தத்ரூபமாக வரைந்து, அவரிடம் அளித்தார். அதை வாங்கிப் பார்த்த பரமஹம்ஸர், படத்தைக்

கண்களில் ஒற்றிக் கொண்டார், சென்னியில் வைத்து வணங்கினார், ஓவிய உருவின் பாதங்களைத் தொட்டு வணங்கினார். இப்படியே பலமுறை செய்தார். ஓவியர் கூசிப் போனார். அருகில் இருந்த ஒரு பக்தர், "சுவாமி! இதென்ன பைத்தியக்காரத்தனம்? இது உங்கள் திருஉருவப் படம். இதை வணங்கிக் கொண்டிருக்கிறீர்களே?" என்று கேட்டார்.

ராமகிருஷ்ணர் சொன்னார், "நல்லது. நீ நினைவுபடுத்தியது நல்லதாயிற்று. இந்தப்படம் சமாதி பெற்ற நிலையில் நான் இருப்பதைக் காட்டுகிறது. அப்போது வரையப்பட்ட ஓவியமாக இருக்கிறது. இதன் மூலம் எனது நிஜ நிலையை ஜனங்கள் அறிந்து கொள்ளுவார்கள். இது இல்லாது போனால் என்னைப் பைத்தியம் என்றே பிரசாரம் செய்வார்கள். நான் என் சமாதி நிலையை வணங்குகிறேன். இது என் படமல்ல, எனது சமாதி நிலையின் உயிரோவியம்."

ஆனால் இதை எவர் புரிந்து கொள்ளுவார்? எல்லாருமே அவரைப் பைத்தியம் என்றே கூறுவார்கள். சாடுவார்கள், "இந்த மனிதர் தம் படத்தை வணங்குகிறார். சென்னியில் வைத்துப் பூசனை செய்கிறார்! இது பித்துக்குளித்தனம் இல்லையா? அகந்தை, மமதையின் இறுதி எல்லை இது.

ஜனகர் இப்படித்தான் களிப்பு மெதப்பில் பேசுகிறார். அரிய சுவை கிட்டியது. அதில் ஆழ்ந்து போனார். மீராபாய் போல் களிநடம் புரிவார், சைதன்ய மகாபிரபு போல் உள்ளம் உருகப் பாடியிருப்பார், கண்ணபிரானைப் போல் வேய்ங்குழல் இசைத்திருப்பார்.

ஒவ்வொரு மனிதருக்கும் அகமகிழ்வை வெளிப்படுத்த வெவ்வேறு வகை, முறை இருக்கும். ஜனகர், பேரரசர், பண்பட்ட சான்றோர், கற்றுத் தேர்ந்த பேரறிஞர், மேதா விலாசம் நிரம்பியவர். அவர் வாக்குகள் மனித வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை. அவரது அமர அருள் வாக்குகளைப் புரிந்து கொள்ள உன் சிற்றறிவை, கருத்துருவை அகற்றிவிடு!

**சிலகாலம் நாம் செயலாற்ற வேண்டும்**
**உலகாயத நிலை-நிலவரங்கள் எதிரே**
**மனிதனின் வாழ்வோ தரிசன சாளரம்**

**இந்த மானுட புத்தி மிக அற்பம்,**
**இது மனக்களிப்புறும் இனியவைகளை**
**தொடர்ந்து தடுத்துச் சிதறடித்தது**
**ஒவ்வொரு செயலையும் தடுத்தது**
**ஒவ்வொரு சிந்தனையையும் எதிர்த்தது,**
**தன்னைத் திருநிறை செல்வியாகக் கருதியது,**
**கவிஞனின் கற்பனை ஜாலம்**
**வெற்றுச் சொற்களில் சிக்கித்தவிப்பு**
**எதுகை மோனைப் பித்தனின் கலைத்திறன்**
**இத்தகு கவிஜாலமும் ஒரு திறனா?**
**இக்கவிமேதை மனப் போக்குகளை**
**பல வழியிலும் தடுக்கிறது, தொடர்ந்து**
**சிந்தனையை, செயலை எதிர்க்கிறது.**

இதயத்துள் சிந்தனை அலை எழும்போது, அறிவு (புத்தி) அதைத் தடுக்கிறது. எப்போதெல்லாம் கருத்து தீவிரமாகிறதோ புத்தி அப்போதே குறுக்கிட்டு குலைத்து விடுகிறது.

**இந்த புத்தியும் ஒரு பொருட்டா?**
**மனப் போக்குகளை எண்ண அலைகளை**
**பல வழியிலும் பல வகையிலும்**
**தடுக்கிறது, தொடர்ந்து எதிர்க்கிறது!**

நீ இந்தக் கவிபுத்தியை, கவித்துவ மேதகையை ஒதுக்கி வை. கொஞ்ச காலத்திற்கோ, சில கணங்களுக்கோ ஒதுக்கியே வை. அக்கண நேரத்தில் மேகமூட்டம் விலகிவிடும். சூரியதரிசனம் கிட்டும். புத்தியை ஒதுக்காமலிருந்தால் அது உன்னைப் பாதிக்கும். தடுக்கும். தடுப்பது அதன் இயல்பு. குறுக்கிடுவதில் அதற்கு ஆர்வம்.

அறம் இதயம் சார்ந்தது. இதய அலைகளைப் புத்தி பாதிக்கும். மூலப்பொருள் மறைந்து போகும். நீ தாறுமாறாகப் புரிந்து கொள்ளுவாய், பரிதவிப்பாய்.

**தன்னைத் திருநிறை செல்வியாகக் கருதியது**
**கவிஞனின் கற்பனை ஜாலம்.**

உண்மையான, தேர்ந்த கவிஞன் மேதை, ஞானி. அவன் கருத்துப் பொருளில் கவனம் கொண்டிருப்பான்.

**தன்னைத் திருநிறை செல்வியாகக் கருதியது**
**கவிஞனின் கற்பனை ஜாலம்.**

உண்மைக் கவிஞனின் கற்பனையில் பொருள் மலரும், கருத்தின் சுகந்தம் கமழும்.

**வெற்றுச் சொற்களில் சிக்கித் தவிப்பு**
**எதுகை மோனைப் பித்தனின் கலைத்திறன்,**

ஆனால், சொல்லணிப் பித்தன், எதுகைக் கவிஞன் சொற்களில் சிக்கித் தத்தளிக்கிறான். அவன் கவிஞனே இல்லை. எதுகை-மோனைப் பித்து சொற்களை (பொருள் பொருந்தாமல்) கற்களைப் போல அடுக்கிக் கொண்டே போதல்.

புத்தியில் எதுகை-மோனை அடுக்கு; இதயத்துள் பொருள் சூட்சுமம். பொருளின் தொனி அடங்கியிருப்பது. ஆகையால் புத்தியை ஒதுக்கிவிட்டு பொருள் செறிந்த சொற்களைக் கேள். தெளிவாய் ஒலிக்கும், புரியும்.

**மு**ல்லா நசருத்தீன் துணிக்கடைக்குப் போனார். ஒரு துணியைக் காண்பித்து விலையைக் கேட்டார்.

"ஒரு மீட்டர் ஐந்து ரூபாய்" - கடைக்காரன்.

"நாலரை ரூபாய்க்குக் கொடேன்." - முல்லா

"பெரியவரே! நாலரை ரூபாய்க்கு துணி மண்டியில்தான் கிடைக்கும்."

"சரி, எனக்கு வேண்டிய தானிய மண்டியிலிருந்து வாங்கிக் கொள்ளுகிறேன்" - முல்லா.

மனிதன் தனக்கு இசைவாகப் பொருள் கொள்ள முனைகிறான்.

பல்நோயாளி டாக்டரிடம் கேட்டான், "வலி இல்லாமல் பல்லைப் பிடுங்குவீர்களா?"

"சாத்தியமில்லை. நேற்று நடந்தது. ஓர் ஆசாமியின் கடைவாய்ப் பல்லைத் திருகி எடுத்தபோது, என் கை மணிக்கட்டு சுளுக்கிக் கொண்டது. வலி, வேதனை தாளவில்லை." - பல் டாக்டர்.

டாக்டர் வலி டாக்டருக்கு, நோயாளி வலி நோயாளிக்கு.

முல்லா நசருத்தீன் ஓர் இடத்தில் பணி செய்து வந்தார். பணியில் அமர்த்திய முதலாளி முல்லாவைப் பார்த்துக் கேட்டார், "உன்னை வேலைக்கு அமர்த்திய போது நீ சொன்னாய், 'நான் அலுப்பு, களைப்பு இல்லாமல் வேலை செய்து கொண்டிருப்பேன்.' ஆனால் இப்போது, பெரிய மேசையில் காலைப் பரப்பித் தூங்குகிறாயே? இது நீ வேலை செய்கிற இலட்சணமா?"

முல்லா பதில் சொன்னார், "ஐயா! நான் அலுப்பு-களைப்பு இல்லாமல் வேலை செய்யத்தான் இப்படி ஓய்வு எடுக்கிறேன். இது என் பணியாற்றலின் ரகசியம்."

நாம் நமக்கு இசைவாய் அர்த்தம் கற்பித்து வருகிறோம். நாம் நமது அர்த்தம் புரிதலைக் கைவிட்டால்தான் சாத்திரங்களின் சரியான அர்த்தங்களை அறிந்து கொள்ள முடியும். சாத்திரத்தைப் படிக்க, புரிந்து கொள்ள தனித்திறமை வேண்டும். அதொரு கலை. சாத்திரத்தைப் பயில சுயகற்பிதமில்லாத, சுயதீர்மானமற்ற மனம் வேண்டும். சாத்திரத்தைப் பயில விளக்கவுரைக்கு அவசரமில்லை; அதற்கு முன்பாக, கவனமாய் கேட்பது, ஆர்வத்துடன் ரசித்துப் பயில்வது, மகிழ்ச்சியும் நிதானமும் கொள்ளுவது மிக முக்கியம்.

இந்தச் சூக்கும வாக்கினைக் கவனி -

"பிரகாசம் (பேரொளி) என் சொரூபம். நான் அதனிடமிருந்து வேறு பட்டவன் இல்லை. உலகம் பிரகாசமடையும்போது எனது பிரகாசம் மூலம் அது ஒளிபெற்றிருக்கும். என் பிரகாசம்தான் உலகத்தை பிரகாசிக்கச் செய்கிறது."

**"ப்ரகாசோ மே நிஜம் ரூபம், ந அதிரிக்தோ அஸ்மி அஹம் தத:**

இவ்வுலகம் எனது பேரொளியால்தான் பிரகாசமடைகிறது என்கிறார் ஜனகர்.

நிச்சயம் இது 'நான்-எனது' சார்ந்த பிரகாசம் இல்லை. ஜனகர் இப்படிக் கருதவில்லை. இது 'நான்' விலகிய நிலையின் பிரகாச மாயிருக்கும். வெறும் சொல் சார்ந்து பொருள் கொள்ளலாகாது.

சொற்சிலம்பமாடும் எதுகைக் கவியாகி விடாதே. சுயபுத்தியைக் காட்டாதே. நேரிய, நிஜ அர்த்தத்தை ஏற்றுக் கொள். கலப்படம் செய்யாதே.

“பிரகாசம் எனது சொரூபம்” என்று பொதுவான வழக்காறு சார்ந்து சொல்ல வேண்டியிருக்கும். ஏனெனில் பாஷை அஞ்ஞானிகளுடையது. ஞானியருக்கு பாஷை (மொழி) கிடையாது. இதனால்தான், இரு மெய்ஞ்ஞானியர் சந்தித்துக் கொள்ளும்போது ஏதும் பேச மாட்டார்கள். மௌனியாக இருப்பார்கள். ஏன் பேசவேண்டும்? எதைப் பேச வேண்டும்? பேச விஷயம் இல்லை, மொழியும் இல்லை.

ஒரு பழைய நிகழ்வு. சூஃபி ஞானி ஃபரீத், மெய்ஞானி கபீர்தாஸ் இருவரும் சந்தித்தார்கள். இரு நாட்கள் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்து இருந்தார்கள். ஒருவர் கையை மற்றவர் பற்றிக் கொண்டும், நடுநடுவே ஆரத்தழுவிக் கொண்டும் இருந்தார்கள். இருவர் கண்களிலும் கண்ணீர் பெருகியது. ஆழ்ந்த சிந்தனையுடன் நடமாடிக் கொண்டிருந்தார்கள்.

சீடர்கள் பயந்து போனார்கள். அவர்கள் எதிர்பார்த்தார்கள், ‘இருவரும் அளவளாவுவார்கள், ஞானபோத சம்பாஷணை கேட்டுப் பயனடைவோம். ஜன்மம் கடைத்தேறும்.’

ஆனால் அவர்கள் பேசவே இல்லை. இரண்டு நாட்கள் கடந்து விட்டன. சீடர்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். பேசவே இல்லை. கபீர் ஃபரீதைத் தழுவி, தழுதழுப்புடன் விடை கொடுத்தார். திரும்பி வந்த ஃபரீதை சீடர்கள் “என்ன ஆயிற்று? நீங்கள் நிறையப் பேசுவீர்கள். கபீரிடம் ஏதும் பேசவில்லையா? ஏன்?” என்று கேட்டார்கள்.

ஃபரீத் சொன்னார், “எனக்கும் கபீருக்கும் இடையே பேச ஏதும் இல்லை. பேசத்தக்க மொழியும் இல்லை, விஷயமும் இல்லை. எனக்குக் கேட்க, அவருக்குச் சொல்ல ஏதும் இல்லை. மௌனமாகவே வேண்டியவற்றை பேசித் தெரிந்து கொண்டோம்.”

கபீர் சீடர்களிடம் சொன்னார், “மூடர்களே! ஞானியார் ஃபரீதிடம் நான் ஏதாவது பேசினால் அஞ்ஞானி எனக் கருதப்படுவேன்.

பேசுகிறவன் அஞானியாக இருப்பான். பேசாமலேயே காரியம் ஆகுமென்றால், பேசுவானேன்? ஊசியால் ஆகவேண்டிய காரியத்திற்காக வாளை எடுப்பவன் பைத்தியமாகத்தான் இருப்பான். இங்கே அவர் ஏதும் பேசாமல் சென்றார். ஞானதாரை சொரிந்தது. நீ பார்க்கவில்லை? கண்ணீர் மல்கியது. பேருவகை படர்ந்தது. பார்த்தாயா?''

இரு ஞானிகளுக்கிடையே அளவளாவச் சொற்கள் தேவை இல்லை. இரு அஞானிகள் உரையாடும்போது வெறும் சொற்கள்தாம் மலிந்திருக்கும்; பொருள், கருத்து இராது. இரு ஞானிகளுக்கிடையே கருத்தும், பொருளும் மட்டுமே மேம்பட்டிருக்கும்; சொற்கள் இராது. அஞானியும் ஞானியும் உரையாடச் சொற்கள் தேவை, பொருள் பொதிந்த சொற்கள். சம்பாடணத்திற்கு ஞானி-அஞானி இருவரும் தேவை.

இரு அஞானிகள் பேசத் தலைப்பட்டால் வாக்குவாதம், விவாதம் எழும். உரையாடல் இராது. சச்சரவாகும், கைகலப்பாகும், மண்டை உடையும். இரு ஞானிகளிடையே அப்படி இல்லை. சொல்லாடல் தேவை இல்லை. ஆழ்ந்த சிந்தனை உலகில் மானசீக சந்திப்பாக இருக்கும். இருவரும் ஒருங்கிணைந்த பிறகு உரையாடலுக்கு என்ன அவசியம்? வாய்ச்சொல் இல்லாமலேயே கருத்துப் பரிமாற்றம். ஞான தரிசனம் நிகழ்ந்திருக்கிறது. ஞானி பேசத் தயாராகவும், அஞானி கேட்கத் தயாராகவும் இருந்தால்தான் உரையாடல் சாத்தியப்படும்.

சாத்திரங்களின் வசனங்கள் எப்போதும் எதிர்ப்புத் தோற்றம் உள்ளவை - பைராடாக்சிகல். ஏனெனில் சாத்திர வசனங்களைச் சொல்ல இயலாது. இதைச் சொல்ல சிலர் முற்படுகிறார்கள். சில பேரறிவாளிகள் எடுத்துச் சொல்ல முயன்றிருக்கிறார்கள் - சொல்ல முடியாததைச் சொல்லுவதற்கு. நாம் அத்திசையில் கண்திறந்து பார்க்க வேண்டும். இதுகாறும் பார்க்க மறந்து போனோம். அம்மகான்கள், 'நம் கண்பார்வை மேல்நோக்கி எழவேண்டும்' என விரும்பினார்கள். நாமோ தரையில் தவழ்ந்து, ஊர்ந்து கொண்டிருந்தோம்; தலையை உயர்த்தி வான்நோக்கிப் பார்ப்பதே இல்லை. மேலான உயரிய பார்வை எப்படி வரும்?

இஸ்லாமிய ஞானி மன்சூர் அவர்களுக்குத் தூக்கு தண்டனை நிறைவேற்றப்பட்டது. கழுமரத்தின் மேல் அவர் தூக்கில் தொங்கியபோது (உயிர் பிரியும் முன்பு) உரக்கச் சிரித்தார். கீழே குழுமியிருந்தனர் பல்லாயிரம் அன்பர்கள். ஒரு அன்பர் அவரைப் பார்த்துக் கேட்டார், "மன்சூர்! நீங்கள் ஏன் சிரிக்கிறீர்கள்?"

மன்சூர் சொன்னார், "எனக்கு சந்தோஷம். அதனால்தான் சிரிக்கிறேன். தூக்கிலே தொங்க விட்டது நல்லதாயிற்று. நீங்கள் தலைநிமிர்ந்து, கண் உயர்த்தி மேலே பார்க்கிறீர்களே, இந்த மேன்மையைக் கண்டு மகிழ்ந்து சிரிக்கிறேன்."

உயரமான தூக்கு மரத்தில் தொங்கவிடப்பட்டதால் மன்சூரைப் பார்க்க எல்லாரும் தலை உயர்த்திக் கவனிக்க வேண்டியதாயிற்று. இதைத்தான் பாராட்டிப் பேசினார் ஞானி மன்சூர், "என்னைத் தூக்கில் தொங்கும் போது பார்க்க வேண்டி தலை உயர்த்தினீர்களே, இதைத்தான் நான் மகிழ்ந்து பாராட்டுகிறேன். எனக்கு அளிக்கப்பட்ட தூக்குத் தண்டனையால் நல்லதே நிகழ்ந்திருக்கிறது. வான்நோக்கிக் கண் உயர்த்தி என்னைப் பார்க்கும் போது, என்னுள் மறைந்திருக்கும் மகிமை - மகத்துவம் உங்களுக்குப் புலப்பட்டிருக்கும். என் இந்த மரணத்தறுவாயில், மரணப்பிடியில் உங்கள் தாழ்ந்த சிந்தனை விலகி, கணநேரமாவது வான்வெளி நோக்கு எழட்டும். நான் இருப்பதை நீங்கள் தரிசித்துக் கொள்ளுங்கள்!"

**ப்ரகாசமோ மே நிஜம் ரூபம்**

-பேரொளி என் சுயரூபம்.

**ந அதிரிக்தோ அஸ்மி அஹம் தத:**

- நான் அதிலிருந்து வேறுபட்டவன் அல்லன். பேரொளியிலிருந்து பிரிந்திருப்பவன் அல்லன்.

'நான்' உணர்வு விலகிய பிறகுதான், பேரொளியின் ஊற்றுக்காலை எட்ட இயலும். இதை எப்படி எடுத்துச் சொல்லுவது? சொல்லப் புகுந்தால் 'நான்' உணர்வை மேற்கொள்ள வேண்டிவரும்.

"உலகம் பிரகாசமாய் விளங்குவது எனது பேரொளியின் பங்களிப்பால்தான்."

ஜனகர் இதைக் கூறும்போது, ஜனக மகாராஜா எனும் நபராக இருந்து பேசவில்லை. தனிநபர் (வியக்தி) எனும் அலை மறைந்தது. பரந்திருக்கும் கடல் எஞ்சியுள்ளது. இது எல்லோருக்கும் பொது. ஜனகரின் அந்த அறிவிப்பு அவருக்கு மட்டுமல்ல, உனக்கும், எனக்கும், சகலருக்கும் உரியது, சம்பந்தப்பட்டது.

நீ அழிந்துபட்டால், அதன் சுவைஉணர்வு உன்னை உயர்த்தும். நீயும் ஜனகரைப் போல பேரொளி அறிவிப்பை விடுப்பாய். இதைத் தடுக்கவோ அடக்கவே முடியாது.

மன்சூர் ஞானியாருக்குத் தெரியும். தன் அறிவிப்பு தூக்குத் தண்டனையைக் கொணரும் என்று, இருந்தாலும் அவர் பிரகடனம் செய்தார், "அன்லஹக்! (நான்தான் ஆண்டவன்!)" தீவிர முஸ்லிம்கள் இதை ஒப்புக் கொள்ளவில்லை. குருடர்கள் கூட்டம். மன்சூரைச் சரியாகப் பார்க்க, உணர முன்வரவில்லை. அப்படியும் தன் அறிவிப்பைப் பறை சாற்றினார் மன்சூர் அவர்கள். அவருடைய நண்பர்களும் அன்பர்களும் தடுத்துப் பார்த்தார்கள். "இந்தப் பிரகடனம் இப்போதைக்கு வேண்டாம். இது மிக ஆபத்தானது, பெருங்கேடு வரும். வேண்டாம்; பேசாமல் இருங்கள்" என்று தடுத்துப் பார்த்தார்கள். மன்சூருக்கும் தெரியும் பெருங்கேடு வரும் என்று. எனினும் அவரால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. மொட்டு விரிந்து மலரும்போது, மகரந்த சுகந்தம் வெளிப்படத்தான் செய்யும். தீபம் ஏற்றப்பட்டால் ஒளி பரவத்தான் செய்யும். என்ன ஆனாலும் சரி; ஆவது ஆகட்டும்.

கவி ரஹீம் கூறினார் - "மகிழ்ச்சி, நலம், குருதி, இருமல், பகை, பாசம், மதுபானம் - இவைகளை அடக்கி வைக்க முடியாது; எல்லாருக்கும் தெரிந்த விஷயம் இது."

சில விஷயங்கள் அடக்கினாலும் அடங்கியிராது. மதுபானம் செய்துபார். எப்படி மறைக்க முடியும்? பொதுவாக, குடிகாரன் தான் குடித்ததைக் காட்டிக் கொள்ளாமல் இருக்க முயற்சி செய்வான். அப்படியும் அம்பலமாகி விடும். அவனுடைய நடை, பேச்சு, பாவனை காட்டிக் கொடுத்துவிடும். சாமர்த்தியமாக மறைக்கப் பார்ப்பான், அதுவே காட்டிக் கொடுத்துவிடும்.

முல்லா நசருத்தீன் ஓர் இரவு குடித்து விட்டு வீட்டுக்கு வந்தான். மனைவிக்குத் தெரியாமல் மறைக்க வேண்டும் என்று தீர்மானத்துடன் வீட்டுக்குள் நுழைந்தான். 'முதலில் என்ன செய்யலாம்? தொழுகை இடத்தில் உட்கார்ந்து குரான் ஓதவேண்டும். குடிகாரன் குரான் ஓதமாட்டான் இல்லையா? மனைவிக்கு சந்தேகம் வராது; அகப்படாமல் தப்பிக்கலாம்.'

விளக்கை ஏற்றி வைத்து, குரான் படிக்கத் தொடங்கினான். மனைவி வந்து பார்த்தாள். முல்லாவைக் குலுக்கி, "இந்தப் பிதற்றலை நிறுத்திக் கொள். இந்த சூட்கேஸைத் திறந்து வைத்துக் கொண்டு ஏன் முனகிக் கொண்டிருக்கிறாய்?"

குரான் நூலை எடுத்துவர குடிகாரனுக்கு நிதானம் ஏது? கைக்கெட்டிய சூட்கேஸை குரான் புத்தகம் என நினைத்து, திறந்து வைத்துக் கொண்டு ஓதத் தொடங்கி விட்டான்.

மது குடித்ததை மறைத்துவிட முடியாது. சாதாரண மதுபானங்களுக்கே இப்படியானால், 'பிரபு மதிரா' (பரமாத்மா எனும் நறவம்) சுவைத்ததை எப்படி மறைக்க முடியும்? கண்களில் களிப்பொளி வீசும், கிறக்கம் படரும். வாக்குகளில் பரலோக நிழல் படியும். அந்த வாக்குகளில் பல வண்ணங்கள் புலப்படும் - வானவில்லில் புலப்படுவதைப் போல. உரைநடை வசனம் பேசினாலும் செஞ்சொல் கவியின்பம் மீதுறும். மதுர கீதம் இசைப்பது போல் ஒலிக்கும். களிநடனம் புரியும் ஆனந்த நிலை ஏற்படும். ஆக, 'பரமாத்ம மது' அருந்தியதையும் மறைக்க இயலாது.

கவிஞர் ரஹீமின் மேற்சொன்ன வசனம் எதிரொலிக்கும்.

சத்தியம் இயல்பாகவே ஒரு பறைசாற்றல். சத்தியத்தின் நிகழ்வு உன் அகத்துள் உதித்தால் நீ உன்னை அறியாமலேயே பறைசாற்றக் கிளம்பி விடுவாய்.

ஜனகர் அச்சொற்களை சிந்தித்து, ஆய்ந்து கூறவில்லை. யோசித்தாரானால் தயக்கம் ஏற்படும். கூச்சப்படுவார். இப்போதுதான் அஷ்டாவக்கிரரை அழைத்து வந்தார். அஷ்டாவக்கிரர் கொஞ்சம்தான் பேசினார். அப்போதே ஜனகருக்கு சத்திய ஞானபோதம் ஏற்பட்டு விட்டது!

ஜனகர் தயங்கினால், யோசித்தால் இப்படி பேசியிருப்பார், "என் பேச்சைக் கேட்டதும் அஷ்டாவக்கிரர் என்னை அறிவிலி என்று நினைப்பார். பரமஞானியர் கூறவேண்டியதை நான் கூறினால் அப்படித்தான் நினைக்கத் தோன்றும். இவ்வளவு விரைவாக எங்காவது நிகழ்ந்திருக்குமா? நிகழ முடியுமா? இப்போதுதான் அவர் கூறக்கேட்டேன், உடனே நிகழ்ந்து விட்டதே! எப்படி சாத்தியமாகும்? பலகாலம், பல பிறவிகள் காத்திருந்து பெற வேண்டியதை ஒரே கணத்தில் உடனடியாகப் பெற்றேன் என்றால் எவர் நம்புவார்?"

ஜனகர் யோசிக்கவில்லை, பகுத்தறிவைப் புகுத்தவில்லை.

ஜனகரின் அறிவிப்பு தானே நிகழ்ந்தது. இதைத்தான் நான் உனக்கு நினைவு படுத்துகிறேன். ஜனகர் சொன்னார் என்பது தவறு; ஜனகர் மூலமாகச் சொல்ல வைக்கப்பட்டது என்பதுதான் சரி.

ஜனகர் வாக்கு, "ஆச்சரியம்! கற்பிக்கப்பட்ட இந்த உலகினை நான் அறியாமையால் என்னுள் இருப்பதாக நினைத்தேன்; சிப்பியை வெள்ளியாக, கயிற்றைப் பாம்பாக, சூரிய ஒளியினை கானல் நீராகக் கண்டு மயங்குவதைப் போல, நான் மதி மயங்கிப் போனேன்." மூலவாக்கு-

**அஹோ விகல்பிதம் விச்வம் அஞானாத் மயி பாஸதே,**
**ரூப்யம் சுக்தென, ப்பணீ ரஜ்ஜௌ, வாரி சூர்யகரே யதா.**

எப்படிச் சிப்பியில் வெள்ளி மயக்கமோ, இருட்டில் கயிற்றை மிதித்ததும் பாம்பு எனப் பயப் பிராந்தி ஏற்படுகிறதோ, பாலைவனத்தில் நண்பகலில் சூரிய ஒளிக்கதிர்களால் கானல்நீர் தண்ணீர் அலைமோதுவதாகத் தோற்றுகிறதோ, அப்படித்தான் நானும் மதி மயங்கினேன். புத்தி பேதலித்தேன்.

ஆச்சரியம்! இந்நிகழ்வு தீவிரமாக, திடீரென நிகழ்ந்தது. இதை உடனே உணர்ந்து கொண்ட ஜனகரால் தம்மைச் சமாளிக்க முடியவில்லை. வியப்பு வியாபித்தது. சின்னக்குழந்தை ஒன்று திடீரென தேவதைகள் நிரம்பிய சொர்க்கத்திற்கு வந்து சேர்ந்தமாதிரி இருந்தது. அங்குள்ள ஒவ்வொரு பொருளும் மிகக்கவர்ச்சிகரமாக, நம்ப முடியாத அதிசயமாக இருந்தது.

ஞானி தர்தூலியன் சொல்லியிருக்கிறார், "பரமாத்மாவைத் தரிசிக்காத வரையில் அவநம்பிக்கை இருக்கும்; பரமாத்மாவைத் தரிசித்த பிறகும் அவநம்பிக்கை இருக்கும்."

அவருடைய சீடர்கள் கேட்டார்கள், "எங்களுக்குப் புரியவில்லை. நாங்கள் கேள்விப்பட்ட தெல்லாம், பரமாத்மாவைத் தரிசித்ததும் அவநம்பிக்கை விலகி, நம்பிக்கை வருகிறது."

தர்தூலியன் சொன்னார், "தரிசனம் கிட்டாதவரையில் நம்பிக்கை ஏற்படவில்லை. பரமாத்மா எப்படித் தரிசனம் தருவார்? இந்த ஐயம் இருந்தது. பரமாத்ம தரிசனம் சாத்தியமில்லை. அநுபவ நிதரிசனம் இல்லாமல் எப்படி நம்புவது? பரமாத்மாவின் தரிசனம் கிட்டியதும் நம்ப முடியவில்லை. இவ்வளவு பேரானந்தம் எப்படி ஏற்பட முடியும்? இது பிரமையோ? ஆஹா! எத்தகு பேரொளி! இதுதான் அமிர்த நிலையா? இது சாத்தியமா? பரமாத்ம அநுபவம் ஏற்படுவதற்கு முன்பும் நம்பிக்கை ஏற்படுவதில்லை. அது ஏற்பட்ட பிறகும் நம்ப முடியவில்லை.

இதே நிலையில்தான் ஜனகர் இருக்கிறார்.

ஆச்சரியம்! எல்லாமே போலி, கற்பனையில் உருவானவை. நான் மட்டும் சத்தியம், நிஜம். சாட்சியாக உள்ள சத்தியம். மற்றவை யாவும் உருவெளித் தோற்றம், மாயை.

"என்னிடமிருந்து பிறந்த இந்த உலகம் என்னிடமே ஒடுங்கி லயமாகி விடும்-மண்ணிலிருந்து சட்டி, பானைகள், நீரிலிருந்து அலைகள், தங்கத்திலிருந்து நகைகள் உருவாக்கப்படுவதைப் போல. இறுதியில் மூலப்பொருள்களுள் ஐக்கியமாகி விடுவதைப் போல" - ஜனகர் வாக்கு.

வித்தியாசம் தெரிகிறதா? ஜனகரின் பௌதிக உருவம் (மனித உரு) விலகுகிறது, பரமாத்ம சொரூபம் வெளிப்படுகிறது.

**சு**வாமி ராமதீர்த்தர் அமெரிக்கா சென்றார். மனக்களிப்பில் இருப்பவர். குழுமியிருந்த அமெரிக்க அன்பர்களில் ஒருவர் கேட்டார், "சுவாமிஜி! இந்த உலகத்தைப் படைத்தது யார்?"

சமாதி நிலைக்கான தருணமாக இருக்கும். மனக்களிப்பும் கூடியது. "நான்தான்." என்றார். அமெரிக்காவில் போய் இப்படி எவராவது பேசுவாரா? எவன் நம்புவான்?

பாரத தேசத்தில் பேசலாம். பேச்சு எடுபடும். அமெரிக்காவில் சலசலப்புப் பரவியது. அமெரிக்கர்கள் கேட்டார்கள். "நீங்கள் புத்தி சுவாதீனத்தில் தானே இருக்கிறீர்கள்? சூரிய சந்திர நட்சத்திரங்களை நீங்களாக படைத்தீர்கள்?'

"ஆமாம். நான்தான் படைத்தேன்" - ராமதீர்த்தர் நிதானமாக, அழுத்தமாகச் சொன்னார்.

இந்த வாக்குமூலத்தை அறிந்து கொள்ளுவது கடினம். அமெரிக்க அன்பர்கள் புரிந்து கொள்ள முடியாமல் போனதில் ஆச்சரியம் இல்லை. அவர்களது இயல்பு. அந்த வாக்குமூலம் மூலபுருஷர் ராமருடையது. மானுட ராமதீர்த்தருடையது அல்ல. அந்த சமயத்தில் அவர் அலைகள்போல் இல்லாமல் கடல்போல் இருந்தவர். நித்திய சத்தியமான சனாதனதர்ம சொரூபியாகப் பேசியிருக்கிறார். அழியும் மானுட உடல்-உள்ளம் கொண்ட நிலையில் இருந்து பேசவில்லை. விவரிக்க முடியாத, அறியவியலாத சாசுவத சொரூபத்தில் இருந்து பேசியிருக்கிறார். ராமரோடு ராமர்தான் பேசமுடியும். ராமதீர்த்தர் பேசமுடியாது. இது பரம்பொருளின் அறிவிப்பு-பரமாத்ம போதனை.

இதைத் தீர்மானிப்பது, மிகக்கடினம்.

பிறகு அந்த ராமர் (ராமதீர்த்தர்) இந்தியா திரும்பினார். கங்கோத்திரிக்குத் திருத்தல யாத்திரை மேற்கொண்டார். கங்கையில் நீராடினார். இமயமலைச் சிகரத்திலிருந்து கங்கையில் குதித்து விட்டார். முன்னதாக சிறுகடிதம் எழுதி வைத்தார். அதில், "இப்போது ராமன் தன் மூல சத்திய சொரூபத்தோடு இணையப் புறப்பட்டுவிட்டான். அழைப்பு வந்தது. இனி இந்த மனித சரீரத்துடன் வாழ மாட்டேன். விராட் (பரமாத்மா) அழைத்திருக்கிறார்" என்று எழுதியிருந்தார்.

செய்தித்தாள்கள், "ராமதீர்த்தர் தற்கொலை செய்து கொண்டு விட்டார்" என்று செய்தி வெளியிட்டன. சரியான செய்திதான். மலைச்

சிகரத்திலிருந்து கீழே நதியில் குதித்திருக்கிறார் - தற்கொலைதானே? ராமரிடம் கேட்டால், "நீ தற்கொலை செய்து கொண்டாய். நான் செய்ததாக ஏன் சொல்லுகிறாய்? நான் எல்லைத்தடைகளை அகற்றி விராட் சொரூபத்துடன் இணைந்தேன். நான் இடைப்பட்ட தடையை அகற்றினேன். மரிக்கவில்லை. வாழ்ந்திருந்த காலத்தில் தினமும் மரித்தேன். இப்போது விராட்டோடு இணைந்து விட்டேன். வாழ்ந்தது சிற்றருவியின் நீர்ப்பெருக்கு போல இப்போது கடல் கிட்டியது. நான் எல்லைத் தடையைத் தகர்த்தேன். ஆத்மாவைப் பெற்றேன். எல்லைகளைக் கடந்து விட்டேன்" என்று பதிலளிப்பார்.

இதை எப்போதும் நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டும் - எப்போதெல்லாம் உன் அகத்துள் சமாதிநிலை பரிபக்குவம் அடைகிறதோ, சமாதி சித்தி நிலை உன்மேல் மேகமூட்டம் கவிந்து, மழை பொழிகிறதோ, அது உன் அகந்தை, ஆளுமைக்கு உட்பட்டதல்ல. அம்மழை உன்னைக் கடந்து வந்தது, உன்னைவிட முற்காலத்தியது.

இக்கணத்தில் ஜனகருடைய ஆளுமை வெளிப்படுகிறது-

"என்னிடமிருந்து பிறந்த இந்த அகிலம் என்னுள் ஐக்கியமாகி விடும் - மண்ணில் ப்ாண்டம் போல, நீரில் அலைபோல, தங்கத்தில் நகை அணி போல் லயித்து ஒன்றிவிடும்.

**எதுவும் இல்லாதபோது கடவுள் இருந்தார்,**
**ஏதாகவும் இராதபோதும் கடவுள் இருப்பார்,**
**வாழ்வு (இருத்தல்) என்னை மூழ்கடித்தது**
**வாழ்வு இராது போனால் என்ன ஆவேன்?...**

இருத்தல் (வாழ்வு) என்னை மூழ்கடித்துவிட்டது. நாம், 'ராமதீர்த்தர் தற்கொலை செய்து கொண்டார்' என்று சொல்லுவோம். ராமதீர்த்தர் சொல்லுவார், 'இருத்தல்தான் என்னை மூழ்கடித்தது' கங்கையில் விழுந்து மூழ்கி, முதல் முறையாக வாழ்ந்தேன் (இருந்தேன்). இருந்த வரையில் மூழ்கிக் கிடந்தேன்.

**ஏதும் இல்லாதபோது கடவுள் இருந்தார்**
**ஏதாகவும் இராதுபோதும் கடவுள் இருப்பார்.**
**இருத்தல் (வாழ்வு) என்னை மூழ்கடித்தது**

**வாழ்வு இராதுபோனால் என்ன ஆவேன்?**
**கடவுள் ஆவேன்! பரமாத்மா ஆவேன்!**

இது இருத்தலின் எல்லை. இந்த எல்லையை ஆடையைப் போல் களைந்து போடுபவன் சத்திய தரிசனம் பெறுகிறான். சர்ப்பம் தன் மேல்தோலைச் சட்டை உரித்துப் போட்டுவிட்டுப் போவதைப் போல, எல்லை எனும் ஆடையைக் களைந்துவிட்டு முன் செல்லுகிறான் சித்தபுருஷன். இந்த நிகழ்வு ஜனகருக்கு ஏற்பட்டது. அஷ்டாவக்கிரர் 'கைடேலிடிக்' போல உதவியிருப்பார் ஒரு கருவியாக.

விஞ்ஞானிகள் 'கைடேலிடிக் ஏஜென்ட்' என்று சொல்லுவார்கள். அவர்களுடைய விளக்கம், 'சில கூறுகள், கருத்துக்கள் சில நிகழ்வுகளில் நேரிடையாகப் பங்கு பெறுவதில்லை. ஆனால் அக்கூறுகளின் நேரிடைத் தொடர்பு இல்லாமல் அந்நிகழ்வுகள் நிறைவு பெறுவதில்லை. இதுதான் கைடேலிடிக் ஏஜென்ட் எனப்படும்.'

நீ பார்த்திருப்பாய். மழை பொழியும்போது மின்னல் பளிச்சிடுகிறது. விஞ்ஞானிகள் கூறுவர், ஆக்சிஜன், ஹைட்ரோஜன் இரண்டும் இணைந்து தண்ணீர் ஆகிறது. மின்னல் வெளிப்படும்போது தான் தண்ணீர் உருவாகும். மின்னல் இல்லாமல் நீராதார இணைப்பு ஏற்படாது. இந்த இணைப்பிற்கு மின்னல் காலணியாகாது. எனினும் அதன் இருக்கை இன்றியமையாதது. இந்த உடன் இருத்தலுக்குத்தான் விஞ்ஞானிகள் 'கைடேலிடிக் ஏஜென்ட்' என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

குருவும் ஒரு கைடேலிடிக் ஏஜென்ட்தான். அவர் ஏதும் செய்வதில்லை. ஆனால் அவர் அணுக்கம் இல்லாமல் ஏதும் நிகழாது. குரு ஏதும் செய்வதில்லை. எனினும் அவருடைய அணுக்கம் நிகழ்வைச் சாத்தியமாக்குகிறது. குரு அருகில் இருப்பது மட்டும்தான். இதைப் புரிந்து கொள்ள வேண்டும். குருவின் ஊக்க சக்தி உன்னைச் சூழ்ந்திருக்கிறது. இதனால் உனக்கு சக்தி பிறக்கிறது. இது உனது சக்தி. பாடல் எழும். அது உன் பாட்டு. அறிவிப்பு வெளிப்படும். உனது அறிவிப்பு அது. எல்லாமே குருவின் அணுக்கத்தால்தான் ஏற்படும்.

அஷ்டாவக்கிரரின் அணுக்கம் ஜனகருக்கு கைடேலிடிக் ஏஜென்ட் பணியைச் செய்தது. அத்தருணத்தில் அழகான, அமைதியான மேல்நிலையில் ஜனகருக்கு மறந்துபோன தம் இல்லம் ஞாபகம் வந்திருக்கும். கூடவே எல்லையற்ற பரந்தவெளியும், மேன்மைமிகு வாய்ப்புகளும் நினைவு வந்திருக்கும். அஷ்டா வக்கிரரின் ஆத்ம ஞானபேத வாக்கினைக் கேட்டதும் சத்திய அநுபவத்தில் ஆழ்ந்தார். மெய்ஞானச் சுவையை, அதன் எழுச்சியை உணர்ந்தார்.

ஒரு மனிதன் சிங்கக்குட்டியை வளர்த்து வந்தான். கண் திறக்காத நிலையில் அதை எடுத்து வந்தான். அதற்குப் பாலும், பழமும், காயும், ரொட்டியும் கொடுத்து வளர்த்தான். இறைச்சி உணவு கொடுக்கவில்லை. இரத்த ருசி அதற்குத் தெரியாது. சுத்த சைவம்.

ஒருநாள் அந்த மனிதன் நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். கால்விரலில் அடிபட்டு இரத்தம் கசிந்தது. பக்கத்தில் இருந்த சிங்கக்குட்டி அவன் கால்விரலை நக்கியது. இரத்த ருசி கண்டுவிட்டது. தொடர்ந்து ருசித்து நக்கியது. அப்போதே அதனிடம் இயல்பு மாற்றம் ஏற்பட்டு விட்டது. சிங்கக்குட்டி உறுமியது, கர்ச்சிக்கத் துவங்கியது. மறைந்திருந்த - மறந்திருந்த சிங்கத்தன்மை மேலெழுந்தது. மூரிநிமிர்ந்து முழங்கத் துவங்கியது. பாய்ந்து தாக்கவும் தொடங்கியது. இனி வீட்டில் வைத்திருப்பது ஆபத்து என எண்ணி, அதைக் காட்டில் கொண்டு போய் விட்டு வந்தான் அதை வளர்த்த மனிதன். இவ்வளவு காலமாக உறங்கிக் கிடந்த அந்த விலங்கிற்குத் தான் யார் என்பது புலப்பட்டது. உடனடிய மாறுதல் ஆட்கொண்டது.

அஷ்டாவக்கிரரின் அணுக்கத்தில் ஜனகருக்குத் தன் சுயசொரூபம் நினைவு வந்தது. உடனே அவர் கூறிய வாக்குகள் யோசித்து, தீர்மானித்து வெளிப்பட்டவை அல்ல. யோசித்தால் அவரால் அப்படிக் கூறி இருக்க முடியாது. தயக்கம், சுணக்கம் ஏற்பட்டிருக்கும். அப்படிக்கூறுவது சுலபமானதும் இல்லை. அவர் கூறினார்-

"என்னிடமிருந்து பிறந்த இந்த உலகம் என்னுள் லயித்து இணைந்து விடுகிறது. எப்படி மண்ணுக்குள் பாண்டமும், தண்ணீரில்

அலைவீச்சும், தங்கத்துள் அணிநகைளும் சங்கமிக்கின்றனவோ, அப்படி."

அஷ்டாவக்கிரரின் நிழல், அவரது அணுக்கம் ஜனகரிடம் எழுச்சியை ஏற்படுத்தியது. பல பிறவிகளிலும் உறங்கிக் கொண்டிருந்த இளஞ்சிங்கம் விழிப்புற்றுக் கர்ச்சிக்கத் தொடங்கி விட்டது. தன் இயல்பு, ஆளுமை ஞாபகம் வந்தது. ஆத்மஸ்மிருதி (சுயநினைவு) ஏற்பட்டது. இதுதான் 'சத்ஸங்கம்' (நல்லார் உறவு).

கீழை நாடுகளில் (பாரதம் முதலியன) சத்ஸங்கத்திற்கு பெரு மதிப்பு அளிக்கப்படுகிறது. மேலை நாட்டு மொழிகளில் இதற்கு இணையான சொல் கிடையாது. காரணம், சத்ஸங்கத்தின் மதிப்பு அங்கு அறியப்படவில்லை.

**ச**த்ஸங்கம் என்பதன் உட்பொருள் - நீ குருவை அறிந்து கொண்டு, அவரது அணுக்கத்தில் இருந்து கொண்டு ரஸாநுபவம் பெறுகிறாய், அந்த அநுபவம் மேலும் பரவுகிறது. அத்தகைய அணுக்க உறவு. இது எழுப்பும் சிந்தனை அலைகளுள் மூழ்கியதும், உன்னுள் உறைந்திருந்த (மறந்திருந்த) சிந்தனை அலைகள் மேலெழுந்து செயற்படத் தொடங்குகின்றன. நீ அதிர்ந்து விதிர்த்துப் போவாய்.

சத்ஸங்கத்தின் கருத்து, இலக்கு - எவர் உன்னை முந்திக் கொண்டு முன்னேறுகிறாரோ, எவரைப் பார்த்து உனக்கு அறைகூவல் விடுக்கத் தோன்றுகிறதோ, நீயும் அவரை முந்திக் கொண்டு முன்னேற முனைகிறாயோ, பிறகு தங்கியிருக்க, தாமதிக்க இயலாமல் போகிறதோ - அந்த நிலைதான் சத்ஸங்கம்.

சத்ஸங்கத்தில் குருவின் போதனையைவிட அவரது அணுக்கம்தான் முக்கியம், குருவோடு இரண்டறக் கலத்தல், அவருள் நீயும், உன்னுள் அவரும் இலயிப்பதுதான் இலட்சியம்.

குரு சிறப்பான சிந்தனை அலைகளுள் வாழ்ந்து வருகிறார். நீ அவர் பக்கலில் ஒன்றி இருக்கும்போது, அவரது அலைகளால் உன்னுள்ளும் அலைகள் எழுப்பப்படுகின்றன. நீ வேறொரு (திவ்விய) உலகில் புகுந்திருப்பாய். கெஸ்டால்ட் மாறுகிறது. உன் நோக்கும் முறை மாறுகிறது. சிறிது நேரம் குருவின் கண்களால் நோக்குவாய்; குருவின் செவிகளால் கேட்பாய்.

நான் உனக்குச் சொல்ல விரும்புவது இதுதான் - ஜனகர் கூறிய வசனங்கள் அஷ்டாவக்கிரருடையவையே. ஆனால் அஷ்டாவக்கிரர் கூறுவார் "ஜனக உவாச (ஜனகர் கூறினார்)" என்று. நான் நினைவுபடுத்துகிறேன், அது "அஷ்டாவக்ர உவாச (அஷ்டாவக்கிரர் கூறினார்)" என்பதுதான் நிஜம்.

அஷ்டாவக்கிரர் கூறியது, அவரது அணுக்கம் ஜனகரைக் காணாமல் செய்து விட்டது. ஜனகரின் பௌதிக வாழ்வு, வசதி, நிலைமை எல்லாமே வெள்ளப் பெருக்கில் அடித்துச் செல்லப்பட்டு விட்டன. ஜனகர் உருவில் வேறொருவர் பேசியதுதான் இது -

"என்னிடமிருந்து பிறந்த இந்த உலகம் என்னுள் இலயித்துப் போனது - மண்ணுக்குள் பாண்டமும், தண்ணீரில் அலைகளும், தங்கத்தில் நகை அணிகளும் சங்கமிப்பது போல."

**அறியாது வழிதவறித்திரியும் பயணி**
**நான் போய்ச் சேருமிடம் நானே நான்,**
**இவ்வாழ்வால் என்ன கிட்டியது எனக்கு?**
**நான்தான் இகவாழ்விற்குக் கிட்டிய பயன்.**

ஆம், வழிதவறிக் காணாமல் போன பயணி நான்தான். இலக்கு, வழி தெரியாமல் அலைந்து திரிந்தவன். நான்தான் என் இலக்கு என்பதை அறிந்து கொள்ளாமல் அல்லாடினேன்.

சேருமிடம்-இலக்கு புறத்தில் இல்லை. கண்டபடி அலைந்து திரிந்து கொண்டிருந்ததால் அகத்துள் நோக்கத் தவறினேன், மறந்து போனேன். என்னை நான் அறியத் தவறினேன். கண்களை மூடிக்கொண்டு அகத்தினுள் நோக்கியிருக்க வேண்டும். ஆத்மதரிசனம் காண முயலவில்லை. இலக்கைத் தேடி இலக்கு இல்லாப் பாதைகளில் வீணாய் அலைந்து திரிந்தேன்.

**"நான் போய்ச்சேருமிடம் நானே என**
**அறியாது வழிதவறித் திரியும் பயணி நான்,"**

இதுதான் வீண்அலைச்சலுக்குக் காரணம்; இலக்கு அகத்தினுள் இருக்க வெளியே திரிந்து தேடுகிறோம். தீபம் உள்ளே எரிகிறது. ஒளி வெளியே பரவுகிறது; அதை நாடி ஓடுகிறோம்; ஒளிதரும் தீபம் வெளியே எங்கோ இருப்பதாக எண்ணித் தேடுகிறோம். வெளியே

பரவுவது நமது உள் ஒளி, வெளியே மணம் கமழுவது நமது ஆத்ம சுகந்தம். அதன் பிரதிபலிப்பை, எதிரொலிப்பை நாடி, தேடி அலைகிறோம். மூலாதாரத்தை அறிவோம்.

**யூ**னான் நாட்டுக் கதை. நார்சிசஸ் எனும் வாலிபனின் கதை. மிக அழகன். அவனுக்குத் தொல்லை ஏற்பட்டது. ஓர் அழகான ஏரிக்கரையில் உட்கார்ந்திருந்தான். சாந்தி நிலவியது. ஏரியில் அலை பாயவில்லை, தெளிந்த தண்ணீர். அதில் வாலிபன் தன் நிழலைப் பார்த்தான். மோகித்துப் போனான். அதை உவகையுடன் காதலித்தான். காதல் பித்தன் ஆனான். அந்த இடத்தை விட்டு எழவில்லை. பசி, தாகம் மறந்தான். தன் நிழலை லைலாவாகவும், தன்னை மஜ்னுவாகவும் உருவகப்படுத்தி மகிழ்ந்தான். தன் நிழலுருவில் சொக்கிப் போன நார்சிசஸ் அதை அணைத்து மகிழ ஏரியில் இறங்கினான். நீர்ப்பரப்பு கலைந்தது, பிரதிபலித்த நிழலுருவும குலைந்தது. விசனம், ஏக்கம் பாதிக்க கரை ஏறி மரத்தடியில் உட்கார்ந்தான்.

ஏரி நீர் தெளிந்ததும் பிரதிபிம்பம் காட்சி அளித்தது. கண்டு மகிழ்ந்தான். மறுபடியும் ஏரியில் இறங்கி நிழலுருவைத் தழுவிக் கொள்ளத் தொடங்கினான். சிற்றலைகள் எழும்ப அவனது அழகிய பிம்பம் மறைந்து போனது. ஏக்கமும் தவிப்பும் மூண்டது. கரை ஏறி மரத்தடியில் அமர்ந்து கொண்டான். நீர்ப்பரப்பு தெளிந்தது; அவன் உருவம் தென்பட்டது. மறுபடியும் ஏரியில் இறங்கினான், நிழலுருவம் கலைந்து போயிற்று. இப்படியே நிகழ்ந்ததால் அவன் பித்தன் ஆனான், காதல் பித்தன். பல நாட்கள் கடந்ததும், நார்சிசஸ் ஏக்கம், பசி, தாகம் தாக்கவே இறந்து போனான்.

நீ நார்சிசஸ் என்ற பெயரில் ஒரு வகைச் செடியைப் பார்த்திருப்பாய். மேலை நாட்டுச் செடி. நதிக்கரையில் வளரும். அந்த அழகிய வாலிபனின் நினைவாகப் பெயர் சூட்டப்பட்டுள்ள தாவரம் அது. கரையோரம் வளரும் அச்செடி தண்ணீரில் தன் நிழலை, மலர்களைப் பார்த்துக் கொண்டிருக்கும்.

ஒவ்வொரு மனிதனும் நார்சிசஸ் போன்வன். நாம் தேடுவது, நாடுவது நமக்குள் இருக்கிறது. தேடும் இடத்தில் நம் பிரதி பிம்பம், பிரதித்தொனி தான் உள்ளன. அவற்றைத் தேடுவதும், பெறுவதும் வீண். மூலாதாரத்தைத் தேட வேண்டும், எட்ட வேண்டும்.

**"நான் போய்ச் சேருமிடம் நானே என**
**அறியாது வழிதவறித் திரியும் பயணி நான்,**
**இவ்வாழ்வால் எனக்கு என்ன கிட்டியது?**
**நான்தான் இவ்வாழ்விற்குக் கிட்டிய பயன்**
**நான்தான் இவ்வாழ்வின் சாரம்."**

இந்த வாழ்க்கையோடு எனக்கு எந்தப் பங்கும், பந்தமும் இல்லை. வாழ்ககை வழியே எனக்கு எந்தப் பொருளையும் தேட வேண்டாம். நான்தான் என் வாழ்விற்கு அர்த்தம், விளைவு, தீர்மானம், இகலோக வாழ்வின் இறுதி மலர் நான். இறுதிக்கட்டம் நான், கொடுமுடிச் சிகரம் நான்.

. .

**சுய** வாழ்க்கையில் கருது பொருளைத் தேடிக் கொண்டிருப்பவன், தொடர்ந்து பொருளின்மையை (அர்த்தமின்மை)த்தான் உணர்கிறான். இக்காலத்தில் இதுதான் நிகழ்ந்து வருகிறது. அர்த்தம் தொலைந்து போகிறது. சிலர் சொல்லுகிறார்கள், வாழ்க்கையில் எங்கே அர்த்தம் கிட்டுகிறது? இதொரு விபத்து; இதற்குமுன் ஏற்பட்டதில்லை. முன்பெல்லாம் புத்திசாலிகள் இல்லை என்பது இல்லை. பல புத்திமான்கள் தோன்றியிருக்கிறார்கள். ஒப்பற்ற மேதைகள். புத்தர், ஜரதுஷ்டிரர், லாவோத்சு தோன்றியிருக்கிறார்கள், அஷ்டாவக்கிரர் அவ்தரித்திருக்கிறார். பேரறிவாற்றலின் சிகரங்கள் வேறு எவர்? இவர்களின் மேதைமையைவிட மேலானது உள்ளதா? ஆனால் எவரும் வாழ்க்கை அர்த்தமற்றது என்று கூறவில்லை.

தற்கால மேதாவிகள், பகுத்தறிவாளர்கள் - சாத்ரே, காமூ, காஃப்கா முதலானோர் கூறுகிறார்கள், வாழ்க்கைக்கு எந்த அர்த்தமும் (பொருள், நோக்கு) இல்லை. மானுட வாழ்க்கை பொருளற்றது, விதண்டாவாதம், மடையர் கூறும் பிதற்றல் கதை - 'ஏ டேல் டோல்ட் பை ஆன் இடியட்'. மனித வாழ்விற்கு ஒரு அர்த்தமும் இல்லை, மதிப்பும் இல்லை; வீண் பிதற்றல்.

என்ன ஆயிற்று இவர்களுக்கு? திடீரென வாழ்க்கை அர்த்தமற்றதாக, பயனற்றதாகத் தோற்றுவானேன்? நாம் தவறான வழிமுறையில் அர்த்தத்தைத் தேடுகிறோமோ? கிருஷ்ண பிரான் கூறுகிறார், "வாழ்க்கை மகத்தான பொருள் கொண்டது மஹாஸார்த்தகம் ஜீவனம் - பொருளும், பெருமையும், பேரொளியும்

கொண்டது மனித வாழ்வு" என்கிறார். புத்தர் பிரான் கூறுகிறார், "பரம சாந்தி, பரமானந்தம் வாழ்க்கையுள் உள்ளது" அஷ்டாவக்கிரர் கூறுகிறார். "வாழ்க்கையே பரம்பொருள்."

இப்படியெல்லாம் அறுதியிட்டுப் போதித்திருந்த போதிலும் மாறாக-தவறாக விளக்கம் தருகிறார்கள் என்றால், எங்கோ தவறு நிகழ்ந்திருக்கிறது; வழிதவறியிருக்கிறார்கள்; குறிக்கோளை தவறான திசையில் தேடிக்கொண்டிருக்கிறார்கள்.

**"இவ்வாழ்வில் எனக்கு என்ன கிட்டியது?**
**நான்தான் இவ்வாழ்விற்குக் கிட்டிய பயன்,"**

**நா**ம் புறத்திலே தேடினால் வாழ்க்கை பொருளற்றதாக, பயனற்றதாகத் தோன்றும், அகத்தினுள் தேடினால் வாழ்க்கை பொருளுள்ளதாகத் (அர்த்த பூர்ணம்) தெரியவரும். ஏனெனில் நாமே வாழ்க்கையின் பொருள், பயன், இலட்சியம்.

"நான் ஆச்சரியமயமானவன். எனக்கே எனது நமஸ்காரம். பிரும்மா முதல் சிறுபுல் வரையில் சகலமும் பிரளயநாசம் அடைந்த பிறகும், எனக்கு நாசம் (அழிவு) இல்லை. நான் நித்தியன்."

இத்தகைய அற்புத வாக்கு முன்பும் கூறப்படவில்லை, பிறகும் சொல்லப்படவில்லை. இந்த அதிசய வசனத்தின் அற்புதத்தைப் பார் - "எனக்கு நமஸ்காரம்!" நிச்சயமாக, இது ஜனக மகாராஜாவின் வாக்கு, வசனம் இல்லை. ஆத்ம ஞானபோதமாகிய பெருநிகழ்வு ஏற்பட்டது; அதன் வாக்குமூலம் தான் அது. சமாதி லயத்தின், இசைக்குரல் அது -

**அஹோ அஹம் நமோ மஹ்யம்**
**விநாசோ யஸ்ய நாஸ்தி மே!**

எல்லாம் அழியும், நான் அழிய மாட்டேன். எல்லாம் பிறக்கும், இறக்கும். நான் பிறக்கவில்லை, இறக்கவும் இல்லை. நான் ஆச்சரியமானவன். நானே ஆச்சரியம். எனக்கு எனது வணக்கம். சிறுபுல் முதல் படைப்போன் பிரும்மாவரையில் உருவாகிறார்கள், உரு அழிந்து போகிறார்கள். அவர்களது காலம் தொடங்குகிறது, முடிவடைகிறது, எல்லாம் காலப் பிரமாணத்தின் நிகழ்வுகள், அலைகள். நான் சாட்சியாக இருக்கிறேன். அவைகளின் ஜனன-மரணங்களைப்

பார்த்துக் கொண்டிருக்கிறேன். என் கண்ணெதிரில் நிகழ்ந்து கொண்டிருக்கும் நடிப்பு, விளையாட்டு, நாடகங்கள் அவை. என் கண்ணொளியால் அவை புலப்படுகின்றன. இறுதியில் அதனுள் கலந்து விடுகின்றன.

**நீ** ஆலயங்களுள் பிரதிட்டை செய்து பூஜித்து வருகிறாயே அம்மும்மூர்த்திகளும் - பிரும்மா, விஷ்ணு, சிவன் - வந்து போகிறவர்கள், பிறந்து இறந்து போகிறவர்கள். ஒரு ஆத்ம தத்துவம்தான் இந்த உலகில் வந்து போவதில்லை, பிறந்து மரிப்பதில்லை - அது நீதான்! நீ உன்னிடமிருந்து வெளியேறி விடும்போது (முக்தன் ஆகும்போது), நீயே உன் பாதங்களில் பணிந்து வணங்குவாய். அப்போது உனக்கே தெரியவரும், உன்னுள் 'பரமபிரபு' (பரமாத்மா) வீற்றிருக்கிறார். அப்போது உணருவாய், எங்கெல்லாமோ நீ தேடிக் கொண்டிருந்த பரம்பொருள், உன்னுள் உன்னை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார் என்பதைக் காண்பாய்! "நான் ஆச்சரியமயம். எனக்கு நமஸ்காரம்" என்பாய்.

"நான் ஆச்சரியமயம். நான் பௌதிக தேகத்தைப் பெற்றிருந்தாலும் பரம்பொருளுடன் இரண்டறக்கலந்தவன் -அத்துவைதன்"

இரண்டாக (ஆத்மாகவும் சரீரமாகவும்) தோற்றுகிறேன்; இருப்பினும் நான் அத்துவைதன். மேற்பார்வைக்கு அப்படித் தோன்றும். ஒரு மரத்தின் மேல் பல கிளைகள், கொப்புகள் தோன்றினாலும், அடிமரம் ஒன்றுதான். அப்படித்தான் இந்த உலகில் பலப்பல உருவங்கள் தென்படுகின்றன. அவை யாவும் மூலாதாரத்துள் ஒடுங்கி விடும், ஒன்றாகி விடும். அந்த ஒன்றின் பரிணாமங்கள் தாம் பலவகையாய் பரந்து விரிந்துள்ளன.

"நான் ஆச்சரியமயம். எனக்கு நமஸ்காரம். பௌதிக தேகத்தைப் பெற்றிருந்தாலும் நான் அத்துவைதன். நான் எங்கும் போவதில்லை, எங்கிருந்தும் வருவதில்லை. இந்த ஜகத்தையே சூழ்ந்திருக்கிறேன்."

கவனமாய் கேள்! ஜனகர் சொல்லுகிறார், "இந்த ஜகத்தையே சூழ்ந்திருக்கிறேன். நான் ஜகத்தின் குழுமொழி (பரிபாஷை). நான் எல்லைகள் இல்லாதவன். உலகம் என்னுள் ஒடுங்கியிருக்கிறது."

நாம் யாவரும் பொதுவாக உலகத்துள் வசித்து வருகிறோம். இங்கு பெரும் புரட்சி நிகழ்ந்திருக்கிறது. இந்த கெஸ்டால்ட் முழுவதும் மாறியுள்ளது. ஜனகர் கூறிகிறார், "உலகம் என்னுள் ஒடுங்கியிருக்கிறது. வானத்தில் மேகங்கள் எழுகின்றன, பரவுகின்றன, கரைந்து போகின்றன - இதேபோல் யுகங்கள் என்னுள் வருகின்றன. கரைந்து போகின்றன. நான் உரு, வடிவு இல்லாதவன்; சாட்சியாக, காண்பவனாக மட்டும் இருக்கிறவன். சகலத்தையும் சூழ்ந்து அரவணைத்து நிற்கிறேன்."

இந்த நிஜத்தை அறிந்து கொள்! முன்பு குழந்தையாய் இருந்தாய். உன் ஆயுள் வானத்தில் பாலகன் உருவானான். பிறகு இளைஞன் என உருமாற்றம் பெற்றாய். பாலகன் உருவம் மறைந்தது. புதுமேக மூட்டம் கவிந்தது. முதிர்வாலிபன் ஆனாய். குழந்தையாய், பாலகனாய் இருந்த பிராயத்தில் காமவேட்கை எழவில்லை. சொல்லிக் கொடுத்தாலும் புரியாது. யௌவன தசை வந்ததும் கலவிநசை, புணர்ச்சிமோகம் எழுந்தன. ஆட்டம் ஆர்ப்பாட்டம் நிகழ்ந்தது. அவை ஓய்ந்தன. முதுமை புகலாயிற்று.

வாழ்க்கை புது வார்ப்படம் பெற்றது. கிழவன் ஆனாய். வாலிபமுறுக்கு, முனைப்பெல்லாம் போயின. கடந்த வாழ்வியல் லீலைகளை எண்ணிக் கழிவிரக்கம் கொண்டாய். 'நாமா அப்படியெல்லாம் வாழ்ந்தோம்?...!' என வியந்தாய், விசனித்தாய்,' நான் எத்தகு மூடனாய், மூர்க்கனாய், அறிவிலியாய் வாழ்ந்திருக்கிறேன்!'

புத்தி சுவாதீனமுள்ள, மனச்சாட்சியுள்ள ஒவ்வொரு கிழவனும் அப்படித்தான் வருந்தி, விசனிப்பான். 'எந்த விஷயத்திற்கெல்லாம் ஆசைப்பட்டு அலைந்திருக்கிறேன் - நினைக்கும்போது வியப்பாய், வேதனையாய் இருக்கிறது; பணம், பதவி, புகழ், இனக்கவர்ச்சி நாடி, தேடி ஓடியிருக்கிறேன். கனவுகளுக்குப் பின்னால் ஓடியிருக்கிறேன். நானா இப்படியெல்லாம் செய்தேன்? என இப்போது (முதுமையில்) நினைத்து ஆச்சரியம் கழிவிரக்கமும் படுகிறேன்.

**அ**ராபிய மொழியில ஒரு சொலவடை வழங்குகிறது - 'இளைஞன் அழாமல் இருந்தால் அவன் இளைஞன் இல்லை; கிழவன் சிரிக்காமல் இருந்தால் அவன் அசல் கிழவன் இல்லை' அழத்தெரியாதவன், கண்ணீர் விடாதவன் உணர்ச்சிவசப்படாதவனாக

இருப்பான். அவனது வாழ்வில் உணர்ச்சி அலைகள் எழாது, மகிழ்ச்சி இராது. துன்பப்படாதவன், வருந்தத் தெரியாதவன் மானுட வாலிபன் இல்லை. கற்சிலை அவன். இதயம் மலராது, உள்ளம் சிலிர்க்காது.

கிழவன் சிரித்து வாழ வேண்டும். கடந்த தன் வாழ்க்கையை நினைத்து, தன்னைப் பார்த்து, தன் தவறுகளை, கேலிக்கூத்துகளை எண்ணி, தன் பேதைமை-பொல்லாங்குகளை நினைவுபடுத்திக் கொண்டு உலகத்தாரைப் பார்த்துச் சிரிக்க வேண்டும். அப்படிச் சிரிக்காதவன் முதிர்கிழவன் இல்லை. வேடிக்கை பார்ப்பவன் சிரிப்பதைப் போல, தான்கண்ட, கண்டு கொண்டிருக்கிற எதற்கும் மதிப்பு இல்லை என்ற உணர்வுடன் சிரிக்க வேண்டும்.

நீ வாலிபனாயிருந்தாய், பிறகு கிழவன் ஆனாய். மேகங்கள் உருமாறுவதைப் போல உன் பருவ உருவம் மாறிக் கொண் டிருப்பதைக் கவனித்திருக்கிறாயா? இவ்விரு மாற்றங்களுக்கிடையில் உன்னுள் உறைந்திருக்கும் 'நீ' ஒரே நிலையில் இருப்பவன், மாறாதவன்; மாற்றங்களையும் தோற்றங்களையும் கண்டு கொண்டிருக்கும் சாட்சி நீ என்பதை உணர்ந்திருக்கிறாயா? நீ பின்னால் இருந்து சகலத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறாய்.

நீ இரவு அயர்ந்து உறங்கும்போது உன் த்ரஷ்டா (காண்பவன்) கனவுகள் கண்டு கொண்டிருக்கிறான். கனவுகள் தோன்றாதபோது, நீ ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கியிருப்பதை த்ரஷ்டா பார்த்துக் கொண்டிருக்கிறான். காலையில் எழுந்ததும் நீ சொல்லுவாய் "நேற்று இரவு நான் இனிய கனவுகளைக் கண்டேன்; கூடவே அயர்ந்து தூங்கினேன், ஆழ்ந்த சுக நித்திரை" யார் இதைப் பார்த்தது? உனக் யார் சொன்னது? யார் நினைவுபடுத்தியது? நீ ஆழ்ந்து உறங்கும் போது மற்றொருவன் சாட்சியாக இருந்திருக்கிறான். அவன் விழித்திருந்து பார்த்திருக்கிறான். அவன்தான் காலையில் உன் சார்பில் சொல்லியிருக்கிறான்.

காலையில் நீ கண்விழித்து எழுந்த பிறகு வெளி உலகத்தைப் பார்க்கிறாய்: உறவாடுகிறாய். கடைக்காரனாக, நண்பனுக்கு நண்பனாக, விரோதிக்கு விரோதியாக இருக்கிறாய். வீட்டில், மனைவிக்குக் கணவனாக, மகனுக்குத் தந்தையாக, தந்தைக்கு மகனாக, சகோதர-

சகோதரிகளுக்கு சகோதரனாக இப்படிப் பலப்பல உருவங்கள் உனக்கு. இவை யாவும் உன் கண் முன்னால் நிகழ்பவை. இவைகளுக்கு அப்பாலும் பார்க்கிறவன் நீ. பௌதிக வாழ்வில் வெற்றி - தோல்விகளைக் கண்டிருக்கிறாய். உடல்நலத்துடன் இருந்த காலமும் உண்டு. நோயுற்றுக் கிடந்த காலமும் உண்டு. அதிர்ஷ்டம் - துரதிர்ஷ்டம் அநுபவித்தவன் நீ. ஆனால் ஓர் விஷயம் நிச்சயம், மேற்சொன்னவை எல்லாம் வரும் போகும். நீ வருவதும் இல்லை, போவதும் இல்லை; நித்திய தத்துவம் நீ.

"நான் ஆச்சரியமயம். எனக்கு நமஸ்காரம். வளர்ந்து சரியும் சரீரம் கொண்டவனாக இருந்தாலும் நான் அத்துவைதன் (இரண்டறக்கலந்தவன்). நான் எங்கும் போவதில்லை, எங்கிருந்தும் வருவதில்லை,..."

**நக்வசித் கந்தா, நக்வசித் ஆகந்தா,**

வருவதும் போவதும் எனக்கு இல்லை. நிலையாய் இருக்கிறேன். இந்த இருப்பு நிலைதான் என் சொரூபம்.

"... மேலும் இந்த உலகைச் சூழ்ந்து இருக்கிறேன்." இந்த உலகைச் சுற்றி வளைத்தவன் நான்."

இதுதானே உன் உலகம். இந்த உலகம் உன்னுள் இருக்கிறது. நீ இந்த உலகத்தினுள் இல்லை. நீ இவ்வுலகிற்கு ஆண்டான், அடிமை இல்லை. நீ விரும்பும்போது சிறகு விரித்துப் பறந்து போவாய் இந்த உலகைத் துறந்து; நீ விருப்புற்று இவ்வுலகினில் வாழ்கிறாய்; எவருடைய வற்புறுத்தலும் கிடையாது.

இதையெல்லாம் நீ கவனத்தில் வைத்திரு. எந்தத் தங்குதடையும் இராது. நீ கட்டுப்பட்டு இருப்பது உன் விருப்பத்தால். இக்கட்டுப்பாடு பந்தம் பிணைப்பு இல்லை. உன் விருப்பம் போல் செய்ய, ஏற்க உனக்கு உரிமை உள்ளது. ஒன்றை மறவாதே, நீ கர்த்தா (செய்பவன்) இல்லை; போக்தா (அநுபவிப்பன்) இல்லை. இவை உருவகங்கள். நிஜத்தில் நீ சாட்சியானவன். இதுதான் உன் சாசுவத-நித்திய சொரூபம்.

**கீ**ழை நாடுகளில், நம் மகத்தான ஆய்வின் இலக்கு, தேடலின் குறிக்கோள் காலம்-நேரம் கடந்த ஆத்மதத்துவம். காலப்பெருக்கில்

எழுந்தும் அழிந்தும் போவது அதன் பிரதிபிம்பம். காலத்தைத் தாண்டி நிற்கிறது சாட்சியாகிய நித்திய சத்தியம்.

"நான் ஆச்சரியமயம். எனக்கு நமஸ்காரம்! எனக்குச் சமானமான நிபுணன் (தேர்ச்சியும் திறமையும் நிரம்பியவன்) வேறு எவரும் இல்லை."

கேட்டாயா? ஜனகர் சொல்லுகிறார், "எனக்குச் சமானமான நிபுணன் வேறு எவரும் இல்லை!"

"ஏனெனில், சரீரத்தைத் தீண்டாமலேயே நான் இந்த உலகத்தை எப்போதும் தாங்கிக் கொண்டிருக்கிறேன்."

இதுவன்றோ கலைத்திறன்! நிபுணத்துவம்!

**அஹோ அஹம் நமோ மஹ்யம் தக்ஷோ**
**நாஸ்தி இஹ மத்ஸம:**

"எனக்கு ஒப்பான திறமைசாலி, எனக்குச் சமமான நிபுணன் எவன் இருக்கிறான்? மேனியை நான் தொட்டதில்லை."

எக்காலத்திலும் உடலைத் தீண்டியதில்லை. தொடுவதற்கு என்ன அவசியம்? உனது சுவபாவமும் உடலின் இயல்பும் வெவ்வேறு. தீண்ட இயலாது. நீ சாட்சி மட்டுமே. நீ பார்த்துக் கொண்டிருக்கலாம். சரீரம் காணத்தக்கது, காட்சிப் பொருள். நீயும் சரீரமும் சேர முடியாது. நீ சரீரத்தில் ஏறி நில், சரீரம் உன்னுள் நிற்கட்டும்; ஆனால் விலகித்தான் இருக்க வேண்டும். நீண்ட இடைவெளி. தீண்ட முடியாது. நீ, சரீரம்– இருவருக்கும் உள்ள இயல்பு வேறுபாடு அதிகம். நீ இணைய முடியாது. சந்திப்பு சாத்தியமில்லை.

உன்னால் பாலில் தண்ணீரைக் கலக்க முடியும்; தண்ணீரை எண்ணெயில் கலக்க முடியுமா? இரண்டின் தன்மைகளும் வெவ்வேறு. பாலில் நீர் கலந்துவிடும். பால் நீராக இருந்தது - தொண்ணூறு விழுக்காடு நீர். ஆதலால் இரண்டும் கலந்து விடும். எண்ணெயுள் நீரைக் கலக்க இயலாது. சேராது. இரண்டின் தன்மைகளும் வெவ்வேறு.

மேலும், கவனித்திரு! ஒருவேளை விஞானிகள் நீரையும் எண்ணெயையும் கலக்க வழிவகை கண்டுபிடிக்கலாம். இயல்பு மாறுதல்

இருந்தாலும் இரண்டும் திரவப் பொருள்கள். ஆனால் அறிவு-உணர்வு உள்ளதையும் உயிரற்ற ஜடப்பொருளையும் ஒன்றுசேர்க்க (கலப்படம் செய்ய) எந்தச் சாதனமும், வழிமுறையும் கிடையாது. ஜடம் ஒருபொருள், உணர்வு பொருளல்ல. காட்சிப் பொருளையும் காண்பவனையும் ஒன்றாக்க எந்த உபாயமும் இல்லை. பொருளும் உணர்வும் தனித்தனியே இருக்கும், இயங்கும்.

இதனால்தான் ஜனகர் கூறுகிறார், "முற்றிலும் வியப்புற்று நிற்கிறேன். நானே வியப்பாகினேன். என் திறமை மகிமைதான் என்னே! எத்தனையோ செயல்கள் புரிந்திருந்தும் எதிலும் ஒட்டவில்லை. சுகதுக்கங்களை நிறைய அநுபவத்திருக்கிறேன், ஆனால் எதன் பாதிப்பும் என்னுள் புகவில்லை!

**நீ**ர் மேல் நீ எவ்வளவு நேரம் எழுதினாலும் எழுத்து படியாது, எழுத முடியாது. இதே போல நீ சாட்சியாக இருந்து கொண்டு செயல்புரிந்தாலும், சுகம் அநுபவித்தாலும், அவை நிலைக்காது, நீடிக்காது. நீர்மேல் இட்ட கோடுகளைப் போல அழிந்து போகும். உன்னால் நீர்மேல் எழுத முடியாது, எழுதியதும் கோடு தெரியாமல் அப்போதே அழிந்து போகும்.

"எனக்கு சமானமான நிபுணன் எவனும் இல்லை. ஏனெனில், மேனியைத் தீண்டாமலேயே (உறுப்புகள் உள்ள உடலைப் பெறாமலேயே) நான் இவ்வுலகை எல்லாக் காலத்திலும் தாங்கிக் கொண்டிருக்கிறேன்."

**உன் உள்ளத்துள் அவன் குடியிருக்கிறான்**
**உன் உள்ளத்தைவிட்டு அவன் விலகுவதில்லை,**
**உன்னிடமிருந்து அவன் சிறிது பிரிந்துபோனாலும்**
**நீ அவனைப் பிரிந்து போனவனாகக் கருதாதே!**

நாம் உடம்போடு ஒட்டியிருப்பதாகக் கருதிக் கொண்டிருந்தாலும், நம்மால் உடலோடு சேர்ந்திருக்க முடியாது. இதேபோல், நாம் பரமாத்மாவை விட்டு விலகி, பிரிந்திருக்கிறோம் என்று எண்ணினாலும் அது சாத்தியப்படாது; பிரியவே முடியாது. இதை எப்போதும் நினைவில், அறிவில் நிலையாக வைத்திருக்க வேண்டும்.

நீ உடலோடு ஒட்டி வாழலாம் என்று கருதினால், பரமாத்மாவைவிட்டு நீ விலகப் போகிறாய் என்று அர்த்தம். பரமாத்மாவோடு இணைந்திருப்பதை நீ உணரும்போது, அறிந்து கொள்ளுவாய், 'ஆஹா! மகா ஆச்சரியம்! நான் சரீரத்தோடு என்றும் கூடி இருந்ததில்லை!'

**உன் உள்ளத்துள் அவன் குடியிருக்கிறான்**
**உன் உள்ளத்தைவிட்டு அவன் விலகுவதில்லை.**

அந்தப் பரம சத்திய சொருபன் உன் உள்ளத்தில் குடி கொண்டிருக்கிறான். அவன் (பரமாத்மா) உன் உள்ளத்துள் அகத்தவனாகி வசித்து வருகிறான். உன் உள்ளத்தைவிட்டு அவன் விலகுவதில்லை. உன்னிடமிருந்து அவன் சிறிது பிரிந்து போனாலும், நீ அவனைப் பிரிந்து போனவனாகக் கருதிவிடாதே.

பிரிந்து இருப்பதாக உனக்கு அடிக்கடி தோன்றும், அதை மதியாதே. பிரிவதற்கு எந்த முகாந்தரமும் இல்லை, ஏற்பாடும் இல்லை. உலகத்தோடு நீ ஒட்டுறவு கொள்ள எந்த வழிமுறையும் இல்லை. இல்லாததை, இயலாததை செயல்படுத்த நாம் ஜன்ம ஜன்மாந்தரமாக முனைந்து வருகிறோம்.

நீயும் ஒருநாள் விழித்தெழுவாய், நிச்சயம் விழித்தெழுவாய். உறங்குபவன் எத்தனை காலம்தான் உறங்கிக் கொண்டிருப்பான்? தூங்குபவனுக்கு விழித்தெழிவது இயல்பு. அதனால்தான் தூங்கினான். அந்தத் தூக்கமே விழிப்பை உணர்த்துகிறது. விழித்தெழ மாட்டாதவன் எப்படித் தூங்குவான்? ஆக, நீ என்றாவது ஒருநாள் ஆழ்ந்த உறக்கத்திலிருந்து எழத்தான் செய்வாய். அப்போது நீ உணர்வாய் - 'எனக்குச் சமானமான நிபுணன் எவனும் இல்லை. சரீரத்தோடு ஒட்டாமலேயே நான் இந்த ஜகத்தினை எப்போதும் தாங்கிக் கொண்டிருக்கிறேன்!'

**ஜே**ன் சமயக்குரவர் கூறுகிறார், "நதியைக் கடந்து போகிறாய். அப்போது தண்ணீர் உன்மீது படாமல் கவனமாய் பார்த்துக் கொள்." அவர் உனக்கு ஒரு செய்தி கூறுகிறார். அதாவது சாட்சி நிலையில் நீ இருக்க வேண்டும். இதை நீ அறிந்து கொண்டால் நீ நதியைக் கடந்து விடுவாய். தண்ணீர்த் திவலைகள் உடல்மீது பட்டாலும், நீ உணர்வாய்,

'என்னைத் தண்ணீர் தீண்டவில்லை, என் உடலைத்தான் தீண்டியது' நீ சாட்சியாகவே இருந்து வருவாய்.

இவ்வுலக வாழ்வில் சாட்சியாக இயங்கி வரக் கற்றுக் கொள். தொடர்ந்து முயற்சி செய். நடமாடும் போது, "என் உடல் நடக்கிறது, நான் நடக்கவில்லை" என்று நினைத்திரு. உனது ஆளுமை இதுதான் – ' ந க்வசித் கந்த்தா, ந க்வசித் ஆகந்த்தா-நான் எங்கும் போகவில்லை, எங்கிருந்தும் வரவில்லை.' நீ நடமாடும் போது சாட்சியாக, காண்பவனாக (த்ரஷ்டா) ஒதுங்கி இருந்து பார்த்திரு. உணவு உட்கொள்ளும்போது 'இந்த சரீரம் சாப்பிடுகிறது, கையால் கவளத்தை எடுத்து வாயில் இடுகிறது, வாய் மென்று தின்கிறது' என உணர். ஒதுங்கியிருந்து பார்த்துக் கொண்டிரு. காதல் புரியும் போதும், கோபம் கொள்ளும் போதும் சாட்சியாக இருந்து கவனி. ஒருநாள் உன் உள்ளத்துள் அப்பெரும் பிரகடனம் ஒலிக்கும், ஞானமழை பொழியும், அமுத தாரை சொரியும். இது உனக்குள்ள உரிமை, உன் சொரூபத்திற்குச் சித்தித்த உரிமை. நீ என்று விரும்புகிறாயோ, அன்றளவுக்கு இந்த ஆத்ம ஞான சித்திப் பிரகடனத்தை அறிவிக்கலாம்–

"நான் ஆச்சரியமயமானவன். எனக்கு நமஸ்காரம்! எனக்கென எதுவும் இல்லை; அல்லது சகலமும் என்னுடையதே. இவை யாவும் வாக்கிற்கும் மனத்திற்கும் உட்பட்ட விஷயங்கள்."

ஜனகர் இவ்வாறு கூறுகிறார். ஒரு பக்கம், எனக்கென எதுவும் இல்லை, ஏனெனில் நானே இல்லை. நானே எஞ்சாதபோது, என்னது என எது இருக்கும்? மறுபக்கம், சகலமும் என்னுடையதே என்கிறார். நான் எஞ்சியிருக்கும் போது பரமாத்மா எஞ்சியிருக்கிறார் என்று அர்த்தம். சகலமும் அவருடையது. இது முரண்பாடாகத் தோன்றும்– 'எனக்கென எதுவும் இல்லை; எல்லாமே என்னுடையது.'

**அஹோ அஹம் நமோ மஸ்யம் யஸ்ய மே நாஸ்தி கிஞ்சன,**
**அதவா யஸ்ய மே ஸர்வம் யத் வாக்-மானஸ கோசரம்**

எதெல்லாம் தென்படுகிறதோ, கண்கள் முதலான பொறிகளுக்கு இலக்காகின்றனவோ – இவற்றுள் எதுவும் எனது இல்லை. நான் காண்பவன், பார்வையாள்ன் (த்ரஷ்டா); இந்நிலையைப் பெற்றதும்,

எல்லாம் எனது என உணர்ந்தேன். எல்லா இருத்தல்களுக்கும் நான் கேந்திரம் - மைய நிலயம்.

த்ரஷ்டா உன் தனிப்பட்ட ஆளுமை உரு இல்லை, கூட்டமைப்பு உரு (சமஷ்டி ரூபம்). போக்தா (அநுபவிப்பன்), கர்த்தா (செய்பவன்) போல் நாம் தனித்தனியானவர்கள். த்ரஷ்டா (காண்பவன்) போல் ஒன்றியவர்கள், ஒன்றானவர்கள். உன் த்ரஷ்டாவும், என் த்ரஷ்டாவும் வேறு வேறு இல்லை. உன் த்ரஷ்டா, என் த்ரஷ்டா, அஷ்டாவக்கிரரின் த்ரஷ்டா, புத்தருடைய த்ரஷ்டா வெவ்வேறு இல்லை; யாவரும் ஒருவரே.

**எ**ன்றைக்கு நீ த்ரஷ்டா ஆனாயோ, அன்றே நீ புத்தர் ஆனாய், அஷ்டாவக்கிரர் ஆனாய், ஜெகத் குரு' கிருஷ்ணன் ஆனாய் - எல்லாருமாக ஆகிவிட்டாய். உலகின் கேந்திரம் ஆனாய். இங்கு ஒன்று அழிந்தது, அங்கு முழுமை பெற்றது. இழந்தது சொற்பம் - 'நான்' எனும் துளி; பெற்றது முடிவற்ற விரிகடல் (பரமாத்ம சொரூபம்).

இந்த சூத்திரங்கள் ஆத்மபூஜா மந்திரச் சொற்கள். இவை அறிவுறுத்துகின்றன - "நீயே பக்தன், நீயே பகவான். நீயே ஆராதிக்கப்படுபவன், நீயே ஆராதனை செய்பவன். உன் உள்ளத்துள் இருசாராரும் உள்ளனர். இவர்களை இணைத்துக் கொள், அணைத்துக் கொள்!"

இந்த சத்யஞானபோத சூத்திரங்கள் அற்புதமான அரிய தத்துவங்களை உரைக்கின்றன. தன் பாதங்களிலேயே பணிந்து வணங்கு. உன் உள்ளத்துள் நீ மூழ்கிக் கரைந்துபோ, உன் பக்தன், உன் பகவான் (பரமாத்மா) உன்னுள் இருக்கிறார்கள். அங்கே அவர்கள் இணைந்திருக்கட்டும். உன் பக்தனும் பகவானும் ஒன்றாகி விடும்போது புரட்சி நிகழும். இருவரும் மிஞ்சியிருக்க மாட்டார்கள். எஞ்சியிருப்பது உருவற்ற, இயல்பு (குணம்) அற்ற, எல்லையற்ற, காலகதி இல்லாத, நேரம், போது அழிந்த, உறைவிடமற்ற அத்வைத தத்துவம் மட்டுமே.

இந்த அத்வைத நிலையின் முதல் வெளிப்பாடு தியானம் எனப்படும். அத்வைதம் நிலைபெறத் துவங்கும்குணத்தை 'ஸவிகல்ப (மாறக்கூடிய) சமாதி' என்பர். அத்வைத நிலை சாசுவத இருப்பைப்

பெற்றதும், பிரியாத, பிரிக்க முடியாத நிலைப்பாடு ஏற்பட்டதும், அந்நிலையை 'நிர்விகல்ப (மாறாத) சமாதி' என்பர்.

**இ**து இருவிதமாக நிகழ்கிறது. ஞானபோதம் ஏற்பட்டதும் நிகழும் - ஜனகருக்கு ஏற்பட்டது போல். உணர்ந்து கொண்டால் போதும். இதற்கு மேலான பேரறிவு (பிரக்ஞா), தீவிரம், வேகம் வேண்டும். திட்ப நுட்பமான உள்ளுணர்வு (சைதன்யம்) வேண்டும். இதன்மூலம் அந்நிகழ்வு கணநேரத்தில் ஏற்பட்டுவிடும். இவ்வாறு உடனடியாக நிகழ்ந்து விட்டால் நல்லது. நிகழாமலிருந்தால் மேற்சொன்ன (அஷ்டாவக்கிரரின்) சூத்திரங்களைத் தொடர்ந்து எண்ணிக் கொண்டு இராதே. இதனால் பயன் இல்லை, நிகழ்வு நேராது. இந்த சூத்திரங்கள் மகத்தானவை. கேட்டு அறிந்ததுமே ஞான போத நிகழ்வு ஏற்பட்டுவிடும். இல்லையேல், நீ கவனமாய் செவி மடுத்திருக்க மாட்டாய். மறுபடியும் கேட்க முடியாது. திரும்பக் கூறவும் இயலாது. திரும்பக் கூறுவதால் உன் மூளையில் அறிவுக்கூர்மை எழாது. அழிந்து போகும்.

இச்சிக்கலுக்கு ஒரே தீர்வு - நீ முறையாய் தியான போகத்தில் ஈடுபட வேண்டும். தியான முதிர்வால் ஸவிகல்ப சமாதி நிலையை எட்டுவாய். அதன் துணையுடன் நிர்விகல்ப சமாதியை எட்டுவாய். படிகளைக் கடந்து வராமல் தாவிக் குதிக்கவும் முடியும். சிலருக்கு இது நிகழ்ந்திருக்கிறது. இல்லையேல் படிப்படியாக படிகளைக் கடந்துதான் வரவேண்டும். எல்லா ஆச்சரியங்களும் நிகழக்கூடியவையே. ஏனெனில் நீ ஆச்சரியங்களுக்கெல்லாம் ஆச்சரியமானவன்.

ஆகையால் இந்த விஷயத்தில் நிகழ முடியாதது எதுவும் இல்லை. என் போதனையைக் கேட்கும்போது எவருக்காவது படிகளைத் தாண்டிக் குதிக்க முடிந்திருக்கலாம். உனக்கு முடியாது போனால் காரணம் உள்ளது. நீ குறுக்கிடாதே; நீ உன்னை ஒதுக்கி வைத்திரு; காலணியை, ஆடையைக் கழற்றி வைப்பது போல், உன் புத்தியை ஒதுக்கிவை. சுத்த சைதன்ய உணர்வுடன் என் எதிரே நில், தாவிக்குதிக்கலாம் - ஒவ்வொரு படியாகக் கடந்து வரவேண்டாம். இப்படித்தான் ஜனகருக்கு நிகழ்ந்தது; உனக்கும் நிகழலாம். நிகழ்ந்தால் சரி. இல்லையேல் வேறு வழிவகை (உபாயம்) இல்லை. "என்ன மாற்று ஏற்பாடு செய்வீர்கள்?" என்று என்னிடம் கேட்காதே. எந்த மாற்று

ஏற்பாடும் உதவாது. வேறு வழி? பதஞ்சலியிடம் போ, வழிகாட்டுவார். மகாவீரர், புத்தர் வழிகாட்டக்கூடும். அஷ்டாவக்கிரரிடம் போகாதே. அவரிடம் வேறு உபாயம், வழிமுறை உனக்கு வேண்டியது கிடையாது.

இதனால்தான் அஷ்டாவக்கிரரின் மகாகீதை இருட்டடிப்புக்கு உள்ளாகியிருக்கிறது. இவ்வளவு வேகம், தீவிரம், மேதைமை மிகமிக அரிது. பல பிறவிகளில் தீவிர ஈடுபாட்டுடன் முனைந்து முயன்று சாதனை செய்ததால் தான் கணநேரத்தில் அந்நிகழ்வு சம்பவிக்கிறது. நூறு பேர்களுள் ஒரு சிலருக்கு சித்திக்கிறது. மனித இன வரலாற்றில் பல பதிவுகள் உள்ளன - அற்பசொற்ப நிகழ்வால் கூட பெரும் புரட்சி நிகழ்ந்துள்ளது.

**நா**ன் கேள்விப்பட்டிருக்கிறேன். வங்காளத்தில் ஒரு மெய்யடியார் இருந்தார். கோர்ட்டில் ஹெட் கிளார்க். ஓய்வு பெற்றவர், பெயர் ராஜாபாபு. வங்காளி. அறுபது வயதைத் தாண்டியவர். ஒருநாள் விடிகாலையில் வழக்கம்போல் உலாவச் சென்றார் பொழுது புலரவில்லை. ஒரு வீட்டில் வாயிற் கதவு தாளிட்டிருந்தது. உள்ளேயிருந்து ஒரு பெண் குரல் கேட்டது. மகனையோ, மைத்துனனையோ எழுப்பிக் கொண்டிருந்தாள், "ராஜாபாபு! எழுந்திரு! நேரமாகி விட்டது. தூங்கினது போதும்."

வெளியே தெருவில் ராஜாபாபு கைத்தடியை சுழற்றிக் கொண்டு நடந்து வந்தார்.

தொடர்ந்து அந்தப் பெண் குரல் கேட்டது, "ராஜாபாபு! எழுந்திரு! நேரமாகிவிட்டது." அருணோதயம் ஆகியிருந்தது. உதயசூரியன் எழப் போகிறான். புள்ளினங்கள் இசைத்துக் கொண்டு பறந்தன. இயற்கை விழிப்புறத் துவங்கியது. அக்கணத்தில் ராஜாபாபுவின் வாழ்வில் அது நிகழ்ந்தது - ஆத்ம மெய்ஞான போதம். அப்பெண் யாரை எழுப்பினாளோ, இங்கு முதியஞானிக்கு அது நிகழ்ந்து விட்டது! தெருவில் ராஜா பாபு என்கிற முதியவர் போகிறார் என்பதை அப்பெண் அறியமாட்டாள்.

ராஜாபாபு வீடு திரும்பவில்லை. நடந்து போய்க் கொண்டிருந்தார். காட்டிற்கு வந்து சேர்ந்தார். அவருடைய வீட்டார்

தேடி அலைந்து அவர் தங்கியிருக்கும் காட்டிற்கு வந்தார்கள். "என்ன ஆயிற்று உங்களுக்கு? ஏன் இங்கு வந்தீர்கள்?" என்று கேட்டார்கள்.

ராஜாபாபு சிரித்தார். "எனக்கு ஆகிவிட்டது. நீங்கள் போகலாம்" என்றார்.

"ஏன் இப்படிச் சொல்லுகிறீர்கள்?"

"இனி சொல்லுவதற்கும் கேட்பதற்கும் ஏதும் இல்லை. இப்போதே காலதாமதம் அதிகமாகி விட்டது. இப்போதுதான் புரிந்தது. பல காலமாக உறங்கிக் கிடந்தேன். நல்லகாலம், விடிகாலையில் நானும் புத்தெழுச்சி பெற்று விழித்துக் கொண்டேன். யாரோ ஓர் அம்மணி எழுப்பி விட்டாள். பிரக்ஞை எழுந்தது."

அந்தப் பெண்மணி அஷ்டாவக்கிரர் இல்லை. அவளே முழுமையாக விழித்தெழவில்லை. அவரை எழுப்பி உயர்த்தி விட்டாள். சிலபோது இப்படி நிகழும். உன் பேரறிவு, மேதாவிலாசம் ஆழங்கால் பட்டிருந்தால், உன் பிரக்ஞை எனும் கனி பழுத்திருந்தால், காற்று வீச்சு இலேசாக இருந்தாலும் போதும், கீழே (உன் இதயத்துள்) விழுந்துவிடும். காற்று வீசாவிட்டாலும் பழுத்தகனி உதிர்ந்து விழும். இப்படி அரிதாகத்தான் நிகழும். நிகழாதுபோனால் நீ சுணங்கிப் போகாதே. நம்பிக்கை இழக்காதே. உடனடியாக எதிர்பாராமல் நிகழவில்லை என்றால் முறையாக, படிப்படியாக நிகழும். எதிர்பாராத உடனடி நிகழ்வு விதிவிலக்காக, எப்போதாவது ஏற்படும். இதனால் அஷ்டாவக்கிர கீதையும் விதிவிலக்காகும். இதில் விதிமுறைக்கு இடமில்லை.

**ஜ**ப்பான் நாட்டில் ஜேன் சமய மரபிற்கு இரு பிரிவுகள், பரம்பரைகள். ஒன்று 'ஸடன் என்லைட்டென்மென்ட்' (அக்கணமே ஞான போதனை). அவர்கள் கூறுவதைத்தான் அஷ்டாவக்கிரரும் கூறியிருக்கிறார். அந்த ஜேன் சமயக்குரு எதுவும் உபதேசித்துக் கற்றுக் கொடுப்பதில்லை. வந்து பீடத்தில் அமர்வார். உவகை மேலிட்டால் ஏதாவது பேசுவார். அப்போதே நிகழ்வு ஏற்பட்டு விடும்.

அத்தகைய குரு ஒருவரை ஜப்பான் பேரரசன் அரண்மனைக்கு அழைத்து வந்தான். குரு அங்குள்ள அரியணையில் அமர்ந்து

கொண்டார். சக்கிரவர்த்தி எதிரே தரையில் பக்திப்பணிவுடன் குருவின் ஞான உபதேசத்தை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தான். குரு நாலா பக்கமும் பார்த்தார். எதிரே இருந்த மேசைமீது மூன்று முறை ஓங்கிக் குத்திவிட்டு எழுந்து நின்றார்.

பேரரசன் பிரமித்துப் போனான். 'என்ன இது? ஏன் இப்படிச் செய்தார்?...' புரியாமல் தவித்தான். எதிரே ஒதுங்கி நின்று பார்த்துக் கொண்டிருந்த அமைச்சரிடம் கேட்டான்.

"நான் அந்த ஜென் ஞானியை அறிவேன். இதைவிடச் சிறப்பான உபதேசத்தை இதுவரை அவர் அளித்ததில்லை. புரிதலும் புரியாமையும் சீடரின் அறிவுத்திறனைப் பொறுத்தது" - அமைச்சர்.

"இது உபதேசமா? மேசைமீது மூணுமுறை குத்தினார். எழுந்து போய்விட்டார்! இவ்வளவுதானா! இதிலென்ன உபதேச விளக்கம்?" - மாமன்னன்.

அமைச்சர் விளக்கமளித்தார். "அவர் உங்களை எழுப்பிவிட்டுப் போய்விட்டார். எழுவதும் எழாததும் உங்கள் பொறுப்பு. அவர், 'ராஜாபாபு! பொழுது விடிந்தது. எழுந்திரு!' என அறிவித்து விட்டுச் சென்றிருக்கிறார்.'

அமைச்சர் மேலும் சொன்னார், "நான் இந்த குருவின் பல உபதேச விளக்கங்களைக் கேட்டும், கண்டும் இருக்கிறேன். இன்று இங்கு உபதேசித்ததைப்போல் தீவிரமான, எச்சரிக்கையான உணர்ச்சி ஊட்டக்கூடிய உபதேச விளக்கத்தை வேறெங்கும் அவர் அளித்ததில்லை. நீங்கள் கலக்கம், கவலை கொள்ள வேண்டாம். நான் இந்த ஞானியிடம் பலமுறை உபதேசம் பெற்றிருக்கிறேன். ஆனாலும் விழிப்படையவில்லை. நீங்கள் முதல் முறையாக உபதேசம் பெற்றிருக்கிறீர்கள். தொடர்ந்து பெறுங்கள், ஒருநாள் நிகழ்வு சித்திக்கும்."

எதிர்பாரா நிகழ்வு, திடீரென சம்பவிக்கும். காரிய-காரணத் தொடர்பு இதற்கு இல்லை. இதற்கு உன் கடந்த காலத்தோடு எந்த பந்தமும் இல்லை. நிகழ வேண்டும்போது நிகழ்ந்து விடும். இது விஞ்ஞான சோதனை இல்லை. தண்ணீரை நூறு டிகிரி சூடேற்றி

வெப்பத்தில் வைத்தால் நீராவி கிட்டும். ஞானபோத நிகழ்வு அப்படிப்பட்டது இல்லை. சூடேற்றாமலேயே அது நிகழ்ந்து விடும். இதற்கு விஞ்ஞான விளக்கமும் தர இயலாது.

**அ**ஷ்டாவக்கிரர் விஞ்ஞான பரிசோதனைகளுக்கு அப்பாற்பட்டவர். நீ விஞ்ஞான விதிமுறைகளை நம்புபவனாக இருந்தால் ஆய்வு செய்துபார். அந்த வழியில் போ. அல்லது புத்தரிடம்போ, அஷ்டாங்க யோகம் கிட்டும். பதஞ்சலியிடம் போ! சிறப்பு யோகம் பெறலாம். இதற்கெல்லாம் எதிர்வினைகள் இருக்கும், சமாளி!

அஷ்டாவக்கிரருடையது யோகம் இல்லை. சாங்கிய மதத்தின் சித்தாந்தம், தெளிவுரை.

இதனால்தான் அஷ்டாவக்கிரர் பல ஆர்வலர்களை எழுப்பிவிடவில்லை. ஜனகர் போன்ற அபூர்வ-அரிய ஆர்வலர்கள் விழித்தெழுந்திருக்கலாம். ஜனகர் விழிப்புற்றார். இது போதும். ஜனகர் போல் வேறு எவர் விழிப்புற்றார் என்பது தெரியவில்லை.

புத்தர் பல ஆர்வலர்களை விழிப்படையச் செய்திருக்கிறார். பதஞ்சலியும் அப்படியே. இப்போதும் தொடர்கிறார். அஷ்டாவக்கிரர் ஜனகர் ஒருவரைத்தான் விழித்தெழ வைத்தார். இதையும் அறுதியிட்டுக் கூற முடியவில்லை. விழித்தெழும் திறம், திடம், திட்பம் ஜனகருக்கு இருந்தது. அஷ்டாவக்கிரர் கருவியாக இருந்திருக்கிறார்; காரணமாக இல்லை, நிமித்தமாக இருந்திருக்கிறார்.

ஆக, 'ஸடன் என்லைட்டென்மென்ட்' - அக்கணமே ஞானபோதம், அறிவுணர்வு. பேரறிவுணர்வு (போதி, ஸம்போதி) பெற வழிமுறை (உபாயம்) உள்ளது. குரு ஒரு கருவி (நிமித்தம்.) முயலுவார், நிகழ்ந்தாலும் நிகழும். இதற்கு விஞ்ஞான விளக்கம் இல்லை. அக்கணமே நிகழாது போனால், மனச்சோர்வு அடையாதே, தளர்ந்து போகாதே. உனக்கும் நிகழும், சித்திக்கும். உன் குருவிற்கும் இது பொருந்தும். ஒருவருக்குச் சித்திக்கும், மற்றவருக்குச் சித்திக்காமலிருக்கும். சித்திக்காதவருக்கு தீவிரதாகம், பேரார்வம் வளரும். விதிமுறையை நாடுவார். அதன்மூலம் நிகழ்வு சித்திக்கும்.

வழிமுறை விதிமுறையால் செயல்படும். விதிமுறை இல்லாமல் சித்தி நிகழ்வு விதி விலக்கானது. வழிமுறைகளுக்கு அப்பாற்பட்டது.

கவனமாய் கேள்! நிகழ்ந்தால் நலமே; நிகழாது போனால் நிராசைப்பட்டு முடங்கி விடாதே!

**ஹரி ஓம் தத்ஸத்!**



முதல் கேள்வி :

**நீங்கள் நேற்று கூறினீர்கள், அக்கணமே ஞானபோதம் - ஸடன் என்லைட்டென்மெண்ட் எந்தக் காரிய - காரண வழிமுறைக்கும் கட்டுப்பட்டதல்ல. ஆனால் நடைமுறை வாழ்க்கையில் எதுவும் திடீரென, எதிர்பாராமல் விபத்து போல் நிகழ்வதில்லை. ஆனால் ஆத்மஞான போதம் (ஸம்போதி) போன்ற மகத்தான பெருநிகழ்வு எப்படி நிகழ முடியும்?**

**வா**ழ்க்கையில் எதுவும் காரணமில்லாமல் நிகழாது என்பது உண்மை. ஆனால் இருத்தல் (வாழ்வு) சுயமாகவே காரணமற்றது. ஸம்போதி என்பது பரமாத்மா, ஜீவனம். எனினும், எல்லாமே நிகழக்கூடியவை, பரமாத்மாவைத் தவிர. நிகழ்ந்துள்ளதாக, நிகழ்ந்ததாக, நிகழப் போவதாக எல்லாமே இருக்கும். மனிதன், மரம், மிருகம், பட்சி எல்லாமே நிகழக்கூடியவை. பரமாத்மா மட்டும் நிகழ்வதில்லை. ஆத்ம ஞானபோதம் நிகழ்வதில்லை. அது நிகழ்ச்சி (காரியம்) இல்லை. காரணமில்லாமல் அது நிகழ்வதாயிருந்தால் அது விபத்தாகும். ஸம்போதி (ஆத்ம ஞானபோதம்) நிகழ்வதில்லை. அது உன் சுவபாவம், இயல்பு. அதுவே நீ. அதனால் கணநேரத்தில் அது நிகழ்ந்து விடுகிற; காரணமில்லாமலேயே நிகழக்கூடியது ஆத்ம ஞானபோதம்.

நீ கேட்டாய் அல்லவா? "ஸம்போதி போன்ற மகத்தான பெருநிகழ்வு எப்படி நிகழமுடியும்?"

மகத்தானது என்பதால்தான். அற்ப சொற்பமெல்லாம் காரணத்தோடு நிகழ்கின்றன. சமாதி நிலையும் சாமானிய பொருள்களைப் போல காரணத்தோடு நிகழ்வதானால், சமாதியும்

அற்பம்தான். தண்ணீரை நூறு டிகிரி சூடாக்கிக் கொதிக்க வைத்தால் நீராவியாகிறது. இவ்வாறு சமாதிக்கும் கொதிப்பு ஏற்ற வேண்டுமானால், நூறு டிகிரி தவம்புரி; சமாதி சித்திக்கும். விஞ்ஞான ஆய்வுக்கூடத்தில் உன் சமாதி இடம் பிடிக்கும். பிறகு அறநெறிக்கும் இதே கதிதான். காரண - காரியமாக நிகழ்வதெல்லாம் விஞ்ஞானத்தின் கட்டுப்பாட்டுக்குள் வந்துவிடும்.

**ஸ**ம்போதி காரணமற்றது. ஆகையால், அறநெறி (தர்மம்) அப்படியே இருக்கும். விஞ்ஞானம் அதை ஆட்கொள்ள முடியாது. காரணத்தோடு நிகழ்வதெல்லாம் விஞ்ஞான வசப்பட்டு விடும். இறுதியில் ஒன்று மட்டும் எஞ்சியிருக்கும் அது விஞ்ஞான வசமாகாது. அது இருத்தல் எனும் வாழ்வு நிலை. இருத்தல் காரணமற்றது. விஞ்ஞானம் அதை ஆராயவோ, விளக்கவோ இயலாது. மிகப் பெரிதாக விரிந்து பரந்துள்ளதற்கும் (விராட்) முழுமையானதற்கும் காரணம் எப்படி இருக்க முடியும்? வாழ்வினுள் எல்லாமே உள்ளடங்கி இருக்கும். அதற்கு வெளியே ஏதும் இராது. சமாதியும் அத்தகைய விராட் சொரூபம் கொண்டது.

நீ கேட்டாய், "ஸம்போதி போன்ற மகத்தான பெருநிகழ்வு எப்படி நிகழ முடியும்?"

அது மகத்தானதாக இருப்பதற்கு எதுவும் காரணம் இல்லை. காரணம், வரைமுறைகளுக்கு அது அப்பாற்பட்டது. சமாதி நிகழத்தக்க வரையில் நீ தியாகம், புண்ணியம், தானதருமம் செய்து கொண்டிரு. சமாதி கணிதக் கட்டுப்பாட்டுக்குள் வந்துவிடும்; கணக்குப் பேரேட்டில் இடம் பெறும்; ஆனால் மகத்தானதாக இராது. காரணத்தொடர்பு இல்லாமல் சித்திப்பது சமாதிநிலை.

பக்தன் அருள்பாவிப்பாக (பிரசாத ரூபமாக) நிகழும் நிலையைப் பெறுபவன்: நீ உருவாக்க முடியாது. உன்மீது அருள்மாரி பொழியப்படுகிறது - இயல்பாக, அன்பளிப்பாக, பிரசாதமாக.

பிறகு, முயற்சி, பயிற்சி எல்லாம் செய்கிறோமே, அதன் பிரதிபலன் என்ன? நீ அஷ்டாவக்கிரரைச் சரிவரப் புரிந்து கொண்டாயானால், நீ மேற்கொள்ளும் முயற்சி. பயிற்சி எல்லாமே

வீண். அதற்கெல்லாம் அவசியம் இல்லை. புரிதல் அறிவு போதும். குறிப்பாக, இந்த அறிவு "பரமாத்மா இருக்கிறார், அவரைத் தேட வேண்டாம். பரமாத்மாவோடு நாம் சேர்ந்து இணைந்திருக்கிறோம், இதற்கான முயற்சிகள் வேண்டாம். பரமாத்ம ஒட்டுறவு நிகழ்ந்துவிடும். செயல் முயற்சிகளால் அல்ல; செயற்படாமல் இருப்பதாலே அது நிகழும். செயல் முயற்சிகளால் காலதாமதம் நீடிக்கும். நீ சேர்ந்து இணைய ஆசைப்பட்டால் பிரிவு அதிகமாகும். நீ தேடப் புறப்பட்டால் அது விலகிப்போகும். நீ தேடவே வேண்டாம். விழிப்புற்றுக் கவனி, பரமாத்மா உன்னோடு இருப்பதை அறிவாய். உன் மனக்கோயிலுள் எழுந்தருளியிருக்கிறார். கணநேரம்கூட உன்னை விட்டுப் பிரிய மாட்டார். பிரியாதவர் எப்படி விலகியிருப்பார்? நீ தேடித் திரிவதால்தான் அவரை எட்ட இயலாமல் பரிதவிக்கிறாய்."

நீ மேற்கொள்ளும் செயல்பாடுகளுக்கு விளைவு உண்டு. நீ சோர்ந்து, களைத்து முடங்கிப் போவாய். உன் முயற்சிகள் உனக்கே அலுத்து விடும். அப்போது முயற்சியைக் கைவிடு. அக்கணமே உனக்கு ஞானோதயம் ஏற்படும், 'ச்சை! நான் இவ்வளவு பைத்தியமாகவா இருந்திருக்கிறேன்!...' கழிவிரக்கம் மீதுறும்.

**நா**ன் நேற்று ஒருவருடைய வாழ்க்கை வரலாறு படித்துக் கொண்டிருந்தேன். அந்த மனிதர் எழுதியிருக்கிறார்; அவர் முன்பின் அறியாத ஓர் ஊரில் தங்கியிருந்தார். வெளியே சென்றபோது மொழி தெரியாமல் தவித்துப் போனார். பயம் பற்றிக் கொண்டது. அந்த ஊர்மொழி அவருக்குத் தெரியாது. அவர் மொழியை அறிந்தவர் எவரும் தென்படவில்லை. கவலை, மேலிட்டது. தங்கியிருந்த ஹோட்டல் பெயர், முகவரி, தொலைபேசி எண் எல்லாம் மறந்து போயிற்று. பீதி அதிகரித்தது. யாரிடம் கேட்பது? அவர் மொழி அறிந்தவர் எவராவது கிடைப்பாரா, என்று தேடிப் போனார். எவரும் எதிர்ப்படவில்லை.

அது கீழை நாட்டில் ஒரு சிற்றூர். அவர் அமெரிக்கர். எவராவது வெள்ளைக்காரர் அல்லது ஆங்கிலம் படித்தவர். தென்பட மாட்டாரா என்று தேடி அலைந்தார். எந்தக் கடையிலாவது ஆங்கிலத்தில் பெயர்ப் பலகை தொங்குகிறதா என்றும் தேடினார். வியர்த்து, சோர்ந்து போனார்.

பின்னால் ஒரு போலீஸ் வேன், ஹாரண் அடித்துக் கொண்டு அந்த அமெரிக்கரைப் பின் தொடர்ந்து வந்தது. அமெரிக்கர் கவனிக்கவில்லை. ஹாரன் ஒலி காதில் விழவில்லை. போலீஸ்காரருக்கு அந்த அமெரிக்கர் வழி தவறி தவிப்பது தெரிந்தது. அதனால்தான் அவரைப் பின் தொடர்ந்தார்.

சில நிமிடங்களுக்குப் பிறகு ஹாரன் ஒலி கேட்டு, அமெரிக்கர் திரும்பிப் பார்த்தார்.

திகைத்து நின்று விட்டார். போலீஸ் அதிகாரி அருகில் வந்து, "நீங்கள் சுய உணர்வோடு தான் இருக்கிறீர்களா? ஹாரன் ஒலி எழுப்பியபடி உங்களைத் தொடர்ந்து வருகிறேன். நீங்கள் திரும்பிப் பார்க்கவில்லையே. என்ன ஆயிற்று உங்களுக்கு? ஏதாவது பிரச்சினையா? வழி தவறித் திண்டாடுகிறீர்களா? எங்கள் வண்டியில் ஏறுங்கள். உங்களைக் கொண்டு விடுகிறேன்." என்றார்.

அமெரிக்கர் நிம்மதி அடைந்தார்.

"நல்ல கூத்து இது! என் மொழி தெரிந்தவர் எனக்கு வழிகாட்டுபவர் எவராவது கிடைப்பாரா என்றுதான் அலைந்து கொண்டிருந்தேன். உதவுபவர் என் பின்னாலேயே வருகிறார், நான் திக்குதிசை தெரியாமல் தேடிக் கொண்டிருக்கிறேன்! மனஉளைச்சலில் உங்கள் ஹாரன் ஒலி காதில் விழவில்லை" - அமெரிக்கர்.

நீ யாரைத் தேடுகிறாயோ, அவர் உனக்குப் பின்னால் வந்து கொண்டிருக்கிறார் - அவர்தான் பரமாத்மா. அவர் ஹாரன் அடிக்க மாட்டார், கூவி அழைக்க மாட்டார். அப்படிச் செய்வது உன் சுதந்திரத்தைப் பாதிப்பதாகும். உன் காதருகில் மெல்லக் கிசுகிசுப்பார், தணிந்த குரலில் சேதி சொல்லுவார். நீதான் வெளிப்புறக் கூச்சலில் மூழ்கியிருக்கிறாயே; தேடி அலைவதில் மும்முரமாக இருக்கிறாயே. அந்தக் கிசுகிசுப்பு உன் காதில் எப்படி விழும்? உன் மனசு ஊகம், கற்பனை, உளைச்சல்களில் ஆழ்ந்திருக்கிறதே. அந்தப் பாச அழைப்பு உன் காதில் விழாது.

**சு**வாமி ராமதீர்த்தர் சீடர்களுக்கு உபதேசிக்கும் போது ஒரு கதை கூறினார்.

ஓர் அன்பர் (கணவன்) பொருளீட்ட வேண்டி தொலைதூர நாட்டிற்குச் சென்றார். பல மாதங்கள் கடந்தும் திரும்பி வரவில்லை. இங்கு காதலி (மனைவி) வழிமேல் விழித்துக் காத்திருக்கிறாள். காலம் கடந்து போகிறது. காதலன் வரவில்லை. அவனிடமிருந்து கடிதம் வந்து கொண்டிருக்கிறது. சீக்கிரம் திரும்பி வருவதாகத் தொடர்ந்து எழுதுகிறான். வருடங்கள் கடந்தன. அன்பன் வரவில்லை.

காதலி கவலைப்பட்டாள், பயந்து போனாள். காத்திருப்பதற்கும் ஒரு எல்லை உண்டு. அவள் அன்பன் இருக்கும் வெளியூரை நோக்கிச் சென்றாள். அங்கு, விசாரித்துக் கொண்டு அன்பன் இருப்பிடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். வசதியான வீடு. கதவு திறந்திருந்தது. மாலைப்பொழுது, பகலவன் மறைந்து கொண்டிருந்தான். வாசல் கதவுப் பக்கம் நின்று ஆவலுடன் எட்டிப் பார்த்தாள் காதலி. பல ஆண்டுகளுக்குப் பிறகு சந்திக்கப் போகிறாள்.

அன்பன் கூடத்தில் மேசை எதிரே அமர்ந்து தலைகுனிந்து எழுதிக் கொண்டிருந்தான். காதலி கதவருகில் நின்று காத்திருந்தாள். அன்பன் தலை நிமிர்ந்து பார்க்கும் வரையில் காத்திருக்கலாம் என எண்ணினாள்.

'தன்னை மறந்து என்ன எழுதிக் கொண்டிருக்கிறார்? கண்கலங்கி நீர் வழிகிறது! எழுதிக் கொண்டே இருக்கிறார்!' ஒரு மணிநேரம் கடந்தது. அன்பன் பேனாவை மேசையில் வைத்துவிட்டு தலை நிமிர்ந்தான்.

எதிரே காதலி நின்று கொண்டிருக்கிறாள்! பதறிப் போனான். அவன் அவளுக்குத்தான் நீண்ட கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். எதிரே காதலி நிற்பதை நம்ப முடியவில்லை. 'கனவு காண்கிறேனோ? காதலியையே நினைத்துக் கொண்டிருந்ததால் அவளது உருவெளித் தோற்றம் தென்படுகிறதோ?...' கண்ணீரைத் துடைத்துக் கொண்டு எதிரிலிருந்த காதலியைக் கனிவோடு பார்த்தான்.

காதலி அவனைப் பார்த்துப் பரிவோடு சிரித்தாள். "என்ன சிந்தனை? நான் இங்கு வந்து நிற்பது கனவாக இருக்கிறதா? மனப்பிரமை என்று எண்ணமா?" - கேட்டவாறு அருகே வந்தான்.

அன்பன் விதிர்த்துப் போனான். "நீ எப்படி இங்கே வந்தாய்? உனக்குத்தான் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறேன். பைத்தியக்காரி! என்னைக் கூப்பிட வேண்டியதுதானே; நீ வந்து எதிரே நிற்கிறாய், உன்னைக் கவனிக்காமல் உனக்கு ஆதுரத்துடன் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறேன்! நல்ல கூத்து!"

பரமாத்மா எதிரே இருக்கிறார். நாம் அவரை நாடி, வேண்டி பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறோம், "பிரபு! நீ எங்கே இருக்கிறாய்? எனக்குத் தரிசனம் தந்து அருள் புரி!" கண்ணீர் மல்க வேண்டுகிறோம். கண்ணீர்த்திரை மறைக்கிறது. நாம் தேடுபவரை, வேண்டுபவரை எதிரே இருந்தும் காணப்பெறவில்லை. நாம் தேடுவதால்தான் அவரை இழந்து கொண்டிருக்கிறோம்.

**அ**ஷ்டாவக்கிரரின் போதனை மிகத் தெளிவானது. அவர் கூறுகிறார், "படிப்பு - எழுத்தெல்லாம் வேண்டாம்; எந்த செயல்பாடும் வேண்டாம், நிறுத்திக்கொள்!".

சமாதி நிகழ்வதில்லை. சமாதி செயற்பாடு என்றால் காரிய-காரணித் தொடர்பால் நிகழும். அப்போது கடைச்சரக்காகி விடும். சமாதி பரிசுத்தமானது, பஜாரில் விலை போவதில்லை.

உன் பஜார் மூளை பரமாத்மாவைக்கூட கடைத்தெருச் சரக்காக்கி வைக்கிறது. வியாபாரப் பொருளாக்கினால் பரமாத்மா கிட்டுவிடுவார் என நினைக்கிறாய், 'புண்ணியம் செய்தால் பரமாத்மா கிட்டுவார்.' நீ போற்றும் சாமியார்களும் இதைத்தான் உனக்கு உபதேசித்து வருகிறார்கள், "ஏதாவது செய்தால்தான், கொடுத்தால்தான் பரமாத்மா கிட்டுவார், இல்லாவிட்டால் கிட்டமாட்டார். அவரை விலை கொடுத்து வாங்க வேண்டும். புண்ணிய காரியங்களைச் செய், தியானம் செய், மந்திரம் ஜபி, தபஸ் செய் - அப்போதுதான் பரமாத்மா கிட்டுவார்."

ஆக, நீ பரமாத்மாவை பஜார் சரக்கு ஆக்கி விட்டாய், வேண்டுபவர் விலை கொடுத்து வாங்கிப் போக வேண்டும். புண்ணியசாலிகள் விலைக்கு வாங்குவார்கள். புண்ணியம் பண்ணாதவர்கள் ஏமாளிகள். புண்ணியம் எனும் பணம் வேண்டும் சரக்கு வாங்க.

இதையெல்லாம் நீ சிந்தித்துப் பார்த்திருக்கிறாயா?

அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "பைத்தியக்காரன் மாதிரி பேசுகிறாயே. புண்ணியம் செய்தால் பரமாத்மா கிட்டுவாரா? அங்காடி வியாபாரமா இது? பூசனைகள் செய்தால் பரமாத்மா கிடைப்பாரா? அவர்தான் பிரசாதமா? சரி, பூஜை முடிந்ததும் அவரும் போய் விடுவாரா? காரணத்தோடு கிடைப்பது, காரணம் காலாவதி ஆனதும், கை நழுவிப் போகாதா?

நீ வியாபாரத்தில் பங்குச் சந்தையில், இடைத்தரகில் நிறையப் பணம் சம்பாதித்து விட்டாய். 'அந்தப் பணம் நிலைக்குமா?' என்பதை யோசித்தாயா? திருட்டுப் போகலாம், கொள்ளையடிக்கப் படலாம். திருடனும், கொள்ளையனும் உன்னைப் போல் பாடுபடுகிறார்கள்; தன் உயிரைப் பணயம் வைத்து தொழில் புரிகிறார்கள். அவர்களுக்கும் வெற்றி கிட்டுகிறது.

காரணத்தோடு கிடைப்பது பறிபோகும், தொலைந்து போகும். காரணமில்லாமல் கிடைப்பது பரமாத்மாவின் அனுக்கம்தான். ஆனால் உன் மமதை, அகந்தை இதை ஏற்பதில்லை. நீ செருக்குற்றுச் சிந்திக்கிறாய், 'காரணமில்லாமல் கிட்டுகிறது என்றால்? ஏதும் முன் முயற்சி செய்யாமல், மலிவாகக் கிடைத்து விடுமா? அப்படிக் கிடைத்து விட்டால், பாடுபடுபவர் மனசு சங்கடப்படாதா?'

**அ**ங்கே எதிரே அருபமாக இருந்து பரம்பொருள் உன்னைப் பார்த்துச் சிரிக்கிறது. நீ சொல்லுவாய், "ஏதும் செய்ய மனம் வரவில்லை." நான் சொல்லுவேன். "நல்லது. ஏதும் செய்யாமலே இரு! பரமாத்மாவைப் பெற என்ன செய்ய வேண்டும்? ஏன் செய்ய வேண்டும்?" நம்பிக்கை வரவில்லை என்பாய். உன் மனசுதான் காரணம். 'காரணம் இல்லாமல் எதுவும் நிகழாது' என்று உன் மனம் முடிவு செய்திருக்கிறது. எதுவும் செய்யாமல் எது கிட்டும்? வீடு, கார், கடை, பதவி, பணம், புகழ் - ஏதாவது கிட்டுமா பாடுபடாமல்? இந்த அழியும் பொருள்களே கிட்டாதபோது, அழியாத பரமாத்மா மட்டும் எப்படிக் கிட்டுவார்? நம்ப முடியவில்லை. ஏதாவது செய்யத்தான் வேண்டியிருக்கும். என்ன வித்தாரமோ? ஒருகால், ஏதும் செய்யாமல் இருப்பதே ஒரு செயலாகுமோ? நாம்தான் புதிய, பூடகச் சொற்களைக்

கண்டு பிடிக்கிறோமே; செயலாற்றாமையில் செயல்பாடு. செய்யாதிருப்பதே ஒரு செயலாகுமானால், அதன் மூலம் - காரண - காரியமாக - பரமாத்மாவைப் பெறுகிறோம் என்பதுதானே அர்த்தம்?

நான் உனக்குச் சொல்லுவதெல்லாம் அஷ்டாவக்கிரரின் போதனையைத்தான். அவர் தெளிவாகக் கூறுகிறார். "உனக்குக் கிடைத்திருக்கிறது" என்னும்போது பொது வழக்கிலுள்ள "கிடைத்திருக்கிறது" இங்கு பயன்படுத்தப்படவில்லை. இதில் மொழிப்பிழை உள்ளது. கிடைத்திருக்கிறது" என்றால் காலதாமதாகக் கிடைக்கிறது; கை நழுவிப் போனது கிடைத்திருக்கிறது; கிடைத்திருப்பது விலகிப் போகவும் செய்யும்; .... என்றெல்லாம் பொருள் தொனிக்கும். "பரமாத்ம சம்பந்தம் உனக்குக் கிடைத்திருக்கிறது" எனக் கூறும் அஷ்டாவக்கிரரின் சொல்லுக்குச் சிறப்புப் பொருள் உள்ளது. முன்கூறிய பொதுப்பொருள்கள் இங்கு பொருந்தாதவை. காலதாமதம், கை நழுவில் போதல், கிடைத்தபின் விலகிப் போதல் - எல்லாம் இங்கு நிகழாதவை. பரமாத்மா விலகினால் எப்படி ஜீவித்திருப்பாய்? கடலிலிருந்து மீன் கரையில் போடப்பட்டால் பிழைத்திருக்குமா? கடல்மீனை வேறொரு நீர்நிலைக்குள் விட்டால் பிழைத்திருக்கும். பரமாத்மா எனும் கடல் கரை கடந்தது. வேறு இடம் கிடையாது. அதிலிருந்து ஜீவனைப் பிரிக்கவும் முடியாது.

'ஸம்போதி' (ஆத்மஞான போதம்) சாமானிய நிகழ்வு இல்லை இணைபிரியாத இயல்பு.

பரமாத்ம சம்பந்தம் மகத்தான நிகழ்வு. காரணத் தொடர்பு இல்லாமல் நிகழ்வது. நீ தொலைக்காதபோது நிகழ்வு (சந்திப்பு) புதிதாக ஏற்படாது. முன்பே காரணமில்லாமல் நிகழ்ந்திருக்கிறது.

நாம் பேதையராக, பாமரர்களாக இருக்கிறோம், பௌதிக வாழ்வில் உழன்றதால் தான் இந்த நிலைமை. ஏதாவது செய்யாமல் எதையும் பெறமுடியாது என்ற முடிவோடு வாழ்கிறோம். இதனால்தான் பரமாத்மா ஏதும் செய்யாமல் கிட்டியுள்ளார் என்பதை நம்மால் உணர முடியவில்லை. நம் பேதைமை நம்மை உணர விடுவதில்லை.

உண்மையில் நாம் பேதையர் இல்லை. இதனால்தான் ஜனகர், "ஆஹா! நான் ஆச்சரியமானவன். எனக்கு எனது வணக்கம்" என்றார்.

இதன் உட்பொருள், பக்தன் - பகவான் இருவரும் என்னுள் இருக்கிறார்கள். 'இருவரும்' எனச் சொல்லுவதும் தவறு. இருவரும் ஒருவரே. அந்த ஒருவர் என்னுள் இருக்கிறார். தவறாக முதலில் அவரைப் பக்தன் என எண்ணினேன். தவறு நீங்கியதும் அவரைப் பகவான் என்பதை உணர்ந்து கொண்டேன்.

பரமாத்மாவைத் தேடவேண்டும் என நீ நினைப்பது உன் பிரமை. ஓர் அறையில் நாலு நாற்காலிகளைக் கொண்டு வைத்து, ஐந்து நாற்காலிகள் இருப்பதாக நினைப்பதைப் போல இருக்கிறது உன் பிரமை. பரமாத்மாதான் உன்னிடம், உன்னுள் இருக்கிறாரே, அவரை எங்கே, ஏன் தேடவேண்டும்? தவறு உன் எண்ணத்தில், நினைவில், அறிவில் உள்ளது.

இதனால்தான் அஷ்டாவக்கிரர் கூறுகிறார், "நீ எதுவும் செய்ய வேண்டாம். (தப்பாகக் கணக்கிட்டுக் குழம்பித் தவிக்க வேண்டாம்.)"

நீ உன்னைப் பக்தனாகக் கருதுவது உன் கருத்துப் பிழை, கணிதப்பிழை - நான்கை ஐந்து எனக்கூட்டிக் கணக்கிடுவது போல. இப்பிழை இல்லாததால்தான் ஜனகரால் கூறமுடிந்தது, "ஆஹா! எனக்கு எனது நமஸ்காரம். நான் பித்தனாக இருந்தேன். என்னைச் சூழ்ந்த மாயை - மோகத்தில் உழன்று கொண்டிருந்தேன். என் சாசுவத நிலையை அறிந்து கொள்ளவில்லை. இல்லாத நிலையை இருப்பதாக மயங்கிக் கிடந்தேன். பழுதையைப் பாம்பாகப் பார்த்தேன்; சிப்பியை வெள்ளி என மயங்கினேன்; பாலைவன அனலைக் கானல் நீராகக் கண்டேன்; இல்லாததை உள்ளதாகக் கருதினேன். மாயை மயக்கத்தில் சிக்கி சாசுவத சத்தியத்தைக் காணாமல் இருந்தேன்.

**ஸ**ம்போதி (ஆத்மஞான போதம்) மகத்தான, மகோன்னத நிகழ்வு. காரிய - காரணத் தொடர்பு இல்லாதது. காரணத்திற்கு அப்பாற்பட்டது. ஸம்போதி தானே நிகழ்ந்து விட்டது. எப்போது?

நீ தக்க தகுதி, திறன் பெற்றிருக்கும்போது, நீ உன் பேதைமையைத் துறக்கும் போது, அகங்காரத்தை விட்டொழிக்கும் போது கணப்பொழுதில் ஸம்போதி நிகழ்கிறது. இதற்காக நீ தவம் அநுட்டிக்க வேண்டாம், ஜபம் செய்ய வேண்டாம். ஜப-தவங்களில் உழலாதே!

ஒரு சமயம் ஓர் அன்பர் இல்லத்தில் விருந்தாளியாகத் தங்கியிருந்தேன். வீடு முழுவதும் புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. வியந்தேன். "அருமையான நூல் நிலையத்தை உருவாக்கியிருக்கிறீரே!" என்றேன்.

அவர் சொன்னார், "இவை அறிவியல், இலக்கியப் புத்தகங்கள் இல்லை. நான் வாழ்நாள் முழுவதும் 'ராம நாமம்' எழுதி வைத்துள்ள நோட்டுப் புத்தகங்கள். பல கோடி ராம நாமம் எழுதி வைத்திருக்கிறேன். இதற்கு மகாபுண்ணியம் கிட்டும் இல்லையா?"

"இதிலே என்ன புண்ணியம் கிட்டிவிடும்? வீடு பூரா இந்த நோட்டுப் புத்தகங்களை நிரப்பி வைத்திருக்கிறீர். பள்ளிப் பிள்ளைகளுக்கு இந்த நோட்டுப் புத்தகங்களை அளித்திருந்தால் கொஞ்சம் புண்ணியம் கிடைத்திருக்கும். உம் புத்தி கெட்டு விட்டதா? ராம நாமம் எழுதிக் குவித்தால் புண்ணியம் கிட்டி விடுமா?"

அன்பருக்கு அதிர்ச்சியாக இருந்தது. பல சாமியார்கள் அந்த வீட்டிற்கு வந்திருக்கிறார்கள். ராமநாம புத்தகங்களைப் பார்த்துப் பாராட்டியிருக்கிறார்கள். நீ புண்ணியசாலி; இவ்வளவு ராமநாமம், ராமஜபம் செய்து வந்திருக்கிறாய்! ஒருமுறை சொன்னாலே புண்ணியம், சுவர்க்கம் கிட்டிவிடும். நீ பலகோடி நாமம் எழுதி இருக்கிறாய்; நீ மகா புண்ணியவான்."

அன்பர் என்மீது கோபப்பட்டார். பிறகு என்னை அழைப்ப தில்லை. அவர் மனதைப் புண்படுத்தி விட்டேனாம். நான் புண்படுத்த வில்லை. பைத்தியக்கார மனப்போக்கைச் சுட்டிக் காட்டினேன். ராமனைப் புரிந்து கொள்; ராமநாமத்தை வியாபாரமாக்காதே. ராமரிடம் சொல்லுவாயா, "சீதையைத் தேடிக் கொண்டு ஏன் வீணுக்கு அலைகிறீர்? அல்லல் படுகிறீர்? ராமநாமம் எழுதும், ராமஜபம் பண்ணும், விபத்து விலகும். துன்பம் நீங்கும்" என்று?

நீ எழுதவில்லை, ராமனை விட்டு எழுத வைக்கிறாய். எழுதுவது யார் என்பதைப் புரிந்து கொள். ராமநாம ஜபம் செய்வது யார் என்பதைத் தெரிந்து கொள். ராமஜபம் எங்கிருந்து எழுதிறது? எங்கு ஒலிக்கிறது? ஆராய்ந்து பார். அஷ்டாவக்கிரர், "இந்த நிலையில் இக்கணமே ராமர் உனக்குக் கிட்டுவார்" என்பார்.

இரண்டாவது கேள்வி

**நேற்று நீங்கள் கூறினீர்கள், இதயத்திலிருந்து எழும் கருத்தைப் புத்தியால் அடக்காதே, தாக்காதே. எம்பெருமானே! உங்களுடைய பிரவசனம் (விளக்கவுரை, விரிவுரை) காரண - காரிய அடிப்படையில் விவாதித்து நிறுவும் தர்க்க ரீதியாக உள்ளது. தர்க்க வாதத்தால் திருப்தி ஏற்பட்டால் புத்திக்கு வல்லமை, ஆதரவு கிட்டுமா? இதனால் எனக்கு சங்கடம் ஏற்படாதா? தருக்க பலத்தால் புத்தி இதயத்தை ஆக்கிரமிக்காதா? இதயத்திலிருந்து எழும் கருத்துணர்வை அடக்காதா? அருள்கூர்ந்து எனக்கு வழிகாட்டுங்கள்.**

**நா**ன் பேசுவதெல்லாம் தருக்க ரீதியானதுதான். கூடவே, அதற்கும் மேற்பட்டது. தருக்கரீதியாகக் கூறுவது உனக்கு வேண்டி; தருக்கத்தைக் கடந்து கூறுவது, மேற்பட்டு இருப்பது எனக்காக வேண்டி. தருக்க ரீதியாகக் கூறாவிட்டால் எனக்குப் புரியது. தருக்கத்தைக் கடந்து என்னால் பேச இயலாது. அப்படிப் பேசி என்ன பயன்?

நான் பேசும்போது இரு கூறுகள் உள்ளன - நீயும் நானும். சொல்பவனும் இருக்கிறான், செவிமடுப்பவனும் இருக்கிறான்.

எனக்கு இயலுமானால், தருக்கம் கடந்துதான் பேசுவேன். தருக்கத்தை அண்டவிட மாட்டேன். அப்போது நீ என்னைக் கிறுக்கன் என்று நினைப்பாய். உனக்கு ஏதும் விளங்காது, அறிய மாட்டாய். இது தருக்கத்திற்கு உட்படாத வெற்றுப் பிதற்றல் என்று எண்ணுவாய். உன் தருக்கபுத்தியை எட்டத்தான் தருக்க ரீதியாகப் பேசுகிறேன். தருக்க ஜாலத்தை மட்டும் புரிந்து கொள்ளுவாயானால், நீ இங்கு என்னிடம் வந்து போவது வீண்.

தேக்கரண்டியில் நான் மருந்தை நிரப்புகிறேன். உன் வாய்க்குள் விடுகிறேன். தேக்கரண்டியை உள்வாயினுள் போட்டு விடுவதில்லை. தருக்கம் எனும் ஸ்பூனில் தர்க்கம் கடந்த மருந்தினை உன்வாயில் ஊட்டுகிறேன். நீ ஸ்பூனை விழுங்குவதில்லை.. மருந்தை மட்டுமே

உட்கொள்ளுகிறாய். ஸ்பூனைக் கருவியாகப் பயன்படுத்திக் கொள். அதில் நிரம்பியிருக்கும் மருந்தை உட்கொள். தருக்கம் தேக்கரண்டி போன்றது. ஒரு கருவி, சாதனம். ஆனால் நீ தருக்கம் கடந்த தத்துவத்தைக் கேட்டு அறியும் பரிபக்குவ நிலையில் இல்லை என்பதைப் புரிந்து கொள்.

தருக்கத்திற்கு உட்படாததைக் கேட்டறிய வேண்டுமானால் புள்ளினங்களின் கலகலத் தொனியைக் கேள், மெய்ஞானம் பெறுவாய் - அஷ்டாவக்கிரரின் கீதையைக் கேட்டு ஞானோதயம் பெறுவது போல. அவை தருக்கத்திற்கு அப்பாற்பட்டவை. மரங்களைக் கடந்து செல்லும்போது காற்றின் சலசலப்பு, இலைச்சருகுகள் உதிர்ந்து தரையில் கிடக்கும்போது எழும் ஒலி, நதிநீர் பெருகும்போது எழும் ஓசை, வானத்தில் மூட்டமிட்டிருக்கும் மேகங்களின் முழக்கம் - இவை யாவும் தருக்கத்திற்கு அடங்காதவை.

அஷ்டாவக்கிரரும் எட்டுத் திசைகளிலிருந்தும் பேசுகிறார், எல்லாப் பக்கங்களிலிருந்தும் போதிக்கிறார். ஆனால் உனக்குப் புரியாத புள்ளினங்களின் கூவல் தொனிகளை எவ்வளவு தடவை கேட்டிருக்கிறாய்? தொடர்ந்து கேட்டுக் கொண்டிருப்பாயா? அலுத்துப் போகும்; பொருள் புலப்படாத பிதற்றல், புலம்பல் என்பாய். அவை தருக்கத்திற்கு அப்பாற்பட்டவை. அத்தகைய தத்துவங்களை உன்னிடம் கொண்டுவந்து சேர்க்க தருக்கம் எனும் பாலத்தை அமைக்கிறேன்.

நீ பாலத்தைப் பற்றிக் கொண்டு இலக்கை மறந்து விடுகிறாய். சொல்லைப் பற்றிக் கொண்டு சொல் குறிப்பிடும் இலட்சியத்தை மறக்கிறாய். வைரக்கற்கள் மண்டிக்கிடக்கும் போது, அவைகளை அள்ளிக் கொள்ளாமல், வெறும் கூழாங்கற்களையும், பாறைச் சல்லிகளையும் அள்ளிக் கொண்டு போகிறாய்!

நண்பர் கேட்டார், "நீங்கள் சொன்னீர்களே - இதயத்திலிருந்து எழும் கருத்தைப் புத்தியால் அடக்காதே, தாக்காதே! - என்று. ஏன்?..."

தீர்மானமான அறிவுரை இது. புத்தியால் அறிந்து கொள்; இதயத்தை எஜமானனாக வைத்திரு. புத்தி அடிமை, இதயம் ஆண்டான் என அமைத்துக் கொள். அடிமை வெகுகாலமாக

ஆதிக்கம் செலுத்தி வந்திருக்கிறான். ஒதுக்கிவை. நீ புத்திக்காக, புத்திக்கு அடங்கி வாழ்பவன் இல்லை; இதயத்திற்காக, இதயத்தைச் சார்ந்து வாழ்பவன், வாழ வேண்டியவன். நீ கணிதமேதையாகலாம், இதனால் இதயத்திற்குச் சாந்தி கிட்டுமா? நீ பெரிய தருக்கவாதியாக இருக்கலாம், இதனால் இதயத்திற்கு மகிழ்ச்சி ஏற்படுமா, நீ தேர்ந்த தருக்கவாதியாக, பகுத்தாய்வுப் பேரறிஞனாக விளங்கினால், உனக்கு மன மகிழ்ச்சி ஏற்பட்டுவிடுமா? சமய-தர்ம சாத்திரங்களில் கரைகண்டவனாக இருந்தாலும் சமாதி நிலையை எளிதாகப் பெற்று விடுவாயா? இதயம் வேண்டுவது பிரேமையை, பிரார்த்தனையை. இதயத்தின் இலட்சியக் கோரிக்கை இறுதி விருப்பம் சம்பூர்ண சமாதி. சமாதி சார்ந்த தருக்க வாதங்களை புத்தி எழுப்பும். சமாதி சித்தாந்தத்தைக் காட்டும். இவை சமாதி சித்திக்கு உதவுமா?

ஒரு மனிதன் பசியோடு காத்திருக்கிறான். நீ அவனிடம் சமையல்கலை வழிகாட்டி நூலைக் கொடுத்து, "இதில் எல்லாம் இருக்கிறது. படித்துப் பயன்படுத்திக் கொள். மகிழ்ச்சி தரும்." என்கிறாய், அவனும் படித்துப் பார்க்கிறான். பசி மேலிடுகிறது. அடங்கவில்லை. அவன் சொல்லுவான், "இதைப் படித்து என்ன பயன்? பசி தாளவில்லை. தவிக்கிறேன். இதைப் படித்தால் பசி அடங்கி விடுமா? முதலில் எனக்கு உணவைக் கொடு!"

பசித்தவனுக்குச் சாப்பாடும், தாகமுள்ளவனுக்குத் தண்ணீரும்தான் உடனடித் தேவை. தண்ணீர் தாகம் எடுத்தவனுக்கு '$H^2O$' எனும் தண்ணீர் சூத்திரத்தை எழுதிக் கொடுத்தால் என்ன ஆகும்? காகிதக் குறிப்பை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பான். இப்படித்தான் ராமநாமத்தை எழுதிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாய். எல்லா நாமங்களும், மந்திரங்களும் '$H^2O$' போன்ற இடுகுறிப் பெயர்கள்தாம். நீர் ஆக்சிஜன்+ஹைட்ரஜன் சேர்ந்துதான் உருவாகிறது. இதைச் சூத்திரக் குறிப்பில் எழுதி வைத்திருந்தால் தாகம் தணிந்து விடாது.

தருக்கத்தால் அறிந்து கொள், இதயத்தால் ஏற்றுக் கொள். தருக்கத்தைத் துணையாகக் கொள். துணையே எல்லாம் என்று எண்ணாதே. இதயம் எஜமானனாக இருக்க வேண்டும். பிரேமை, பிரார்த்தனை, பூசனை, அர்ச்சனை, தியானம், சமாதி - இவைகளுக்கத்

தடங்கலாக, இடையூறாகப் புத்தி இருக்கலாகாது. இதைக் கவனத்தில் கொள், புத்தி உதவிகரமாக இருக்கும்வரை நல்லது. இதனால்தான் புத்திபூர்வமாக (தருக்க ரீதியாக) உன்னிடம் பேசுகிறேன் உன்புத்தியை வசப்படுத்த. நீ இயத்தை நாடி முன் செல். அங்கு துளி இன்பம் கிட்டினாலும் போதும். அதில் ஆழ்ந்து விடுவாய். பிறகு நீயே புத்தியைத் தவிர்த்து விடுவாய். சொற்களுக்கு அங்கு இடமில்லை.

நீ கூறுகிறாய், "எம்பெருமானே! எனக்கு உங்களுடைய சொற்பொழிவு மிகவும் தருக்கவாதமாகத் தெரிகிறது."

**ஆ**ம். அது தருக்கபூர்வமானதுதான். நான் அப்படித்தான் உன்னுடன் உரையாட முற்படுகிறேன்; என்னோடு சேர்ந்து பயணிக்க நீ ஆயத்தமாக வேண்டும் என்பதற்காகத்தான். என்னோடு இணைந்து, என் கைபிடித்துப் பயணித்தால் உனக்கு இலக்கை எட்ட வழிகாட்டுவேன். நீ உன்னை இழப்பதுதான் உன் இலக்கு.

தருக்கத்தை முதல் தொடர்பாகக் கொள்ளுகிறேன். நீ அங்குதான் வாழ்ந்து கொண்டிருக்கிறாய். அங்கிருந்துதான் நமது ஒட்டுறவு ஆரம்பமாகிறது.

என்னிடம் நாத்திகர்களும் வருகிறார்கள். அவர்களும் என்னோடு ஒத்துப் போகிறார்கள். எனக்கு அவர்களோடு எந்தப் பிரச்சினையும் இல்லை. நான் நாத்திகர் மொழியில் பேசுகிறேன். அதொரு வலைதளம். மீனைப் பிடிக்கத் தூண்டில் போடுகிறோம். முள் முனையில் உருட்டிய மாவைப் பொருத்துகிறோம். மீன் அதைக் கவ்வும் போது முள்ளில் மாட்டிக் கொள்ளுகிறது. தன்னையே இழக்கிறது. தூண்டில் முள்ளிலிருந்து தப்பிக்க, முதலில் மாவிலிருந்து தப்பிக்க வேண்டும். மாவைக் கவ்வியதும் தெரியவரும், இது வசப்படுத்தும் முள் என்பது.

தருக்கம் தூண்டில் முள்ளில் வைக்கப்படும் மாவு உருண்டை போன்றது. முள் தருக்கத்திற்கு உட்படாத தத்துவம் போன்றது.

உன்னைக் கவர்ந்து இழுக்க தருக்கம் தேவைப்படுகிறது. கசப்பு மருந்து மாத்திரை மேல் சர்க்கரைப் பூச்சு போல. மனிதன் சிறுபிள்ளைத்தனம் உள்ளவன். இனிப்பைத் தந்து கசப்பை உட்கொள்ள

வைக்க வேண்டும். முதலிலேயே கசப்பைத் தந்தால் நீ ஏற்கமாட்டாய். ஓடிப்போவாய்.

தருக்கமற்றதை அளித்தால் நீ ஏற்காமல் விலகிப் போவாய். "இது புத்திபூர்வமாக இல்லை. என் பகுத்தறிவு இதை நம்பவில்லை" என்பாய். ஆதலால், நான் முதலில் உன் புத்திக்கு நம்பிக்கை ஊட்ட விரும்புகிறேன். உன் புத்திக்கு நம்பிக்கை ஏற்பட்டதும், இதுபோதும் என்று நீ புறப்பட்டு விட்டால், தவறு செய்கிறாய். மருந்து மாத்திரை மேலுள்ள இனிப்பைச் சுவைத்து விட்டு, மாத்திரையைத் துப்பிவிட்டுப் போகிறவன் நீ.

உன் கேள்வி, "தருக்கவாதத்தால் திருப்தி ஏற்பட்டால், புத்திக்கு வல்லமை, ஆதரவு கிட்டுமா?"

இதன் தீர்வு உன்னிடம் உள்ளது. சிலர் தருக்கவாதத்தை மட்டும் கேட்க விரும்புகிறார்கள்; தருக்கத்திற்கு மேற்பட்டதை ஒதுக்கி விடுகிறார்கள். அவர்கள் திரும்ப என்னிடம் வருவதில்லை. அவர்கள் வருவதும் வராதிருப்பதும் ஒன்றுதான். அவர்கள் தம் நோக்கப்படி தருக்கத்திற்கு உட்பட்டதை ஏற்றுக் கொண்டார்கள். உன் தருக்கத்திற்கு உட்படாதது உன்னுள் புரட்சிப் பொறியை எழுப்பும். தருக்கத்திற்கு இசைவானது உன்னை வலுப்படுத்தும். அதாவது, உன் நோய், கவலை, துயரம், அகந்தை ஆகியவைகளை வலுப்படுத்தும்.

**தி**றமையை வெளிப்படுத்த வேண்டும். ஜனகர் அஷ்டாவக்கிரரிடம் கூறுகிறார், "என்னே என் சாமர்த்தியம்! கணநேரத்தில் தெரிந்து விட்டதே! எத்துணை திறமை இது!"

இந்தத் திறமை, சாமர்த்தியம், நிபுணத்துவம் கவனத்தில் இருக்க வேண்டும். இது உன் பொறுப்பு.

இங்கு நான் பேசுகிறேன். பேசுவது என் பொறுப்பு, கேட்பது (உணர்வது) உன் பொறுப்பு. பேசி முடித்தபின், அப்பேச்சில் எனக்கு உரிமை, ஆதிக்கம் இராது. வில்லிலிருந்து விடுபட்ட அம்பு மாதிரி. அந்த அம்பு எங்கே பாய வேண்டும்? நீ எங்கே பாய வைப்பாய்? இலக்குத்தீர்வு உனது. அம்பு பாய்வதை ஏற்பாயா? தவிர்ப்பாயா? - உன் பொறுப்பு. உன் புத்தியில் பாய வைத்தால், பண்டிதனாகத்

திரும்புவாய். தருக்கவாத வித்தகனாக ஆவாய். குறிதவறி இதயத்தில் தைத்தால் நீ பேரானந்தம் பெறுவாய், பேராச்சரியம் அடைவாய். போற்றிப் பாராட்டும் பெருமை பெறுவாய். அருள்பாலிப்பு நிகழும். அமிருத நிலையை எட்ட முன்னேறுவாய். இறுதி இலட்சியம் நோக்கி முன்னேறுவாய்.

பண்டிதராகித் திரும்பி வராதே. பிரேமியாக (அன்பனாக) வந்து சேர். கபீர்தாஸ் கூறியவாறு இரண்டரை எழுத்து (ப்ரேம்) அன்பனாகி விடு!

என் தருக்கத்தைக் கேள், ஏற்றுக் கொள். சாதனமாகக் கருது. விழுமிய பயனாக, நீ துணிந்து, தர்க்கம் கடந்த இலக்கிற்குத் தாவுவாய். தருக்கத்தின் உதவியோடு உன்னை அந்த இலக்க நோக்கி உன் புத்தி செல்லும் வரையில் கொண்டு போவேன்.

எல்லைப்புறம் வரும், பிறகு எல்லை வரும். முன்செல்வது உன் பொறுப்பு. எல்லையில் நின்று கொண்டு நீ உன் கடந்த காலத்தையும், வருங்காலத்தையும் பார். புத்தியின் துணையோடு கடந்து வந்த பாதையைப் பார். எதிரே நல்வாய்ப்பு புலப்படும். அது இதயம் சார்ந்தது.

எண்ணங்களால், கருத்துக்களால் வாழ்வின் நற்செல்வம் கிட்டிவிடாது. தியானத்தால், சாட்சி உணர்வால், பிரேமையால், பிரார்த்தனையால், பக்தி பரவசத்தால் ஒரளவு நற்செல்வம் கிட்டும். மேற்கொண்டு பெறுவது உன் பொறுப்பு. வாய்ப்பும் வழியும் காத்திருக்கின்றன. பாலைவனத்தில் தங்குவதும், அதைக் கடந்து பசுஞ்சோலைக்குப் போவதும் உன் விருப்பம். நீயே உனக்கு எஜமானன்.

ஒருமுறை உன்னை எல்லை வரை அழைத்துப் போவேன். அங்கிருந்து அழகான பூஞ்சோலைகளைக் காணலாம். பசுமை படர்ந்த சோலை, நீர்நிலை, நிழல்படர்ந்த கணவாய், பனிமலைச் சிகரம் - எல்லாம் தென்படும். அவைகளைக் காட்டுவது என் பணி. பிறகு உன் விருப்பம், முன் செல்லுவதோ, பின் திரும்புவதோ உன் பொறுப்பு. இதை நீயே உணர்வாய்.

உன் தருக்கத்தை பொன்னார்ந்த சிகரங்களைக் காணக் கிடைக்கும் எல்லைவரை இட்டுச் செல்லுவேன். அங்கிருந்து நீ முதல் முறையாக வானத்தை அண்ணாந்து நோக்குவாய். பிறகு அந்தக் காட்சி உன்னைத் தொடரும். உன்னுள் வட்டமிடும். அதன் அழைப்பு ஒலிக்கும், உரக்க ஒலிக்கும். நீர்த்துளிகள் சொரியும். பிறகு நீர்த்தாரையாகக் கொட்டத் துவங்கும். நீ தப்ப முடியாது. காரணம், இதயத்தின் தரிசனம் பளிச்சிடும். புத்தி குப்பை கூளமாகி விடும். தரிசனம் பளிச்சிடாத வரையில் குப்பை கூளங்கள் நவரத்தினங்களாகத் தோன்றும் – மாயை மயக்கம்.

நீ கேட்டாய், "தருக்க பலத்தால் புத்தி இதயத்தை ஆக்கிரமிக்காதா? இதனால் எனக்கு சங்கடம், ஆபத்து ஏற்படாதா?..."

ஆபத்துதான். கவனமாய் இருக்க வேண்டும். நாம் செல்லும் பாதையில் பாறாங்கல் கிடக்கிறது. அதைத் தடையாகக் கருதினால் அங்கேயே தங்க வேண்டியதுதான். அதைப் படியாகக் கருதினால் அதன் மேல் ஏறி, இறங்கிச் செல்ல வேண்டியதுதான். தருக்கம் வளர்த்த புத்தியைத் தடைக்கல்லாகக் கருதுவாயா? படிக்கட்டாகக் கருதுவாயா? உன் பொறுப்பு. கல்லைக் கடந்து போவதும், கல்லருகில் முடங்கி இருப்பதும் உன் முடிவு. படிக்கட்டாக ஆக்கிக் கொண்டால் மகாநதியைப் போல் நீள்பயணத்தைத் தொடர்வாய்; தடைக் கல்லாகக் கருதினால் சகதிநீர்க் குட்டையாய் தேங்கிக் கிடப்பாய்.

நாத்திகன் தேங்கிக் கிடக்கும் குட்டை; ஆத்திகன் கடலை நோக்கிப் பாயும் நதி. நாத்திகன் அழுகிப் போகிறான் – தேங்கிக் கிடக்கும் தண்ணீர் போல. நாற்றமெடுக்கும். ஓடிக் கொண்டிருக்கும் நீர்ப்பெருக்கு தெளிந்திருக்கும். ஜல பிரவாகத்திற்கு ஒரு புகலிடம் வேண்டுமே. கடலில் நதி சங்கமிக்கும் புகலிடம் முகத்துவாரம். கடல் இல்லையேல் ஆற்றொழுக்கு இராது.

இதயம் பயணிப்பது பரமாத்மாவை அடையத்தான்.

**உ**லகில் இருவகை மனிதர்கள் இருக்கிறார்கள். இரு வர்கங்களில் பிரிந்திருக்கிறார்கள். முதல் வர்க்கத்தினர் வெளிப்புறப் பொருள்கள் கிடைத்ததைக் கொண்டு திருப்திப்படுவதில்லை. ஒரு வீடு இருக்கிறது. இன்னுமொரு வீடு வேண்டும். ஓரளவு சொத்து இருக்கிறது;

போதாது. மேலும் சேர்க்க வேண்டும். மனைவி இருக்கிறாள்; போதாது மற்றொரு ஆசைநாயகி வேண்டும். ஆனால் அகப்புறத்தில் உள்ளவை போதாது என்று எண்ணுவதில்லை. இருப்பதையும் பொருட்படுத்துவ தில்லை. இவர்கள் சாமானிய சம்சாரிகள்.

இரண்டாம் வர்க்கத்தினர் உள்ளத்துள் உள்ளவை போதாது, மேலும் கிட்ட வேண்டும் என்று விரும்புவர். வெளிப்புறப் பௌதிகப் பொருள்கள் கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைவார்கள். மேலும் பெறவிரும்ப மாட்டார்கள். இவர்களின் அகமனத்துள் சுவாலை எரிந்து கொண்டிருக்கும். உன்னதமான திவ்விய அதிருப்தி. இது தொடர்முனைப்புடன், தொடர்ந்து உருமாறியும், தொடரும் புரட்சியிலும் இயங்கிக் கொண்டிருக்கும்.

தருக்கச் சார்பு உன்னுள் எழும் புரட்சிக்குத் துணையாக இருக்கட்டும். உன்னை உருமாற்றம் செய்யட்டும். இதில் கவனமாய் இரு. தருக்கம் புரட்சி எழுச்சிக்குத் தடைக்கல்லாகிப் போனால், தருக்கத்தை அகற்றிவிடு, புரட்சியைப் பற்றிக் கொண்டிரு. இறுதித் தீர்மானம் உன்னிடம்தான் உள்ளது.

**புத்தி அடித்தளத்திலிருந்து மேலும் மேலெழ வேண்டும்**
**அன்புடைமை தன் இலக்கைக் கடந்து முன்செல்ல**
**வேண்டும்**
**என்னவென்று செல்லுவது?**
**நான் இங்கிருந்து எங்கே போயிருக்கிறேன்!**
**எங்கே எனது போக்கிடம் என்பதும்**
**எனக்குத் தெரியவில்லையே.**

புத்திக்கு எங்கே போக வேண்டும் என்பது தெரியவில்லை. ஆதலால் அது எங்கும் போவதில்லை. இருக்கிற இடத்திலேயே செக்கு மாடு மாதிரி சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது. கண்களை மறைத்துப் பட்டை கட்டப்பட்டிருக்கிறது. இதனால் சுற்றிக் கொண்டிருப்பது தெரியாமல், நீள் வழியில் பயணித்துக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறது.

**நீ**யும் சுற்றிச் சுற்றி வருவதை உணர்ந்திருக்கிறாயா? அதே காலை நேரம், நீ படுக்கையிலிருந்து எழுந்திருக்கிறாய். காலைக் கடன்

கழித்து, குளித்துவிட்டு, உணவு உண்டபின் வேலைக்குப் போகிறாய்; மாலையில் வீடு திரும்புகிறாய்; இரவு சாப்பிட்டுவிட்டுப் படுக்கிறாய்; மறுநாள் காலையில் வழக்கம்போல் எழுந்திருக்கிறாய்; உன் காரியங்களைத் தொடர்கிறாய். செக்கு மாடு மாதிரிதானே நீயும்? சுற்றி உழன்று கொண்டிருப்பவன்தானே நீயும்? சிந்தித்துப் பார்த்தாயா?

**...என்னவென்று சொல்லுவது?**
**நான் எங்கிருந்து எங்கே போயிருக்கிறேன்!**
**எங்கே எனது போக்கிடம் என்பதும்**
**எனக்குத் தெரியவில்லையே.**
**அன்புடைமை தன் இலக்கைக் கடந்து**
**முன் செல்ல வேண்டும்.**

நீ புத்தியின் மேல்படியிலிருந்து உயரே ஏறும்போது, ஆகாசத்தில் நிற்பாய். பூமி எல்லை விடுபடும். எல்லையற்ற வான்வெளியில் இருப்பாய். பந்தங்கள், தளைகள் விடுபடும். மோட்சம் தென்படும்.

அன்பு இலக்கைக் கடந்து முன்னேற வேண்டும்.

தக்க தருணம் வரும். புத்திலிருந்து விலகி இதயத்தை நாடி வருகிறாய். அடுத்த தருணம், இதயத்தையும் கடந்து ஆழ்நிலையை நாடிச் செல்லுகிறாய்.

அன்பு இலக்கைக் கடந்து முன்செல்ல வேண்டும்.

பிறகு பக்தனின் ஆழ்ந்த அன்பு (பிரேமம்); அதிலிருந்து விலகி விடுகிறான். பக்தன் பகவானிடமிருந்தும் விடுபடுகிறான். பூசனை செய்பவன் பூஜை - ஆராதனைகளிலிருந்தும் விடுபடுகிறான்.

ஆக முதலில் தருக்கவாத வழியில் அன்பு நோக்கிப் பயணிக்க வேண்டும். பிறகு அன்புடைமை வழியே சூன்ய நிலையை நோக்கிச் செல்ல வேண்டும். பிறகு மகாசூன்யம். அங்குதான் நமக்கு வசிப்பிடம்.

புத்தியில் நீ உழன்று கொண்டிருக்கிறாய்; இதயத்துள் உன்னைக் கொணர வேண்டும். அதனால்தான் புத்தி நிலையிலிருந்து தொடங்குகிறேன். இதயத்தை எட்ட உன்னை இட்டுச் செல்லுகிறேன். இதயத்தை எட்டியதும், அங்கேயே தங்க விடுவதில்லை. அதையும்

கடந்து முன் செல்லத் தூண்டுகிறேன், "மேலும் மேலும் முன்னேறிச் செல்!" என்று சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

**ஒவ்வொரு புதிய கணத்தையும்**
**முந்தியதைப் போல்**
**பழகிப் போன அன்புகீதம் போல்**
**இதயத்துள் நிரப்பி வைத்து**
**புதுப்புது தாரகைகளை விதைத்துச் செல்!**
**கடந்து போன ராகமாலிகை கீதம் ஓய்வதில்லை.**
**விதைத்து வளர்ந்து ஒளிரும் அந்தத்**
**தாரகைகளைக் கடந்து செல்!**

புதிய காலடி வைப்புகளை அறியப்படாத, அறிமுகமில்லாத, புதிய-புதிய படிகளில் வைத்து எழவேண்டும், முன் செல்லவேண்டும். பழகிப்போன படிகளில் தங்கிவிடலாகாது.

**பு**த்திக்கு என்ன பொருள்? யோசித்திருக்கிறாயா? நீ அறிந்து வைத்திருப்பவைகளின் சேர்க்கை; உன் கடந்த காலத்தின் தொகுப்பு. உன் புத்தியுள் சேமித்து வைக்கப்பட்டிருப்பவை, நீ கேட்டது, படித்தது, அறிந்தது, அநுபவப்பட்டது - கடந்து போன இவைதானே சேமிக்கப்பட்டிருக்கிறது உனது புத்தியுள். இனி நிகழ வேண்டியது, எட்ட வேண்டியது பற்றி புத்திக்கு எதுவும் தெரியாது.

ஆக, புத்தி இறந்த காலம், கடந்தது, செத்தது. புத்தி அவற்றின் சாம்பல். புத்தியில் சிக்கிக் கிடந்தாயானால், இறந்த காலத்திலே சுற்றித் திரிந்து கொண்டிருப்பாய், அறிந்ததையே அசைபோட்டுக் கொண்டிருப்பாய். அறியாததை - அறியப்படாத தத்துவங்களைப் பெறமாட்டாய். அவை ஜீவ கதி கொண்டவை. அறிந்தவை கதி அற்றவை. சுற்றிவரும் செக்கு மாடுகளின் வட்டமடிப்பு.

இதயத்திற்கு அர்த்தம் - அறியப்படாதது, கேள்விப் படாதது, தொடர்பு இல்லாதது, நீள்பயணம். என்ன ஆகுமோ? தெரியாது. அறியாததால் தெளிவோ தீர்மானமோ இல்லை. வழிகாட்டிப்படம் கையில் இல்லை அறியப்படாததை நோக்கிப் பயணம். மைல்கல் இல்லை, ஊர்பேர் இல்லை, வழி சொல்ல எவரும் இல்லை.

அறியப்படாததை நோக்கிப் பயணிக்கும் மனிதன் பரமாத்மாவை நாடிப் பயணிப்பவன். இவ்வுலகில் பரமாத்மாதான் மிகப்பெரிய அறியப்படாத நிகழ்வு. நாம் சிறிது அறிந்தும் பெருமளவு அறியாதவர்களாக இருக்கிறோம். அறிந்து கொண்டே இரு. அப்படியும் அறியாததாகவே இருக்கும். எவ்வளவு அறிந்திருந்தாலும், மேலும் அறிய வேண்டியது உள்ளது எனத் தோன்றும். சிகரத்தை எட்டியதும், அதைவிட மேலான சிகரம் தென்படும். அங்கு சென்றதும் மேலும் உயரமான சிகரம் எதிர்ப்படும். போக்கிடம் முடிவடையாது. ஒரு வாசலில் நுழைந்து சென்றதும் எதிரே பல வாசல்கள் கடப்பதற்குக் காத்திருக்கும்.

இதனால்தான் நாம் பரமாத்மாவைப் 'பரம ரகசியம்' என்கிறோம். ரகசியம் என்பது - நாம் அறிந்து கொண்டாலும் முற்றிலும் அறியவில்லை எனும் நிலை நீடிக்கும். பரமாத்தா புத்தியால் அறியப்பட முடியாதவர். தெரிந்ததும் முற்றுப் பெறும் விஷயத்தைத்தான் புத்தி அறியும், அறிவிக்கும். முற்றுப் பெறாத விஷயம் பரமாத்மா.

ஆகையால் நீ புத்தியைச் சார்ந்து செல்லாதே. சவமாகிப் போன இறந்த காலத்தோடு இணைந்திராதே. நீ ஒரு சடலத்தைக் கட்டிக் கொண்டு கிடந்தாயானால் புரிந்து கொள்ளுவாய் புத்தியின் நிலைமையை. பிணத்தோடு பிணைக்கப்பட்டவன் எழ முடியாது. அமர்ந்திருக்கவும், நடந்து போகவும் முடியாது. சவம் உனக்குச் சுமை. புத்தியும் சவம்போல் ஒரு பாரம்தான். இதயம் வாழ்வின் புதிய முளையின் வெளிப்பாடு. இதயத்திற்குள் பயணித்து வெளியேற வேண்டும்.

**ஒவ்வொரு புதிய கணத்தையும்**
**பழகிய புராதன நொடிபோல்**
**உணர்ந்துள்ள பாச கீதம் போல்**
**இதயத்துள் நிரப்பிக் கொள்,**
**தொடர்ந்து தாரகைகளை விதைத்துச் செல்!**
**செவிமடுத்த இன்னிசை ஒலி ஒடுங்காது,**
**இந்நிலையில் நீ விதைத்த தாரகைகளைக்**
**கடந்து செல்.**

ஒவ்வொரு அடிவைப்பும் புதியதாகும், கடந்து செல். வந்து சேரும் வாய்ப்புகளுக்காக உன் இதயத்தைத் திறந்து வைத்திரு. நல்வரவு! இதயத்தை ஆயத்தமாக்கு!

அறியாதது உன்னை அழைக்கும். கூச்சப்படாதே. அறிமுகமில்லாதது கூப்பிட்டால் தயங்காதே. அறிய முடியாதது உன் வாசலில் வந்து கதவைத் தட்டினால் கலவரப்படாதே. எதிர்கொண்டு வரவேற்க முன்செல். இதுதான் அறநெறியாளனின் அடையாளம், இலட்சணம்.

## மூன்றாவது கேள்வி

**குருதேவா! உங்களுக்கு வெற்றி உண்டாகுக. வாழ்க! வெல்க! நான் ஆயிரம் பிறவிகள் எடுத்து வந்து சேகரித்தாலும் பெற முடியாத அருட் செல்வத்தை நீங்கள் சில நேரத்திற்குள் எளிதாக அளித்து விட்டீர்கள்! என்னை உங்கள் அணுக்கச் சீடனாக ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.**

**நீ** விரும்பிக் கோரினாய்; நீ என் சீடனாகி விட்டாய்.

சீடனாகுவதற்கு என் சம்மதம் தேவை இல்லை. சீடன் ஆவதற்கு உன் ஒப்புதல்தான் அவசியம். கற்க ஆயத்தமாக இருப்பவன் சீடன். சார்ந்து இருப்பவனும், அறிவை வளர்த்துக் கொள்ளுபவனும் சீடன் ஆவான். பணிவுடன் கேட்பவன், கேட்டு அறிந்ததை ஆய்ந்து சிந்திப்பவன் சீடன். தியானத்தில் விருப்புற்று ஈடுபடுபவன் சீடன்.

நீ சீடன் ஆகிவிட்டாய். விரும்பி ஏற்கத் தயாரானால் சீடன் ஆகி விடுகிறாய்.

சீடனாவதற்கு என் அங்கீகாரம் அவசியமில்லை. நான் சம்மதித்து, நீ ஏற்காதிருந்தால் நான் என்ன செய்ய? நான் ஏற்காமலிருந்து நீ ஏற்றுக் கொண்டு விட்டால் நான் என்ன செய்ய?

சீடனாவது உனக்குள்ள உரிமை. எவரும் தானமாகத் தருவதில்லை. சீடனாவது உனக்குப் பெருமை. இதற்கு எந்த நற்சான்றிதழும் தேவை இல்லை.

ஏகலவ்யன் காட்டில் வசித்தான். துரோணாச்சாரியார் மறுத்த போதிலும் அவன் கவலைப்பட வில்லை. குரு சம்மதிக்காது போனாலும் சீடனாகும் இலட்சியத்தை அவன் கைவிடவில்லை. வெற்றி பெற்றான்.

குரு என்ன செய்ய முடியும்? ஏகலவ்யன் குருவின் மண்படிமம் செய்து எதிரே வைத்துக் கொண்டான். அவரை மானசீகமாகப் பூசித்து வில்வித்தை கற்றான். குருமூர்த்தத்தின் பாதங்களைத் தொட்டு வித்தையைப் பயின்றான். தேர்ச்சி பெற்றான்.

இதை அறிந்த துரோணர் ஏகலவ்யனைக் காணவந்தார். அவனது தேர்ச்சித் திறனைக் கண்டு அதிசயித்தார், பயந்து போனார். தம் பிரிய சீடன் அர்சுனனையும் விஞ்சிய வில்லாளியாகத் திகழ்வதைக் கண்டார். குருவை விட மேம்பட்டவனாகச் சிறந்திருந்தான். ஏகலவ்யன் உத்தமனான சீடன்; குரு சாதாரண, தாழ்ந்த ஆசான். வில்வித்தையில் தேர்ந்த வல்லாளராக இருக்கலாம். ஆனால் ஆதரிச குருவாக மாட்டார். முதலில் ஏகலவ்யனை கீழ்ச்சாதிக்காரன், வேடன், சூத்திரன் என்பதற்காக சீடனாக ஏற்க மறுத்தார். குருவின் இலட்சணம் இதுதானா? சத்திரியர்களுக்குக் குருவாக இருப்பவர் சூத்திரனை எப்படி ஏற்பார்? சாதி - சமுதாயக் கட்டுப்பாட்டில் சிக்கியிருக்கிறார்.

என்றைக்கு ஏகலவ்யனை சூத்திரன் என்பதற்காக துரோணாச்சாரியார் சீடனாக ஏற்க மறுத்தாரோ, அன்றைக்கே அவர் சூத்திரன் ஆகிப் போனார். சூத்திர சீடன் அற்புதம் செய்து காட்டி விட்டான். குருவின் மறுதலிப்பைப் பொருட்படுத்தவில்லை. தன் இதயபீடத்தில் துரோணரைக் குருவாக அமர்த்திக் கொண்டு விட்டான். மானுட குருவின் மறுப்பை மண்படிமக் குரு செய்யவில்லை. அற்புதமான, உத்தம சீடன் அவன், உயரிய அந்தணாளன் ஆனான்.

பிறகு நிகழ்ந்தது வஞ்சகத்தின் உச்சம். ஏகலவ்யனின் ஒப்பற்ற தேர்ச்சியை, திறனைக் கண்டு குரு கதி கலங்கிப் போனார். அவர்ம் பிரிய சிஷ்யன் அர்ஜுனன் ஒருவன்தான் உலகில் ஒப்பற்ற உத்தம வில்லாளியாக விளங்க வேண்டும் எனத் தீர்மானித்திருந்தார். இந்த இலட்சிய ஆசையைத் தகர்த்து விட்டான் சூத்திர வேடன்; குருவின் மண்பொம்மையை வைத்துக் கொண்டு சாதித்திருக்கிறான். துரோணர்

குரு தட்சிணையாக ஏகலவ்யனிடம் அவனது வலது கைக் கட்டைவிரலை வாங்கிக் கொண்டார். - வில்வித்தை வித்தகத்தின் மூலாதாரத்தைப் பறித்துக் கொண்டார்.

என்னே ஆச்சரியம்! வித்தை கற்பித்து, தேர்ந்த பின் சீடனுக்குத் தீட்சை அளிக்காமல் குருதட்சிணை வாங்க வந்துவிட்டார். எப்பேர்ப்பட்ட அற்புதமான சீடன் இவன்! தீட்சை தர மறுத்தவருக்குத் தட்சிணை தர முன்வருகிறான். ஏகலவ்யனுக்கு ஒப்பான சீடன் எங்காவது இருப்பானா? குரு கோரியதுமே, தன் கட்டை விரலை வெட்டிக் கொடுத்து விட்டானே! கற்றுத் தேர்ந்த ஒப்பற்ற வில்வித்தையையே அர்ப்பணித்து விட்டான். தான் கற்றுத் தேர்ந்த வித்தை வீணாகிவிட்டதே என எண்ணாமல் கொடுத்திருக்கிறான்!

ஏகலவ்யன் சொல்லியிருப்பான், “குருதேவா! உங்களிடமிருந்துதான் வில்வித்தை கற்றுத் தேர்ந்தேன். பிரதிமையாக இருந்து நீங்கள் தாம் கற்றுக் கொடுத்தீர்கள். நீங்கள் மறுத்தாலும் இதுதான் நிஜம். உங்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். என் கட்டை விரல் என்ன, என் உயிரையே அர்ப்பணிக்கக் காத்திருக்கிறேன்” என்று சொல்லி, கட்டை விரலை வெட்டிக் கொடுத்திருப்பான்.

சீடனாக இருப்பது உன் பொறுப்பு. இதில் எவருடைய சம்மதம், ஆதரவு அவசியமில்லை. நீ மனப்பூர்வமாக விரும்பி ஏற்றுக் கொண்டால் போதும். இந்த ஒட்டுறவில் தீவிரமாக, திடமாக இரு. இயங்கு. சீடத்தன்மையைக் கைவிடாதே. அபூர்வமான நல்வளர்ச்சியைப் பெறுவாய், வளர்ந்து கொண்டே போவாய், மேன்மைகளைப் பெறுவாய்.

சீடனாகும் பண்பு கற்றுத் தேறவேண்டிய கலை.

### நாலாவது கேள்வி

**மதுபானம் கசப்பானது, தலை கிறுகிறுக்கும், நெஞ்சில் எரிச்சல் ஏற்படும் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனால் நீங்கள் அளிக்கும் அபூர்வ மதுபானத்தின் சுவை, சுகம் வேறு மாதிரி இருக்கிறதே.**

**நீ** கேள்விப்பட்ட நறவம் அசல் மதுபானமாக இராது. அசல் மது கசக்காது, தலைசுற்ற வைக்காது. நெஞ்சு எரிச்சலை ஏற்படுத்தாது. நீ போலி மதுவைத் தெரிந்து வைத்திருக்கிறாய். பரிசுத்த மது நான் வழங்குவது. முதல் முறையாக நல்ல மதுவைச் சுவைத்திருக்கிறாய்.

இனி போலி மதுவிடம் சிக்காதே. முதல் முறையாக நீ நல்ல மதுசாலை (கள்ளுக்கடை)க்கு வந்திருக்கிறாய். உன் இயதத்தைக் குவளையாக்கிக் கொள், மனம் திருப்தி அடையும் வரையில் மதுபானம் அருந்து. இதனால் உன்னுள் புரட்சி எழும். இந்த மது மயக்கம், கிறக்கம், மறதி எதையும் ஏற்படுத்தாது. நினைவாற்றலை வளர்க்கும். பல விஷயங்கள் ஞாபகம் வரும். மதி மயக்கம் ஏற்படுத்தும் மது ஒரு மதுவா? சுயபிரக்ஞையில் வாழ வைப்பதுதான் தூய மது. இது உன்னை எழுப்பும், விழிப்புணர்வை வளர்க்கும், அறிவுறுத்தும், உன்னுள் உறைந்திருப்பதை அறிய வைக்கும், உன்னை முழு மனிதனாக்கும்.

புறத்தோற்றத்தில் நீ பிறருக்குக் குடிகாரனாகத் தோன்றலாம், பயப்படாதே. உன் ஆன்மிக லயம், அகப்புறக் கிறக்கம் தவறாகப் புரிந்து கொள்ளப் படலாம், பிறர் உன்னைக் கிறுக்கன் என எண்ணலாம், மதிமயங்கி எனக் கருதலாம் - கவலைப்படாதே. உரைகல் உன்னிடம் உள்ளது. உன் பிரக்ஞை, மெய்யுணர்வு வளரும், இதைப் பிறர் தவறாகப் புரிந்து கொண்டால், நீயா பொறுப்பு? ஒதுக்கித் தள்ளு!

கவி ம்ஜாஜின் சில வரிகள் -

**என் பேச்சுக்களில் தேவதூதத்தனம் உள்ளது,**
**ஊரார் சாடுகின்றனர் நான் நோயாளி என்று!**
**நன்றாய் பார்த்துப் புரிந்து கொள்-**
**அந்தரங்க மறைபொருளாளன் நான்,**
**பாசம், நேசம் மிக்கவரை விரும்புபவன் நான்,**
**எங்கும் எல்லாம் அன்புமயம் என் உலகம்,**
**புத்திசாலிப் பகைவரால் அல்லல் படுகிறேன் -**
**முல்லா-மௌல்விகளின் குழுவினில்**
**உழன்று கொண்டிருந்தது என் குற்றம்,**
**ஆம், மேலும் நான் செய்த தவறு -**

**ஆதிமனிதர் ஆதம் இழைத்த குற்றம்தான்**
**இவ்வுலகம் எனில்.**
**நான் குற்றவாளிதான்.**
**என் பேச்சுக்களில் தேவதூதத்தனம் உள்ளது,**
**ஊரார் சாடுகின்றனர் நான் நோயாளி என்று!**

**ஏ**சுநாதரை ஜனங்கள் நோயாளி என ஏசினார்கள். தேவதூதர் என்று சிலர் காலம் கடந்து சொன்னார்கள். சோக்கிரதரையும் (சாக்ரடீஸ்) பித்தன் என்றார்கள். விஷம் கொடுத்து சாக அடித்தார்கள். ஞானி மன்சூரை அறிவாளி என்று ஏற்கவில்லை, தூக்கிலிட்டார்கள். அஷ்டாவக்கிரரின் கதையைத்தான் முன்பே சொல்லியிருக்கிறேனே; பிறவி தந்த தகப்பனே கோபாவேசப்பட்டு சபித்தான், "அஷ்டகோணலாகப் பிறக்கக்கடவாய்!" என்று. எட்டு அங்கங்களும் ஊனம்.

ஏசு கிறிஸ்து முப்பத்தைந்து ஆண்டுகள் இப்பூமியில் வாழ்ந்தார். பிறகு கழுவேற்றப்பட்டார். சாக்ரடீஸ் கிழவரானபிறகு நஞ்சு குடிக்க வைத்து சாகடிக்கப்பட்டார். சமண மகாவீரரும், கௌதம புத்தரும் கல்லடிபட்டுப் படுகாயமடைந்தார்கள். ஆனால் அஷ்டாவக்கிரரைப் பார். தாயின் கருவறையிலிருந்து வெளிவரும் முன்பே சபிக்கப்பட்டார். வாழ்வும் உடலும் ஊனமாக்கப் பட்டுவிட்டது. அந்நியர் செய்திருந்தால் மன்னிக்கலாம். பெற்ற தகப்பனே சினந்து, சபித்து மூளியாக்கிவிட்டான் தம் மகனை.

ஞான போதனை ஜனங்களைச் சங்கடப்படுத்துகிறது; மக்கள் மனத்தில் பதிவதில்லை. நீ கவலைப்படு, துன்பப்படு - எவருக்கும் பாதிப்பு இல்லை. நீ சிரித்து மகிழ்ந்திருந்தால், சனங்கள் நிம்மதி இழந்து வேதனை படுகிறார்கள். நீ பைத்தியமோ என நினைக்கிறார்கள். உன்மீது சந்தேகம். கெட்டிக்காரன், புத்திசாலி எங்காவது சிரிப்பானா? அறிவாளிகளை ஆடிப்பாடி மகிழ்வதைப் பார்த்திருக்கிறாயா? புத்திமான்கள் மெதப்பாக, அமர்த்தலாக இருப்பார்கள். நீண்ட முகம், கவலை படிந்திருக்கும். அவர்களைத்தான் நாம் சாமியார்கள், மகான்கள் என்போம். முதிர்ந்த நோயாளி பெரிய மகாத்மா. சவம்போல் அமர்ந்திருந்தால், நோயாளியாக, பனாதையாகக் குந்தியிருந்தால் ஜனங்கள் போற்றுவார்கள் - "ஆஹா! என்னே தவயோகம்! எத்தகைய தியாகம் இது!"

ஒரு கிராமத்திற்குப் போயிருந்தேன். கிராமத்தார்கள் ஒரு மகாத்மாவை என்னிடம் அழைத்து வந்து அறிமுகப்படுத்தினார்கள், "இவர் பெரிய மகான், அற்புதமான சாமியார். உணவு, உறக்கம் மிகக்குறைவு. எப்போதாவது கொள்ளுவார். அடக்க ஒடுக்கம் அதிகம். பேச்சும், செயலும் மிகக் குறைவு. எப்போதும் தவயோகம். முகத்தில் தேஜஸ், சொர்ணம் போல் பிரகாசிப்பதைப் பாருங்கள்!"

நான் அவரைப் பார்த்துவிட்டு, அழைத்து வந்தவர்களிடம் கேட்டேன், "ஏன் இவரைக் கஷ்டப்படுத்துகிறீர்கள்? இவர் ஒரு நோயாளி. முகத்தில் சொர்ண சோபை இல்லை, பசிக்களைப்பு. பட்டினிச் சோர்வால் வெளிறிப் போயிருக்கிறது இவரது முகம். அநீமியா பீடித்திருக்கிறது. இவரா மகாத்மா? பேசத் திராணி இல்லாதவர் எப்படிப் பேசுவார்? பார்க்க அப்பாவியாய், அசடராய் தெரிகிறார். கண்களில் ஒளி இல்லை. தோற்றத்தில் ஆளுமை அறிகுறி இல்லை. உற்சாக மலர்ச்சி இல்லை. எப்படி இருக்கும்? சரிவரத் தூக்கம் இல்லை, சாப்பாடு இல்லை. இந்த அப்பாவியைப் பூசிக்கிறீர்களே! உங்கள் போற்றுதல், பூசித்தல்தான் இவரை வாழ வைக்கிறது. அதில்தான் இவர் மயங்கிக் கிடக்கிறார்."

சரி, நீ போற்றிப் பூசிப்பதை நிறுத்திப் பார். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது சாமியார்கள் உங்களைவிட்டு, ஊரை விட்டே போய்விடுவார்கள். நீங்கள் பூசனை செய்வதால்தான் இவர்கள் உங்களிடம் இருக்கிறார்கள். நீங்கள் வேண்டுகிற படியெல்லாம் நடந்து கொள்ளுகிறார்கள். நீங்கள் இவர்களுக்கு மதிப்பு – மரியாதை அளித்து இவர்களின் அகந்தையை வளர்த்து வருகிறீர்கள்.

நிஜமான தருமம் எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்கும். அது ஆரோக்கியமாகவும், ஆனந்தமாகவும் திகழும். வாழ்வின் ஒப்புதலுக்கு இலக்காக இருக்கும். உண்மையான அறநெறி வாடாமலரைப் போன்றது. வாட்டம், வருத்தம் அதற்கு இல்லை. வாட்டத்தை சனங்கள் சாந்தி என்று நினைக்கிறார்கள். வருத்தம் சாந்தி ஆகாது. சாந்தி இன்னிசை போன்றது. ஆழ்ந்த உள்ளுணர்வு, அகமகிழ்வு சாந்தி. அற்புதமான சோமபானம் (மது) போன்றது சாந்தி. அதைப் பருகினால் தரையில் பாதம் பாவாது; வானத்தில் சிறகடித்துப் பறப்பது போல் இருக்கும்.

நல்லது நிகழ்ந்துள்ளது. நான் அளிக்கும் மதுபானத்தால். அசல் மதுவின் சுவை அறியப்பட்டது. இனி வேறு மதுசாலைக்குச் செல்ல வேண்டியதில்லை.

**நன்றாய் பார்த்துப் புரிந்து கொள் -**
**அந்தரங்க மறைபொருளாளன் நான்,**

அவ்வளவுதான், ஒரே வேட்கையை வைத்திரு. பாசநேசம் எனும் உறவினைப் போற்றி வளர்த்துக் கொள். அதையே உன் இலட்சிய ஆசையாகக் கொண்டிரு!

**பாசம், நேசம் மிக்கவரை விரும்புபவன் நான்**
**எல்லாம் எங்கும் அன்பு மயம் என் உலகம்.**

உன் அனைத்துலகும், உன் அனைத்து இருத்தலும் அன்புமயமாக மிளிரட்டும்; இது போதும்.

**புத்திசாலிப் பகைவரால் அல்லல் படுகிறேன்,**
**புத்திதரும் உபத்திரவத்தை ஒதுக்கிவிடு,**
**அன்பு நிழலில் அமர்ந்து இளைப்பாறு,**
**எங்கும் எல்லாம் அன்புமயம் என் உலகம்**

**உனது அனைத்துலகும், எல்லா நிலையும்**
**அன்புமயமாகி விட்டாலே போதும்,**
**புத்திசாலிப் பகைவரால் அல்லல் படுகிறேன்,**
**முல்லா-மௌல்விகளின் குழுவில்**
**உழன்றிருந்தது எனது குற்றம்,**
**ஆம், மேலும் நான் ஏற்கும் தவறு -**
**ஹாஃபிஸ், கைய்யாம் - உமர்கைய்யாம்**
**இவர்கள் செய்த தவறுதான்.**

**உ**மர் கைய்யாமை சமகால வாசகர்கள் சரியாக அறிந்து கொள்ளவில்லை. அவரிடம் முறை தவறிக் கடுமையாக நடந்து கொண்டார்கள்.

ஒருநாள் பம்பாயில் அங்காடி வீதி வழியே சென்றேன். அங்கே ஒரு ஹோட்டல் முகப்பில் கவர்ச்சியாகப் பெயர்பலகை பளிச்சிட்டது - 'உமர் கைய்யாம்' அந்த மெய்ஞானிக் கவிஞனின் பெயரை இப்படியா சிறுமைப்படுத்த வேண்டும்?

உமர் கய்யாமின் பாரசீகக் கவிதைகளை ஆங்கிலத்தில் கவிதை வடிவில் மொழி பெயர்த்திருக்கிறார் இலக்கியமேதை பிட்ஜரால்ட். மொழி பெயர்ப்பில் பெருந்தவறு உள்ளது. பிட்ஜரால்ட் உமர்கய்யாமை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. பின்புலம் அறியாத அவரால் புரிந்து கொள்ளவும் இயலாது. உமர்கய்யாமைச் சரியாகப் புரிந்துகொள்ள சூஃபி ஞானியரின் ஞானக்கிறக்கம், சமாதி நிலைகளைப் பெற்றிருக்க வேண்டும். உமர் கய்யாம் சூஃபி ஞானி, புத்தர், அஷ்டாவக்கிரர், கிருஷ்ணர், ஜரதுஷ்டிரர் வரிசையில் கணிக்கத்தக்க மாமனிதர்.

உமர் கய்யாம் குறிப்பிடும் மதுபானம் பௌதிக நறவம் இல்லை, பரமாத்மாவின் திவ்விய மதுபானம். அவர் வருணித்துள்ள அழகும் சாதாரண மானிட வனப்பு அல்ல, தெய்விக சௌந்தரியம். ஆனால் பிட்ஜரால்ட் இந்த தத்துவத்தை அறிந்தவரில்லை. மேலைநாட்டுச் சிந்தனை, அறிவு சார்ந்தவராதலால், 'மதுபானம்' என்றால் அங்கு பிரபலமாகியிருக்கும் சாராயவகை என்றே எண்ணினார். இதையே தம் மொழி பெயர்ப்பில் வெளிப்படுத்தினார். பிட்ஜரால்டின் ஆங்கில மொழியாக்கம் பிரபலமாயிற்று. பலரும் பாராட்டிக் கொண்டிருக்கிறார்கள். அழகான, கவித்துவம் மிளிரும் இனிய மொழி பெயர்ப்பு.

அவர் அற்புதமான கவிஞர். ஆனாலும் அவரால் உமர் கய்யாமின் பாரசிக மொழிக் கவிதைத் தொனியை, உள்ளுறைந்த தத்துவத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. சூஃபி ஞானியரின் தத்துவ போதம் மொழிபெயர்ப்பில் காணவில்லை. எனினும், உமர் கய்யாம் உலகமெங்கும் அறியப்பட்டது ஆங்கிலக் கவிஞர் பிட்ஜரால்ட் மூலமாகத்தான்.

ஆக, உமர் கய்யாமின் கவித்துவம் சார்ந்து பெரும் பிழை இழைக்கப்பட்டிருக்கிறது. அவர் எப்போதுமே மது அருந்தியதில்லை. மதுச்சாலைப் பக்கம் போனதில்லை. ஆனால் அவர் விசேஷ மது அருந்தியிருக்கிறார், அது அற்புதமான திவ்விய மது. அதைப் பருகிய பின் மற்ற மதுவகைகள் மட்டரகம் என்பது புரியும். உமர் கய்யாம் ஒரு மதுக்கூடத்திற்குப் போயிருக்கிறார். அது தேவாலயம், பரமாத்மாவின் திருக்கோயில்.

**முல்லா-மௌல்விகளின் குழுவினில்**
**உழன்று கொண்டிருந்தது என்குற்றம்**
**ஆம், மேலும் நான் செய்த தவறு...**

கவி மஜாஜ்கூட (மேலே குறிப்பிட்டது அவரது கவிதை வரிகள்தான்) உமர் கய்யாமைத் தவறாகப் புரிந்து கொண்டவர். அவரும் கய்யாம் கூறும் 'மது' பழக்கப்பட்ட சாராய வகைதான் என நினைத்தார். மஜாஜ் பெரும் குடிகாரர். குடித்தே மரித்தார்.

நீ நினைத்துக் கொண்டிருக்கும் மதுவைக் குடித்தால் நெஞ்சு எரிச்சல் ஏற்படும், கசப்பும், துவர்ப்புமாக இருக்கும், ஓக்காளிக்கும். மஜாஜ் இவ்வகை மதுவைக் குடித்துத்தான் வாலிபப் பிராயத்திலேயே இழிந்து நலிந்து செத்துப் போனார்.

நான் கூறும் மதுபானத்தைத் தவறாகப் புரிந்து கொள்ளாதே. உமர் கய்யாமுக்கு ஏற்பட்ட அவதூறு எனக்கு ஏற்படக் கூடாது. ஏற்பட - ஏற்படுத்த வாய்ப்பு இருப்பதால் எச்சரிக்கிறேன்.

**நா**ன் உனக்குத் தொடர்ந்து போதிப்பது இதுதான். பௌதிக வாழ்க்கையை நன்றாய் அநுபவி, சாட்சி நிலையில் இருந்து அநுபவி. சாட்சிப் பாங்குடன் (சாக்ஷி பாவம்) அநுபவிப்பதுதான் நிஜமான நல்ல அநுபவம். அது இல்லாமல் அநுபவிப்பது வீண், வறட்டுத் தொடர்பு. மதுபானத்தை அநுபவித்து அருந்து. மதி மயங்காது, ஞானபோதம் வளரும். **சமாதி சித்திதான் நான் அளிக்கும், நீ அருந்தும் அரிய மதுபானம்.**

என் அநுபவத்தில், சமாதி நிலையை எட்டும் வரையில் ஞானபோத மதுவின் கிறக்கம் இருந்து கொண்டிருக்கும். மனிதர்களுக்கு (நான் அளிக்கும்) ஞானபோத மது கிட்டாத வரையில், கடைச் சரக்கான சாராய வகை மதுவைத்தான் குடித்துக் கொண்டிருப்பார்கள். மதிமயங்கிக் கிடப்பார்கள்.

மதுபானத்திற்குத் தடைவிதிக்க வேண்டும், போதைப் பொருள் கடத்தலை, விற்பனையைத் தடுக்க வேண்டும் என்று போராட்டம், ஆர்ப்பாட்டம் செய்து வருகிறார்கள். மதத்தலைவர்களும் சமூக ஆர்வலர்களும் சத்தியாக்கிரகம் செய்கிறார்கள். குடிப்பழக்கம்

தொற்றுநோய். எவராலும் அதைத் தடுக்க முடியாது. புதிது புதிதாகப் போதைப் பொருள்கள் சந்தைக்கு வருகின்றன. வியாபாரம் வலுக்கிறது. அமோக விற்பனை.

எந்த அரசாங்கத்தாலும் மதுபானத் தடையை வெற்றிகரமாக நிறைவேற்ற முடியாது. குடிப்பழக்கம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் நான் பரிந்துரைக்கும் **சமாதி மது** பிரபலமானால், போதை ஏற்றும் கடைச்சரக்குகள் ஒழிந்து போகும். தேவாலயங்களை சமாதியோக மதுக்கூடங்களாக் ஆக்கினால் வாழ்க்கையைத் தவறான மதிப்பீடுகளுடன் வாழாதிருந்தால், நல்ல பண்புகளுடன் செவ்வையாய் வாழ்ந்தால் - வாழ்க்கை சௌபாக்கிய ஜீவனமாகத் திகழும். போதை பேதைமை வளர்க்கும் சாராய வகைச் சரக்குகள் ஒழிந்து போகும்.

ஓர் அரிய நிகழ்ச்சி.

பல குடிகாரர்கள் என்னிடம் சன்னியாசம் (துறவறம்) பெற வந்திருக்கிறார்கள். என்னிடம் சிக்கிக் கொண்டார்கள் என்றே சொல்ல வேண்டும். வரும்போது அவர்களது நினைப்பு, 'இந்தக் குருசாமி எதையும் தடுப்பதில்லை, தடை கிடையாது. குடிக்க ஆசைப்படுகிறாயா? தாராளமாய் குடி. கெட்டதைப் புசிக்க ஆசையா? திருப்தியாய் சாப்பிடு. இதைக் குடிக்காதே, அதைத் தின்னாதே என எந்தக் கட்டுப்பாடும் இங்கே கிடையாது."

"குருஜி! எனக்கு நிரம்பப் பிடித்த விசயம் இது" என்று நேரிடையாய் பாராட்டியதில்லை.

சன்னியாசம் ஏற்று, தியான யோகத்தில் அக்குடிகாரர்கள் ஈடுபட்டதும், இயல்பு மாறும். சாராயக் கடைக்குப் போவது நிற்கும். வேறொரு மதுபானக் கோட்டம் அவர்களை ஈர்க்கும். சமாதியோக மது சாலை அது.

ஒரு குடிகாரன் ஆறுமாத காலம் தியான யோகப் பயிற்சியில் ஈடுபட்டிருந்த பின், என்னிடம் வந்து சொன்னான், "முன்பெல்லாம் குடித்துக் கொண்டிருந்தேன் விசனம், வேதனையை மறக்க வேண்டி. அவை மறையும். இப்போது சுகமாய், சந்தோஷமாய் இருக்கிறேன்.

இப்போது திவ்விய மது அருந்துகிறேன். சுகம் - சந்தோஷம் மறந்து போகிறது. சங்கடமாய் இருக்கிறது. சுகம், சந்தோஷம் மறக்க வேண்டியதா? எவன் மறக்க விரும்புவான்? நீங்கள் செய்த அற்புதம் இப்படிப் படுத்துகிறது."

நான் சொன்னேன், "கடைச் சரக்கா, ஆத்மாலயச் சரக்கா - எது வேண்டும்? நீ தேர்ந்தெடுத்துக் கொள்."

"தியான யோக மதுதான் மிகவும் பிடித்திருக்கிறது. அதன் சுவை புனிதமானது. அது உள்ளத்துள் புகும்போது என்னை உன்னத சிகரங்களுக்கு இட்டுச் செல்லுகிறது. நம்ப முடியாத முன்னேற்றம். 'இந்தப் பாவி மனிதனுக்கு இவ்வளவு பெருமையா!' என்று பிரமித்து, பூரித்துப் போகிறேன். இந்த மகோன்னத நிலையை உங்களிடம்தான் முதலில் தெரிவிக்கிறேன். பிறரிடம் இதைச் சொன்னால், என்னை 'மொடாக்குடியன், கண்டபடி பிதற்றுகிறான். போதைக்கிறக்கம்' என்பார்கள். என் மனைவிகூட என்னை நம்பமாட்டாள். சாடுவாள், 'முதலிலே இந்தப் பேத்தலை நிறுத்து! ஞானம், யோகம், சமாதி என்று ஏன் உளறுகிறாய்? நிறையக் குடித்துத் தொலைத்திருக்கிறாய்.'

"உண்மையில் ஒருமாத காலமாய் நான் சாராயத்தைத் தொடக்கூட இல்லை. குருஜி! நீங்க புரிந்து கொள்ளுவீர்கள் என்பதால் உங்களிடம் சொல்லுகிறேன். இனி நீங்கள் அறிமுகப்படுத்திய தியான யோக மதுவை என்னால் விடமுடியாது" என்றான்.

**வா**ழ்க்கையை உன் பிரதிநிதியாகக் கருதி ஏற்றுக் கொள். நீ தியான யோகத்தால் சுகமாக மகிழ்ச்சியோடு இருந்தால், முன்பு துன்பம். துயரம் காரணமாக நீ பயன்படுத்திய போதைப் பொருள்கள் விடுபட்டுப் போகும். புலால் உணவும் காம உணர்வும் விலகிவிடும். பிரும்மசரிய நெறியுடன் வாழ்வாய். தியான சித்தி பெறுவாய்.

அதனால்தான் தியானம் எனும் மதுபானத்தை அருந்தச் சொல்லுகிறேன். சமாதி எனும் மதுசாலையில் குழுமியிருக்கும் உத்தமக் குடிமகன்களுடன் உன்னை சேரச் சொல்லுகிறேன்.

**சுகித்து இன்புறும் இவ்வேளையில்**
**மனநிறைவுடன் வாழவிடு!**

**கனவுப் பொன்னாடை சிறிது கிழிந்திருக்கிறது**
**மனமகிழ்வுடன் இதைத் தைக்கவிடு!**
**இத்தகு அரிய கார்முகில் பிறகு**
**ஒருபோதும் கவிந்து பரவாது,**
**மதுக் கோப்பை கிட்டாதாகிலும்**
**விழிக்கிண்ணத்தில் பருகிவிடு!**

சமாதி மதுக்கூட்டத்தில் உனக்கு சத்சங்கம். அங்கே மது அருந்து. கிண்ணம் கிடைக்காவிடில், கண்ணால் பருகு! அந்த சத்சங்கத்தில் நீ குடிகார்னாகி, ஞானக் கிறுக்கனாகித் திரும்பி வா. உன் சுயபிரக்ஞையை இழந்திருக்க மாட்டாய். இதயத்துள் சுயபிரக்ஞை - தீபம் ஒளிரும்.

**இத்தகு அரிய கார்முகில் பிறகு**
**ஒருபோதும் கவிந்து பரவாது,**
**மதுக் கோப்பை கிட்டாதாகிலும்**
**விழிக் கிண்ணத்தில் பருகிவிடு!**

**ஐந்தாவது கேள்வி**

**தீர்மானம், (நம்பகம்) பரிந்துரை, ஆட்டோ-ஸஜஸ்சன்-இவை ஒன்றா? தீர்மானம், நம்பிக்கை, இயல்பு, புரிதல் இவைகளுக்குள் என்ன பேதம்? ராமகிருஷ்ண பரமஹம்சரின் காளிதேவி நம்பிக்கை (உபாசனை) வெறும் தீர்மானமா? அல்லது அவருடைய இயல்பு நிலைப்பாடா? பரம்பொருள் அல்லது பகவானோடு நேரிடையாக உரையாட முடியாதா?**

தீர்மானம் (நம்பகம்), பரிந்துரை, ஆட்டோ-ஸஜஸ்சன் - மூன்றும் ஒன்றுதான். ஆட்டோ -ஸஜஸ்சன் அறிவியல் சொல். சுவபாவம் (இயல்பு), நம்பகம் இரண்டிற்கும் பேதம் உண்டு. வெவ்வேறு கருத்து உள்ளவை. எல்லா நம்பகங்களும் விலகியபின் வெளிப்படுவது சுவபாவம். உன் மனத்திலிருந்து எல்லா எண்ணங்களும், நம்பகங்களும் விலகிப் போனபின், புலப்படுவது சுவபாவம் (இயல்பு). சுவபாவத்தைத் தீர்மானமாக, நம்பகமாகக் கொள்ளலாகாது.

ஒரு துறவி என் வீட்டில் வந்து தங்கியிருந்தார். காலையிலும் மாலையிலும் பத்மாசனத்தில் அமர்ந்து, உரக்கச் சொல்லிக் கொண்டிருப்பார், "அஹம் பிரும்மா அஸ்மி (நான் பிரும்மம்), நான் தேகம் இல்லை, நான் மனஸ் இல்லை, நான் பிரும்மம்."

இப்படியே நாலு நாட்கள் சொல்லி வந்தார். எனக்கு சகிக்கவில்லை. "சாமி! ஏன் ஒரே வார்த்தையைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்? நீர் பிரும்மம் என்றால் ஒருமுறை சொன்னால் போதாதா? தொடர்ந்து மந்திரஜபம் மாதிரி உருப்போட வேண்டுமா? கேட்பவருக்கு சந்தேகம் வராதா? 'இவர் பிரும்மம் இல்லையோ?' என்று கேட்க மாட்டார்களா? உமக்கே உம்மீது நம்பகம் இல்லையோ? ஓர் ஆள் தெருவில் போகும்போது, "நான் ஆண்பிள்ளை, நான் ஆண்மகன்" என்று கூவிக் கொண்டே போனால் எப்படி இருக்கும்? பார்ப்பவர் "இதென்ன கூத்து? உனக்குச் சந்தேகமா? எங்களுக்கும் சந்தேகம்தான்" என்பார்கள்.

"ராமகிருஷ்ணருக்கு காளிதேவி தரிசனம் கிட்டியது என்பது வெறும் நம்பிக்கைதானா?"

ஆம், முற்றிலும் நம்பிக்கைதான். அங்கு காளி, கருப்பாயி எவரும் இல்லை. மானசிக நம்பகம்தான். எல்லா நம்பிக்கைகளும் சரிந்து விழவேண்டியவை. ராமகிருஷ்ணரின் காளிதேவி எண்ணம் சரிந்ததும் அவர் சொன்னார், "கடைசித் தடையும் சரிந்தது. நான் உருவாக்கிக் கொண்ட நம்பிக்கைத் தீர்மானம் இது."

ராமகிருஷ்ணர் வாள் கொண்டு தனது காளி உருவகத்தை வெட்டியதும், குருதி கொட்டி யிருக்கும் என நீ நினைப்பாய். குருதி வழியவில்லை. ரணகளம் காணவில்லை. காளி உருவகம், காளி நம்பகம், வாள் எல்லாமே பொய், மாயை. பொய்யும் பொய்யும் மோதிக் கொண்டது - அவ்வளவுதான்.

"பரம்பொருள் அல்லது பகவானோடு நேரிடையாக உரையாட முடியாதா?"

முடியாது. எந்த உரையாடலும் கற்பனையாகத்தான் இருக்கும். ஏனெனில் நீ இருந்தால் பகவான் இருக்க மாட்டார். பகவான் சான்னித்தியமானால் நீ இருக்க மாட்டாய். எப்படி ஸம்வாதம்

(உரையாடல்) நிகழும்? உரையாட இருவர் வேண்டும். நீயும் பகவானும் எதிர் எதிரே இருந்தால் சம்பாஷணை சம்பவிக்கும். நீங்கள் இருவரும் சேர்ந்து இருக்க முடியாது.

பிரேமை (பக்திபரவசம்) குறுகிய சந்து போன்றது. அதில் இருவர் சேர்ந்து செல்ல முடியாது. ஒருவர்தான் நடமாடலாம். எப்படி எவரிடம் நீ உரையாட முடியும்?

நீ பகவானுடன் உரையாடுவதாக பாவனை செய்யலாம். அது உன் கற்பனை ஜாலம். நிஜ பகவானின் சான்னித்தியம் அங்கு இல்லை. நிஜ பகவத் சான்னித்தியம் கிட்டும்போது மணியோசை போன்ற ஒலி அலைகள் எழும்பும். அதை 'நிநாதம்' என்பர். கீழை நாட்டு தத்துவ ஞானிகள் அதை 'அன்ஹத் நாதம்' (எல்லையில்லா எதிரொலி) என அழைப்பார்கள். ஆத்மார்த்தமான முணுமுணுப்பு அது. மற்றவருடன் பேசும்போது இது நிகழாது. ஓங்காரத் தொனியின் ஒலி அலைவரிசை இது. ஆத்மாநுபவப் பிரதிபலிப்பு. தனி ஒருவருக்குத்தான் இது சாத்தியம்.

எக்காலத்திலும் பக்தன் பகவானை நிஜமாய் தரிசனம் செய்ததில்லை. பகவானைத் தரிசிக்கும் பக்தன் - இருவரும் காட்சியளிப்பதால் - மெய்மறந்து போகிறான். இது பாவனை, கற்பனை. இவ்வழியில்தான் கிறித்துவ பக்தன் ஏசுநாதரைத் தரிசிக்கிறான், சந்திக்கிறான். ஜைன பக்தன் மகாவீரரைச் சந்திக்கிறான். இந்து (ஸனாதன) மத பக்தன் ராமரைத் தரிசிக்கிறான். ஓர் இந்து ஏசுநாதரை நேரில் சந்தித்தாகக் கேள்விப்பட்டிருக்கிறாயா? பார்த்திருக்கிறாயா?

தன் நம்பகத்தில் இல்லாதவரை ஒருவன் எப்படிச் சந்திக்க முடியும்? ஒரு கிறித்துவ பக்தன், "நான் தியானம் செய்து கொண்டிருந்தபோது புத்தர்பிரான் எதிரே காட்சி அளித்தார்" என்று சொல்லக் கேட்டிருக்கிறாயா? இது நடவாத காரியம். அடிப்படையில், ஆழ்மனத்தில் நம்பிக்கை, தீர்மானம் இல்லாதபோது, அது சார்ந்த கற்பனை எழாது. உன் நம்பிக்கை, தீர்மானம் சார்ந்துதான் கற்பனை எழும், விரியும்.

அஷ்டாவக்கிரர் இந்த விஷயத்தில் அறிவுறுத்துகிறார், "நீ எல்லா நம்பிக்கைகள், தீர்மானங்கள், மதிப்பீடுகள், கற்பனைகள்,

இடைச்செருகல்கள் - இவற்றிலிருந்து விலகியே இரு. எல்லா அநுட்டானங்களிலிருந்தும் (செயற்பாடு) விலகியே இரு. இவை யாவும் உனக்குப் பந்தங்கள், தடைகள். உன் அகப்புறத்தில், இதயத்துள் பக்தனோ, பகவானோ இருக்க மாட்டார்கள். சூனியம் (வெறுமை) தான் இருக்கும். அது ஆனந்தம் அளிக்கும். அந்நிலையில் உரையாடல், சொல்லாடல் நிகழாது. அவை யாவும் கற்பனை அலைகள்.

**எப்போதாவது இரவு என்னைச் சூழ்கிறது**
**எப்போதாவது நான் பகல்போதைக் கூவி அழைக்கிறேன்**
**எப்போதாவது ஓர் ஒளிவட்டம் என்னைத் தேடி வருகிறது**
**எப்போதாவது நான் ஒளிக்கதிர்களைப் பரப்புகிறேன்**
**எப்படி அறிவேன் என்உயிர் ஒலிப்பு மேலெழும் என்று?**
**எப்போது மனம் பேசத் துவங்கும்?**

நான் உனக்குச் சொல்லுவேன், "அடையாளம் நேரிய தெளிவு உள்ளது. எப்போது பேசினாலும் மனம்தான் பேசுகிறது, தென்படுவதும் மனம்தான். எதுவும் தென்படாத போது மனம் எதுவும் பேசாது. அப்போது விஞ்சியிருப்பது 'அ-மனம்' (மனம் அற்றது). இதுதான் சமாதிநிலை. அநுபவ உணர்வு உள்ள வரையில் மனம் இருந்து கொண்டிருக்கும்.

ஆகையினாலே, 'பரமாத்மா சார்ந்த அநுபவம்' - தவறான சொற்றொடர். அநுபவங்கள் மனம் சார்ந்தவை. இரு பொருள்கள் சார்ந்துதான் அநுபவம் எழும். இதை 'த்வந்த்வம்', 'த்வைதம்' சார்ந்தவை என்பர். இருமை இல்லாதபோது எப்படி அநுபவம் ஏற்படும்? ஆகையால் ஆன்மீக அநுபவம் எனும் சொல்லும் சரியில்லை.

எந்த நிலையில் அநுபவங்கள் முடிவடைகின்றனவோ, அங்குதான் ஆன்மீகம் (அத்யாத்மம்). இல்லையேல் நீ விளையாடிக் கொண்டே காலம் கழிக்கலாம். இது வெயில் - நிழல் (கண்ணாமூச்சி) விளையாட்டு.

**நீ பக்தி சிரத்தையுடன் வணங்குபவனாக இருந்தால்**
**நான் நறுமணம் கமழும் சந்தனமாவேன்,**
**நீ பவித்திர பிரதிமையாக விளங்கினால்**
**என் வாழ்வை அர்க்கியமாக (புனிதநீர்) அளிப்பேன்,**

நீ மூடிய முத்துச் சிப்பியானதால்
நான் கடலின் அலைநுரைக் குமிழியானேன்,
நீ சுவாதி நட்சத்திர நாளில் நீர்த்துளிகளை உதிர்த்தால்
நான் நூறுநூறு மழைத்தாரைகளைப் பருகி மகிழ்வேன்.

இருகூப்புகை அளவு கனவுகளின் நம்பிக்கை
வாழ்க்கையின் குறியீட்டை நாடித் தேடுகிறது,
நீ மங்கள தீபமாகி என்னிடம் வந்ததும்
நம் வாழ்வில் ஜோதி பரவ ஏற்றி வைப்பேன்.

மௌன பிரார்த்தனை, ஊக்கமிகு அபிலாஷை
விழிபேசும் மொழியினைப் பரப்புகிறது,
நீ இத்தரணியில் பாதம் பதித்ததும்
பரமஹம்ஸ அன்னப்பறவைக்கு
நல்முத்துக்களை உவந்து ஊட்டுவேன்.

கஸ்தூரி மானின் மதி மயக்கம்
மாயாஜால ஊஞ்சலை ஆட்டுகிறது,
நீ ஒளிரும் மானசீக தீபம் ஏந்தி நின்றால்
நான் பலநூறு தோரணவாயில்களாகி வரவேற்பேன்.

ஆனால், இதெல்லாம் கற்பனை விளையாட்டு. விளையாட விரும்பினால் விளையாடு. சுகமான, இனிய கற்பனை லீலை. இது மகிழ்வூட்டும், சுவையூட்டும் அற்புதமான கற்பனை விளையாட்டு. இதை சத்தியம், நிஜம் என நம்பிவிடாதே. சத்தியம் எங்கு இருக்கும் தெரியுமா? நானும் நீயும் இல்லாத இடத்தில், நிலையில் சத்தியம் இருக்கும். இருமை, இரட்டை, (இரு கருத்துருக்கள்) முற்றிலும் அகன்ற இடத்தில்தான் சத்தியம் நிலைக்கும். அங்கு எஞ்சியிருப்பது ஒன்றே - பிரணவ ஓங்காரமான, சத்திய நாமம் மட்டுமே.

கடைசிக்கேள்வி

கோடி, கோடி நமஸ்காரம். புனிதமான ஆபு மலைக்குன்றத்தில், உங்களது அருள் பாலிப்பிற்குப் பாத்திரமாகும் சௌபாக்கியம் அடியேனுக்குக் கிட்டியிருக்கிறது. இதனால் நான் என்னவெல்லாம் இழந்தேன், எதையெல்லாம் பெற்றேன் - கணக்கிட

முடியாது. என் வாழ்வு பெரும்பேறு பெற்றது, தன்யனாயிற்று. கேள்வி எதுவும் எழவில்லை. வலுக்கட்டாயமாக கேள்வியை எழுப்புகிறேன். இந்த அருள்மொழி அவைக் கூடத்தின் நிறைவு நாளான இன்று, உங்கள் திருவாய் மலர்த்தும் அருள்வாக்கைச் செவிமடுக்க விரும்புகிறேன். என் பிக்ஷாபாத்திரத்தில் இரு அருள் மலர் தூவி அனுக்கிரகிக்க வேண்டுகிறேன், கருணை புரிய வேண்டுகிறேன்.

அருள் மலர் இரண்டு என்ன, மூன்று தூவுகிறேன் –

ஹரி ஓம் தத்ஸத்!

